கழக வெளியீடு : கசசச

உ

திருச்சிற்றம்பலம்

# சிவப்பிரகாச சுவாமிகள் பனுவல் திரட்டு



கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர்
விளக்கக் குறிப்புரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிராட்வே, சென்னை-1
திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
1972

# பதிப்புரை

பதினேழாம் நூற்றுண்டில் தலைசிறந்து விளங்கிய புலவர் இருவர். ஊமைப் பிள்ளையாயிருந்து உமையாள் மைந்தனின் அருள்பெற்றுப் பேசிய குமரகுருபரர் ஒருவர். சான்றோருடைத் தான தொண்டை நாட்டில் தோன்றிக் கவிச்சுடராகத் திகழ்ந்த துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் மற்றொருவர்.

சிவப்பிரகாசர் செந்தமிழ்ச் சுவைக் கனிகளை ஈந்தவர். அவர்தம் கடன்மடை திறந்தது போன்ற கவிப் பெருக்கைக் கண்டு வியக்காத புலவர்கள் இல்லையெனலாம். சிற்றிலக்கிய வகைகளில் சிறப்பான அந்தாதி, மாலை, கோவை, கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா போன்ற பல துறைகளிலும் சிவப் பிரகாசர் நூல்கள் இயற்றியுள்ளார்.

தமிழ் பயில்வோர் பெரும்பாலும் ஆசிரியர்களையடுத்து முதற்கண் அந்தாதி, உலாபோன்ற சிற்றிலக்கியங்களையே பாடங்கேட்டுப் பயில்வது வழக்கம். அவ்வாறு பயில்வோர் சிவப்பிரகாசர் பனுவல்திரட்டு, குமரகுருபரர் பனுவல்திரட்டு, சிவஞானமுனிவர் பனுவல்திரட்டு ஆகிய நூல்களையே முறையாகப் பயின்று வந்தனர்.

எனவே குமரகுருபரர் பனுவல்திரட்டையும், சிவஞான முனிவர் பனுவல்திரட்டையும் முதற்கண் வெளியிட்டோம். அதன்பின் பாகனேரி இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடாகச் சிவப்பிரகாசர் பனுவல்திரட்டை 1941இல் கழகவழி வெளியிடப் பெற்றது. அதன்கண் குறிப்புரை நூலிறுதியில் பின் இணைப்பாகச் சேர்க்கப்பெற்றது.

இப்போது அதனைக் கழக வெளியீடாகவே விளக்கக் குறிப் புரையினைத் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களைக் கொண்டு எழுதுவித்துச் செய்யுள் வரும் பக்கத்தின் அடியிலேயே படிப்போர் எளிதிலே செய்யுளின் பொருளை உணர்ந்து கொள்ளும் வகையில் இணைத்து அச்சிட்டுள்ளோம்.

இச் 'சிவப்பிரகாச சுவாமிகள் பனுவல் திரட்டு' என்னும் நூலில் சோணசைல மாலை முதலாய ஆறு மாலை நூல்களும் இரு அந்தாதி நூல்களும் இரு கலம்பகமும் தூது, பிள்ளைத்தமிழ், கோவை, உலா ஆகியவற்றில் ஒவ்வொரு நூலும் பிற தனித்தனி

நூல்களும் சேர்க்கப்பெற்றுள்ளன. மாணவர்க்கு என்றென்றும் பயன்தரக்கூடிய 'நன்னெறி'யும் இதில் சேர்க்கப்பட்டுள்ளது.

இலக்கியக் கருவூலமாகத் திகழும் இந்நூலைத் தமிழ் பயில்வாரும் பயின்றாரும் படித்துப் பயன்பெற வேண்டும். இலக்கிய நயத்திலாழ்ந்து இன்பம் காண விழைவோருக்கும் இலக்கியம் கற்றுச் சொல்லாற்றலைப் பெருக்கிக்கொள்ள விரும்புவோர்க்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்.

சிவப்பிரகாசர் பனுவல்திரட்டு சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச் செய்த தோத்திரப் பிரபந்தத் திரட்டு என்னுந் தலைப்பில் திரு சிவஞான பாலைய தேசிகராதீனத்துச் சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளால் பல ஏட்டுச் சுவடிகளைக்கொண்டு ஆராய்ந்து அருஞ்செய்யுள் உரைக் குறிப்போடு 1890ஆம் ஆண்டிலும், 1906ஆம் ஆண்டிலும் வெளியிடப் பெற்றது.

அதன்பின் 1916ஆம் ஆண்டில் மூவர் தேவாரத்தைத் தலமுறையில் மிகவும் அழகாக வெளியிட்ட சிவத்திரு சுவாமிநாத பண்டிதரவர்கள் அருஞ்சொற் குறிப்புரையினைப் பின் இணைப்பாகச் சேர்த்தும், நூல் முழுமையிலுமுள்ள செய்யுட்களைச் சீர்பிரித்தும் சிவப்பிரகாசர் பனுவல் திரட்டை வெளியிட்டனர்.

1944ஆம் ஆண்டில் மேலே குறிப்பிட்ட பனுவல் திரட்டிலுள்ள நூல்களோடு சுவாமிகள் இயற்றியருளிய திருக்கூவப் புராணம், பிரபுலிங்க லீலை, வேதாந்த சூடாமணி, சித்தாந்த சிகாமணி, இயேசுமத நிராகரணம், சீகாளத்தி புராணம் இடைப் பகுதி ஆகிய நூல்களையும் சேர்த்து 'நல்லாற்றுச் சிவப்பிரகாசர் செந்தமிழ் நூல்கள்' என்ற தலைப்பில் திருமயிலம் தேவத்தான வெளியீடாக திருமயிலம் ஆதீனம் 18ஆம் பட்டம் திருவருட்டிரு சிவஞான பாலைய சுவாமிகளால் வெளியிடப்பெற்றது.

இப்பதிப்பு தமிழின்பத்தில் திளைக்க விரும்புவோர்க்குப் பெரிதும் பயன்படுமென எண்ணுகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு

சான்றோர் வாழுந் தொண்டை நாட்டில், உலகைப் புரக்கும் உமையம்மை வெள்ளப்பெருக்கிற்கஞ்சித் தழுவ வெளிப்பட்ட கள்ளக் கம்பனையுடையது காஞ்சிமாநகரம். காஞ்சிமாநகரை ஐம்பூதத் தலங்களில் ஒன்ருகிய மண்தலம் என்று ஆண்டவனருளைப் பெற்ற அருளாளர்கள் கூறிப் போற்றுவர். இத்துணைச் சிறப்பு வாய்ந்த இந்நகரில் வேளாண் மரபுக்குக் குருக்களாயிருந்தவர் குமாரசுவாமி தேசிக ரென்பவர். இவர் வீரசைவர். இத் தேசிகர் தம் இல்லறத்தின் பயனாக மூன்று ஆண் குழந்தைகளையும் ஒரு பெண் குழந்தையையும் பெற்றனர். இந்நால்வர்க்கும் முறையே அவர் சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப் பிரகாசம், ஞானம்பிகை எனப் பெயரிட்டார். ஆண் மக்கள் மூவரும் தண்டமிழ்க்கல்வி வாய்ந்தவர்கள்; இறைவனைப் பத்திமையாற் பணியும் பேறு பெற்றவர்கள்; என்ருலும், பேரிலக்கணங்களைப் பெரிதுங் கற்க அவாவிச் சிவப்பிரகாசர் தென்னுட்டிற்குச் சென்றனர். இடையில் அவர் வாலி கண்டபுரத்திற்குத் தெற்கிலுள்ள துறைமங்கலம் அண்ணுமலை ரெட்டியார் என்பவரால் ஆதரிக்கப்பெற்று, அவருக்கு அறநெறி கற்பித்துப் பின்பு அவரிடம் விடைபெற்றுச் சிந்துபூந்துறை தருமபுர ஆதீனத்து வெள்ளியம்பலசுவாமிகளை அடைந்தனர்.

வெள்ளியம்பல சுவாமிகள் சிவப்பிரகாசரை மாணவராக ஏற்றுக்கொள்ளுமுன் கல்வியின் ஆழத்தைக் கண்டறியக் 'கு' என்பதை முதலிலும் முடிவிலும் வைத்து 'ஊருடையான்' என்பதை இடையே நிறுத்தி ஒரு செய்யுளியற்றப் பணித்தனர். சிவப்பிரகாசர், ஆசிரியர் பணித்தபடியே,

"குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு — வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னு முலகு"

என்று ஒரு வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளினர். இவ்வெண்பாவில் 'ஊருடையான்' என்பதோடு 'வடக்கோடு தேருடையான்' என வந்துள்ளதையும் ஆசிரியர் வியந்து பாராட்டி, அவர்க்கு ஐந்திலக்கணங்களையும் பெருமகிழ்வுடன் கற்பித்து முடித்தார். ஐந்திலக்கணங் கற்ற அன்பின் பெருக்கால் அவர் தம் ஆசிரியர்க்குக் காணிக்கை கொடுக்க

முற்பட்டனர். ஆசிரியர் காணிக்கையை மறுத்துத் தம்மைப் பழிக்கும் தமிழ்ப் புலவரொருவரை வென்று அவரைத் தம்மிடம் பணிய வைக்குமாறு கூறினர். சிவப்பிரகாசர் அலைவாய் சென்று முருகப்பெருமானைப் போற்றும்போது, அவ்வூரவரான தமிழ்ப் புலவர், அவர் வெள்ளியம்பலசுவாமிகள் மாணவர் என்பதறிந்து வழக்கம்போல் பழிக்கத் தொடங்கினர். அதனால் ஒருவர்க் கொருவர் வாதம் நிகழ்ந்து, 'யாரொருவர் திருச்சீரலைவாய் முருகன் பேரில், 'நிரோட்டகயமக வந்தாதி' ஒன்று முதலிற் பாடி முடிக்கின்றனர்களோ அவர்களுக்கு மற்றையவர் அடிபணிந் தவராவர்' என்று முறை ஏற்படுத்திக் கொண்டனர். முருகனரு ளால் முதலில் முடித்தவர் சிவப்பிரகாசரே. அதனால் அவ்வூர்த் தமிழ்ப் புலவர் அடிபணியவேண்டியதாயிற்று. புலவரைச் சிவப் பிரகாசர் செந்தூரிலிருந்து அழைத்து வந்து ஆசிரியர்முன் நிறுத்தி நடந்தவை கூறித் தலைவணங்கச் செய்தனர்.

பின்பு அவர் ஆசிரியரிடம் விடைபெற்றுத் தில்லையை அடைந்தனர். இடையிற் சிவனுறையும் ஊர்கள்தோறுஞ் சென்று வணங்கினர். அவ்வாறு வணங்கிய ஊர்களுள் திருவெங் கையும் ஒன்றாகும். அங்கே பல நூல்களைச் செய்தருளினர். வெங்கைப் பிடாரியின் தேர்விழாவன்று அடியார்க்குதவும் முருங்கை, அத்தேரால் அழிந்தமை கேட்டுக் காளிக்குக் கடித மெழுதித் தேரையழித்தனர். தம்பியரிருவர்க்குந் திருமணத்தை முடித்தனர். ஒருநாள் திருவெங்கைத் தெருவில் உப்பு விற்கும் ஒரு மாதின் தமிழ்ப் புலமையைப் பிறர்க்குப் புலப்படுத்த "நிறைய வுளதோ வெளிதோ" என்னும் வெண்பாவை யுரைத் தலும், அம்மாது உடனே "தென்னேங்கு தில்லை" என்னும் வெண்பாவைப் பாடி முடித்து அடிபணிந்து மனமுருகவே அவர் அருள் பொழிந்து வாழ்த்தினர். இதன்பின் வன்றொண்டர்க்குக் கண் தந்த ஏகம்பரை வணங்கக் காஞ்சிமாநகர்க்குச் செல்லும் போது வழியில் பேரூரிலிருந்து வரும் சாந்தலிங்க சுவாமிகள் என்னும் அடியார் ஒருவரோடு கலந்துறவாடி இருவரும் சிவ ஞானபாலைய சுவாமிகளைக் காணவேண்டும் என்னும் நோக்கத் தோடு சென்றனர். செல்லும்போது சாந்தலிங்கசுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகளைச் சிவஞானபாலைய சுவாமிகள்பேரில் வணக்கப் பாடல்கள் சில கூறுமாறு வேண்டினர். சிவப்பிரகாச சுவாமிகள் "நரர்களைப் பாடுவதில்லை" என்று கூறிவிட்டார். இது நிற்க.

ஒருகால் உமையவள் தான் நீர்விளையாடிவரும் வரையில் ஒருவரையும் உள்ளே விடாதே எனச் சங்குகன்னருக்குக் கட்டளையிட்டபடி சிவபெருமான் உள்நுழையும்போது சங்கு

கன்னர் ஒன்றுங் கூறாதிருந்தமையின், உமையம்மையும் மற்றையோரும் நாணத்தால் வெட்கி ஒருபுறம் ஒதுங்க, அது கண்ட சிவபெருமான் சங்குகன்னருக்குச் சாபந்தந்தனர். சங்குகன்னர் சிவபெருமானை அடிபணிந்து 'சாபம் நீங்கு நாள் எந்நாளோ?' என்று வினவ, 'முருகப் பெருமானொடு மாறுபட்டுப் போர் தொடுக்கும் நாளே சாபத்தின் முடிவு நாள்' என அவர் விடை கிடைத்தது. அவ்வாறே அவர் உலகத்திற் பிறந்து பாலசித்தரெனப் பெயர்பெற்று அருந்தவம் ஆற்றி மயூரமலையிற் றங்கினர். தேவியர் வேண்டுகோளுக்கிரங்கிச் சித்தருக்கு முருகர் அருள் கூராதுவிடவே, அவர் மனைவியர் இருவரும் மண்ணுலகுக்கு வந்து சித்தருக்கு மகளிராயினர். காதலியரைக் கைவிட்ட முருகப்பெருமான் வேட்டையணிபூண்டு அங்கே அரசர் வடிவிற் றோன்றினர். பாலசித்தர் அரசரை வெறுத்து விற்போர், வாட்போர் தொடுத்தார். மற்போர் புரிந்தார். அவர் வேலைச் செலுத்தித் தாம் முருகரென விளக்கினர். சித்தர் தாம் மக்களாகக் கொண்ட அம்மையாரிருவரையும் முருகர்க்கு மணம்புரிவித்தனர். முருகப்பெருமான் பால சித்தருக்குத் திருவுளமிரங்கி, "ஐந்நூறாண்டுகள் உலகத்தில் மக்களுக்குச் சைவ சமயத்தைப் பரவச் செய்து பின் எம்மைச் சேர்வீராக" எனக் கட்டளையிட்டனர். பாலசித்தர், பச்சைக்கந்த தேசிகர் மரபில் மகப்பேறின்றி வருந்திய அம்மவை என்பவளால் பெருமுக்கல் மலையில் சதுரக்கள்ளிப்பால் கொடுக்கப்பெற்று உண்டு சிவஞான பாலைய சுவாமிகள் எனப் பெயர் பெற்றனர். உலகில் பல அற்புதங்களும் நிகழ்த்தி முடிவில் பொம்மபுரத்திலே தங்கியிருந்தார்.

பொம்மபுரத்துக் கருகிலுள்ள புத்துப்பட்டு என்னும் நகரத்தையடைந்து அன்றிரவு சிவப்பிரகாச சுவாமிகளும் சாந்தலிங்க சுவாமிகளும் ஐயனார் கோயிலின் பின்புறத்திற் றங்கினர். அன்றிரவு முருகப்பெருமான், சில விடுமலர்கள் கொடுத்துத் தொடுத்துத் தமக்கு அணியக் கட்டளையிட, அதுகொண்டு சிவஞான பாலைய சுவாமிகளின் பத்தித்தன்மை ஈதெனவறிந்து சில பாடல்கள் பாடி வழுத்திப், பாலையசுவாமிகளிடமிருந்து சிவஞானம் பெற்றனர். பின்பு ஆசிரியரின் ஆணைப்படி சாந்தலிங்க சுவாமிகளுக்குத் தம் தங்கை ஞானம்பிகையைத் திருமணம் முடித்து வைத்தனர்.

சில நாட்கள் கழிந்தபின் சிவஞானபாலைய சுவாமிகள் இறைவனொடு இரண்டறக் கலந்தமை கண்டு மனங்கலங்கிப் பின் ஒருவாறு தெளிந்து, தாமும், சில நாட்கள் உலகில் இருந்து பல நூல்கள் இயற்றிய பின், தமது முப்பத்திரண்டாம் ஆண்டில்

ஒரு முழுநிலவுநாளில் சிவப்பிரகாசர் இட்டலிங்க பரசிவத்தில் இரண்டறக் கலந்தருளினர்.

சிவப்பிரகாச சுவாமிகள் திருவண்ணுமலையில் இருந்த பொழுது சோண சைலமாலேயும் திருச்செந்தூரில் தமிழ்ப் புலவருடன் வாதிட்டு வெற்றிகாண நிரோட்டகயமகமும்; திருவெங்கையூரில் இருந்தபொழுது திருவெங்கைக்கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கை யலங்காரம் ஆகியவைகளும்; பொம்மபுரத்திற் றங்கியக்கால் தம் ஞானசிரியர் மீது தாலாட்டு, நெஞ்சுவிடுதூது என்னும் நூல்களும்; காஞ்சீபுரத்தி லிருந்த காலத்தில் வேதாந்த சூடாமணி, சித்தாந்த சிகாமணி, பிரபுலிங்க லீலே, திருப்பள்ளி யெழுச்சி, பிள்ளைத்தமிழ் என்பவைகளும், கூவத்தில் திருக்கூவப் புராணமும், விருத்தாசலத்திலிருந்தபொழுது பழமலே யந்தாதி, பிட்சாடன நவமணிமாலே, கொச்சகக்கலிப்பா, பெரியநாயகி யம்மை நெடுங்கழிநெடிலடியாசிரியவிருத்தம், பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை என்பவைகளும்; மீண்டும் பொம்மபுரத்திற்கு வந்தபின் சிவஞானபாலேய சுவாமிகள் கலம்பகம், நன்னெறி என்ப வற்ருேடு வீரமாமுனிவரை மறுத்து ஏசுமத நிராகரணம் என்பதும், நல்லாற்றூரை யடைந்து சிவநாம மகிமை, அபிடேகமாலே, நெடுங்கழி நெடில், குறுங்கழிநெடில், நிரஞ்சனமாலே, கைத்தலமாலே, சீகாளத்தி புராணத்தின் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச்சருக்கம் ஆகிய பல நூல் களும் இன்னும் ஆங்காங்குச் சிற்சில தனிப் பாடல்களும் அருளிச்செய்தனர் என்ப.

---

# உள்ளுறை



---

## சிறப்புப் பாயிரம்

ஏறாருஞ் சோண சயிலனுக் கெஞ்ஞான்றும்
பூணார மாலை புனைந்தணிந்தான் — மாறாப்
பவப்புணரி நீந்தியிடப் பாரதிநூல் செய்த
சிவப்பிரகா சையன்றான் றேர்ந்து.

---

## நூலாசிரியர் வணக்கம்

புனையெழில் வடிவி னாளோர் பொதுமகட் கண்டமைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் றமிழ்ப்பா மாலை
சினவிடை யவற்கே சாத்துஞ் சிவப்பிர காசனென்னும்
முனைவனெம் மடிகள் பாத முளரிகண் முடிமேல் வைப்பாம்.

---

உ

திருச்சிற்றம்பலம்

# சிவப்பிரகாச சுவாமிகள் பனுவல் திரட்டு

## க. சோணசைலமாலை

[மலர்களைக் கொண்டு கட்டப்பெறுவது மலர்மாலையாதல் போலப் பாக்களைக்கொண்டு தொடுக்கப்பெறுவது பாமாலையாகும். மலர்மாலைக்கு மலர்கள் இத்தனைதான் என்று கணக்கில்லாதது போலப் பாமாலைக்கும் பாடல்கள் இவ்வளவு தான் என்று வரையறை செய்யப்படவில்லை. மாலை நூல்கள் எத்துணைப் பாடல்களானும் அமைக்கப்பெறலாம். ஒன்பது பாடல்களால் அமைவது நவமணிமாலையாதல் போல் இம்மாலை எண்ணாற் பெயர்பெறுதலும் உண்டு. இரட்டை மணிமாலை இருபது பாடல்களைக் கொண்டு அமைகிறது. நான்மணிமாலை நாற்பது பாடல்களைக்கொண்டு முடிகிறது. இச்சோணசைல மாலை நூறுபாடல்களைக் கொண்டது. இம்மாலையின் பாடல்கள் முழுவதும் சொற்சுவையும் பொருட்சுவையும் நிறைந்து கற்பவர்கட்கு மிகுந்த இன்பம் பயப்பனவாக விளங்கு கின்றன. பாடல்களின் பின்னிரண்டடிகளினும் சோண சைலமாகிய அண்ணாமலையின் பெருமைகளையுஞ் சிறப்புக் களையும் இயற்கை வளங்களையும் மிகுந்தகற்பனையழ கோடு வருணித்துச் சோணசைலனை முன்னிலையாக்கி விளித்துரைக் கின்றார். முன்னிரண்டடிகளினும் தமது குறைகளைக் கூறித் தமக்கு அருள் செய்யவேண்டுமென்று முறைப்பாடு செய் கின்றார்.]

### காப்பு

சதுரனெழிற் சோண சயிலற் றுதிப்பன்
மதுரமொழி யன்பர் மனமாங்—குதிரைதிறை
கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானைதிறை
கொண்டவனை யென்னுளத்தே கொண்டு.

---

சதுரன் - எல்லா வல்லமையுமுடையான். சதுர் - கூத்து. ஐந் தொழில்களையும் தனது கூத்தாட்டினால் நிகழ்த்துபவன் என்பதும் ஒன்று. சதுர் - நான்கு. நான்காவதாகிய துரிய மூர்த்தியாய் நிற்பவ

## நூல்

அண்ணன்மா புகழ்மூ வரும்புனை யரும்பா
வன்றியென் கவியுநின் றனக்காம்
பண்ணுலா மிருவ ரிசைகொணின் செவியிற்
பாணிமா ஞெலியுமேற் றிலேயோ
விண்ணுலா முடியின் மேருவின் வடபால்
வெயிலொரு புடையுற வொருபால்
தண்ணிலா வெறிப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௧)

னெனினுமாம். எழில் - அழகு. சோணம் - சிவப்பு, ஈண்டு ஆகு பெயராய்த் தீயினை உணர்த்தி நின்றது. சைலம் - மலை, நெருப்பு மலையை வடிவாக வுடையவன். குரைகழல் - ஒலிக்கின்ற வீரக்கழல். மதுரமொழி யன்பர் - இனிய மொழிகளைப் பேசும் அடியவர்கள். மதுர மொழியாவது - துதிப்பாடல்கள் ஏத்துதல் - உயர்த்திக்கூறல். யானை திறைகொண்டவன் என்பது அத்தலத்து மூத்த பிள்ளையாரின் காரணப் பெயர். அதுவருமாறு :—

வடதேசத்தினின்று வந்து திருவண்ணமலையில் வாழ்ந்த முகில னென்னும் சிற்றரசன் சிவனடியார் முதலிய யாவர்க்கும் தீங்கியற்றலைக் கேள்வியுற்ற குகை நமசிவாயமூர்த்தி "சூலங் கரத்திருக்கச் சோதிமழு வாளிருக்க, ஆலமுண்ட காலத் தருளிருக்க - மேலே, எரித்த விழியிருக்க விந்நாட் சோணேசர், தரித்ததென்ன காரணமோ தாம்." என்று பாடுதலும் சிவாஞ்ஞையால் அன்றிரவு விநாயகக் கடவுள் யானை உருக்கொண்டு சென்று அச்சுறுத்தியவழி அவன் பேரிடர்ப்பட்டு அத்தீங்கில் நீங்க அவரை வழிபட்டு அவன் கொடுத்த யானைகளை அவர் திறையாகக் கொண்டமையால் யானை திறைகொண்டவர் எனப் பட்டார்.

விநாயகக் கடவுள் தம்மை வழிபடும் அன்பர்க்கு இடையூற்றை நீக்குதலும் அது செய்யாத வன்பர்க்கு அதனை ஆக்குதலும் பற்றி விக்கினேசுரர் என்னுந் திருப்பெயரும் உடையராகலான், யான் அவரை வழிபட்டு இந்நூலை இடையூறின்றி இனிது முடிப்பேன் என்பார்; 'என்னுளத்தே கொண்டு துதிப்பன்' என்றார். குதிரை திறை கொண்டமையும் யானை திறை கொண்டமையும் பிள்ளையாரின் அளித் தலையும், அழித்தலையும் உணர்த்தி நின்றன.

*௧. கம்பளன் அசுவதரனென்னும் இரு கந்தருவர்கள் ஒரு ஞான்று பெரிதும் புகழ்ந்து பாடியவழிச் சிவபெருமான் திருவுளமுவந்து பணித்த வாறே என்றும் காதணி வடிவமாயமர்ந்து பாடும் பெருவாழ்வு பெற் றெனர் ரென்பது வரலாறுதலின் இருவரென்பது அக்கந்தருவர்களை அன்றித் தும்புரு, நாரதரெனலும் ஒன்று. வடபாலுள்ள மேருவைப் போலத் தென்பாலில் வளர்ந்தெழுமென்றது, சூரிய சந்திரர்கள் இச் சோணசைலத்தைத் தாண்ட இயலாமையின் பக்கங்களிற் சூழ்ந்து சேறலானும், ஆதியந்தமறியப்படாமையானும், செந்நிறமுடைமையானும் என்க. அண்ணன்மாபுகழ்-பெருமை பொருந்திய சிறந்த புகழ். மூவரும்

*இது முதலிய எண்கள் செய்யுட்களின் எண்கள்.

துவக்கற வறிந்து பிறக்குமா ருருந்
துயர்ந்திடா தடைந்துகாண் மன்றும்
உவப்புட னிலைத்து மரிக்குமோர் பதியு
மொக்குமோ நினைக்குநின் னகரைப்
பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௨)

நீங்கருந் துயர்செய் வளிமுதன் மூன்ற
னிலையுளே னவைதுரந் திடுமுன்
வாங்கிநின் றனிவீட் டுறைகுவான் விரும்பி
வந்தன னின்குறிப் பறியேன்
ஆங்குறை மதியே தாங்கியென் றுலக
மறைகுறை யறநிறை மதியுந்
தாங்கிய முடியோ டோங்கிய சோண
சைலனே கைலைநா யகனே. (௩)

கனிமலை துவர்வாய்க் கோதையர்க் குருகுங்
கன்மனக் கொடியனுக் கென்னீ
துனிமலை பிறவி தவிர்த்தனை யெனநிற்
சுளிபவ ரிலையெனக் கிரங்காய்

---

என்றது அப்பர், சுந்தரர், சம்பந்தர் என்போரை. பண் - இசை. பாணி - கை. பால் - பக்கம். "என்கவியு நின்றனக்காம்" எனவே அவை யடக்கமுங் கூறினாராயிற்று. பாணிமான் ஒலி என்பதற்குச் சடையி லுள்ள கங்கை நீரின் ஒலி என்று பொருள் கோடலும் ஒன்று. ௨. துவக்கு - பாசப் பிணிப்பு. மன்றும் பதியும் என்பன தில்லையையும் காசியையும் உணர்த்தி நின்றன. நினைக்கு நின்னகரை - நினைத்த அளவில் முத்தியைக் கொடுக்கும் நினது பதியை. (திருவண்ணாமலை) திகைப்பு - நெறிபிறழ்தலா லுண்டாகும் கலக்கம்; அது நிகழாவாறு மரக்கலமூர்வோர் கரைக்கணுள்ளதொரு குறியினை நோக்கிச் சேறல் போல முத்தியங்கரையிற் படர்பவர் இச்சோணசைலத்தை நோக்கிச் செல்லா நிற்பரென்பது. நோக்கல் - பார்த்தல், தியானித்தல். தவம் - சரியை, கிரியை, யோகம், ஞானம். மரிக்கும் - இறக்கும். பவக்கடல் - பிறவிக்கடல். படர்பவர் - செல்லுகிறவர். ௩. வாதபித்த கோழை களினிடமாகிய உடலில் ஒதுக்கிருந்த யான் அவை என்னை யோட்டுமுன் உமது தனி வீட்டை உரிமையுறப் பெற்று அதில் உறைகுவான் வந்தன னென்பது. வீடு - மோட்சம் தாங்கி - பெயர். உம்மை இறந்தது தழீஇயது. அறை குறையற - சொல்லப்படுகின்ற குறைவு நீங்க. வளி - வாதம். துரந்திடும் - விரட்டும் நிறைமதியைத் தாங்குதல் முழுத் திங்கள் நாளில் என்க. ௩. கனி மலை துவர்வாய் - கொவ்வைக் கனியைப் பொரும் செவ்வாய். துனி மலை பிறவி - துன்பத்தால் வருத்தும் பிறவி. பனி மலை கதிர் - பனியைக் கெடுக்குஞ் சூரியன். இச்சோண

பனிமலை கதிர்வந் துறநிலை யாடி
பயின்றபீ டிகையென வுதயத்
தனிமலை யிருப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௪)

சுடரிலை நெடுவேற் கருங்கணார்க் குருகித்
துயர்ந்துநின் றலமரு மனநின்
நடநவில் சரண பங்கய நினைந்து
நைந்துநைந் துருகுநா ளுளதோ
மடலவிழ் மரைமாட் டெகினென வருகு
மதியுறக் கார்த்திகை விளக்குத்
தடமுடி யிலங்க வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௫)

அருங்கவி வாத வூரனே முதலோ
ரன்பிலே மென்றது வேண்டி
இரங்குதல் பொய்ம்மை யன்பிலே னெனயா
னியம்பலே மெய்யெனக் கருளாய்
கருங்கட முமிழு மீர்ங்கவுட் பனைக்கைக்
கரியுரிக் கஞ்சுகங் கடுப்பத்
தரங்கமுண் டெழுகார் முகில்பயில் சோண
சைலனே கைலைநா யகனே. (௬)

புரத்துறு மவுணக் குழாமும்வண் டிசைகூர்
பூங்கணை மதனுமுன் பெறுநின்
சிரித்தசெவ் வண்ணகையு நுதல்விழி நோக்குஞ்
சிறியனே னிருண்மலம் பெறுமோ

---

சைலப் பிரானுக்கு எதிரில் நிறுவிய நிலைக்கண்ணாடிப் பீடம்போல் நின்றது. சூரியனுறுங்கால் உதயகிரி என்றவாறு என் - என்ன காரணத்தால்? சுளிபவர் - சினப்பவர். அரவகல் அல்குலார்பால் ஆசை நீத்தவர்கட்கே வீடாகவும் உருகுங் கொடியனுக்கு ஏன்பிறவி தவிர்த்தனை என்று சுளிபவர். ரு. துயர்ந்து - வருந்தி. மரை - தாமரை; முதற்குறை. எகின் - அன்னம். கார்த்திகைத் தீபம் செந்நிறம் வாய்ந்து ஓங்கியும், பிறை வெண்ணிறம் வாய்ந்து கூனியுமிருத்தலின், அவற்றைச் செந்தாமரை மலரும் அன்னமுமாக உருவகித்தார். சுடரிலைநெடுவேல் - இலை வடிவாகச் செய்யப்பட்டு ஒளிவிடுகிற நீண்டவேல். அலமரும் - சுழலும். நடம்நவில் - கூத்தியற்றுதலைச் செய்கிற. கூ. முகில் கஞ்சுகங் கடுப்பப் பயில் என இயையும், கஞ்சுகம் - சட்டை. தரங்கம் - கடல்; ஆகு பெயர். அன்புடையராயிருக்கவும் இல்லையென்று பொய் கூறிய வாதவூரற்கு அருளினமை அடாது. மெய் கூறுமென்றனக் கருளுதலே கடன். கடம் - மதநீர். ஈர்ங்கவுள் - குளிர்ந்த கன்னம், கடுப்ப - ஒப்ப. பனைக்கை - பனை மரத்தைப்போன்றகை. முகில் பயில் - முகில்கள்

கருத்தினுங் கருத வரியநுண் ணியனென்
கடனற வுலகெலாங் காண்பான்
தரித்ததி தூல வடிவுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (எ)

ஆர்த்தெழு திரைகள் சுருண்டெறி கடனஞ்
சமுதுசெய் பெரும்புகழ்த் தனிமை
தீர்த்திட வுளங்கொண் டவலனேன் றனைநின்
றிருவடிக் கன்பனுக் கிலையே
கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து
கண்டவ ரகத்திரு ளனைத்தும்
சாய்த்துநின் றெழுந்து விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அ)

தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடலந்
தொலைக்குமு னகத்துட ரெலைத்துத்
தடையறத் திகழ்பே ரறிவுரு வாகத்
தமியனேற் கருளுநா ளுளதோ
புடையினிற் கரிக்கோ டிளம்பிறை புரையப்
பொங்குசோ தியங்கொடி விரித்த
சடையெனப் படர்ந்து கிடந்தொளிர் சோண
சைலனே கைலைநா யகனே. (கூ)

கண்புன றுளிப்ப வழற்படு மிழுதிற்
கரைந்துகு நெஞ்சினின் றனையே
பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது
பெண்மய லகற்றுநா ளுளதோ
வண்புனல் வேந்த னார்கலிக் குடத்து
மணிமுகிற் கலயத்தின் முகந்து
தண்புன லாட்ட வாடுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கo)

---

படிகின்ற. எ. கடன் - முறைமை. புரம் - முப்புரம். இருண்மலம்— ஆணவமலம். தூலவடிவு - பெரிய மலை வடிவம். நினது வெண்ணகையையும், நுதல் விழி நாட்டத்தையும் எனது ஆணவ மலம்பெற அருளுவையோ? அ. ஆர்த்தெழு திரைகள் - ஆரவாரித்தெழும்அலைகள். அவலனேன் - வீணனவன். அடியேன் நஞ்சினும் கொடியேனாகையால் நீ ஆளவில்லையென்பது கருத்து கூ. தொடை - மாலை. அகத்துடல் - அஞ்ஞானம். அறிவுருவாக - வீடுபேற்றையடைய. புடை - பக்கம். கரிக்கோடு - யானைத்தந்தம். புரைய - ஒப்பாகவிளங்க. சோதியங்கொடி - இரவில் ஒளிவீசுதலையுடைய ஒருவகைக் கொடி கo. புனல்- நீர். அழல் - தீ. இழுது - வெண்ணெய். ஆர்கலி - கடல். வருணன் முகிற்குடத்தால் மொண்டு நீராட்டினாலன்றி நீ நீராடுதல் அருமை என்பது குறிப்பு.

வேலையந் துகில்சூழ் மலர்தலை யுலகின்
மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே
ஏலவந் தருள்வ தன்றிமெய் யினைமெய்
யெனுமெனக் கருள்புரிந் திடாயோ
காலநன் குணர்ந்து சினகரம் புகுந்து
காண்பரி தெனுதுல கனைத்துஞ்
சாலநின் றுழியே கண்டிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கக)

மயலினு லழுந்தும் பிறவியா மளற்றை
வளர்தரு நின்பெருங் கருணை
வெயிலினு லுலர்த்தி யெனதுளக் கமலம்
விரிக்குமொண் பரிதிநீ யலையோ
பயிலுமா லயமோர் சைலமோர் சைலம்
பகைப்புல முருக்குகார் முகமோர்
சைலமா துலனு மெனக்கொளுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கஉ)

புலம்புரி துயரங் கழன்றுநின் கழற்கால்
புந்தியஞ் சினகரத் திருத்தி
நலம்புரி மனிதர் பேரவை தமியே
னணுகுவா னருளுநா ளுளதோ
வலம்புரி மனிதர் சடலென வொலித்து
வளைவுற நடுவண்மந் தரம்போல்
தலம்புரி தவத்தி னின்றருளிர் சோண
சைலனே கைலைநா யகனே. (கங)

நீரினி லெழுமொக் குளினழி யுடம்பு
நிலையென நிலக்குமா னந்த
வாரிதி படிய வறிந்திடா துழலு
மடைமையே னுய்யுநா ளுளதோ
ஏரியல் பதமுன் றேடுமக் கேழ
லின்றுநா டியகிளைத் திடல்போற்
சாரலி னேன மருப்புழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கச)

---

கக. வேலையந் துகில் - கடலாடை. சினகரம் - கோவில். மெய்- உடல். ஏல - பொருந்த. சால - மிக. நின்றுழியே - நின்றவிடத்தே. கஉ. மயல் - மயக்கம். ஆலயம் கைலை; கார்முகம் - மேரு; மாதுலன் இமயம் என்க. அளறு - சேறு. பரிதி - கதிரவன். பகைப்புலம் - பகைவர் ஊர். உருக்கு - அழிக்கும். மாதுலன் - மாமன். கங. புலம்- ஐம்பொறி. கழன்று - நீங்கி. நலம்புரி மனிதர் - வீடுபெற்று விருப்பினையுடையோர். கச. வாரிதி - கடல். கேழல்-பன்றி. மொக்குள்-

கருத்திடை நின்று கருணைமா மேனி
கண்டெழுத் தைந்துநா வியம்பச்
சிரத்தினி லமைத்த கரத்தொடு நினையான்
தினம்வலம் புரியுமா றருளாய்
வரத்திரு முடியின் மதிதிரு முடியின்
வனைந்துகந் தரத்தினி லிருள்கந்
தரத்தினி லிருத்தி விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கரு)

பாரெலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப்
பயனென வுணர்ந்துநா டொறுமா
ரூரனு ரவையி னிகழ்ந்தசொற் றுதியி
னுவக்குநின் பதந்தொழ வருளாய்
ஏருலா மண்டச் சுவர்மதின் மிசைப்பா
லிலங்குறு மண்டகோ ளகையாச்
சாருமா லயத்தி லிலிங்கமாஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கசு)

இந்தியங் கரண முடலம்வே றுக்கி
யிருண்மலப் படலமுங் கீறிக்
கந்தமு மலரு மெனநினை யென்னிற்
காண்பறக் காணுநா ளுளதோ
வந்தொரு களிறு முழுவையுங் கொன்ற
மலிபகை தவிர்ப்பவெண் ணிகந்த
தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கஎ)

முழுங்குவண் டினங்கள் விருந்துணு மலங்கன்
மொய்குழன் மகளிர்தம் மயலாற்
புழுங்குமென் றனைநின் றிருவடி நிழலிற்
புகவிடுத் தளிக்குநா ளுளதோ

---

நீர்க்குமிழி. நிலைக்கும் - என்றும் நிலைபெற்றுவிளங்கும். கிளைத்திடல்- தோண்டுதல். ஏனம் - பன்றி. மருப்பு - கொம்பு. கரு. வரம் - மேன்மை. வனைந்து - சூடி. கந்தரம் - குகை, கழுத்து. கசு. பயன்- பொருள். சிவபெருமானுக்கு இகழ்ச்சி மொழியும் புகழ்ச்சிப் பொருள தென்பது கருத்து. இதனை இவ்வாசிரியரருளிய சிவநாம மகிமையின் அ - ஆவது பாடலினுமுணர்க. உணர்ந்து - நாடொறும் தொழ என இயையும், மிசைப் பால் - மேற்பரப்பு. கோளகை - மேற்கடாகம். கஎ. கந்தம் சிவத்திற்கும், மலர் ஆன்மாவிற்கும் ஒப்பு. வந்த என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கது. உழுவை - புலி. தந்தி - யானை. காண்பற - இடைவிடாது. கஅ. சடை மறையாநிற்க அச்சடைக் கங்கைதான் மறையாது இழிதல்போல அருவியிழியும் என்பது.

வேலையந் துகில்சூழ் மலர்தலை யுலகின்
மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே
ஏலவந் தருள்வ தன்றிமெய் யினைமெய்
யெனுமெனக் கருள்புரிந் திடாயோ
காலநன் குணர்ந்து சினகரம் புகுந்து
காண்பரி தெனுதுல கனைத்துஞ்
சாலநின் றுழியே கண்டிடுஞ் சோண
சைலனே கைலை நா யகனே. (கக)

மயலினு லழுந்தும் பிறவியா மளற்றை
வளர்தரு நின்பெருங் கருணை
வெயிலினு லுலர்த்தி யெனதுளக் கமலம்
விரிக்குமொண் பரிதிநீ யலையோ
பயிலுமா லயமோர் சைலமோர் சைலம்
பகைப்புல முருக்குகார் முகமோர்
சைலமா துலனு மெனக்கொளுஞ் சோண
சைலனே கைலை நா யகனே. (கஉ)

புலம்புரி துயரங் கழன்றுநின் கழற்கால்
புந்தியஞ் சினகரத் திருத்தி
நலம்புரி மனிதர் பேரவை தமியே
னணுகுவா னருளுநா ளுளதோ
வலம்புரி மனிதர் சடலென வொலித்து
வளைவுற நடுவண்மந் தரம்போல்
தலம்புரி தவத்தி னின்றருளிர் சோண
சைலனே கைலை நா யகனே. (கங)

நீரினி லெழுமொக் குளினை ழி யுடம்பு
நிலையென நிலைக்குமா னந்த
வாரிதி படிய வறிந்திடா துழலு
மடைமையே னுய்யுநா ளுளதோ
ஏரியல் பதமுன் றேடுமக் கேழ
லின்றுநா டியகிளைத் திடல்போற்
சாரலி னேன மருப்புழுஞ் சோண
சைலனே கைலை நா யகனே. (கச)

---

கக. வேலையந் துகில் - கடலாடை, சினகரம் - கோவில். மெய்- உடல். ஏல - பொருந்த. சால - மிக. நின்றுழியே - நின்றவிடத்தே. கஉ. மயல் - மயக்கம். ஆலயம் கைலை; கார்முகம் - மேரு; மாதுலன் இமயம் என்க. அளறு - சேறு. பரிதி - கதிரவன். பகைப்புலம் - பகைவர் ஊர். உருக்கு - அழிக்கும். மாதுலன் - மாமன். கங. புலம்- ஐம்பொறி. கழன்று - நீங்கி. நலம்புரி மனிதர் - வீடுபேற்று விருப் பினையுடையோர். கச. வாரிதி - கடல். கேழல்-பன்றி. மொக்குள்-

கருத்திடை நின்து கருணைமா மேனி
கண்டெழுத் தைந்துநா வியம்பச்
சிரத்தினி லமைத்த கரத்தொடு நினையான்
தினம்வலம் புரியுமா றருளாய்
வரத்திரு முடியின் மதிதிரு முடியின்
வனைந்துகந் தரத்தினி லிருள்கந்
தரத்தினி லிருத்தி விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கரு)

பாரெலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப்
பயனென வுணர்ந்துநா டொறுமா
ரூரனு ரவையி னிகழ்ந்தசொற் றுதியி
னுவக்குநின் பதந்தொழ வருளாய்
ஏருலா மண்டச் சுவர்மதின் மிசைப்பா
லிலங்குறு மண்டகோ ளகையாச்
சாருமா லயத்தி லிலிங்கமாஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கசு)

இந்தியங் கரண முடலம்வே ருக்கி
யிருண்மலப் படலமுங் கீறிக்
கந்தமு மலரு மெனநினை யென்னிற்
காண்பறக் காணுநா ளுளதோ
வந்தொரு களிறு முழுவையுங் கொன்ற
மலிபகை தவிர்ப்பவெண் ணிகந்த
தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கஎ)

முழங்குவண் டினங்கள் விருந்துணு மலங்கன்
மொய்குழன் மகளிர்தம் மயலாற்
புழுங்குமென் றனைநின் றிருவடி நிழலிற்
புகவிடுத் தளிக்குநா ளுளதோ

---

நீர்க்குமிழி. நிலைக்கும் - என்றும் நிலைபெற்றுவிளங்கும். கிளைத்திடல்- தோண்டுதல். ஏனம் - பன்றி. மருப்பு - கொம்பு. கரு. வரம் - மேன்மை. வனைந்து - சூடி. கந்தரம் - குகை, கழுத்து. கசு. பயன்- பொருள். சிவபெருமானுக்கு இகழ்ச்சி மொழியும் புகழ்ச்சிப் பொருள தென்பது கருத்து. இதனை இவ்வாசிரியரருளிய சிவநாம மகிமையின் அ - ஆவது பாடலினுமுணர்க. உணர்ந்து - நாடொறும் தொழ என இயையும், மிசைப் பால் - மேற்பரப்பு. கோளகை - மேற்கடாகம். கஎ. கந்தம் சிவத்திற்கும், மலர் ஆன்மாவிற்கும் ஒப்பு. வந்த என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கது. உழுவை - புலி. தந்தி - யானை. காண்பற - இடைவிடாது. கஅ. சடை மறையாநிற்க அச்சடைக் கங்கைதான் மறையாது இழிதல்போல அருவியிழியும் என்பது.

வழங்குவெண் டிரையா றவிர்சடை கரப்ப
மணிமுடி நின்றிழிந் திடல்போல்
தழங்குவெள் ளருவி யிழிந்தொளிர் சோண
சைலனே கைலைநா யகனே. (௧௮)

குன்றுதோ றாடுங் குமரனே யெனவுங்
கொடுஞ்சிலை மதனவே ளெனவும்
புன்றொழின் மனிதர்ப் புகழ்ந்துபாழ்க் கிறைக்கும்
புலமைதீர்த் தெனக்கருள் புரியாய்
ஒன்றொரு தினந்தோட் குட்குழைந் தனமென்
றுருதுநா டொறுமக மேரு
தன்றலை தாழ்ப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௧௯)

வெண்டிரு நீறு புனையுமா தவர்க்கு
விருந்துசெய் துறும்பெரு மிடியுங்
கொண்டநல் விரதத் திளைக்கும்யாக் கையுமிக்
கொடியனேற் கருளுநா ளுளதோ
வண்டுழுங் குவளை மலர்தடஞ் சுனையின்
மற்றைவா னவர்க்குரித் தன்றிச்
சண்டியுண் மகிழ்ந்து கொளமலர் சோண
சைலனே கைலைநா யகனே. (௨௦)

வந்துமா மறலி யெனதுயி ருண்பான்
மயிலையுண் சிரலினிற் கின்றான்
முந்திநீ யெனையா னந்தவா ரிதியின்
மூழ்குற விடுத்தருள் புரியாய்
நந்துளான் மலையே யென்றுசா திப்ப
நனைமலர் வேங்கையு மசோகுஞ்
சந்துமேன் முளைப்பச் செய்துகொள் சோண
சைலனே கைலைநா யகனே. (௨௧)

---

அலங்கல் - மாலை. புழுங்கும் - வருந்தும். கரப்ப - மறைக்க. தழங்கு. ஒலிக்கின்ற. ௧௯. ஒன்று - ஒரு தினம்; முப்புரஞ் சுட்ட நாள்- தோள் - புயம், கை. குழைதல் - வில்லாக வளைதல். ௨0. புனையும். அணியும். மிடி - வறுமை. சிவவடிவாகிய இம் மலையிற் பூத்த பூ சூடிக் கழிவடைந்த தாதலின் சண்டேசருக்கே உரித்தாதல் குறித்தவாறு- ௨௧. மறலி - இயமன். மயிலை - மீன். சிரல் - மீன்குத்திப் பறவை. சந்தும் - சந்தனமும். நனை - தேன். நந்துளான் - கையிற் சங்கினை யுடைய திருமால். நந்துமாமலையே என்று பாடங்கொண்டு மரஞ்செடி கொடிகள் வளருகின்ற பிற மலைகளைப் போன்றதே இம்மலையும் என்று அறிவிலார் கூற என்று பொருள் கோடலுமாம்.

பூமழை யமரர் பொழியமா தவர்கட்
புனன்மறு கிடைப்பொடி யடக்கத்
தூமொழி மனைநீ தூதுபோம் பயனில்
சொற்பதர் புடைத்திளைக் கின்றேன்
யாமுணர் மிருபே ருருவமாய் வரினு
மிருவரு முணர்த்திடி னன்றித்
தாமுணர் கிலரென் றெழுந்துயர் சோண
சைலனே கைலைநா யகனே. (உஉ)

கழைமொழிக் கொடியோர்க் கேவல்செய் துடலங்
கமருகு மமிழ்தின்மங் குருமல்
விழைவறத் துறந்துன் றிருவடிக் கமலம்
விழைகுநர்க் கேவல்செய் திலனே
மழைமதக் களிநல் யானைமத் தகம்பாய்
வள்ளுகி ரோடுசெல் லரிமாத்
தழைசிறைச் சிம்புள் கொண்டெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (உ௩)

கார்தரு சுருண்மென் குழற்சிறு நுதற்பூங்
கணைபுரை மதரரிக் கருங்கண்
தார்தரு குவவுக் கொங்கைநுண் மருங்குற்
றையலார் மையலென் றொழிவேன்
சீர்தரு மணியி னணிந்தன வெனக்கட்
செவியுமொண் கேழலின் மருப்புஞ்
சார்தரு முலக விளக்கெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (உ௪)

நந்துகைத் தலத்து நாரணற் கயற்கு
நவமணிக் கரகநீ ரிருந்தும்
மைந்துறக் குறித்து மாட்டியுங் காண்பான்
மதித்திடா துனையெதிர்ந் திலரே

---

உஉ. கட்புனல் - இன்பக்கண்ணீர். தூதுபோம் பயன் - தூது போதற் கேதுவாகிய பொருட் சிறப்பு. யாம்வரினும் யாமுணர்த்திடினன்றி இருவரும் தாமுணர்ந்திலர் என இயையும். மறுகு-வீதி. பொடி - புழுதி. உ௩. கழை - கரும்பு. கமர் - நிலத்தின் வெடிப்பு. உகும்-சிந்தும். விழைகுநர்-விரும்புவோர். மாவென்புழி இரண்டனுருபு விரிக்க. சிம்புள் - சரபம். உ௪. அணியின் - அணிபோல. அக்கினி மலையாதலின் உலக விளக்கென்றார்; உயிர்க்குயிராய்ஙின்று உணர்த்துஞ் சோதி என்றலுமாம். கட்செவி - பாம்பு. தார் - மாலை. குவவு - பெருத்த குழலையும் நுதலையும். இருகண்ணையும்; கொங்கையையும், மருங்குலையும் உடைய தையலார் என உம்மை விரிக்க. உ௫. நாரணற்கு நந்தும் அயற்குக் கரகநீரும் என உம்மை விரிக்க. குறித்தல் - ஊதுதல்.

ஐந்துகைத் தனிக்கோட் டொருபெருங் களிறு
மறுமுகம் படைத்த கேசரியுந்
தந்தைமைப் புரக்குங் கருணைகூர் சோண
சைலனே கைலைநா யகனே. (உ௫)

வினையரும் புகலிக் கிறைமணப் பந்தர்
விருந்தினுக் குதவிலேன் முந்திற்
றினையிரந் திடுவான் வந்தனன் பதநீ
யுதவியென் றுயரொழித் தருளாய்
இனியபைந் தமிழின் பொதியமால் வரைபோ
லிசைக்குரு காதிம மலையின்
தனையையின் றீஞ்சொற் குருகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (உ௬)

பெண்ணருங் கலமே யமுதமே யெனப்பெண்
பேதையர்ப் புகழ்ந்தவந் திரிவேன்
பண்ணுறுந் தொடர்பிற் பித்தவென் கினுநீ
பயன்றர லறிந்துநிற் புகழேன்
கண்ணுறுங் கவின்கூ ரவயவங் கரந்துங்
கதிர்கணா றுயிரங் கோடித்
தண்ணிறங் கரவா துயர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (உ௭)

உயங்குநூ லிடைப்பூங் கோதைய ரல்கு
லொளிமணிப் பாம்புதீண் டுதலால்
மயங்குவேன் றனக்குன் பதமருந் துதவி
மயக்கமென் றொழித்தருள் புரிவாய்
முயங்குமா புகழ்ப்பூம் புகலியந் தணர்க்கு
முத்துவெண் பந்தரீந் தகல்வான்
தயங்குமீன் முத்துப் பந்தர்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே. (உ௮)

---

நந்து - சங்கு. மைந்து - வலிமை. கேசரி - சிங்கம். ஐந்துகைத்தனிக் கோட்டொரு பெருங்களிறு-ஆனைமுகக்கடவுள். உ௬. அரும்-அருமை; இன்மை. மணவிருந்திற்கு வரவில்லை, உன்னிடத்திரப்பதற்காக வந்தனன். உணவினைக் கொடுத்துக் காப்பாற்றுவாயாக என்று மற்றொரு பொருளுங் கொள்க. பதம் - பாதம் (முத்தி); உணவு. புகலிக்கிறை- திருஞானசம்பந்தர். தனையை - மகள். உ௭. இவரது ஒளி இலக்கங் கோடி. சூரியர்களது ஒளியை ஒப்பினும் அது போல வெம்மை செய் யாது இதஞ் செய்வதென்பார் தண்ணிறம் என்றார். இதனை "தண்ணந் திங்களிற் றண்ணெனத்தன்கதிர் - வண்ணங் குன்றுறு ஞாயிறு" என்பதனாலும் அறிக. உ௮. மீன்முத்து - உடுக்களாகிய முத்து. பாம் பொன்று தீண்டினால் அதன் நஞ்சு தலைக்கேறி மயங்குவார்க்கு மருந்து

மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும்
விளங்குமா கமவுணர்ச் சியினும்
புத்தலர் கொடுநிற் பரவுபூ சையினும்
பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்
முத்தமு மரவ மணிகளு மெறிந்து
முதிர்தினைப் புனத்தெயின் மடவார்
தத்தைகள் கடியுஞ் சாரலஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (உக)

பாயும்வெண் டிரைப்பே ராழிசூ ழுலகிற்
பழமொழி யொழியமெய் யடியார்
ஆயுமென் மலரோர் மலையள வணிய
வமர்ந்தநின் கோலம்யான் மறவேன்
தூயவெண் மதியிற் களங்கமென் றுரைப்பச்
சூழ்பசுங் கொடிபயி லுருவச்
சாயைசென் றுறநின் றிலங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௩௦)

நடமிடு பசும்பொற் புரவிமேற் கொண்டு
நளினமென் மலர்க்கரத் தெறிபூம்
படையொடு துரந்து வந்துமென் விடயப்
பகைப்புலி தனையெறிந் திலையே
அடிநடு நிழல்சென் றொழுகட லுடைய
வகல்பெரும் புறத்துவா ரிதியில்
தடமுடி நிழல்சென் றுறவளர் சோண
சைலனே கைலைநா யகனே. (௩க)

---

கொடுத்துத் தீர்ப்பது போல், பெண்கள் அல்குற் பாம்பு தீண்டி அவா வெனும் நஞ்சு ஏறி மயங்குமெனக்கு அதனையொழிக்க உன்றிருவடியாகிய மருந்தளித்துதவி யருள் என்பார். "உன்பதமருந்துதவி மயக்கமென்றொழித்தருள் புரிவாய்" என்றார். பதம் என்பது பாதம்; அது திருவடி. புகலியந்தணர் - திருஞானசம்பந்தர். தயங்கும் - விளங்கும். உக. புது அலர் - அன்றலர்ந்த மலர். உண்மைத் தவமுடையவர் அடிகளைப் பரவிப் பணிசெய்தால் பேரின்ப நிலையடையலாம் என்பது. தத்தைகள் கடியும் - கிளிகளையோட்டும். முத்துக்களையும் பாம்பின் மணிகளையும் எறிந்து ஓட்டுதற்கு அந்நிலத்தின் செழுமையையோ அல்லது மணிகளின் பெருமையை அறியாமையையோ காரணமாகக் கொள்க. ௩௦. பழமொழியாவது - மலையளவு சுவாமிக்குத் தினையளவு புட்பம் என்பது. அம்மொழிபகல மலையளவாயுள்ள இக் கடவுளுக்குப் பல மலையளவாகவே மலர்களைச் சாத்துவரென அடியவரது புட்பப் பணியின் மிகுதி குறித்தபடி. மதியில் சாயையுற என்க. ௩க. குதிரை வீரராதல் உமக்கியற்கையேயாகவும் அங்ஙனமே ஆரோகணித்து வந்தும் எறிந்தீரில்லை; இனியேனும் எறிவீராகவென்பது.

யாவுமா முமையுண் ணுமுலை முலைப்பா
　　லீந்துபா டச்செயா யெனினும்
மேவுமா துயர்செய் சூலைநோ யெனினும்
　　விடுத்துநிற் பாடுமா றருளாய்
ஓவுமா னலது தொல்லுருக் கொளின்வே
　　றென்றெடுத் திடுமென நினைந்து
தாவுமா னினமெண் ணிகந்தசூழ் சோண
　　சைலனே கைலைநா யகனே. (௧௨)

விருப்பொடு வெறுப்பு மகன்றுபே ரின்ப
　　வெள்ளத்து ளழுந்துநின் னடியார்
திருப்பத மிறைஞ்சி யவர்க்குவே ளாண்மை
　　செய்பெருஞ் செல்வமே யருளாய்
பொருப்புக டொறும்வீழ் பொங்குவெள் ளருவி
　　போன்றறி விலர்க்கிடை யறுமல்
தரிப்பருங் கருணை பொழிதருஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே. (௧௩)

பொங்குறு கவினுங் கற்பும்வாய்ந் திலங்கு
　　புண்ணிய மடந்தையும் பொருளும்
இங்குநன் குதவி யங்குவான் கதியி
　　னிருத்துநிற் புலவரென் புகழார்
துங்கவெங் குறவர் புனத்திடு பரண்கா
　　றுணித்துநட் டாரமீ மிசைமா
தங்கவெண் மருப்புப் பரப்புறுஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே. (௧௪)

போழ்ந்திடு வடுக்கண் மகளிரை யணைத்துப்
　　புகழ்நந்தி பிரம்படிக் கொதுங்கிச்
சூழ்ந்திடு மமரர் நெருங்குசந் நிதியிற்
　　றெண்டனேன் வரவருள் புரியாய்

---

௧௨. ஓவுமான் இம்மலைவடிவில் ஏந்தப்படாது தவிர்ந்தமான்: தொல்லுரு - பழைய சகளவடிவு. காத்தமை குறித்து நம்மையே தாங்குவரென மானினஞ் சூழ்ந்தன வென்பது. ௧௩. வேளாண்மை - உதவி. மலைக்கணின்று அருவிகள் ஓடி உலகைப்புரப்பதுபோல, அருவியாகிய கருணை பொழிந்து அறிவிலரையுங் காப்பன் என்பது. பொருப்புகள்-மலைகள். ௧௪. ஆரந் துணித்துக் கால்நட்டு என இயையும், ஆரம்-சந்தனமரம். மீமிசை-மேல். மீமிசை-ஒருபொருட் பன்மொழி. வான்கதி என்பது சிறந்த வழி. அது முத்திநிலையுமாம். கவின் - அழகு. அங்கு - மறுமையில். ௧௫. மகளிரை யணைத்தல் - கூட்ட மிகுதியால் தம் மனைவிமார்க்கு ஊறு நேராமைப்பொருட்டு. மக - மகவு. தாய் மாட்டு அன்பின் சின்னமாக முலைப்பா லொழுகுதல்போல ஈண்டு

வாழ்ந்திடு மகக்கன் டுருகுதாய் முலைப்பால்
வழிந்தொழு குதலென வடியார்
தாழ்ந்தெழ வருவி யொழுகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௰௫)

நேர்ந்திடு மொருசெங் கோல்கொடு கொடுங்கோ
ளிமிர்ந்திட விலங்கைசென் றடைந்தோன்
கூர்ந்தவன் பொடுநின் றிறைஞ்சுபு வழுத்துங்
குரைகழ லிரக்கவஞ் சுவல்யான்
சேர்ந்திடு மலைமான் பெருமுலை யுவமை
சிறுமலை களுக்குத வாமற்
சார்ந்திட விரும்பி வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௰௬)

தெருமரும் பிறவி தமையகன் றிடாத
தேவரைத் தேவரென் றெண்ணி
அருமருந் தனைய நினையடை யாத
வறிவிலார் பவப்பிணி யறுமோ
கரிமருங் கணைந்த தெனமுழை வாயிற்
கார்வர விரைந்தெழுந் துகள்கே
சரிமறைந் திருந்து நாணுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௰௭)

ஆண்டுகம் பலசென் றிடவிருந் திடினு
மன்றியோ ரிமைப்பினி லுடலம்
மாண்டுகு மெனினு நன்றுநின் கமல
மலரடிக் கன்பரா யிருப்பிற்
பூண்டயங் கயில்வேற் குதலையந் தீஞ்சொற்
புதல்வன்மே லிவர்செய லெனமார்த்
தாண்டன்வந் திவர விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௰௮)

---

அருண்மிகுதிச் சின்னமாக அருவியொழுகும் என்க. போழ்ந்திடுவடு - பிளந்த மாவடு. ௰௬. செங்கோலாகமவன்பார் கொடுங்கோனிமிர்ந் திடவென்றார். செங்கோல் கொடுங்கோலென்பவை நீதி அநீதி மேலன. நிமிர்தல் - செவ்விதாதல். கழல் - ஆகுபெயர். இலங்கை சென்றடைந்தோன் - திருமால் கூர்ந்த - பொருந்திய. ௰௭ தெருமரும் - அச்சந்தரக் கூடிய; உகள் - துள்ளி. பவப் பிணி - பிறவி நோய்; அச்சந் தரக்கூடிய பிறவிநோயை அறுக்காத தேவர்களை இறைவனாகக் கருதுபவர்கள் அறிவிலராவர். இறைவற்குப் பிறவிப் பிணி இல்லை என்பது. அருமருந்து - அமுதம். கரி - யானை. கார் - முகில். ௰௮. திருவடிப்பட்டுச் சித்தத்தவர் சிவகதி பெற்றவரேயாகலின் அவருடலம் பன்னாளிருப்பினும் அன்றிச் சின்னாளிலொழியினும் அது பற்றிக் கவலையின்றென்பது. உகும் - ஒழியும். மார்த்தாண்டன் - கதிரவன். இவர - தவழ.

விரைவிடை யிவரு நினைப்பிற வாமை
வேண்டுநர் வேண்டுக மதுரம்
பெருகுறு தமிழ்ச்சொன் மலர்நினக் கணியும்
பிறவியே வேண்டுவன் றமியேன்
இருசுடர் களுமேல் கீழ்வரை பொருந்த
விடையுறன் மணிக்குடக் காவைத்
தரையிடை யிருத்தி நிற்றனோர் சோண
சைலனே கைலை நா யகனே. (௧௯)

ஒண்மணிப் பசும்பொற் பூணிள முலையார்க்
குளத்திட மெலாமளித் தடியார்
கண்மணிக் கமையா விருந்துசெய் தருணீ
கணமிருப் பதற்கிடம் புரியேன்
வெண்மணிக் கழைமுன் கரியநெற் றிதழி
வேங்கைபொன் சொரியமா சுணங்கள்
தண்மணிப் பைக ளவிழ்த்திடுஞ் சோண
சைலனே கைலை நா யகனே. (௨௦)

அருங்கலம் புனையு மகளிரோ ரிருவ
ரணிமணம் புணர்த்திவா ரணமுந்
துரங்கமும் புலவர்க் குதவுநின் றனையே
துதித்திடா துழன்றனன் வறிதே
மருங்குநின் றழகா லத்திதாங் குவபோன்
மரைமலர்ப் பெருஞ்சுனை யொடுபூந்
தரங்கநின் றிலங்க விளங்குறுஞ் சோண
சைலனே கைலை நா யகனே. (௨௧)

---

௧௯. பௌர்ணிமையில் சூரியன் அத்தகிரியை யடையுங்கால் சந்திரன் உதய கிரியிலுதித்தமர்வனுகலின் அக்காலஞ் சுட்டிவர்ணித்த படி. காவென்பது காவப்படுதலிற் போந்தபெயர். அது காவடி யென வழங்கும். சூரிய சந்திரர்களையியக்கி இடை யிற்றலின் காவுவோர்க்கு உவமித்ததென்க. விரைவிடை - விரைந்து செல்லும் இயல்புடைய காளை. ௨௦. கணம் என்பது ஒருசிறு கால அளவு. கழை - மூங்கில் கள்; நெற்று - முற்றிய காய் இறைவன் ஒருகணமேனும் உளத்தின் கண் இருத்தற்கு இடஞ் செய்ய வேண்டும் என்பது குறிப்பு. மாசுணங் கள் - பாம்புகள். ௨௧. கைலைக் கெழுந்தருளுதற்குத் திருவஞ்சைக் களத்தில் வாரணமும் இவ்வுலகிற் சஞ்சரித்தற்குத் திருநாகைக்கா ரோணத்தில் துரங்கமும், உதவியதென்க. தாமரைமலர் அலங்கார தீபத்திற்கும் தரங்கம் கைக்கும் சுனை தாங்குவோர்க்கும் ஒப்பு. அழ காலத்தி, அழகிய நீராஞ்சன மெனக்கொண்டு, சுனை தட்டும், செந்தாமரை மலர்ப்பரப்பு செந்நீரும், அப்பரப்புத் தரங்கத்தா லசைதல் அந்நீரினசைவு மாக்கலும் ஒன்று. தரங்கம் - அலை.

ஏனுறு மமரர் கடைகட லளித்த
விருளொடு மணிமிடற் றடியேன்
ஆணவ விருளுங் கலந்திடிற் கருமை
யழகுமிக் கிலங்குறுங் கண்டாய்
மாணெழில் வராக முழும்புழை யனந்தன்
மணியொளிப் பிழம்பெழல் சிறுதீத்
தாணுவின் முருக னெழுதனோர் சோண
சைலனே கைலைநா யகனே. (௪௨)

மின்னவிர் சடிலக் கற்றையு மருள்கூர்
விழிகளுந் திருமுகத் தழகுங்
கன்னவி றிரடோ ளென்குமீ ரடியுங்
கண்டுகண் களிக்குநா ளுளதோ
இன்னிசை யொலிகேட் டுருகுதல் கடுப்ப
விழிதர வருவிகிம் புருடர்
தன்னிக ரிசைகூர் சாரலஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௪௩)

அள்ளிவெண் டிருநீ றுடன்முழு தணியு
மடியவர்ப் பெறினெழுந் திளங்கன்
றுள்ளிநின் றுருகு மன்னையின் மனநெக்
குருகுபு சென்றிறைஞ் சிலனே
எள்ளிவெம் புலியெண் கரிதிரு மேனி
யேறுத றகாதென வெகுண்டு
தள்ளிவந் தருவி யிழிதனோர் சோண
சைலனே கைலைநா யகனே. (௪௪)

இழையெனத் தளர்சிற் றிடையுணு முலையா
ளெனக்குவண் புகலிவேந் தயின்ற
கழுமணிப் பசும்பொற் குலவுபாற் கிண்ணங்
கழுவுநீர் வார்ப்பதற் குரையாய்

---

௪௨. மணியொளித் திரட்சி, பெரிய தீத்தம்பமாயமரும் சிவபெருமானருகே சிறிய தீத்தம்பமாக முருகக் கடவுளெழுதலொக்கும் என்பது. இருளொடு கலந்திடில் மிடற்றுக் கருமை யழகு மிக்கிலங்குறும் என இயையும். மிடற்றுக் கருமை நஞ்சினால் ஆகியது. ஏண் - உயர்ச்சி. அனந்தன் - ஆதிசேடன். ௪௩. சடிலம் என்பது சடை; "கல் நவில்" என்பதில் நவில் என்பது உவமவுருபுமாம்; இறைவனது உருவ அமைப்புகளின் அழகைப் பார்த்து மகிழ வேண்டும் என்பது கருத்து. ௪௪. தள்ளி வந்திழிதலொக்கும் அருவி யென்க. பெறின் - காணப் பெற்றால். எள்ளி - இகழ்ந்து. ௪௫ முசு - குரங்கினுளொரு சாதி. கலை - ஆண். பிணை - பெண். பிணையொடு

முழையிடைக் கதிர்மா மணிவிளக் கேற்றி
முசுக்கலை பிணவொடு மசோகத்
தழையிடைத் தழுவி யுறங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (சo)

வினைவழி யுடலிற் கமைந்துறு முணவே
வேண்டினர் வினைகொடு புணரா
நனைமலர் புனைநின் றிருவடி யடைவா
ணாடொறும் வேண்டில ருலகர்
கனையிருள் கரந்த விடமறிந் துணப்போங்
காட்சியிற் புனக்கிளித் தொகுதி
தனையெறி மணிகண் முழைபுகுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (சக)

மாங்குயின் மிழற்று நாவலூர்ப் புலவன்
மறுப்பவு முடிமிசை யிருத்தும்
பூங்கழ லடியேன் றலைமிசை யிருத்தப்
புகலினு மென்கொனீ யிரங்காய்
ஓங்குறு மண்ட கோளகை யளவு
முயர்ந்துமோர் மழவிடை முதுகில்
தாங்குபு நடக்க விருந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (சஉ)

ஈரமு மருளு மொழுக்கமுஞ் சால்பு
மின்சொலு மிந்தியப் பகைவெல்
வீரமு மருளி யெனதுவெம் பிறவி
விலக்கியாட் கொள்ளுநா ளுளதோ
ஆரமு மகிலுந் தடிந்துசெம் மணிக
ளரித்தெறிந் தெறுழ்வலிக் குறவர்
சாரலி னிறுங்கு விதைக்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (ச௩)

---

உறங்குறுமென இயையும். அயின்ற - உண்ட. சக. அருளாற் புணர்க்கப்பட்ட அடி யென்பார் வினைகொடு புணராத் திருவடி யென்றார். கொண்டு என்பது ஆல் உருபின்மேற்று. கனை-நெருக்கம். இருட்கு இடமாகலின் முழையை இருள்கரந்த விடமென்றார். கனையிருள் - பேரிருள். கரந்த - மறைந்த. சஉ. நாவலூர்ப் புலவர் மறுத்தது திருவதிகையின் அருகுள்ள சித்தவட மடத்தில். மிழற்றும் - இசைபாடும். மழவிடை - இளமை பொருந்திய காளை. ச௩. எறுழ்வலி - ஒரு பொருட் பன்மொழி. இந்தியம் என்பது ஐம்பொறிகள் அவை மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. பிறவி துன்பத்துக் கிடஞ்செய்தலால் 'வெம் பிறவி' என்றார். ஈரம் - இரக்கம். ஆரம் - சந்தனம். தடிந்து - வெட்டி.

தொகைமிகு மமரர் முனிவரர் பரவித்
தொழுதகை யொடுவிரை கமழ்பூம்
புகைமிகு மணிமண் டபத்திடை நெருங்கப்
புழுகுநீ யணிதல்கண் டுவந்தேன்
குகைமிகு வாயிற் சோதிமா மரஞ்சேர்
குளிர்மதி விழுங்கவாய் வைத்த
தகைமிகு மூரற் றிரளைநேர் சோண
சைலனே கைலைநா யகனே. (௨௯)

சினம்படு முளங்கொன் றவரவை யெனையுஞ்
சேர்ப்பது தகுமுனக் கிசைவண்
டினம்படு மலரி னகவித மொடுபுல்
லிதழுமொன் றுதலுல் குடைத்தே
மனம்படு மடிமை யுளன்சிலை யெறிக்கு
மனங்குழைந் துமையவள் களபத்
தனம்பட வடிவங் குழைந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௩௦)

வாம்பரி கரிதேர் சிவிகைபொற் குவியன்
மணிப்பணி பெரும்புவி யாட்சி
ஆம்பரி சலவென் றுன்பத மருவி
னன்றியென் கவிகளென் கவிகள்
காம்பரி முரண்மும் மதகரி வளைத்த
கைவிட மோதலாற் கதிர்த்தேர்த்
தாம்பரி துணுக்கென் றீர்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௩௧)

---

௨௯. முன் ஒரு புழுகுபூனை இச்சோணசைலப் பிரானுக்குச் சாந்தெனப் புழுகையப்பி வசித்த புண்ணியத்தால், அயோத்தியில் ஏமாங்கதவேந்தனாகி உதித்துப் பூர்வஜென்ம வாசனையால் ஈங்கெய்தி, அத்தொண்டையே இயற்றிச் சிவபதமெய்திய ஐதிகம்பற்றி நடக்கும் அம் மகோற்சவதரிசனங் கிடைக்கப்பெற்ற உவகைமேலீட்டால் துதித்தவாறு. சோணசைல நாதருக்குக் குகை திருவாய்; சோதி மரம் அன்னபாத்திரம்; சந்திரன் பாற்றிரளன்னம் போல்வன. சோதி மரம் - இரவில் ஒளிகால்வதாகிய ஒருமரம். மூரல்திரளை - உணவு உருண்டை. ௩௦. கோபத்தை அறவே அடக்கியொழித்த நிலையுடையவர்களைச் 'சினம் படுமுளங்கொன்றவர்' என்பர். சாக்கிய நாயனார் புறத்தே தொண்டு செய்யாது அகத்தொண்டு செய்தமையான் அவரை 'மனம்படுமடிமை யுளன்' என்றார். உள்ளத்தவன் என்பது 'உளன்' என நின்றது. ௩௧. ஆம் பரிசு - விருத்திக்குரிய தன்மையன. மருவின் - உட்பொருளாகி நிலவின். காம்பு மோதலால் எனவியையும். காம்பு - மூங்கில். அரிமுரண் - சிங்கத்தோடு மாறுபடுகின்ற. வாம்பரி - தாவுகிற குதிரை. துணுக்கென்று - விரைவாக.

துன்னுறு துயரப் பிறவிவெங் கொடுநோய்
    தொலைப்பினுந் தொலைத்திடா துறினும்
நின்னடி மலரை யன்றியான் மறந்து
    நினைப்பனோ விறக்கும்வா னவரை
மன்னளி பருக வுடையிருன் மதுவும்
    வாரண மதமும்வெள் ளருவி
தன்னொடு மிகலி யொழுகுறுஞ் சோண
    சைலனே கைலைநா யகனே. (௫௨)

நீரினு லழலால் வருங்கொடும் பிணியா
    னிருதரா லலகையால் விலங்காற்
சோரரால் வருந்து மவரலர் நினது
    தூயநா மம்புகன் றிடுவார்
சீருலா மணியா லரிபர வுதலாற்
    றிசையுற நீள்கையா லெழின்மை
சார்தலா லுமையாள் விழிநிகர் சோண
    சைலனே கைலைநா யகனே. (௫௩)

முகவிளக் கென்ன மணிக்குழை மிளிர
    முலைமுகட் டணிபெற மலராள்
பகல்விளக் கென்ன வொளிகெட வரும்பொற்
    பாவையர்க் கிரங்கிடா தருளாய்
அகவிளக் கென்ன வகறிரி நெய்தீ
    யாக்குவோ ரின்றியே யெழுந்த
சகவிளக் கென்ன விளங்குறுஞ் சோண
    சைலனே கைலைநா யகனே. (௫௪)

நீலியோ டுனைநா டொறுமருச் சித்து
    நின்றொழில் புரிந்திட வுடற்குக்
கூலியோ தனமென் றளிப்பவர்க் கன்றிக்
    கூற்றினைக் கடக்குமா றெளிதோ

---

௫௨. இகலியொழுகல் - நிறம், வேகம், இடையீடின்மைகளின் மாறுபட்டுப் பெருகல். துன்னுறு - பொருந்திய. இருல் - தேனடை. இகலி - மாறுபட்டு. ௫௩. சீர்உலாம் மணி - கனம் வாய்ந்த அரதன மணியும், பொலிவமைந்த கண்மணியும்; அரி-சிங்கமும், செவ்வரியும்; திசை - திக்கும், நோக்கமும்; எழில் மை - எழுச்சியுடைய மேகமும், அழகியமையும் ஆம். எழில் எழுச்சியாங்கால். அலகை - பேய். ௫௪. மிளிர பெற கெட வரும் என்க. அகம் - இல்லம். மலராள் - திருமகள். சகவிளக்கு - உலக விளக்கு. ௫௫. நீலி - நீலநிற வடிவத்தையுடைய உமாதேவி. பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகையேனும், முத்திசித்திக்கும் வரையும் கடவுள் வழிபாட்டிற்கு

மாலியோ சனையின் வணங்குறுங் கைலை
　　மலைநிலே தித்திடக் குவித்த
சாலியோ தனமென் றிடத்திகழ் சோண
　　சைலனே கைலைநா யகனே. (ருரு)

தோற்றிடும் பிறவி யெனுங்கடல் வீழ்ந்து
　　துயர்ப்பிணி யெனுமலை யலைப்பக்
கூற்றெனு முதலை விழுங்குமுன் னினது
　　குரைகழற் கரைபுக விடுப்பாய்
ஏற்றிடும் விளக்கின் வேறுபட் டகத்தி
　　னிருளெலாந் தன்பெய ரொருகாற்
சாற்றினு மொழிக்கும் விளக்கெனுஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே. (ருசு)

கந்தர மிருந்து மடகுநீ ரயின்றுங்
　　கரநிலத் தமைத்திரு பதமும்
அந்தர நிமிர்த்து நின்னிலை யறியா
　　ரரும்பவ மொழியுமோ வுரையாய்
இந்திரன் வனத்து மல்லிகை மலரி
　　னிண்டைசாத் தியதென நிறைந்த
சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே. (ருஎ)

கூம்புறு கரமு மலர்ந்திடு முகமுங்
　　கொண்டுநின் றனைவலம் புரிவோர்
மேம்படு சரண மலர்ப்பொடி மேனி
　　மேற்படிற் பவம்பொடி படுமே

---

வேண்டப்படுதலின் அதன் பொருட்டு ஓம்புவார்க் கல்லது போகாதியனு பவத்தின் பொருட்டு ஓம்புவார்க்குக் கூற்றைக்கடத்தலரி தென்பதாம். திருமாலும் நெடுந் தூரத்தினின்று வணங்கும் கைலை தமக்கெதிர்குவித்த அன்னக்குவியல்போன்று விளங்கத் திகழுஞ் சோணசைலரென்க. ஓதனம் - சோறு. சாலி யோதனம் - நெற்சோறு. ருசு. புறவிருளை ஓட்ட ஒளி வேண்டுவது போல அகவிருளை யோட்ட இறைவனுகிய ஒளிவேண்டும். ஆகவே இறைவனை 'விளக்கு' என்ருர். ஆதலால், அகவிருளை யொழிக்க இறைவன் பெயரை ஒருமுறை கூறினும் போது மென்பார் 'அகத்தின் இருளெலாந்தன்பெய ரொருகாற்சாற்றினும் ஒழிக்கும் விளக்' கென்ருர் என்க. ஏற்றிடும் - இல்லங்களில் ஏற்றப் பெறுகிற. குரைகழல் - ஒலிக்கும் வீரக் கழல். ருஎ. நிலையாவது ஆன்மாக்களுக்கு வீடு பேறளித்தற் பொருட்டு விக்கிரகானுக் கிரகம் பூண்டு நிலவு மியல்பு. கந்தரம் - குகை. அடகு - இலை. அயின்றும் - உணவாகக் கொண்டும். ருஅ. ஆளுடைய பிள்ளையார் பதிகந்தோறும் புகழ்ந்தது ஒன்பதாவது திருப்பாடலுறுங்

பூம்பொழிற் புகலிக் கிறைவனு னிலஞ்சேர்
புண்ணியத் தலங்களி னடைந்து
தாம்புனை பதிகந் தொறும்புகழ் சோண
சைலனே கைலைநா யகனே. (௫௮)

கானமே மருவும் விலங்கினுங் கடையேன்
கற்பவை கற்றிலேன் விடய
ஞானமே யுடையே னறிஞரைக் காணி
ஞணிலே னுய்யுநா ளுளதோ
வானமே யளவு நெடுங்கிரி மலய
வாதமோ துறுபவர் கட்குத்
தானமே யுதவ வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௫௯)

விழைவொடு மறஞ்செய் துய்கவென் றுரைக்கும்
விதியினைக் கவளமுண் கெனவுங்
கழைசுளி நெடுநல் யானையின் முனிந்து
கடக்குமென் பவமொழிந் திடுமோ
மழைமுகில் வந்து தவழ்ந்துவின் படரு
மலிதரு புகையென வெழுந்து
தழலுரு வுண்மை விளக்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௬0)

வாத்திய முழுங்கச் சிவிகையுங் கரியு
மாறியூர்ந் துலவிவாழ்ந் தவரும்
ஏத்திய மொழியோ டிரக்கையா னின்குற்
றேவலே வாழ்வென வறிந்தேன்
பாத்திய மணிகள் கொண்டிழைத் திலங்கும்
பாரவா சிகைமணி மேகஞ்
சாத்திய தெனவில் வளைந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௬௧)

---

காண்க. கூம்புறு - குவித்தல்பொருந்திய. பவம் - பிறப்பு. ௫௯. வாதம் ஓதுறுபவர்கட்குத் தானம் அளித்திட நெடுங்கிரிமலைய வளர்ந்தெழுஞ் சோணசைலன் என்க; வாதம் ஓதுறுபவர் பிரம விட்டுணுக்கள்; வாதம் மோதுறுபவர் எனப் பிரித்துத் தென்றலைத் தாக்கும் முனிவர் என்றலுமாம். ௬0. யானைபோல் விதியினை முனிந்து கடக்குமென்க. உண்க என்பதன்ஈறு தொக்கது. விழைவு - விருப்பம். சுளி - சினக்கின்ற. ௬௧. பாத்திய மணி-தேர்ந்தெடுத்த நவமணி. வாசிகை - திருவாசிகை. மணி மேகம் - மணிகளைப் பொழியும் சம்வர்த்தம். வானவில் இம்மலை யிறைவனுக்குத் திருவாசிகைபோல் விளங்குகின்றதென்க.

குலத்தினிற் பிறந்து மலகினூல் கற்றுங்
குணத்தினிற் சிறந்தநல் விரத
பலத்தினிற் கவர்ந்து நின்னடி யவர்க்குப்
பரிவிலார் கதியிலா தவரே
கலத்தினிற் பொலிந்த விமயமீன் றெடுத்த
கன்னிநுண் ணிடைமிசைக் களபா
சலத்தினிற் குறுதி கொடுத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கஉ)

மூடக விருளோ டுன்னையின் றுண்ணு
மூலையர சாலகற் றுவலென்
சூடரு மொழியா லடைந்தனன் றமியேன்
சூள்வழு வாதுநீ யருளாய்
வீடுறுங் கவரி கீழ்விழ வுறல்கார்
மிசையனம் பன்றிதா மாறித்
தாடலை துருவ வடைதனேர் சோண
சைலனே கைலைநா யகனே. (கந)

ஐயநுண் மருங்குன் மாதர்மேல் வைத்த
வாதர வுன்பதாம் புயத்தும்
மெய்யுறு நறுமென் கலவையின் விருப்பு
வெண்டிரு நீற்றினும் வருமோ
கொய்யுறு தினைவீழ்ந் திடுபசுங் கிள்ளைக்
குழுக்கடோ ரணமென வெழுந்து
தையலர் கடியப் பறந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கச)

கனலினூ டமைத்த விழுதென வுருகக்
கற்றதின் றுள்ளமென் கரங்கள்
புனலுமாய் மலருங் கொடுநினைப் பூசை
புரிந்தில வென்செய்கோ வுரையாய்

---

கஉ. கவர்தல் - வேட்கைப் பெருக்கம். கலத்தினிற் பொலிந்த கன்னியென முடிக்க. தனங்களுக்கு உறுதி கொடுத்தல், தம் வடிவங் குழைந்து அவைகட்குத் திண்மைபயத்தல். அலகில் - கணக்கில்லாத. கலம் - அணிகலம். களபாசலம் - களபமணிந்த கொங்கை, கந. அகவிருளோடு சூள்மொழி பகர்ந்தடைத்தனன் எனவும். கார்மிசையுறலெனவும் கொள்க. வீடுறல் - வழுவல். துருவ - தேட. கச. மாதர்கள் மேல்வைத்த அன்பு உன் திருவடியினிடமும், அவர்கள் மெய்க்கணுள்ள கலவைச்சாந்தின் மேல்வைத்த அவா நின் திரு நீற்றினிடமும் வருமோ என இரங்குவது காணத்தக்கது. மருங்குல் - இடை; நுண் என்பது நுண்ணிய. கரு. மலக்கண் நோயைப்போக்க மருந்து வகைகளுண்டு. ஆனால், சினத்துக்கும், பிறவி

சினவுநோய் மருந்து வேறுகொண் டிருக்குஞ்
சிலம்புக ணுணவுட் கொள்வோர்
சனனநோய் மருந்தா யெழுந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௬௫)

ஊழுறு மணிப்பொற் கோயில்போய் வாவ
லுறக்கொடுத் தாங்குநிற் புணர்த்தாப்
பாழுறு மனம்பே ரவாக்குடி யிருப்பப்
பண்ணுமென் கண்ணுநன் ணுவையோ
வீழுறு மெயினர் கிழங்ககழ் குழியும்
வேழம்வீழ் குழிகளு நிரம்பத்
தாழுறு மருவி பொன்சொரி சோண
சைலனே கைலைநா யகனே. (௬௬)

பைம்மறிப் படுப்பி னுள்ளறி யாமற்
பணிநறுந் துகில்புனை மடவார்
மெய்ம்மிசைக் கருந்தோல் கண்டுவந் துழலும்
வினையினே னுய்யுநா ளுளதோ
செம்மலர்ப் பதம்பா தலங்கடந் திடவான்
றிருமுடி கடப்பினு மூவர்
தம்மியற் செப்பி னடங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௬௭)

செக்குறு திலத்தின் வருந்துபு பிறக்குஞ்
செல்லலு நாடியின் பிணிப்பு
நெக்குற வறிவு கலங்குசாக் காடு
நினைதொறு முளம்பதைக் கின்றேன்
மொய்க்குறு முகில்கண் டரிகரி யென்னு
முழக்கமு மரகர வென்னுந்
தக்கவர் முழக்கு மெதிரெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௬௮)

---

நோய்க்கும் அதனிடம் இல்லை. அதனால் "சிலம்புகள் நாண" என்றார். சிலம்பு என்பது மலை. இறைவனிடம் எல்லா நோய்கட்கும் மருந்துண்டு. இழுது - வெண்ணெய்; சனனம் - பிறவி; கனலினூடு என்பதில் ஊடு ஏழனுருபு. ௬௬. ஊழ்-வரிசை. வீழல் - விரும்பல். வாவல்-வெளவால் எயினர் - வேடர். ௬௭. பை மறிப்படுப்பின் - பையைத் திருப்பிப் பார்ப்பதுபோல் என்க. "பைம்மறியாப் பார்க்கப்படும்." என்றார் பிறரும். பைம்மறிப்படுத்தி யென்னும் பாடத்திற்கு, பைம்மறி போலாக்கியெனக் கொள்க. கருந்தோல் - (அகத்துள்ள அசுத்தந் தோன்றுவாறு மேற்பொதிந்த) பெருந்தோல். இயல் - இயற்ற மிழையும் சிறத்தையும்; செப்பு - சொல்லையும் சிமிழையும் உணர்த்தி கின்றது. ௬௮. அரி - சிங்கம். கரியென்னு முழக்கம் - கரியெனக் கொண்டு ஆரவாரிக்கும் முழக்கம். இது அரிகரியென்னு முழக்கமும் அரகரவென்னுமுழக்கமும் இகலி யெழுமென முரண்பட நிற்பதும் ஓர்க. திலம் - எள். செல்லல் - துன்பம்.

மரணமும் பிறவித் துயருநீங் குறநூல்
வாய்ச்சிலம் பிக்கருள் புரிந்த
கருணியென் றுனைவந் தடைந்தன னினிநின்
கருத்தினை யின்னதென் றறியேன்
முரணிபம் பருஉக்கை தலைமிசை யெடுப்ப
முழைக்கரும் பாம்பென மணித்தேர்த்
தரணியுள் வெருவி யகன்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௬௯)

அங்கையின் வைத்த கூர்ங்கனன் மழுவா
லருவினைக் காடற வெறிந்து
மங்கலில் பத்தி வித்திட வடியேன்
மனத்தினைத் திருத்துநா ளுளதோ
பொங்குறு செக்கர் கருவிசும் புறவேள்
புரத்தெரி கதுவிட நோக்கித்
தங்குத லொப்ப நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௭௦)

சுருக்குமைம் புலனும் விரிக்குமூ தறிவுந்
துன்னுநல் வினமுநீத் தகன்றே
இருக்கும்வெங் கயவ ரினமுமென் றருளி
யென்னைநின் னடிமைசெய் தருள்வாய்
முருக்குமங் கதமா மணியுமிழ்ந் தகன்ற
முழைதழற் றெனவுளம் வெருவித்
தருக்குமொண் புலிசென் றுறமருள் சோண
சைலனே கைலைநா யகனே. (௭௧)

அந்தரி குமரி யஞ்சலி கௌரி
யம்பிகை மனோன்மணி மதங்கி
சுந்தரி யுமையுண் ணாமுலை யெனநின்
துணைவியை வாழ்த்துமா றருளாய்

---

௬௯. சிலம்பிக்கருளியது சீகாளத்தியிலும் திருவானைக் காவிலும். கருணி - கருணையுடையவன். முரண் - வலிமை. தரணி - சூரியன். இபம் - யானை. ௭௦. கரு விசும்புற லின்றிடுமென இயையும். கருவிசும்பு மன்மதனுக்கும், செக்கர் அவனுடலிற்பற்றிய தீக்கும் ஒப்பு. மங்கல் - குறைதல். ௭௧. ஐம்புலச் சுருக்கமும் மூதறிவு விரிவும் நல்வினைத்துன்னலும் கயவரினம் நீத்தகன்றிருத்தலும் அருளி அடிமை கொள்க வென்பது. தழற்று-தழலை யுடையது. முருக்கும்-கொல்லும். அங்கதம் - பாம்பு. தருக்கும் - தருக்கையுடைய. ௭௨. திருவருட் சத்தியானே தேவரீரையடைய வேண்டுதலின் அச்சத்தி வழிபாடும்

வந்தரி சுருதி மருங்கினிற் பாட
வயங்குதும் புருவுநா ரதனுந்
தந்திரி யிசையாழ் பாடுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே (எஉ)

நீக்குறு மயலு நிலைத்தபே ரறிவு
நின்றிரு வடிமலர்க் கன்பு
காக்குறு மனமு முடையமெய்த் தொண்டர்
கணத்தினு ளெனைவிடுத் தருளாய்
தேக்குறு மிருலிற் கன்னல்காட் டுவபோற்
றென்றல்வந் தசைதொறு மெல்லத்
தாக்குறு காந்த டுடுப்பலர் சோண
சைலனே கைலைநா யகனே. (எ௩)

பவமிலே மினியா மென்றிறு மாந்து
பயமற விருந்திடப் பத்தி
நவமிலே மடியே மென்செய்வா னிருந்து
நாளினை வறிதொழிக் கின்றேம்
அவமிலே மிமையா விழியினுற் காண்கை
யால்வலங் கொளவடி நிலந்தோய்
தவமிலே மெனவான் சுரர்தொழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (எச)

கண்கணிற் பரிந்து கண்டுவப் பனவே
கைகணிற் றெழுபவே செவிகள்
பண்களிற் புகழும் புகழ்ச்சிகேட் பனவே
பதநினை வலம்புரி வனவே
எண்குபுற் றிடப்ப வெழுமணி கரவா
விருந்துசென் றிருள்கவர் வனபோல்
தண்கதிர்க் கற்றை கான்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (எரு)

---

அருள்கவென்பது. அரி - வண்டு. எ௩. காட்டுவபோல் தாக்குறு காந்தளென்க. நாழிகையை அறிந்து கோடற்கு அக்காலத்து வழங்கிய இயந்திரத்தைச் சுட்டி வர்ணித்தபடி; அன்றி, இக்காலத்து வழங்குவதே யெனின், தேன் கூடு கடிகாரக் கருவிக்கும், அதில் மெல்லத் தாக்குங் காந்தள் மொட்டு மெல்லப்புடை பெயரும் நிலைமுள்ளுக்கும், அம் மொட்டில் முறுக்குடைந்து விரியுந்தனியிதழ் விரைந்துலவு முள் ளுக்கும், தாக்குதலோசை ஒலிக்கும் உவமித்ததென்க. இருல் - தேனடை. கன்னல் - நாழிகை. எச. பத்திநவம் - பத்தியாகிய புதுமை. கடவுளை இமையா விழியாற் காணலும் கால் நிலந்தோய வலம் வருதலுமே தவமும் அவை பெருமையே அவமுமாதல் குறிப் பித்தவாறு. எரு. இருட்செறிவுபோலும் கரடியினிறந் தோன்றுதபடி மணி கதிர்பரப்புமென்க. கான்றிடும் - வெளிப்படுத்தும்.

நிணந்திகழ் வடிவேற் காளையே யென்று
நேரிழை யவர்விழைந் திடுவோர்
குணந்திரி தளிரின் மடியவே கண்டுங்
கொடியனேன் வாழ்வுவந் திருந்தேன்
மணந்திமிர் மகளிர் சிலம்பொடு மைந்தர்
வார்கழ றுவக்கிட வலம்போய்த்
தணந்திடு மமயத் தறிந்துநாண் சோண
சைலனே கைலைநா யகனே. (எசு)

மாந்தளிர் கவற்று மணிச்சிலம் படிகள்
வடுவகிர் பொருவும்வா ணெடுங்கண்
காந்தளி னிமைக்கு மங்கையென் றவலக்
கன்னியர்ப் புகழ்வினை யறுமோ
பூந்திரை சுருட்டுங் கடல்கடை குநரொண்
பொறியர வின்றிமா தவர்க்குச்
சாந்துய ரகற்று மருந்தருள் சோண
சைலனே கைலைநா யகனே. (எஎ)

சிந்தனை கலங்கி யிணைவிழி யிருண்டு
செவிகளுஞ் செவிடுபட் டைம்மேல்
உந்திட வுயிர்போம் பொழுதுநின் வடிவ
முளங்கொளும் பரிசெனக் கருளாய்
மந்தர சைலந் தருவிடங் களத்து
வைத்திடத் தினிலிம சைலந்
தந்திடு மமுதை வைத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (எஅ)

நயங்கொளு மலரா னின்றிரு வடியை
நாடொறு முயிருணுங் கூற்றம்
பயங்கொள வகலா தருச்சனை புரிந்து
பரகதி யடையுநா ளுளதோ

---

எசு. குணம் - தன்மை. இவ்வாழ்வெனச் சுட்டுவருவிக்க. சிலம்புங் கழலுந் துவக்குண்டது முன்னரறியாமை சனநெருக்கத்தாலென்க. கழல்-அரவின் படம் போலமைந்து கொக்கி போன்றிருத்தலின் துவக்குங் கருவியாயிற்று. தணந்திடும் அமயம் - வலம்புரிதலில் இருந்து பிரிகிறசமயம். எஎ. கவற்று - வருத்து; வகிர் - பிளப்பு; பொரு - இங்கு உவம உருபு; மாதவர் - சிறந்த தவமுடையவர்கள். எஅ. ஐ என்பது கபம், கோழையுமாம். மரணத்துன்பமாவது சிந்தை கலங்கல், இருவிழியும் இருளல், செவிகள் செவிடுபடல், கபங்கட்டல் முதலியன. இது ''புலனைந்தும் பொறி கலங்கி நெறி மயங்கி, யறிவழிந்திட்டு ஐமேலுந்தி'' என்பதனாலும் அறிக. அமுதை - இங்கு, உமையை. எகூ. வானநாடு - ஈண்டு முத்தியுலகம். வயம் - வெற்றி;

வயங்கொளும் விடயப் பெரும்பகை கடந்து
வானநா டாண்டிட மதிப்போர்
சயங்கொள வடைதற் கரணமாஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (எக)

பிரம்பொரு கரங்கொண் டடிப்பநந் தீசர்
பெருங்கல்வீழ் பாசியி னிமையோர்
சிரம்பொர வொதுங்கி நெருங்குநின் னவையிற்
றீயனே னணையுநா ளுளதோ
அரம்பொர வகன்ற விலங்கிலை நெடுவே
லமர்த்தகட் கிரிமக ளிணைக்குஞ்
சரம்பொர விருந்து விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அ0)

காமரை முனிந்த முனிவரர் புகுமெய்க்
கதியிடைப் புகவிடுத் திடினும்
பாமர னிவனென் றிருளினுய்ப் பினுநின்
பதமல ரன்றிவே றுளதோ
வாமரை பொருந்து முலகுள குவட்டு
மலைகள்போ லாதுணு முலையாந்
தாமரை பொருந்து மானுள்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே. (அக)

தொடுக்குமா கமங்க ளெலாஞ்சொலைந் தெழுத்துந்
துணிந்தநெஞ் சிருக்கையாற் பகையைப்
படைக்கைதா னிருந்து மஞ்சுறு மவர்போற்
பகட்டுமா மறலியை வெருவேன்
மடக்குவார் கலாப மயிறுயி லெழுந்து
மருவலர் வேங்கைமீ தகவத்
தடக்கைவா ரணங்கள் பிளிறிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அஉ)

---

வலிமையுமாம். சயம் – வெற்றி, நயம் - நல்ல. அ0. பாசிபோலொதுங்கி நெருங்குமவையென்க. அமர்த்தல் - பொருதல். அரம்பொர - அரமானது தேய்க்க. மற்ற மலைகளில் யானைகள் மோதிப் போர் செய்ய இவ் வண்ணுமலையை உமையவள் கொங்கை யானைகள் மோதிப் போர் செய்கின்றன என்க. அக. உண்ணுமுலைகளென்னுந் தாமரை யரும்புகளைக் கொண்டமான்-உண்ணுமுலையம்மையார். "உண்ணுமுலையா டாமரை பொருந்துமான்" என்பது பாடமேல் உண்ணுமுலையம்மையாரது முகத் தாமரையிலுள்ள கண்களாகிய மான்கள் என்க. பாமரன் - அறிவற்றவன். இருள் - நிரயம். வாம் மரை - தாவுகிற மான்கள். அஉ. ஐந்தெழுத்தும் எனது திடம் பெற்ற மனத்திலிருக்கையால் மறலியை வெருவேன் என்பது. அகவல் - கூவல்.

நிந்தியா துடல முழுதுநீ றணிய
நேசியா தமலவைந் தெழுத்துஞ்
சிந்தியா துழலு மெனைக்கொடுங் கூற்றென்
செய்யுமோ வறிந்திலேன் றமியேன்
வந்தியா வரவ மன்றிடைக் கண்ட
மலர்சிலம் படியைமண் ணுணிபோய்ச்
சந்தியா தயர வொளித்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அங)

மங்கையர் பாரக் கொங்கையங் குவட்டு
மதர்விழிக் கடலினு மளகக்
கங்குலி னூடுஞ் சென்றவென் மனத்தைக்
கதியிடை நடத்துமா றெளிதோ
செங்கதிர் காலை மாலையுந் தங்கச்
சிலம்புள வெனக்கடும் பகலில்
தங்குற நீடி நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அச)

கண்டிகைக் கலனே கலனென விழைந்து
காயமே லணிந்துவெண் ணீற்றுப்
புண்டரக் குறிசேர் நுதலொடு நினையான்
பூசனை புரியுமா றருளாய்
முண்டகச் செழும்பூ வெனவிளக் கெரியு
முடிமிசை முத்துமேற் கட்டித்
தண்டிரைக் கங்கை யாறுசேர் சோண
சைலனே கைலைநா யகனே. (அரு)

நாவினைந் தெழுத்து மந்திர மலாத
நவிற்றுவோர் தமையுநீ யிருப்பப்
பாவினங் கொடுபுன் மனிதரைப் புகழும்
பாமரர் தமையுமென் றெழிவேன்

---

அங. அரவம் – பதஞ்சலி முனிவர்; மண் உணி - உலகங்களை யுண்ட திருமால். அரவங்கண்ட அடியை மண்ணுணியென்னும் பாம்பு காணுதயர வென்பதோர் நயமுங்காண்க. வந்தியா - வந்தனஞ்செய்து. அச. குவடு - மலையுச்சி. அளகம் - கூந்தல்; கதி - வழி, இங்கு முத்தி. கடும்பகல் - உச்சிப்போது. அரு. கண்டிகை என்பது கண்மணி; இதை உருத்திராக்கம் அல்லது உருத்திராட்சம் என்பர். இதைச் சிவனடியார்கள் கழுத்தில் அணிந்திருப்பர். முண்டகம் - தாமரை. அசு. கோவினம் - ஆனிரை, ஆடகம் - பொன். இதைச்

கோவினம் புரப்பக் குன்றமன் றெடுத்த
குன்றமம் பாடகக் குன்றந்
தாவினஞ் சிலையென் றெடுத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அசு)

திங்களுங் கதிரு மிலங்கிய மானுந்
திகழ்பெரும் பூதமோ ரைந்துங்
கங்குலும் பகலுங் கடந்தநின் வடிவங்
கண்டுகண் களிக்குநா ளுளதோ
பொங்குகுங் குலியக் கலயவா ரழலிற்
புகையெனச் சரோருக வல்லி
தங்குவண் டெழுபூம் பொய்கைசூழ் சோண
சைலனே கைலைநா யகனே. (அஎ)

பொறியெனப் புலன்க ளெனக்கர ணங்கள்
பூதங்க ளெனவிலா தடங்க
அறிவெனத் தமியேற் கொருமொழி யுதவி
யருவினைக் குறும்பற வெறியாய்
செறிமுலைக் கரியுஞ் சிற்றிடை யரியுஞ்
சேரமா துமைதினங் கட்டுந்
தறியெனக் கவின்பெற் றிலங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அஅ)

பொன்னிடத் தடைந்த மணியென வடைந்து
புண்ணியர்க் கருளுநின் பதங்கள்
என்னிடத் திரும்பி னடைந்தசெம் மணிபோ
லெய்திய தம்மவோ வியப்பே
மன்னிடக் கடலு ளடங்கும்வெற் பன்றி
மலைதரு மருட்பெருங் கடலைத்
தன்னிடத் தடக்கு மலையெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (அகூ)

---

சொர்னம் என்பர். ஐந்தெழுத்தோதாதவரையும், மக்களைப்பாடுகின்றவர் களையும் விட்டகலவேண்டும் என்பது கருத்து. தாவில் - கெடுதலற்ற. அஎ. இயமானு மென்புழினகரந் தொக்கது. அல்லி - அகவிதழ்கள்; இவை அழலுக்குவமை. அஅ. குறும்பு - வலிமை. "அரவுக் குறும் பெறிந்த சிறுகட்டீர்வை" என்பதனாலுமறிக. அகூ. மன்னிட - நிலை பெற்ற; மலை தருமருட்கடலென்றது உமையை; மலை கடலில் அடங் குவது இயற்கை. ஆனால் கடலாகிய உமை மலையாகிய சிவத்தினிடம் அடங்கியது என்பது முரணணி.

நீங்கிய நேயத் தவர்க்கறி வரிய
நெடியவ னெஞ்சகன் றிடாத
தேங்கிய சோதி மன்றுளா டுவவென்
சிந்தையு ணடப்பநின் பதங்கள்
ஓங்கிய மூங்கிற் றலைமிசை மலர்வீழ்ந்
துழுமளி புரியிருன் மருவித்
தாங்கிய வால வட்டநேர் சோண
சைலனே கைலைநா யகனே. (க0)

எழுபசும் புல்லும் புனலுமெவ் விடத்து
மிருந்திட நினைத்தவவ் விடத்தே
விழைவொடு வந்து தோன்றுநீ யிருப்ப
வீணின்மா னுடர்பிறந் துழல்வார்
மொழிதரு கருணை மலையெனும் பெயரன்
மொழியொரீஇ வேற்றுமைத் தொகையைத்
தழுவுறநின்று வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கக)

வேணவா வகன்று நின்றிரு வடியின்
மெய்ம்மையன் படைந்துபொய்ப் பிறவி
நாணுவா ரினங்கண் டுறும்படி தூய
ஞானநாட் டம்பெற வருளாய்
சேணுலா மதியந் தவழ்பெருங் குடுமிச்
சிலம்புகள் சிறுதுரும் பாகத்
தாணுவா யெழுந்து வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (கஉ)

நின்னையே நோக்கி விடாதகட் புலனு
நின்னையே நினைக்குநெஞ் சகமும்
நின்னையே துதிக்கு நாவுமென் றருளி
நின்றிரு வடியின்வைத் தருள்வாய்

---

**க0.** நெடியவன் - திருமால்; அளி - வண்டினீட்டம்; இருல் - தேனடை; மன்று - திருச்சிற்றம்பலம். இருல் ஆலவட்டத்துக்கும், மூங்கில் அதன் காம்புக்கும் உவமை. நீங்கிய நேயத்தவர் - அன்பற்றவர்கள். **கக.** கருணைமலை யென்னும் பெயர் இம்மலை வடிவமையுமுன் கருணையாகிய மலையையுடையவர்; அல்லதுமலைபோலுங் கருணையையுடையவரென அன்மொழித் தொகையதாய் நிலவி, இம்மலை வடிவமைந்தபின் கருணையையுடைய மலையென வேற்றுமைத் தொகையதாயிற்றென்றபடி. **கஉ.** வேணவா - வேட்கைப் பெருக்கம். பொய்ப் பிறவி என்பது நிலைபெறுதலில்லாத இப்பிறவியை. **கங.** கட்புலன் - கண்ணிந்திரியம். தரணி - மலை. தன்னையேகாட்டல். பதிநிலையையறி

தன்னையே நினர்க்குச் சகமெலாங் காட்டுந்
தரணியோ டிகலிமே வினர்க்குத்
தன்னையே காட்டு மலையெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௧௩)

மின்வணங் கவருஞ் செஞ்சடா டவியும்
விளங்கொளி மார்பும்வா னுலக
மன்வணங் குறுநின் பதாம்புய மலரு
மனங்குடி யிருக்குநா ளுளதோ
பொன்வணம் புரியும் காகமொன் றினைப்பொற்
பொருப்பென வடைபொரு ளனைத்துந்
தன்வணம் புரியும் பொருப்பெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௧௪)

குருமணி மகுடம் புனைந்துல காளுங்
கொற்றவ ராதலி னென்கட்
கருமணி யெனுநின் றொண்டர்குற் றேவல்
கருதியாட் பட்டிட வினிதே
பெருமணி விசும்பி னுச்சியி னெழுந்த
பிள்ளையங் கதிரென வரவந்
தருமணி யொளிவெண் மதியுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே. (௧௫)

சிம்புளாய் மடங்க லெறுழ்வலி கவர்ந்த
திறலுமுப் புரஞ்சுடு விறலும்
அம்புயா தனத்தன் முடிகளைந் திட்ட
வடலுமேத் தினர்க்கிட ருளதோ

---

வித்தல். தரணியோடு இகலி - உலகத்தில் உள்ளமலைகளோடு மாறுபட்டு. ௧௪. பொன்னிறத்தவும் கருநிறத்தவுமாகிய பறவைகள் தன்பாலெய்தின், மேரு, தன்னிறமுடையவைகளை வேற்றுமைப் படுத்தும் ஆற்றலின்றிக் கருநிறமுடையவைகளையே தன்னிறத்தன வாக்கும்; சிவ சொரூபமாகிய இம்மலை தன்மயத்த பொருள் ஒன்றுமின்மையின் அடைந்த உயிர்ப் பொருள்களனைத்தையும் தன்மயம் ஆக்காநிற்குமென்பது. மின்வணம் - மின்னலின் அழகு. ௧௫. பிள்ளையங் கதிர் - இளஞ்சூரியன், ஆண்டவன் அடியவர்கட்குப் பணிசெய்வதே அழியாப் பேரின்பத்தைக் கொடுக்கும் என்று பொருள்பட "அன்பர் பணிசெய்ய வெனையாளாக்கி விட்டுவிட்டால் இன்ப நிலைதானே வந்தெய்தும் பராபரமே" என்று தாயுமானர் கூறுவதுங் காண்க. அரனடியவர்கட்குச் சிறுபணி செய்ய வேண்டும் என்பது இப்பாட்டாற் கூறப்படுகின்றது. குற்றேவல் - சிறு வேலை. குரு என்பது இங்கு நிறம். ௧௬. சிவபெருமான் கொண்ட (௨௫) மூர்த்தங்களுள் கோர மூர்த்தங்களை இடரொழிவிற்கும், மிச்சிரமூர்த்தங்களைச் சித்தியெய்

உம்பர்மா மதியி லங்கையி லிருந்த
    வுழைகுதித் திருப்பவா ரழல்வான்
தம்பமா யெழுந்து நின்றிடுஞ் சோண
    சைலனே கைலைநா யகனே. (௧௬)

அஞ்சலென் றவலக் கொடியனேன் றனைநின்
    னடியரிற் கூட்டுக வுலகின்
நஞ்சமுண் டிருண்ட கண்டமென் றுனது
    நற்கள மிகழ்பவ ருளரோ
வஞ்சமைங் கரன்கொண் டிளவலோ டிகலி
    வலங்கொள்வா தின்னும்வந் துறினுந்
தஞ்சமென் றிடாது நின்றிடுஞ் சோண
    சைலனே கைலைநா யகனே. (௧௭)

அணிந்திடு கலனுஞ் சாந்துமொண் டுகிலு
    மரிவையர் போகமும் பெறுவான்
துணிந்திடு மனமென் றுனைப்பொரு ளாகத்
    துணியுமோ வறிந்திலேன் றமியேன்
பணிந்திடு மயன்மால் பெருமைக ளனைத்தும்
    பறவைகொண் டெழுதலாய் முடிந்து
தணிந்திட நிமிர்ந்து நின்றிடுஞ் சோண
    சைலனே கைலைநா யகனே. (௧௮)

பூவுறு தடமு மதியுறு விசும்பும்
    பூணுறு முறுப்புநின் றுலகாள்
கோவுறு நகரு மென்னவென் மனநின்
    குரைகழன் மருவுநா ளுளதோ

---

தற்கும், சாந்தமூர்த்தங்களைச் சாந்தி யெய்தற்கும் வழிபட வேண்டுமென்பது நூற்றுணிபாகலின்; ஈண்டியம்பிய உக்கிர மூர்த்தங்களின் வெற்றிகளைத் துதிக்கில் இடரெய்தா வென்பது. சிம்புள் - சரபம். மடங்கல் - நரசிங்கம். எறும்வலி-மிகுந்தவலி. அம்புயாதனத்தன்-நான்முகன். ௧௭. உலகை வலம்வந்து முன்னரெய்தினார்க்கே அளிப்பமென்ற கனியைப்பெற முருகக்கடவுள்வலஞ் செல்லுங்கால் விநாயகர் சிவபெருமானை வலம் வரின் உலகை வலம் வந்ததாமென மதித்து வலம் வந்து அக்கனி பெற்றவராகலின் வஞ்சங் கொண்டென்றும், மலையுருவாகிய இப்பெருமானை இவர் வலம் வருமுன் அவர் மயிலில் உலகை வலம் வந்து விடுவராகலின் தஞ்சமென்றிடாது நின்றிடுமென்றுங் கூறினார். வஞ்சம் - கபடம். தஞ்சம் - ஈண்டு எளிமை. இளவல் - தம்பியாகிய முருகக் கடவுள். இகலி - மாறுபட்டு. ௧௮. பெருமைகளனைத்தும் தணிந்திட என இயையும். கலன் என்பது இங்கு ஆபரணம். இப்பாட்டால் சிற்றின்பத்தைத் தரும் இப்பொய்ப் பொருளையே பொருளாகக் கொள்ளாமல், பேரின்பத்தைத்தரும் மெய்ப்பொருளாகிய உன்னை என் மனங்கொள்ள வேண்டும் என்னுங் கருத்தொடு கூறுவது காண்க. ௧௯. ஓவுறுமனை - அழியும் வீடு.

ஓவுறு மனைசெய் பவர்கொள மரந்தாங்
   கோங்கல்க ணுணவுன் னினர்க்குத்
தாவுறு முயர்வீ டளித்தருள் சோண
   சைலனே கைலைநா யகனே. (௯௯)

சீரணி புகழுங் கல்வியுஞ் சிறந்த
   செல்வமு மில்லில்வாழ் பவர்க்குப்
பேரணி கலமென் புதல்வருங் கதியும்
   பெறத்துதிப் பவர்க்கருள் பவனீ
நேரணி கதியை மறந்தவர் கண்டு
   நினைந்துற மிக்கபே ரருளால்
தாரணி முழுதுந் தோன்றிடுஞ் சோண
   சைலனே கைலைநா யகனே. (௧௦௦)

சோணசைலமாலை முற்றிற்று.

---

தாவுறும் வீடு - அழியாத முத்திவீடு. தா - வன்மை; எனவே அழியாமை விளக்கிற்று. தாவுஎனப் பிரித்துப் பற்றுக்கோடென்றலுமாம். ஓங்கல்கள் - மலைகள். ௧௦௦. என்புதல்வர் - வேற்றுமைத் தொகை. கதியை மறந்தவர்தன்னைக் கண்ட மாத்திரத்தே அச்சிந்தனையுடையராய் நினைந்து அக்கதிபெறத் தோன்றிடும் என்க. நினைந்தென்பது - நினைக்கமுத்தி தருதலைக்குறித்து நின்றது. பேர் அணிகலம் - சிறந்த ஆபரணம்.

# உ. நால்வர் நான்மணிமாலை

[நான்மணிமாலை என்பது தொண்ணூற்ருறுவகை நூல்களுள் ஒன்று. வெண்பா, கட்டளைக்கலித்துறை, விருத்தம், அகவல் என்னும் நான்கு பாக்களானும் அமைவது நான்மணிமாலையாகும். இது நாற்பது பாடல்களால் முடிவுபெறும். இந் நான்மணிமாலை சைவ சமயாசாரியர்களாகிய நால்வர்மீதும் திருஞானசம்பந்தருக்கு வெண்பாவும், திருநாவுக்கரசருக்குக் கட்டளைக்கலித்துறையும் சுந்தரருக்கு விருத்தமும் திருவாதவூரடிகட்கு அகவற்பாவுமாக இயன்றதாகலின் நால்வர் நான்மணிமாலை என்று பெயர்பெற்றது. இவ்வரிய நூல் திருத்தொண்டர் புராணச் செய்திகளையும் சைவசமய நுண் கருத்துக்கள் பலவற்றையுந் தன்னகத்துக்கொண்டு விளங்குவது மட்டுமன்றி இலக்கியச் சுவை, பக்திச்சுவை முதலிய பலசுவை நலன்களையுந் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது.]

## காப்பு

எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

## நூல்

நேரிசை வெண்பா

பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு — நாவால்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் றண்டை
வெறித்தண் கமலமே வீடு. (க)

---

எப்போதகத்தும் - எக்காலத்தின் கண்ணும். உள் ஏழாம் வேற்றுமையிடப் பொருளுருபு. இதய கமலமுமாம்; இதற்கு அகப்போது என மாறுக. வெளிக்குப் பகட்டாகக் கூறுவது பயன்றராது என்பதும், மனத்தின் கண் பன்முறை நினைந்து சிந்திப்பார்க்கே இடரொழித்துப் பயனுண்டாக்குவன் என்பதும் விளக்கவே 'அகத்து நினைவார்க் கிடரில்லை' என்ருர் என்க. கழல் என்பது காலில் அணியும் ஒருவகையணி. இது பகைவரைப் புறங்காட்டச் செய்யும் வீரர்கள் அணிவது. இதனுல் மக்கட்கு வரும் இடராய பகையைத் தவருமலொழிப்பன் என்பது பெறப்படும்.

க. பொய்கை - பிரமதீர்த்தம். ஞானப் பாலுண்டு 'அதனைத் தாம்மொழிந்த இயற்பாவோடு சேர்த்து எமது செவிக்கமுதமாய்

கட்டளைக்கலித்துறை

வீட்டிற்கு வாயி லெனுந்தொடை சாத்துசொல் வேந்தபொது
ஆட்டிற்கு வல்ல னொருவற்கு ஞான வமுதுதவி
நாட்டிற் கிலாத குடர்நோய் நினக்குமுன் னல்கினுமென்
பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே. (உ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

படியிலா நின்பாட்டி லாரூர
   னனிவிருப்பன் பரம னென்ப
தடியனே னறிந்தனன்வான் றொழுமீச
   னினைத்தடுத்தாட் கொண்டு மன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பா
   னினக்காகத் தூது சென்றும்
மிடியிலா மனைகடொறு மிரந்திட்டு
   முழன்றமையால் விளங்கு மாறே. (௩)

நேரிசையாசிரியப்பா

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகமிங் கொருகா லோதிற்

---

வார்த்த பிரான் என்க; ஆன் "தூங்குகையா னோங்குநடைய" என்புழிப்போல ஓடுவுருபின் பொருளது. இயற்பாவான் மொழிதல் - இயற்பாவாற் றுதிக்கப்படுதலுமாம். உண்டு மறித்து அமுதாக இயற்பாவால் வார்த்தபிரான் என்னலுமாம். ஆக்கம் உவமம். வெறித்தண் கமலம் - மணமுங் குளிர்ச்சியும் பொருந்திய தாமரை. உ. வாயில் - ஏது. நல்கினும் பாட்டில் எவ்விதத்தாலும் நீயும் அவனும் ஒப்பீராகலின் இங்ஙனம் ஈந்தமையாற் பயன் என் என்பது. நாட்டிற்கிலாத எனல் தாப்பிசை. பொது ஆட்டிற்கு - மன்றில் கூத்தியற்றுதற்கு. ௩. படி - ஒப்பு. வான் - வானுலகத்தவர், பரமன் விருப்பனென்பது விளங்குமாறு அறிந்தனனென்க. அறிந்தனனென்பது பிரதிக்ஞை, கொண்டும் சென்றும் இட்டும் உழன்றமையாலென்பது ஏது. தொடி - வளையல். மிடி - வறுமை. ௪. வேதம் பல்கா லோதினும் சிற்றன்புடையராதலும் அரிதென்பதூஉம் திருவாசக மொருகாலோதினும் பேரன்புடையராதல் எளிதென்பதூஉம் விளக்கியவாறு. கேணி என்பது நெய்தனிலத்து நீருக்காகத் தோண்டப்படும் சிறு கிணறு. இக்கேணிஇடையறாது நீர் சுரந்துமக்களை உண்பிக்கும். இதுபோலவே கண்ணீர்வார ஆண்டவன் அருள் சுரந்து

கருங்கன் மனமுங் கரைந்துக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே. (௪)

நேரிசை வெண்பா

இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த வன்னையோ முன்னின்—நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தா ளார்சொல் லெனக்கு. (௫)

கட்டளைக் கலித்துறை

எனக்கன்பு நின்பொருட் டெய்தாத தென்கொல்வெள் ளேறுடையான்
தனக்கன்பு செய்திருத் தாண்டக வேந்தவித் தாரணியில்
நினக்கன்பு செய்கின்ற வப்பூதி யைச்சிவ நேசமுறும்
இனர்க்கன்பு செய்நம்பி யாரூர னேத்து மியல்பறிந்தே. (௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அறிந்து செல்வ முடையானு மளகைப்
பதியாற் றேழமைகொண்
டுறழ்ந்த கல்வி யுடையானு மொருவன்
வேண்டு மெனவிருந்து
துறந்த முனிவர் தொழும்பரவை துணைவா
நினைத்தோ ழமைகொண்டான்
சிறந்த வறிவு வடிவமாய்த் திகழு
நுதற்கட் பெருமானே. (௭)

---

மக்களை உய்விக்கும் என்க. மன்பதை-மக்கட்பரப்பு. மற்றையர்-ஈண்டு அன்பராகாதவர். கரைந்துக - கரைந்துசிந்த. மன்பதை உலகு - மக்கட் பரப்பையுடைய உலகம். ௫. நிலை விளம்பவென்பது சோணாட்டந்தண ரொருவரெய்தி உரைத்தமையைச் சுட்டி நின்றது. இதனைத் திருவிளை யாடற் புராணத்தானும், "கேட்குங்கால் மங்கையர்க்கரசி யார்க்குக் கொங்கை சுரந்தமையைச் சுரந்த திருமுலைக்கே" என்னும் திருக்களிற் றுப் படியார்த் திருப்பாடலானும் தெளிக. ௬. திருத்தாண்டக வேந்த என்று விளித்தது திருநாவுக்கரசரை. முதன்முதல் இவரே தாண்டகம் பாடிய தலைவரானபடியால் அப்பெயர் பெற்றார் என்க. வேந்த: ஆரூரன் அப்பூதியை ஏத்துமியல்பறிந்தும் நின் பொருட்டு எனக்கு அன்பெய்தாதது என்னெனக் கூட்டுக. ஏத்துமியல்பு - "ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்" எனத் துதித்த மேம்பாடு. இனர்க்கு - திருக்கூட்டத்தார்க்கு. ௭. இருந்து என்பது இயற்கையறிவு சொருபரா கலின் தமக்கிணையொத்தாரை நேடியிருந்தென்பதும், நினையென்பது நெற்றிக்கண் படைத்தவரே தோழமை கொள்வாராயின் நின்பெருமை புகலவெளிதோ வென்பதும் தோன்ற நின்றன. அளகைப்பதியான் -

### நேரிசையாசிரியப்பா

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே. (௮)

### நேரிசைவெண்பா

இடுகாட்டுள் மாத ரெலும்பிற் புரண்மால்
சுடுகாட்டு ளாடுவாற் சுட்டி — நெடுகாட்டுஞ்
சம்பந்தா வென்புநின்பாற் றந்தாக்கிக் கொண்டிலனென்
கும்பந்தா மென்னுமுலைக் கொம்பு. (௯)

### கட்டளைக்கலித்துறை

கொள்ளைக் கதிர்முத்தின் பந்தருஞ் சின்னமுங் கொள்ளுமொரு
பிள்ளைக் கதுதகு நாவர சாய பெருந்தகையோய்
கள்ளைக் குவளை யுமிழ்வீ ழியிற்படிக் காசொன்றுநீ
வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென் வாங்கினையே. (௧௦)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வாங்குசிலை புரையுமுட லெனுங்குளத்தின் மூல
மலமெனுமோர் வெங்கரவின் பகுவாயி னின்றுந்
தீங்கிலுயி ரெனும்பனவக் குலமகனை யாதி
திரோதாயி யென்னுமொரு வெந்திறற்கூற் றுவனால்

---

குபேரன். உறழ்ந்த - ஒப்பான. ௮. வாச்சியம் - வாசகத்தாலுணர்த்தப்படும் பொருள். அல்குல் வேய்த்தோள் அன்மொழித்தொகை. இடம் இடப்பாகம். தவன் - யோகி: கணவனுமாம் தூசு - ஆடை. ௯. மால் என்பு தந்து கொம்பு ஆக்கிக் கொண்டிலன் என் எனக் கும்பந்தாமென்னு முலைக்கொம்பு ஆக்கிக் கொண்டிலன் என்கும் எனக் கண்ணழித்து, சிவநேசச் செட்டியார்போல என்பைப் பந்துபோலுமென்னுக் தனங்களையுடைய பெண்ணுக ஆக்கிக் கொண்டிலனென்பர். திருமால் எனலுமொன்று. என்கும் - ஈண்டுச் செய்யுமென் முற்று. சுட்டிநெடுகாட்டுமென்பதனால் அது தடத்த வடிவம் என்பது பெற்றும். மால் - திருமால். கும்பம் - குடம். ௧௦. அதுவென்றது படிக்காசொன்று பெறுதலை. குழை - காது. என்வாங்கினை யென்பது இறைவராஞ்ஞையை மறுத்தற் கஞ்சியோ என்பதுபட நின்றது. பிள்ளை என்பது ஞானசம்பந்தரை. இவரைச் சிவபெருமான் மக்கள் இருவருள் முருகப்பெருமான் அவதாரம் என்பர். கொள்ளைக்கதிர் - மிகுதியான ஒளி. வீழியில் - திருவீழிமிழலை யென்னுஞ் சிவப்பதியில். ௧௧. வாங்கு சிலையென்பது குறிப்பால் இந்திரதனுசையுணர்த்திற்று; உடம்பு நிலையாமைக் குவமிப்பது அதுவேயாகலின். அன்றிக் கூனுங்கால் வளைந்தவில்லை நிகர்க்கு முடலெனலுமொன்று. தீங்கின்மை - அழியாமை. ஆதிதிரோதாயியென்னுமெனவே அந்தத்தில்

ஓங்குறுநா தாந்தமெனப் பெயரியவக் கரையி
லூமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங் கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நென்மலைமுற் கொண்டவருட் கடலே. (கக)

**நேரிசையாசிரியப்பா**

கடனிற வண்ணன் கண்ணொன் றிடந்து
மறைச்சிலம் பரற்று மலரடிக் கணியப்
பரிதி கொடுத்த சுருதிநா யகற்கு
முடிவிளக் கெரித்துங் கடிமலர்க் கோதைச்
சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்தும்
அருமக ணறும்பூங் கருமயி ருதவியும்
நென்முளை வாரி யின்னமு தருத்தியுங்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும்
அகப்படு மணிமீ னரற்கென விடுத்தும்
பூட்டி யரிவா ளூட்டி யரிந்துந்
தலையுடை யொலிக்குஞ் சிலையிடை மோதியும்
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்துந்
தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றுங்
குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்
பூக்கொளு மாதர் மூக்கினை யரிந்தும்
இளமுலை மாதர் வளமை துறந்தும்
பண்டைநா ளொருசிலர் தொண்ட ராயினர்
செங்கண்மா றடக்கையிற் சங்க நாண
முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப
பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டும்
நின்னைத் தொண்ட னென்னக் கொண்டனன்
இருக்கு மடுக்க லரக்க னெடுப்ப

---

அதுவே அருட்சத்தி யெனப்படுமென்றுராயிற்று. கூற்றுவனுலுமிழ்வித்தென்க. ஒடு கலப்புறு பொருட்கண் வந்தது. இங்ஙனமியற்றின் எவருமுய்வரென்றபடி. பகுவாய்-பிளவுபட்டவாய். பனவக்குலமகன்-பார்ப்பனச் சிறுவன். கவற்றும்-வருத்தும். கஉ. கடனிற வண்ணன் என்பது திருமால். கண்ணைப் பெயர்த்து மலரடிக்கு இட்டது ஆழியைப் பெறவேண்டி. சிலை - கல்; வளமை - செழுமை; இங்கு இளமைப் பருவம் இடந்து - தோண்டி. அரற்றும் - ஒலிக்கும். அடுக்கல் - மலை. அரக்கன் - இராவணன். மொய்ம்பு - தோள். சுருதிநாயகற்குத்

முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமக டழுவ மனமகிழ் வோனே. (௧௨)

### நேரிசை வெண்பா

மகிழ்ச்சி மிகவுண்டு போலுமெதிர் வந்து
புகழ்ச்சியொடு நீபாடும் போது — நெகிழ்ச்சிமலர்ச்
சந்தையினும் வண்டிரையுந் தண்புகலிச் சம்பந்தா
தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு. (௧௩)

### கட்டளைக் கலித்துறை

தாயிலி யாகுஞ் சிவபெரு மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னுறறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலி னுணவ மாகுங் கபாடமு மன்றிறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னேக்குதற்கே. (௧௪)

### எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

நோக்குறு நுதலோ னின்னிடை விருப்பா
    னுற்பக வன்னநுண் மருங்குல்
வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
    மாற்றுவான் சென்றன னென்றால்
கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
    கொண்டதே துக்குநீ புகலாய்
காக்கரு மதலை விழுங்கிய முதலை
    கான்றிடத் தோன்றுநா வலனே. (௧௫)

---

தொண்டராயினரெனவும், மகிழ்வோனே கொண்டன னெனவும் இயையும். மாறு - பிரம்பு. ௧௩. மகிழ்ச்சி மிக வுண்டென்றது பாடிய திருநெறித் தமிழினருமையையும் தேவியாரளித்த ஞானப்பால் அதற்கேதுவாதலையுங்குறித்தென்க. போலும் - ஒப்பில் போலி. சந்தை - பலபண்டமுங் கொள்வான் குழுமும் சனத்தொகுதி; வேதச்சந்தையுமாம். மலரில் இரையும் என்க. புகலி - சீர்காழி. ௧௪. உயிர்முற்றும் சூக்குமவாலயமும் அவற்றினுடலனைத்தும் தூலவாலயமுமாகக் கூறுவது நூற்றுணிபு. முன் - அநாதியே. உம்மை உயர்வு சிறப்பு; எச்சமுமாம். மன்திறத்தல் - பின்வாதியாதொழித்தல். வழிபாடுடையார்க்குப் புரியுமாறு வகுத்தது. கபாடம் - கதவு. நோயிலியாகிய - பிறவிப் பிணியில்லாதவராகிய. ௧௫. நுதல் நோக்கு உறுவோன் எனக் கண்ணழித்து, கருத்தின் குறிப்பைக் கண்டறிந்த கடவுள் என்க. நுதலல் - கருதல். கண்படைத்த நெற்றியோன் எனலும் ஒன்று. பகவு - பிளப்பு. சிவாபராதரைத் தண்டிக்க; அஃதியலாதேல் தம்முயிர் துறக்க; என்பது குறித்தோவென்பார் ஏதுக்கென்றார். காக்கவென்பதன் அகரந் தொக்கது. மதலையைக் கான்றிட எனக்கொள்க. நோக்கு - கண்.

நேரிசை யாசிரியப்பா

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடல்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
திருவா சகமெனும் பெருநீ ரொழுகி
ஓதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
உளமெனு நிலம்புக வூன்றிய வன்பாம்
வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே. (கசு)

நேரிசை வெண்பா

பயனாகு நல்லாண் பனைக்குவிடத் திற்கு
மயிலாகு நோய்க்கு மருந்தாம் — உயிராகுஞ்
சிந்துமெலும் பிற்குச் சிரபுரத்து நாவலன்சம்
பந்த னியம்புதிருப் பாட்டு. (கஎ)

கட்டளைக் கலித்துறை

பாட்டான் மறைபுக ழும்பிறை சூடியைப் பாடிமகிழ்
ஊட்டா மகிழ்சொல் லிறைவனைப் பாடி யுவப்புறுக்க
வேட்டான் மலிபெருங் கல்லவன் போல மிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற் கேவிழப் போதுவனே. (கஅ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

போத முண்ட பிள்ளை யென்பு
 பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர்
 கன்மி தப்ப வுய்த்ததோ

---

கசு. வலம் என்பது வல்லமை நலம் - தூய்மை. உலகு - மக்கள்; மழை - மேகம்; குளம் - ஏரி. புகத்தருமென இயையும். ஊன்றிய அன்பு - முன்னரே பதிந்துள்ள அன்பு. கஎ. பயன் - பழம். ஆண்பனையினன்மையாவது - பிள்ளையாரால் முத்திபெறற்குரிய முதுதவமுடைமை. பாட்டின் விளைவைப் பாட்டு விளைவாக வுபசரித்தார். சிவபுரம் - சீகாழி. கஅ. ஊட்டா பூட்டாவென்பன வினையெச்சம். தேகாதிப் பிரபஞ்சத்தைச் சிறிதுங் குறிக்கொள்ளா னென்பார் வேட்டவன் கடற்கே போதுவன் என்றனு மாம். இங்ஙன மியற்றியேனும் இவரருள் பெறவேண்டுமென்பது. சொல்லிறைவன் - நாவுக்கரசர். வேட்டான் - விரும்பியவன். கக. கன்னிகையாக்குதற்கு என்பும் மிதத்தற்குக் கல்லும்போல

வாய்தி றந்து முதலை கக்க
மகனை நீய ழைத்ததோ
யாது நம்பி யரிது நன்றெ
னக்கி யம்ப வேண்டுமே. (கக)

நேரிசை யாசிரியப்பா

வேண்டுநின் னடியார் மெய்யன் பெனக்கும்
அருள்செய் சிவனே யலந்தே னந்தோ
முறையோ முறையோ விறையோ னேயென்
றழுது செம்பொ னம்பலக் கூத்தன்
அருளாற் பெற்ற வன்பினி லொருசிறி
தடிய னேற்கு மருளல் வேண்டு
நீயே கோட னின்னருட் பெருக்கிற்
கேற்ற தன்றிள வேறுகந் தேறியைப்
பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக
திருந்திய வேதச் சிரப்பொருண் முழுதும்
பெருந்துறை யிடத்துப் பெருஞ்சீர்க்
குருந்துறு நீழலிற் கொள்ளைகொள் வோயே. (உ0)

நேரிசை வெண்பா

கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்
தள்ளுந் திருஞான சம்பந்தா — வெள்ளமிடும்
ஏடேறப் பால்குறைந்த தென்றழுவ ரேகழுவின்
காடேறப் புக்கவரு கர். (உக)

கட்டளைக் கலித்துறை

அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு

---

ஆதாரமின்றாகவும் பாடலொன்றால் அஃதுள தாக்கியமைத்தமையின் அதனருமைதோன்ற அரிதென்றார். இதனைக் கந்தபுராணம் கடவுள் வாழ்த்து 22ஆவது செய்யுளாலுமுணர்க. ஓகாரமூன்றும் வினாப்பொருள வேனும் இறுதியது பிரிநிலையுமாம். போதம்-ஞானப்பால். பொருகண்-போர்செய்கின்ற கண். உ0. அடியார் மெய்யன்பு-அடியார் பாற்கொள்ளும் உண்மையன்பு. வித்தக, கொள்வோய், அருளல் வேண்டும் என வியையும். அலந்தேன் - கவலைகொண்டேன். கோடல் - கொள்ளுதல். உக. பிடர்பிடித்துத் தள்ளுதல் - அணுகாதகற்ற லென்னும் பொருட்டாய் உலகவழக்குப் பற்றி வந்தது. ஏடேறப் பால்குறைந்த தென்பதும் அருகரென்பதும் இரட்டுறமொழிதல். கழுவின்காடு - ஆயிரக்கணக்கான சமணர்கட்கு ஆயிரக்கணக்கானகழுக்கள் அமைக்கப் பட்டனவாதலின் கழுவின் காடு என்றார். உஉ. வினாப்பொருள வோகாரமிரண்டும் முறையே உயர்வினும் இழிவினும் வந்தன. அரிது

கருகக் கடல்விட முண்டோ னடியிற் கசிந்துமனம்
உருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த வுனக்கரிதே. (௨௨)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

உனற்க ரும்புகழ் மேவிய சுந்தர னும்பன் மீதிவரா
நினைப்ப ருங்கயி லாயம டைந்தமை நின்று காண்குறவே
எனக்கு வந்துறு மோமக வென்றழு கின்ற நாளலைபால்
தனித்த ருந்துபு மாலை யுமிழ்ந்திடு தம்பி ரானலனே. (௨௩)

நேரிசை யாசிரியப்பா

நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ
மனநின் றுருக்கு மதுர வாசக
கலங்குறு புலனெறி விலங்குறு வீர
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனு முணரா னஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணும்
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பி னென்று விழிப்பி னெரியும்
ஆயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனாற்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி யறியா வென்பணி வானே. (௨௪)

---

சொல் என்க. அம்பி - ஓடம். மிடறு - கண்டம். ௨௩. காண்குற நலன் உறுமோவென இயையும். நலன் - சிவானுக்கிரகம். பால் அலை - பாற்கடல்; ஆகு பெயர். தம்பிரான் - உபமன்னிய முனிவர். உபமன்னிய முனிவர் குழந்தைப் பருவத்தில் ஆவின்பாலை விரும்பியழுதார். சிவபிரான் அம்முனிவருக்குப் பாற்கடலைக் குடிக்க வழங்கினார். அப்பொழுது பாலையுண்ட முனிவர் அதிற்பள்ளி கொண்டிருந்த மாலையுமிழ்ந்தார் என்பர். உனற்கு - எண்ணுதற்கு. உம்பல் - யானை. ௨௪. தெய்வ நாயகர் சுருதியாதிய கலைகளுள் ஒன்றானுந் துணியப்படாதவர். அவர் கைகள் முத்தொழிற்கிணங்கத் துடியும் அபயமும் அனலமும் கோடலானும், ஒருகாற்கும்பிடிற் கதிகூடுமெனக் குஞ்சிதபாதத்தைக் குறித்தலானும் வளைவுற்றமர்வன; முறிந்தகைகள் என மற்றுமொரு பொருடோன்ற நின்றவாறுங் காண்க. சூரிய சோம நேத்திரம் அவ்வுலகிறுதியையும் தோற்றுவிப்பன; கண்கள் ஒருகாலைக் கொருகாலை குருடாவன என மற்றுமொரு பொருடோன்றுதல் காண்க. இங்ஙனமிருந்தும் தலைமை நாடாதெய்திப் பழுதில் செய்யுளை உலகினர் ஓதியுணர்ந்துய்வான் வரைந்தனர்; இவ்வுட்கிடையுணரார்க்கு இச் செயலாற் புகழ்ச்சிவிருப்பர் போலினும், ‘இகழ்ச்சி யறியா என்பணி வானே’ என்பதனால் அஃதிலர் என்பது தெரித்தவாறு காண்க. முறி - தளிருமாம். புலன் - ஐம்புலன்கள். வயங்கி - விளங்கி.

நேரிசை வெண்பா

வானும் புகழ்புகலி மன்னன் றொடர்பொன்று
தேனுந் திதழியோன் சீரேடு — தானுங்
கரியாய் மொழியுங் கரியாய் விடாமல்
எரியா ரழல்வீழ்ந் தெழுந்து. (உரு)

கட்டளைக் கலித்துறை

துடைவாழை மேன்மட வாரல்குற் பாம்பு தொடமயங்கி
நடைவாய்ப் பிணமெனப் பட்டார் பெறுகிலர் நச்சுகுலை
உடைவாழை மேலுர கந்தீண்ட மாய்ந்த வொருவனுயிர்
அடைவா னருள்புரி யுந்திரு நாவுக் கரசினையே. (உசு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

அரசன் பரிமேல் வரநெடுநல் யானை யெருத்தத் தமர்ந்துபோய்
வரதன் கைலை மலையடைந்த மணியே மணிநீ ரிடுபசும்பொன்
திரைசங் கெறியுங் குளத்துவரச் செங்கற் செம்பொ னுப்பாடும்
பரிசின் றெனக்குன் செம்பவளத் திருவாய் மலர்ந்து பகர்வாயே. (உஎ)

நேரிசை யாசிரியப்பா

பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெருரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெருது பெற்றார் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே
அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப வாத லாலே

உரு. தொடர்பு ஒன்று ஏடுதானும் அழல்வீழ்ந்து கரியாய் விடாமல் எழுந்து கரியாய் இதழியோன் சீர்மொழியும் எனக்கூட்டுக. தொடர்பு - திருப்பதிகம். சீர் - பரத்துவம். கரி - சான்று. எழுதல்- முன்னையினும் பசந்து விளக்கமடைதல். தொடர்பு - பாடல். இதழி - கொன்றைமாலை. கரி - அடுப்புக்கரி; சாட்சி. உசு. பூர்வம் வழிபட்டிருப்பாரேல் மாகிலத்துதித்து மயங்கி யழாரரகலின் உழல்வா ரெல்லாம் திருநாவுக்கரசினை வழிபடுதல் பெறுகிலரேயென்பது. வழிபடுதல் சொல்லெச்சம்; "பெற்றாற்பெறிற் பெறுவர்" என்னுந் திருக்குறளிற்போல. பட்டார் திருநாவுக்கரசினைப் பெருதவரே ஆவர் எனலுமொன்று. நடைவாய்ப் பிணம் - வினைத்தொகை. நச்சு உரக மெனக. நச்சுங்குலையுமாம். . உரகம் - பாம்பு. அடைவான் - மீளவும் பெறுமாறு. உஎ. வரதன் - வரத்தைக் கொடுப்பவன். ஆற்றிடுபொன் குளத்துவரவும், செங்கற் செம்பொனுகவும் பாடும் பரிசை அறிந்து வைத்தலின்றி இயற்றலின், ஆவலுடையனல்லே னென்பார் பரிசு சித்திக்கப் பகர்வாயென்னுது பரிசுபகர்வாயென்றார். பரிசு-அருட் டன்மை. எருத்தம்-பிடரி. மணிநீர்-மணிமுத்தாநதியின்நீர். உஅ. நீ அழுங்கி உருகிநிற்பை, பேயேன் கவலைதீர்ந்தேன், ஆதலால், என்பது

தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலரெனுஞ்
செஞ்சொற் பொருளின் றேற்றறிந் தேனே. (௨அ)

நேரிசை வெண்பா

தேனே றலர்சூடிச் சில்பலிக்கென் றூர்திரியும்
ஆனேறி யாண்டுப்பெற் றான்கொனீ — தானேறும்
வெள்ளைமணி யென்று வினவுவோம் வாங்கியவப்
பிள்ளையையாங் காணப் பெறின். (௨௯)

கட்டளைக் கலித்துறை

பெற்றா னினைப்பெற் றவர்போற் பெறலும் பிறப்பதுண்டேல்
நற்றா ரணியி னினைப்போற் பிறப்பது நல்லகண்டாய்
செற்றார் புரமெரி செய்தவில் வீரன் றிருப்பெயரே
பற்றா மறிவெண் டிரைக்கட னீந்திய பாவலனே. (௩0)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

பாவாய்ப் பொழிந்த வானமுதப்
பவளத் திருவாய் நம்பிநீ
சேவாய்ப் பொருதுந் தருமமுடைத்
தேவன் மலைக்குப் போம்பொழுது
காவாய்ப் பயந்த தடக்கைமலர்க்
கழறிற் றறிவார் கடாவிவரு
மாவாய்ப் பிறக்கக் கிடையாதே
மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே. (௩௧)

---

ஏது. பொருளின் தெளிவறிந்தேனென்பது பிரதிக்ஞை. செஞ்சொல் - திருக்குறள். தேற்றம் ஈறுகுறைந்தது. அழுங்கி - வருந்தி. ௨௯. சில்பலி - சிறுபலி. ஆனேறி பெயர். பலிக்கென்றென்பது உள்ளபடி பலிக்குச் சென்றதன் றென்பதும், யாண்டுப் பெற்றா னென்பதும், யாண்டும் பெற்றிலனென்பதும் பட நின்றன. பெறுதல் அதன் காரியமாகிய ஈதலையு முணர்த்திற்று. வெள்ளை மணி - ஆகுபெயர். அகரம் தலைமைச் சுட்டு. இது நிந்தாஸ்துதியாகவும் நிற்பதறிக. தேனேறலர் - தேன்பொருந்தியமலர். வெள்ளைமணி - முத்துப்பந்தல். ௩0. பெறின், உன்னைப் பெற்றவர்போல உன்னையொத்த புதல்வனைப் பெறுதலும், உதிப்பின் உன்னைப் போல ஒரு புதல்வனாகி யுதித்தலுமே சிறந்தன என்பது. கண்டாய் - முன்னிலையசை. செற்றார் - பகைவர். ௩௧. வான் அமுதம் பாவாகப் பொழிந்த நம்பியெனவும், தரும தேவதையைப் பொருதுஞ் சேவாகவுடைய தேவன் எனவுங் கொள்க. வான் அமுதம் - பரமுத்தி; அது, ஈண்டு அதன் சாதனங்களின் மேற்று. காவாய்ப் பயந்த - கற்பகதருவைப்போல வேண்டிற்றுதவிய. மாவாய்ப் பிறக்கும் - இக்கலியுக முடிவிற் குதிரையாயுதிக்கும். பாவாய் - பாடலாய். சே - எருது. கா - கற்பகமரம். மா - குதிரை.

நேரிசை யாசிரியப்பா

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நீழல்வா யுண்ட நிகரிலா னந்தத்
தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரு மோது மியற்கைத் தாதலின்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கு மதுர வாசகம்
ஓதின் முத்தி யுறுபயன்
வேத மோதின் மெய்ப்பய னறமே. (௧௨)

நேரிசை வெண்பா

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடையை — மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து. (௧௩)

கட்டளைக் கலித்துறை

ஊர்ந்து வருமிள வேறுடை யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்வீட் டுறுமுனக் கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ் செல்வமுமே. (௧௪)

---

௧௨. தேக்கு என்பது இங்கு, உவட்டல். மதுரம் - இனிய. உறு - அடையும். திருவாசகத்தின் இனிமையுணர்ந்து பலருமோதுதலின் யாவருமோதுமியற்கைத் தாதலினென்றார். திருவாசகத்தினை யோதின் முத்தி கிடைக்குமென்றும், வேதமோதின் மெய்ப்பயனாக விண்ணுலகப் பயன்களே கிடைக்குமென்றுங் கூறுதலால், வேதமோதலை விடத் திருவாசகமே யோதத்தகுவது என்பதாம். நிகரில் ஆனந்தம் - சிவானந்தம். அறமென்றது அறப்பயனாகிய சுவர்க்காதிகளை.
௧௩. சிவிகை பரித்தார் இப்பொழுதுஞ் சிறந்த தேவராய்த் திரிகின்றாராகலான் "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோ டூர்ந்தா னிடை" எனுந் திருக்குறளை மறுத்தாரென்க. ஆகலானென்பது சொல்லெச்சம். உந்துஞ்சிவிகை. இன்னவிடத்திற் செல்க வென்ற துணையானே ஆண்டுச் சேறற்குரிய தேவயானம். திரிகின்றாரென்னாது திரிகுவரென்றார். விழாவில் இப்பொழுது பரித் தாரும் தேவராவரென்பதறிவித்தற்கு. பரித்தார் - தாங்கியவர்.
௧௪. உனக்கே மிளிர்தருமென இயையும். இழந்து பெற்றார்க்கே நன்கு விளங்குமென்பது. வருஞ் சைவநலம் - சின்னாளகன்று பின்னர்ச் சேர்ந்த அச்சைவத்தின் சிறப்பு. கூர்ந்து மிளிர்தரும் என்பதனை நாவுக்கடையாக்கிச் சைவநலம் வரும் என்றலுமாம். ஊர்ந்து - செலுத்தி. வீட்டுறும் - விட்டுநீக்கும்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

செல்வநல் லொற்றி யூரன் செய்யசங் கிலியா லார்த்து
மல்லலம் பரவை தன்கண் மாழ்குற வமிழ்த்து மேனும்
அல்லுநன் பகலு நீங்கா தவன்மகி ழடியி லெய்தி
நல்லவின் படைந்தி ருப்ப னம்பியா ரூரன் றானே. (கரு)

நேரிசை யாசிரியப்பா

தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே. (கசு)

நேரிசை வெண்பா

வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி
நல்லா தரவின்ப ஞானங்கள் — எல்லாந்
திருஞான சம்பந்தன் சேவடியே யென்னும்
ஒருஞான சம்பந்த முற்று. (கஎ)

கட்டளைக் கலித்துறை

உற்றா னலன்றவந் தீயினின் றூனல னூண்புனலா
அற்றா னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்றா னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்
பெற்றா ரொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே. (கஅ)

---

கரு. இருவரையும் தாமவாவிய வாசனையகலத் திரோபவித்து இங்ஙனஞ் சேர்த்தினாரேனும் அவ்வின்பத்தைச் சிற்றின்பமாக நுகர்ந்தனரென்பது. மகிழடி - மகிழ்ச்சியைப் பயக்குந் திருவடி, மகிழமரத்தடி என இரட்டுறமொழிக. இருத்தல்-கைலைக்கண் வதிதல். இதுநிந்தாஸ்துதியாகவும் நிற்பதோர்க. ஆர்த்து - பிணித்து. மல்லல் - வளப்பம்; அழகு. சங்கிலியாற் கட்டிக்கடலில் தள்ளினாலும் அதனால் துன்புறாது இன்பத்தையே யடைந்திருப்பன் என்றும் பொருள்தொனித்தலையுங் காண்க. கசு. வல்லார்க்கே தருகுவனென இயையும். தற்போதமிழந்து இறைவர் பணியினின்றாராகலின் இவரை வழிபடுவார்க்கு அவ்விறைவரே முத்தியளிப்பரென்பது. கடிவு - நீக்கம். கஎ. வல்லாரென்பது வல்லுநரையும் வல்லுநரல்லாரையும்; ஒருஞானமென்பது - ஒப்பிகந்த ஞானத்தையும் சுட்டி இரட்டுறமொழிதலாய் நின்றன. ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலை. கஅ. தவம்-சரியையாதிகள். புனல் ஊணாக நுகர்வு அற்றானும் அலன் என உம்மை பிரித்துக் கூட்டுக: இப்பாட்டால், இறைவன் பெயரைக் கூறாவிடினும் அவன் அடியவர் பெயரைக் கூறினாலே அழியாப்பதம் பெறலாம் என்பதையறிக. அடியவர் பெயர் கூறுவது ஆண்டவன் பெயரைக் கூறியதுபோலாம். ஏனெனின் இறைவன் தொண்டருள்ளத் தொடுக்கமாதலால். உற்றானலன் — செய்தானல்லன். ஊண் - உணவு.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

பெருமிழலைக் குறும்பரெனும் பரம யோகி
பெரிதுவந்துன் றிருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றா னென்றால்
விளங்கிழையா ரிருவரொடு முயங்க லாமோ
உரைமதிநின் றனைவெறுப்ப தென்கொ னின்னை
யுடையானுக் கடுத்தசெய லுனக்கு மாயிற்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
தொகைசெய்தோ யறமுதலு வகைசெய் தோயே. (௩௯)

நேரிசை யாசிரியப்பா

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே. (௪0)

நால்வர் நான்மணிமாலை முற்றிற்று.

---

௩௯. பரமயோகி வழிபடுகின்றாரென அறிஞர் விதப்பராயின் நீர் இரு தேவிமாரோடு முயங்குவது தகுதியோ? தகுதியன்றாயினும் அவர் கிரியாசத்தியும் ஞான சத்தியுமாய்த் திகழ இறைவர்போன்று ஆன்மாக்களுக்குப் போகமோட்சங்களை அளிக்குஞ் செயல் உமக்கும் அமைந்த அவ்வியல்புணர்ந்து வழிபடாது சிலர் போகியென உம்மைப் புகலா நிற்பதென்னை? இருவர் - பரவையுஞ் சங்கிலியும். முயங்கல் - கூடுதல்.
௪0. இப்பாவால், பூவிற் சிறந்தது செந்தாமரை யாதல் போல, பாவிற் சிறந்தது வாதவூரர் பாவே என்பர். வார் - நீண்ட, தெய்வசிகாமணி - தெய்வங்கட்குத் தலைவன் சிவபெருமான். பூ. இங்குச் செந்தாமரைப் பூ. இது மிகுந்த அழகுடையது. இதன் அழகைக் கண்டே திருமகள் இதில் உறைகின்றனள் என்பர் கோவையுரையாசிரியர். பொறி - திருமகள்.

## ௩. திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதி

*[அந்தாதி யாவது ஒருபாட்டினுடைய அந்தம் அடுத்த பாடலுக்கு ஆதியாகவருமாறு பாடுவதாகும். இவ்வந்தாதி வெண்பாவா லாயினுங் கட்டளைக் கலித்துறையாலாயினும் பாடப்பெறும். வெண்பாவாற் பாடப் பெறுவது வெண்பாவந் தாதி யெனவுங் கட்டளைக்கலித்துறையாற் பாடப்பெறுவது கலித்துறையந்தாதியெனவும் வழங்கும். முப்பதுபாடல் களினலும் நூறுபாடல்களினலும் அந்தாதிபாடப்பெறும். நிரோட்டகயமகவந்தாதி என்பது நிரோட்டகமும் யமகமு மாகப் பாடப்பெறும். நிரோட்டகமாவது இதழ்முயற்சியாற் பிறக்கும் மெய்யும் உயிரும் உயிர்மெய்யும் வராமற்பாடப்படுவது. யமகமாவது அடி முதலெழுத்தோடு இரண்டெழுத்துமுதற் பத்தெழுத்திறுதியாக ஓரடிபோலவே நான்கடியும் பாடப் பெறுவது. முப்பது பாடல்களாலாகிய இக்கலித்துறையந்தாதி திருச்செந்தூரில் எழுந்தருளிய முருகப்பெருமான் மீது பெருந் தமிழ்ப் புலவர்களும் வியக்குமாறு அருந்திறலைக்காட்டிப் பாடப்பட்டுள்ளது. இந் நூல்கற்பவர்கட்குக் கழி பேருவகை யளிப்பதாகும்.]*

**காப்பு**

**கொற்ற வருணனை நின்றன் றுழக்கிய கொக்குருவைச்
செற்ற வருணனை யன்னசெவ் வேற்படைச் செந்திலர்க்கு
முற்ற வருணனை யந்தாதி யென்று முதிர்மதப்பேர்
பெற்ற வருணனை யானனத் தாதியைப் பேசுவனே.**

**நூல்**

**யானைக்கண் டங்கரி சென்றேத் தெழிற்செந்தி லின்றடைந்தே
யானைக்கண் டங்கரி யற்கங் கயிலையை யேய்ந்ததகை**

---

கொக்குரு - மாமரவடிவம். செற்ற - கொன்ற. அருணன் - கதிரவன். முற்ற - முடிய. அருள்நனை - அருள்வெள்ளமானது நனைக்கப்பெற்ற. நிரோட்டக யமக வந்தாதி - நிரோட்டகமும் யமகமு மாகப் பாடப்பெறும் அந்தாதி. நிரோட்டகமாவது இதழ்முயற்சியாற் பிறக்கும் மெய்யும் உயிரும் உயிர்மெய்யும் வராமற் பாடப்பெறுவது, யமகமாவது அடிமுத லெழுத்தோடு இரண்டெழுத்து முதற்பத்தெழுத் தீருக ஓரடி போல நான்கடியும் பாடப்பெறுவது. இக்காப்புச் செய்யுள் நிரோட்டகமுமன்று யமகமுமன்று.

க. யானைக்கண் தங்குஅரி - இந்திரன். ஐக்கண்டம் - அழகை யுடைய கழுத்து. தகைஆன் - பெருமை தங்கிய இடபம். ஈநல்

யானைக்கண் டங்கரி சேரெண்டிக் காக்கினற் கீறலிசை
யானைக்கண் டங்கரி தாகிய சீர்க்கதி யெய்தினனே. (௧)

தினகர னந்த நனியிலங் காநின்ற செய்யநற்செந்
தினகர னந்த நிதியா யினனடற் சீரயிலேந்
தினகர னந்த கனைச்செற்ற தாளர் திகழ்கனகா
தினகர னந்த நடனர் தனயனென் சிந்தையனே. (௨)

சிந்தனை யாகத் திசையந் தனர்க்கிறை சேரகங்க
சிந்தனை யாகத் தரையளித் தாடனை சென்றிரந்த
சிந்தனை யாகத் திடையினைந் தான்றந்த சேயளியாற்
சிந்தனை யாகத்த நற்செந்தி லாய்நினைச் சேர்ந்தனனே. (௩)

தனத்தலங் கார நிறைநா ரியரந் தரத்தசைகே
தனத்தலங் கார நிகழரங் காடச்செய் தன்னினயத்
தனத்தலங் கார தராயியங் கத்தக்க தண்செந்திற்கந்
தனத்தலங் காரனை யானய னேத்திடத் தங்கினனே. (௪)

தங்கந் தனங்க ளடையத் தனியெனைத் தள்ளியங்கே
தங்கந் தனங்க டரச்சென் றனரறிந் தாரிலைகா
தங்கந் தனங்க ளலர்காக்க ளுறெழிற் றண்செந்திலார்
தங்கந் தனங்க நிகர்செக்கர் செய்சஞ் சலத்தினையே. (௫)

சலந்தர ளுகந் தரித்தார்தந் தாதன் றனதிடைச்சஞ்
சலந்தர ளுகந் தரைநடந் தாலெனச் சார்ந்ததண்டன்

---

இசையான் - பிரணவப் பொருளைக் கூறிய பெருமை யுடையவன். ௨. தினகரன் நந்த - கதிரவன் ஒளிகுன்றுமாறு. அடற்சீர் அயில் ஏந்தின கரன் - வலிமை பொருந்திய சிறப்பாகிய வேற்படையைத் தாங்கின கையை உடையவர். அந்தகன் - நமன். செற்ற - அழித்த. நகர் அனந்தன் - அசைகின்ற ஆதிசேடன். நடனர் - அம்பலவாணர். ௩. சிந்தனை - எண்ணம். அகம் கசிந்து - மனம் நெகிழ்ந்து. அனை - அன்னை, தாய். தரைஅளித்தாள் - உலகத்தைப் பெற்றவள். இரந்த சிந்தன் - யாசித்த குறள்வடிவத் திருமால். அளியால் சிந்து அனையாய் - அருளால் கடலைப் போன்றவரே. கத்த - தலைவனே. ௪. தனம் - கொங்கை. நாரியர் - பெண்கள். அந்தரம் - விண். கேதனம் - கொடி. அரங்கு ஆட - அவையில் நடிக்க. செய் - வயல். நத்து - சங்கு. அலம் கார் அதராய் - கலப்பைச்சாலில் நிற்கின்ற நீரின் வழியாக. கார் அனையான் - திருமால். அயன் - நான்முகன். ௫. தங்கம் - பொன்போன்ற நிறத்தையுடைய தேமல். அம் தனங்கள் - அழகிய பொருள்கள். காதம் - காததொலை. கந்தம் - மணம். அங்கம் நிகர் செக்கர் - உடலைப் போன்ற செவ்வானம். சஞ்சலம் - துன்பம். ௬. சலம் தரம் நாகம் தரித்தார் - கங்கையையும் தலைமாலையையும் பாம்பையும் அணிந்தவர். தாதன் - மார்க்கண்டன். சஞ்சலம்தர - துன்பத்தைக் கொடுக்க. நாகம் - யானை. தண்டன் -

சலந்தர னாகந் தளரச்செற் றார்தன யன்றலநச்
சலந்தர னாகந் தனக்கிறை சேர்செந்திற் சார்ந்திடற்கே. (௬)

சாரங்கஞ் சங்கரி கட்கிச்சித் தேய்ந்தகைச் சங்கரனார்
சாரங்கஞ் சங்கரி தாஞ்சக் கரங்கையிற் றாங்கினன்சேய்
சாரங்கஞ் சங்கரி யாநண் ணினர்க்கந்தத் தந்திரத்தா
சாரங்கஞ் சங்கரி தேயெனச் செய்நின் சரண்டந்ததே. (௭)

தந்தனஞ் சங்கை யணிகரர் சேர்க்கத் தடங்கணலை
தந்தனஞ் சங்கை யலரென்செய் யாடங்கச் சற்சனர்நித்
தந்தனஞ் சங்கை யகலறத் தீசெந்திற் சார்கதனித்
தந்தனஞ் சங்கை யநக னிளையனற் றாடரற்கே. (௮)

தரங்கனந் தார னனியேற் றெழிற்செந்திற் றந்தைநிரந்
தரங்கனந் தாரக நாடினென் றேநினை சத்தியரந்
தரங்கனந் தார நகரீசர் சேய்கிரித் தையலர்க்கந்
தரங்கனந் தாரள கஞ்சிற் றிடைசல சங்கண்களே. (௯)

சங்கங் களங்கழ னிக்கரை சேர்செந்திற் றங்கினநஞ்
சங்கங் களங்கர நண்ணரன் சேயெய்தச் சார்ந்தனஞ்சற்
சங்கங் களங்க னியைநிகர் தண்ட தரற்கினிய
சங்கங் களங்க ரெனநின்ற யாங்களெஞ் சங்கரைந்தே. (௧0)

கரத்தரிக் கங்கணங் கட்டர னார்தந்த கந்தரழ
கரத்தரிக் கங்கணங் கண்டசெய்ச் செந்திலெங் காங்கெயர்சா

---

நமன். சலந்தரன் ஆகம் - சலந்தரன் என்பவனுடைய உடல். நச்சலம்- விரும்பினோமில்லை. எ. சாரங்கம் - மான். சங்கரி - இறைவி. சாரங்கம் - சார்ங்கம் என்னும் வில். தாங்கினன்சேய் - காமன். சார் அங்கம் - பொருந்தியஉடல். சங்கரியா - கொன்று. ஆசாரம் - சீலம். கஞ்சம் - தாமரை. அ. சங்கை அணிகரர் - வளையலையணிந்த கையை உடைய பெண்கள். தடங்கண் - விசாலமானகண். அலைதந்தனம் - அலைந்தோம். செய்யாள் - திருமகள். சங்கை அகல் ஐயம் நீங்கிய. தனித்தந்தன் - ஒற்றைக் கொம்பை யுடையவன். அநகன் - தீவினை யற்றவன். கூ. தரங்கம் - அலை. நந்து - சங்கு. ஆரல்-மதில். நிரந் தரம் - எக்காலத்தும்; தாரகம் - பிரமவடிவம். அந்தரம் நந்தார் - அந் தரங்கத்திலே கெடுதலின்றி விளங்குகின்றவர். சேய் கிரித்தையலர் - முருகனுடைய மலையில் இருக்கும் பெண். தார் அளகம் கனம் - மாலையை அணிந்த கூந்தல் முகிலைப் போலும். சிற்றிடை அந்தரம் - சிறிய இடை விண்ணைப் போன்றது. சலசம் - தாமரை. க0. சங்கங்கள்- சங்குகள். நஞ்சம் - நஞ்சு. கம் – தலை. களம் - கழுத்து. கரம்-கை. நண் - பொருந்திய. சற்சங்கம் சார்ந்தனம் - நல்லகூட்டத்தைச் சேர்ந்தோம். தண்டதரன் - இயமன். களங்கர் - குற்றத்தையுடைய வர். கக. அரிக்கங்கணம்கட்டு - பாம்பாகிய காப்பைக் கட்டிய. அத்தர் - தந்தை. இக்கு - கரும்பு. அங்கணம் - சேறு. காங்கேயர்

கரத்தரிக் கங்கணங் கட்கய ஞர்க்கெழிற் காசணிசே
கரத்தரிக் கங்கணங் கற்றிடத் தாங்கினர் கைச்சத்தியே. (கக)

சத்திக் கரத்த னகச்சேயங் கத்திலைத் தந்தனனற்
சத்திக் கரத்த னகச்சிலை யாளிதன் ருளிணைநே
சத்திக் கரத்த னகத்தியைந் தேத்தரன் றந்தகதிர்ச்
சத்திக் கரத்த னகசெந்தி லாய்நின் சரண்சரணே. (கஉ)

சரிதங்கை யாரக் கலன்றந் தனந்தரித் தார்நரகே
சரிதங்கை யாரக் கரிடத்தி ஞர்தந்த தண்செந்திலே
சரிதங்கை யாரக் கணத்தின்னல் கைத்தல் சரதந்தஞ்சீர்ச்
சரிதங்கை யாரக் கசிந்திசைக் கின்ற தகையினர்க்கே. (கங)

இனனந்தி யங்கி நிகர்த்தசெங் கேழன்மை யீரிரண்டா
யினனந்தி யங்கிரி யைச்சிலை யாக்கிதன் சேயெழிற்செய்
யினனந்தி யங்கி யிருங்கஞ்சஞ் சேர்செந்தி லெந்தைதலை
யினனந்தி யங்கிசை யக்கதி யீந்தன னென்றனக்கே. (கச)

தனக்கடங் காரெயில் செற்றகங் காளன் றனயனங்கந்
தனக்கடங் காதிழி தந்திக் கிளையன் றளிரெழிற்சந்

---

முருகர். சாகரத்து அரி - பாற்கடலில் எழுந்தருளிய திருமால். எழில் காசு அணி - அழகிய மணிகளால் அழகுசெய்யப்பட்ட. சேகரத்துஅரி- முடியை உடைய இந்திரன். அணங்கு-வருத்தம். கைச்சத்தி தாங்கினர்- கையில் வேற்படையை ஏந்திஞர். கஉ. சத்திக்கர - வலிமையுடைய முதலே. அகச்சேய் - வயிற்றில் இருந்த பிள்ளை. சத்திக்கு அரத்தன் - உமாதேவிக்குச் செந்நிறமாக விளங்குபவன். நகச்சிலையாளி - மகாமேரு மலையை வில்லாக ஆண்டவர்: நேசத்து இக்கர் அத்தன் - அன்பினைக் கருப்பு வில்லிலே வைத்த காமனுக்குத் தந்தை. அகத்து இயைந்து ஏத்து- மனம் பொருந்தப் போற்றுகிற. கதிர்ச்சத்தி - ஒளியையுடைய வேற் படை. கங. சரி-வளையல். ஆரக்கலன்-முத்துமாலையாகிய அணிகலன். நரகேசரி தங்கையார் – மனிதமடங்கலாகத் தூணில் தோன்றிய திரு மாலின் தங்கையார். அக்கர் - சங்குமணியை அணிந்த பரமசிவன். இதம் கையார் - இன்பத்தை வெறுது செய்வார். இன்னல் கைத்தல் சரதம் - துன்பத்தை வெறுத் தொழித்தல் உண்மை. கைஆர - ஒழுக்கம் பொருந்தும்படி. அன்பினையுடையவர்கட்கு முருகக்கடவுள் இன்பினைச் செய்தல் உண்மை என்று கூட்டுக. கச. இன்அந்தி - இனிதாகிய செவ்வானம். அங்கி - தீ. நிகர்த்த - ஒத்த. செங்கேழன் - செந் நிறத்தையுடையவன். ஆய்இல்நந்தி - மாதாவை யில்லாத நந்தி. அம்கிரி - அழகிய மகாமேருமலை கஞ்சம் சேர் - தாமரையை அடை கின்ற. தலையின்நந்தி - பாசத்திஞல் வருந்தி: கரு. எயில் செற்ற - மும் மதில்களையும் அழித்த. கங்காளன் - முழு வெலும்பையுடையவன். கடம் - மதம். தந்திக்கு - ஆனை முகக் கடவுளுக்கு. சந்தனக்கடம் - சந்தன மரக்காடு. கா - பூஞ்சோலை. சயில நங்கை - மலையிலிருக்கும் பெண். தனக்கடம் காணின் - கொங்கைகளாகிய குடங்களைக் கண்

தனக்கடங் காநிறை செந்திலி னற்சேய் சயிலநங்கை
தனக்கடங் காணினச் சாரிலை யண்ண றரணியிலே. (கரு)

தரணி யனைய நிறத்தண்ண லாரிரந் தன்றளந்த
தரணி யனைய னிறைஞ்சயி லார்நற் றணிச்சிலையாந்
தரணி யனைய னகனணை யந்தரி தந்திடுகந்
தரணி யனையனெஞ் சேயலர்த் தாள்கட ரித்திறைஞ்சே. (கசு)

தரிக்கனந் தங்கலை நீள்சடைக் கைக்கனற் சங்கரனந்
தரித்தனந் தங்கலை நீதிகள் சாற்றரன் றந்தநற்கந்
தரிக்கனந் தங்கலை நீர்ச்செய்க்க ணுஞ்செந்தி லார்தளையா
தரிக்கனந் தங்கலை நீத்திழந் தேங்கரச் சங்கங்களே. (கஎ)

சங்கரி யக்க நிகர்த்தநின் றுதை தகையதென்னச்
சங்கரி யக்க ரிறைஞ்செழிற் செந்திற் சடானனகஞ்
சங்கரி யக்கதிர் தானிசை கின்ற சரணத்தினுற்
சங்கரி யக்கணத் தேயெற் செறியந் தகற்சினந்தே. (கஅ)

தகர னலங்க நிறைநிறத் தான்செந்திற் றந்தைசங்கேய்ந்
தகர னலங்க னளினு தனத்தினன் றுழளகந்
தகர னலங்க டரநின்ற சத்தியன் றுளெனினந்
தகர னலங்கனன் றுலெனச் சீறிடத் தக்கரன்றே. (ககூ)

தக்க னகத்தி னடறணித் தானயன் றன்கதிசந்
தக்க னகத்தி கிரிக்கர ணுக்கங்க டந்தளிக்கத்
தக்க னகத்தி யனையாளி யென்னெஞ்ச தாஞ்சலசந்
தக்க னகத்தி னகரன்றன் செந்திலைச் சந்திக்கினே. (உ0)

---

டால். தரணியில் நச்சார் இலை - உலகில் விரும்பாதவர்கள் இலர். கசு. தரணி அனைய - கதிரவனைப் போன்ற. தரணியன் - திருமால். அயன் - நான்முகன். ஐ அநகன் - அழகினையுடைய மலரகிதர். அணி அல் - அழகிய அரண். கஎ. தரிக்க - அணிய. நந்து - வளர்தலையடைந்த. அம்கலை - அழகிய திங்கட்கலை. கைக்கனல் சங்கரன் - கையிலே தீயை உடைய சிவபிரான். அந்தரி - உமாதேவி. அனந்தம் - முடிவில்லாத. இக்கு - கரும்பு. தளை ஆதரிக்க - மாலையை விரும்ப. கலைநீத்து - ஆடையைப் போக்கி. கரச்சங்கங்கள் - கைவளையல்கள். கஅ. சங்கரி அக்கம் - உமாதேவியின் கண். சங்கு அரி-சங்கையுடைய திருமால். சரணத்தினுல் சங்கரி - அடிகளினுல் கொன்றருள். எற் செறி-என்னிடத்தே வந்து சேருகின்ற. ககூ தகரன்-ஆட்டு ஊர்தியை உடையவன். நிறத்தான் - அழகையுடையவன். நளினு தனத்தினன் - தாமரையை இருக்கையாகவுடைய நான்முகன். அளகம் - கூந்தல். தகரநலம் - மயிர்ச் சாந்தாலாகிய இன்பம். சத்தியன் - கிரியாசத்தியாகிய தெய்வானையம்மையை உடையவன். அனலம் - வடவைத் தீ. உ0. அகத்தின்அடல் - ஆணவத்தினது வலிமை. சந்தக் கனகத் திகிரிக்கரன் - அழகிய பொன் மயமான உருளைப்படையை ஏந்தியகையை உடைய திருமால். தந்து அளிக்கத் தக்கன் - கொடுத்துக் காப்பாற்றக் கூடியவர். நகு - விளங்குகின்ற. தினகரன் - கதிரவன்.

சந்தத்த னத்திக டந்திறத் தாசை தலத்தினிச்சை
சந்தத்த னத்தி னசைதீ ரடியன் றனதிலிற்சேர்
சந்தத்த னத்தி யதளான் றனய தடக்கயல்கஞ்
சந்தத்த னத்தி னினங்கீ ழிழிசெந்திற் றங்கினற்கே. (உக)

தங்கச் சினகர நேராக் கலந்திச் சகநிறைந்தார்
தங்கச் சினகர நேயர் தனயன் றனக்கினிதாந்
தங்கச் சினகர நீள்செந்தி னுட்டிற் றனகரிதந்
தங்கச் சினகர நற்கன னென்னங்க டையலர்க்கே. (உஉ)

அலரிந னந்தலை யாழிகண் டாங்குச் சிகியினிடை
யலரின னந்த நிகரயி லான்செந்தி லாயிழையை
யலரின னந்த நினைநிலந் தேர்ந்ததற் கன்றயலா
ரலரின னந்தஞ் சொலற்கிட னுநெஞ் சழிகின்றதே. (உங)

தேயத் தியங்கி யலகி றலங்களிற் சென்றடிகள்
தேயத் தியங்கி யலைய நிடங்கதி சேர்தலறைந்
தேயத்தி யங்கின நித்திலந் தானெறி செந்திலடைந்
தேயத்தி யங்கி தரித்தான் றனயற் றெரிசிக்கினே. (உச)

சிக்கத் தனங்க டிறக்கின்ற கன்னியர் சிந்தைகணே
சிக்கத் தனங்க ளளித்தழிந் தேற்கெழிற் செந்திறரி
சிக்கத் தனங்க ழலையேத்த நல்கினன் சீர்நிறைகா
சிக்கத் தனங்க ளகிலேசன் றந்த திறற்கந்தனே. (உரு)

---

உக. சந்தத் தனத்திகள்-சந்தனத்தை அணிந்த கொங்கைகளையுடைய பெண்கள். தலத்தின் இச்சை - மண்ணாசை. சந்தத் தனத்தின்நசை - அழகிய பொன்னாசை. அடியன் - சுந்தரமூர்த்திகள். சந்து - தூது. அத்தி அதளான் - யானைத்தோலையுடையவன். தடக்கயல் - பெரியகயல் மீன்கள். முருகப்பெருமானே எனக்கு மூவாசையையும் போக்கியருளும் எனக் கூட்டுக. உஉ. அச்சு-உயிர் எழுத்து. கச்சிநகரம்-காஞ்சி மாநகர். தங்கச் சினகரம் - பொன்னாலாகிய கோயில். கரிதந்தத்தனம் - யானைக் கோட்டைப்போன்ற கொங்கை. கச்சில் நகர - கச்சிலிருந்து பிதுங்கு தலுக்கு. நற்கனன் - நல்லகனம். இது செவிலி தலைவியினிடத்து ஐயங் கொண்டு பாங்கியை வினவல். உங. அலரி - கதிரவன். னைந்தலை - நடுவிடம். ஆழி - கடல். சிகியினிடை - மயிலூர்தியில். அலர் இனன் - விளங்குந்தலைவன். அயிலான் - வேற்படையை உடைய வன். செந்தில் ஆயிழை - திருச்செந்தூரில் இருக்கும் பெண். ஐஅலர்- ஐந்துமலர்க் கணைகள். இனல்நந்த - துன்பங்கெட. அலரின் அனந்தம் - பழிமொழிகளிற்பல, இஃது அலரறி வுறுத்தல். உச. இயங்கி - சென்று. அலகில் - கணக்கில்லாத. தியங்கி - மயங்கி. அறைந்து - ஆரவாரித்து. அத்தி - கடல். இனம்மித்திலம் - கூட்டமாகிய முத்துக் கள். ஏய் - அங்குபொருந்திய. அத்தி அங்கி தரித்தான் - எலும்பையும் தீயையும் அணிந்தவன். உரு. சிக்க - தம்மிடத்தில் அகப்பட. நேசிக்க- விரும்ப. கழலை ஏத்த-திருவடிகளைப் போற்ற. அகிலேசன்-விசுவநாதன்.

கந்தரங் கானந்த னிற்சென் றடங்கிலென் காசிக்கநே
கந்தரங் கானந்த நண்ணிலென் கன்னியர் கட்டளக
கந்தரங் கானந்த நின்ற டெழிற்செந்திற் கண்டிறைஞ்சிக்
கந்தரங் கானந்த நல்கச் சனனங் கடந்திலரே. (௨௬)

கடனந்தி னாகத் ததளாடை யாயெனைக் காக்கனிற்கே
கடனந்தி நாணிறத் தாயென நாரணன் கண்டிறைஞ்செங்
கடனந்தி நாதன் றனயனற் செந்திலிற் காரிகையே
கடனந்தி னாயகங் காதலர் தேரிற் கலிக்கின்றதே. (௨௭)

கணக்காக நாய்கடின் காய நிலையெனக் கண்ணியென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே னெழிற்செந்திற் கந்தநெற்றிக்
கணக்காக னார்தந்த நின்றனை யேயினிக் காதலினாற்
கணக்காக னாநிகர்த் தேயழி யங்கத்தின் காதலற்றே. (௨௮)

காதலை யானின் றனக்காக் கினனினிக் காயந்தந்தே
காதலை யானின் றனக்கா ரணனடிக் கஞ்சங்கணீங்
காதலை யானின் றகங்கரைந் தேத்தான் கண்ணியராக்
காதலை யானின்ற சங்கரன் சேய்செந்திற் காங்கெயனே. (௨௯)

காயங் கலைய நலியந் தகனணை காலஞ்செய்ய
காயங் கலையத ளானில நீரழல் காற்றெழிலா
காயங் கலைய னலரிசித் தாயினன் காதலழ
காயங் கலையதி ருஞ்செந்தி லாயென்க கன்றனெஞ்சே. (௩௰)

திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி முற்றிற்று.

———

௨௬. கந்தரம் - முழை. கால்நந்த - கால்வருந்த. கந்தரம் - முகில். அளகம் - கூந்தல். சனனம் கடந்திலர் - பிறப்பைப் போக்காதவர்கள். ௨௭. கடம்நந்து இல் — மதங்கெடுதலில்லாத. நாகம் — யானை. அதள் - தோல். அந்தி நாள் - செக்கர் வானம். காரிகை - பெண். கடல் நந்தின் நாயகன் - கடலில் தோன்றிய சங்குகளுடைய தலைமை யாகிய வலம்புரி. கலிக்கின்றது - ஒலிக்கின்றது. ௨௮. கணக்காகம் - கூட்டமான காகங்கள். கண்ணி - எண்ணி. எய்த்தேன் - இளைத்தேன். அக்கு ஆகனார் - எலும்பு மாலையை அணிந்த உடலையுடையவர். ௨௯. காயம் தந்து காதல் - உடலைக் கொடுத்துக் கொல்லாதீர். ஐயான் - சூக்குமரூபீ. கண்ணி அரா - பாம்பாகிய மாலை. ௩௰. காயம் கலைய - உடல்நீங்க. நலி - வருத்துகின்ற, செய்ய காயம் - சிவந்த தழும்பு. கலைஅதளான் - கலைமானினது தோலையுடையவன். கன்றல் — வருந்தாதொழி. அலை அதிரும் - அலைகள் ஒலிக்கும்.

# ச. பழமலையந்தாதி

[அந்தாதி என்பதற்கு விளக்கம் முன்புகூறினும். நூறு பாடல்களைக் கொண்ட இக்கலித்துறையந்தாதி இந்நாளில் விருத்தாசலம் என்னும் வடமொழிப் பெயரால் வழங்கப் பெறும் திருமுதுகுன்றாகிய பழமலையில் எழுந்தருளிய பழமலைநாதர் மீது இயற்றப்பெற்றது. செம்பாகமான நடையில் அமைந்த இவ்வந்தாதி கற்பவர்கட்கு மேன்மேலுங் கல்வியில் விருப்பத்தையுண்டாக்கக் கூடியது. இலக்கியப் பயிற்சி செய்யத் தொடங்குவார் இவ்வந்தாதியை முதற்கண் கற்பது நெடுங்கால வழக்கமாக இருக்கிறது. தொடங்கிய மங்கலச் சொல்லாலேயே இறுதியையும் முடித்தல் அந்தாதிகளின் பெரும்பான்மை வழக்காதலின் இவ்வந்தாதியும் அவ்வாறு மண்டலித் தலைப்பெற்றுள்ளது.]

## காப்பு

சீரதங் கோட்டு முனிகேட்ட நூற்படி செங்கரும்பால்
ஏரதங் கோட்டு வயல்சூழ் முதுகுன் றிறையவனைப்
பூரதங் கோட்டு மலையானைப் பாடப் புரந்தருளும்
பாரதங் கோட்டு நுதியா லெழுதிய பண்ணவனே.

## நூல்

திருவருந் தங்க வருங்கல்வி மாது சிறப்புவருங்
கருவருந் தங்க நிலையாதென் றுள்ளங் கரைந்திறைஞ்சிற்
பொருவருந் தங்க மலைபோலுங் குன்றைப் புராதனனை
இருவருந் தங்க டலையா லிறைஞ்சு மிறைவனையே. (க)

இறைக்கு வளையு மிளங்கிள் ளையுமழ கென்பவர்சேர்
துறைக்கு வளையு மெகினமும் வாவிக்குத் தூயவிதழ்

---

அதங்கோட்டுமுனி - முனிவர்களில் ஒருவர். கேட்ட நூற்படி - கேட்ட தொல்காப்பிய இலக்கண நூன்முறைப்படி. பூரதம் - நிலமாகிய தேர். கோட்டு மலையானை - மகாமேருமலையை வில்லாக வளைத்தவரை. கோட்டு நுதியால் - கொம்பினது கூரினுல். எழுதிய பண்ணவன் - ஆனைமுகக்கடவுள்.

க. திரு - திருமகள். கல்விமாது - கலைமகள். சிறப்பு - வீடுபேறு. கரு வருந்து அங்கம் நிலையாது - கருப்பத்திலே துன்பத்தையடைகின்ற இவ்வுடல் நிலையற்றது. பொருவு அரும் - ஒப்பில்லாத. புராதனன் - பழமலைநாதர். இருவரும் - திருமாலும் நான்முகனும்.

உ. இறைக்கு - கைகளுக்கு. வளை - வளையல். வளை - சங்கு. எகினம் - அன்னம். நறை குவளை - தேன் பொருந்திய செங்கழுநீர்.

நறைக்கு வளையு மழகா முதுகிரி நாதர்க்கின்றிப்
பிறைக்கு வளையு முடல்வந்த வாறென்கொல் பேசுகவே. (ஐ)

பேசுக வீர வருநாளென் றெல்லைப் பெருங்கடல்சேர்
ஆசுக வீர பழமலை வாணவென் றன்பளைந்து
பூசுக வீர மதிவேணி நீற்றைப் புலவிர்பிறர்
காசுக வீர வளையுக வீர்மெய்க் கதிதருமே. (௬)

கதியிலை வேலை மடவார்க் கியற்றக் கருதுளமே
பொதியிலை வேலையுண் டுற்றேன் றெரும்பழம் பூதரத்தை
நுதியிலை வேலை மகிழ்வீரன் றந்தையை நோக்கிலைநீ
ஒதியிலை வேலை வளர்ப்பாய் தருவை யொடித்தெறிந்தே. (௪)

ஒடிய மருங்குலைக் கொங்கைகள் வாட்டுறு மோடரிக்கட்
டொடியம ருங்குலைக் காந்தளங் கைம்மகள் சோரமதன்
கடிய மருங்குலைத் தீப்போன் மதியங் கனன்றெழுதல்
அடிய மருங்குலைச் செய்ம்முது குன்றர்க் கறைகுவமே. (ஞ)

மேருக் குவடு நிகர்தோட் பழமலை மேவுதிருத்
தேருக் குவடு வசமாடு மாடத் தெருவினிற்போய்
நீருக் குவடு விழியெழின் மாய்ந்தெதிர் நின்றுநம
தூருக் குவடு விளைத்தன வேயின் றெழிவறவே. (௬)

ஒழியாக் கவலை யொழிவதென் றேசொல் லுழல்புலத்தின்
வழியாக் கவலை யிடைப்படு மானின் மயங்கிநின்று
பழியாக் கவலை மனமே பணிந்து பரவிலைவேல்
விழியாக் கவலை மகளிறை தாழ்பழ வெற்பினையே. (எ)

---

பழமலை நாதர்க்குவர வேண்டிய கூன் இளம்பிறைக்கு எவ்வாறு வந்தது என்றவாறு. ௬. ஈர - அரிய. பெருங்கடல் - பாற்கடல். ஆசுக - அம்பையுடையவரே. ஒல்லைபேசுக - விரைவாகத் துதிப்பீர்களாக. அன்பு அளைந்து - அன்போடு கலந்து. உகவீர் - விரும்பாமல். ௪. கதி இலை - நற்கதிஇல்லை. வேலை - ஏவற்பணிகள். பொதியில் - பொதிய மலை. வேலை - கடல். பழம்பூதரம் - பழமை பொருந்திய சிவபெருமான். நுதியில் - நுனியில். ஐ வேலை - நுண்மை வாய்ந்த வேற்படையை. தரு- கற்பகதரு. ஒதி-ஒதியமரம். ஞ. மருங்குல் - இடை. அரிக்கண்-செவ் வரிகளையுடைய கண். தொடி அமரும்-வளையல்கள் பொருந்திய. சோர- சோர்வடைய. மதன் கடிய - காமன் வருத்த. மருங்கு - பக்கம். உலை - கொல்லுலை. அடியம்-அடியேங்கள். குலைசெய்-கரைகள் செய்யப்பட்ட. ௬. மேரு குவடு - மேருமலை. உவள் - இப்பெண். துவசம் - கொடிகள். வடு - மாவடு. நீர் உக்கு - நீரைச் சொரிந்து. எழில்மாய்ந்து - அழகழிந்து. வடுவிளைத்தாள் - வசையை உண்டாக்கினள். எ. உழல் புலத்தின் வழி - சுழன்று திரியும் ஐம்புலவழியே. யாக்க - கட்ட. பழிஆக்க வல்லை - பழியை உண்டாக்கவல்லாய். பரவிலை - போற்றினா யில்லை.

வெற்றிக்கு மாரனை யீன்ற பழமலை வேந்தனின்னும்
முற்றிக்கு மாரனை நோக்குங்கொ லோவென்பர் மூலைவம்புச்
சொற்றிக்கு மாரநை வார்மட வாரவன் றேண்முலையோ
டொற்றிக்கு மாரனை யோன்முனஞ் சேர வுழலுவரே. (அ)

உழவரைச் சந்த விளவாளை பாய்வய லோங்குகுன்றைக்
கிழவரைச் சந்த தமுநினை வாய்நற் கிளைவளரும்
பழவரைச் சந்த நறுந்தழை வாங்கிப் பரவினடுள்
எழவரைச் சந்த மயிலியல் பூசவு மெண்ணினளே. (௯)

எண்ணிவ ருந்தின நொந்தோம் பழமலை யெய்திலர்கா
னண்ணிவ ருந்தின மின்றே யினிக்கதிர் நற்புரவி
மண்ணிவ ருந்தின மாவா லெழுந்துகள் வந்துடலின்
கண்ணிவ ருந்தின வான்மதி றேய்க்குங் கடிநகரே. (௧௦)

கடிக்கஞ் சமனை யுவந்துல காக்குறுங் காரணனோர்
முடிக்கஞ் சமனை தொறும்பலி யேற்ற முதுகிரியான்
மிடிக்கஞ் சமனை வருந்தொழ வாழ்வும் விரவுறுமெங்
குடிக்கஞ் சமனை வெருவுத லேயின்று கொல்வனென்றே. (௧௧)

கொல்லைக் குறவரை வாயனை யார்க்கரிக் கோட்டைவிளை
நெல்லைக் குறவரை யாதுகொள் காளத்தி நேயரைவான்
தில்லைக் குறவரை நம்முது குன்றரைச் சேர்வலென்றூர்
எல்லைக் குறவரை மாத்திரைக் கேநல மீகுவரே. (௧௨)

ஈகையி லங்கை தவமுள மெங்ஙன மெய்துவமென்
றோகையி லங்கை வடிவே லொடுவருந் தோன்றறந்தை

அ. முற்று இக்குமாரன் - முதிர்ந்த கரும்புவில்லையுடைய காமன். மூலை வம்புச் சொல் - மறைவாகப் பேசும் பழிச்சொல். திக்கும் ஆரநைவார் - எல்லாத் திக்குகளினும் பரவ அதனால் வாடுவர். ஒற்றிக் குமார்-பொருந்தும்படி. அனையோன்-அப்பழமலைநாதர். ௯. குன்றை கிழவர் - பழமலை நாதர். கிளை வளரும்-மூங்கில்கள் வளருகின்ற. சந்த தமும் - எப்பொழுதும். பழவரை - பழமலை. சந்த நறுந்தழை-சந்தன இலை. ௧௦. மண் இவர் உந்தின மாவால் எழும் துகள்-நிலத்திலே தலை வராற் செலுத்தப்பட்டுவரும் குதிரைக் குளம்பால் எழுகின்ற தூளிகள். கான்நண்ணி - காட்டு வழியே பொருந்தி. ௧௧. கடிகஞ்சம் - மணம் பொருந்திய தாமரை. மனை - வீடு. உலகு ஆக்குறும் - உலகைப் படைக்கும். ஓர்முடி - ஒருதலை. முதுகிரியான் - பழமலையான். கஞ்சம் - வெண்கலப்பாத்திரம். மிடிக்கு அஞ்சம் - வறுமைக்குப் பயப்படமாட்டோம். கஞ்சம், ஐயக்கடிஞையை உணர்த்து வதால் ஆகுபெயர். ௧௨. வாய் அனையார் - வாய்ந்தவேட மங்கையர். கரிக்கோட்டை - யானைக்கொம்பை. குற - குற்றுதற்கு. குற - இடைக் குறை. வரையாது கொள் - நீக்காமல் கொள்ளுகின்ற. உறவர் - உற வாக இருப்பவர். ௧௩. கைதவம் - வஞ்சனை. வாகை இலங்கை

வாகையி லங்கை யரசிற வூன்றிய வள்ளன்மழு
மாகையி லங்கைம் முகமுது குன்றன் மலர்ப்பதமே. (கஉ)

பதம்பர வைக்கு வருந்துபி ராற்குப் பசுமயின்மேற்
கதம்பர வைக்கு வரச்சுற்று கட்செவிக் கங்கணற்குச்
சிதம்பர வைக்கு முதுகுன்ற வாணற்குச் செல்வமெல்லா
மதம்பர வைக்கு நிகர்கரித் தோறலை மாலைகளே. (கச)

மாலைக் கலுழனெய் யோனெனத் தாங்க வயங்குமருள்
நூலைக் கலுழ வொழியெனு மேற்றிவர் நோன்மையனுழ்
பாலைக் கலுழ வொருமகற் கீந்த பழமலையான்
மூலைக் கலுழ நடம்புரி வானெம் முதற்றெய்வமே. (கரு)

தெய்வசி காமணி யேமணி கூடலிற் சென்றுவிற்ற
மெய்வசி காமணி கண்டா பழமலை வித்தகமின்
நெய்வசி காமணி மாவெனுங் கண்ணியை நெஞ்சகத்து
வைவசி காமணி னேவா தெனையின்ப வாழ்வளித்தே. (கசு)

வாழ மரிக்கு மடநெஞ்ச மேமென் மலர்ப்பகழி
தாழ மரிக்கு மதற்காய்ந்த தந்தையுந் தாயுமொரு
வேழ மரிக்கு மிகவுற வாம்பழ வெற்பினயல்
சூழ மரிக்கு மியல்பையெஞ் ஞான்றுந் துணிந்திலையே. (கஎ)

துந்துமி யும்ப ரியம்பும் பழமலை சூழ்ந்துரையீர்
நுந்துமியும்பரி யாவியை வேண்டியுண் ணேம்புலவீர்

---

அரசு இற - வெற்றிமாலையை அணிந்த இராவணன் இற்றுவிழ. மழு- பரசு. மா-மான். கச. பதம்-அடி. பரவை-பரவை நாச்சியார். கதம்பர்- கடம்பமாலையை அணிந்தவர். கட்செவி கங்கணற்கு - பாம்புக் காப்பை புடையவனுக்கு. சிதம்பர ஐ - சிதம்பரத்தில் வீற்றிருக்கும் தலைவர். மதம் - மதநீர். பரவைக்கு நிகர் - கடலுக்கு ஒப்பு. கரித் தோல் - யானைத்தோல். கரு. மாலை - திருமாலை. நொய்யோன் - கனமற்றவன். கலுழன் - கருடன். கல் - கற்றுக் கொள். உழவு ஒழி - பிறவித் துன்பங்களை நீக்கிக் கொள். கலுழ - அழ. ஒருமகற்கு- உபமன்னிய முனிவருக்கு. மூலைக்கு அல்உழ நடம் புரிவான் - உள்ளத்திலேயுள்ள மலவிருளைப் பிளக்கவே கூத்தியற்றுவான். மூலை - உள்ளிடத்தை உணர்த்திற்று. கசு. கூடல் - மதுரை. மெய்வசிகா- உண்மையான வைசியரே. நெய்வசி - நெய்தடவிய வாள். காமணிமா - சோலையில் உள்ள அழகிய மாவடு. வசி - வசித்தருளும் வைசிகன் என்பது வசிகன் என மருவியது. கஎ. மரிக்கும் - எண்ணும். மலர்ப் பகழி - மலர்க்கணை. இக்குமதன் - கரும்புவில்லையுடைய காமன். வேழம் - யானை. அரி - சிங்கம். மரிக்கும் - இறக்கும். முதலாவ தடியில் ஸ்மரிக்கும் என்னும் வடமொழி மரிக்குமென நின்றது. கஅ. துமியும் - தும்மினும். பரி - நீங்குகின்ற. உள்நோம் - மனம் வருந்தும். சிந்து உமியும் - சிந்திப்போகிற உமியையும். பரி

சிந்துமி யும்பரி வாலுத வார்த்துதி செய்விர்மலம்
உந்துமி யும்பரி பாகமுண் டோசொல்லு முங்களுக்கே. (கஅ)

கேட்டுப் புவனங் கொளவுமெண் ணேமெய்க் கிராதனின்முன்
நாட்டுப் புவனம் பயின்மான் றசையுண்ட நாதனராப்
பூட்டுப் புவனங் கொளுமெய்ப் பழமலைப் புண்ணியன்றன்
வேட்டுப் புவனம் பதினான்கு நல்கினும் வேண்டிலமே. (கக)

வேண்ட வடுக்க நினைவதுன் றண்மலர் வேட்கைமணி
பூண்ட வடுக்க ணறுநுத லார்மயல் போக்குவது
நீண்ட வடுக்க னயமா திளமுலை நேர்ந்துதவ
மாண்ட வடுக்க ணிகர்தோட் பழமலை மன்னவனே. (௨0)

மன்னவ மாதவ னுடும் பழமலை வாணமணி
அன்னவ மாதவ னன்மலைக் காற்கசைந் தம்மதிகண்
டென்னவ மாதவ னல்லின்வந் தானென் றிரங்கிமதன்
றின்னவ மாதவ நோமேயென் செல்வத் திருந்திழையே. (௨க)

திருந்திய வேதம் புகல்பரி சேயறஞ் செய்துடலம்
வருந்திய வேதம் பொருளென வாழ்பழ மாமலையான்
பொருந்திய வேதந் தருநஞ் சுணனெனிற் பூமலர்கா
மருந்திய வேதம் புயமனை யாட்கணி மங்கலமே. (௨௨)

மங்கல மாவி மலைசேர் பழமலை வாணமணிச்
செங்கல மாவி மலர்க்கைக் குருகொடு செல்கவெமர்க்
கிங்கல மாவி வளைநீ யணைந்த தினியுனெதிர்
தங்கல மாவி தரிற்கொடு சேறுமெந் தண்மனைக்கே. (௨௩)

---

வால் - அன்பால். உம்பர் - தேவர்கள். துந்துமி இயம்பும் - தேவதுந்துபியை முழக்கும். துமியும் - கெடும். பரிபாகம் - நீக்கம். ககூ. மெய்க் கிராதன் - உண்மையன்பு வாய்ந்த திண்ணனார். துப்பு - சுவையாராயப் பட்ட. அராபூண் - பாம்பணி, துப்பு - பவழம். உப்புவனம் - உப்பிட்டநீர். ௨0. அடுக்க நினைவது - அடைய எண்ணுவது. நீண்ட அடுக்கல் - நெடிய இமயமலை. மாண்டவடுக்கள் - மாட்சிமைப்பட்ட தழும்புகள். நறுநுதலார்மயல் - நல்லநெற்றியை உடைய பெண்களுடையமயக்கம். ௨க. மாதவன்-திருமால். திருந்திழை-திருந்திய அணிகலன்களையுடைய பெண். மாதவன் - பெருமை தங்கிய தவத்தையுடைய அகத்தியர். அம்மதி - அழகிய திங்கள். நவம் - புதுமை. ஆதவன் - கதிரவன். மதன் - காமன். ௨௨ புகல்பரிசே - கூறுகிற முறைப்படியே. ஏதம்தரும் - துன்பத்தைக் கொடுக்கும். காமர் உந்திய- அழகிய நாபியை உடைய திருமாலே. அம்புய மனையாட்கு - தாமரை மலரில் எழுந்தருளிய இல்லாளாகிய திருமகளுக்கு. ௨௩. மங்கலமா - சிறப்பாக. விமலை - விருத்தாம்பிகை. எமர்க்கு - எம்முடைய உறவினர்க்கு. அலமா - துன்பமுண்டாக. ஆவிமலர் - தடாகத்திற் பூத்த தாமரை மலரைப் போன்ற. கைகுருகு - கையிலணிந்த வளையல். தங்கலம் - நிற்க மாட்டோம். சேறும் - செல்லுதும்.

தண்டங் கமண்டலங் கொண்டு பழமலைச் சங்கர தாட்
புண்டங்க மண்டலங் கண்டுசென் ருலுமெய்ப் போதமுரூர்
பண்டங் கமண்டலங் காரமின் ளுக்கினன் பாட்டியலைக்
கொண்டங் கமண்டலம் பாழாக் கியவுனைக் கூறலரே. (௨௫)

கூற்றைக் கொடியங் கடப்பா னருளெனக் கூய்ப்பரவி
ஏற்றைக் கொடியங் கரஞ்சேர் பழமலை யீசனணி
நீற்றைக் கொடியங் குளமே வெறுத்தி நிறைபெருகும்
ஊற்றைக் கொடியங் கினமோ டருந்து முடம்பினையே. (௨௬)

உடற்கு வலையந் தகன்கைக் கயிறென் றுணர்ந்துளமே
கடற்கு வலையம் புகழ்சீர் முதுகிரிக் கண்ணுதற்கு
மடற்கு வலையம் புரைகளத் தாற்குநம் மன்றமர்ந்த
நடற்கு வலையம் பணியா மவற்கன்பு நண்ணுகவே. (௨௭)

நட்டுவ ளுரை யறிகிலன் றண்ணுமை நந்திநின்று
கொட்டுவ ளுரை யிரைதேர் கயமுது குன்றுடையாய்
தட்டுவ ளுரை யகலாத நான்முகன் ருளமுயர்
குட்டுவ ளுரை வனைவான் பரவுநின் கூத்தினுக்கே. (௨௮)

கூத்துகந் தம்பல மேவுறு மோர்முது குன்றனைநம்
பாத்துகந் தம்பல மாரினு மெள்ளினும் பண்பனைத்தாள்
சாத்துகந் தம்பல மாமறை யாற்புகழ் தாணுவைநாம்
ஏத்துகந் தம்பல மார்பொது மாதரை யெள்ளினமே. (௨௯)

---

௨௫. தாள் புண் தங்க - கால்களிலே புண்படுமாறு. மண்டலம் - உலகிலுள்ள பலதலங்கள். மெய்ப்போதம் - உண்மை அறிவு. பண்டு - முன்னாளில். அங்கம் - எலும்பு. மின் - மின்னற் கொடி போன்ற பெண். ஆக்கினன் - திருஞானசம்பந்தர். அமண் தலம் - சமணர்கள் இருந்த இடம். ௨௬. கொடியம் - கொடுமையை உடையயாம். ஏற்றைக் கொடி - இடபக் கொடி. ஊற்றை - மலங்கள் நிறைந்த ஊற்றையுடைய. கொடி - காக்கை. இனம் - சுற்றம். ஏற்றுக்கொடி - ஐகாரச் சாரியை பெற்று நின்றது. ௨௭. உடற்கு வலை - உயிராகிய பறவையைப் பிடித்தற்கு வலை. கடற்கு வலையம் - கடலாற் சூழப்பெற்ற உலகம். மடல்குவலையம் - மடலையுடைய குவளைமலர். புரை - ஒத்த. களம் - கழுத்து. மன்று - தில்லைமன்று. நடற்கு - கூத்தையுடையவர்க்கு. பணி ஆம் வலயம் - பாம்புகளாகிய கடகம். ௨௮. நட்டுவளுர் - ஆட்டிவைப்பவர். தண்ணுமை - மத்தளம். கயம் - குளம். நாரை அகலாத - அன்பை நீங்காத. தட்டுவன் - அடிப்பான். குட்டுவன் - சேரன். ஆரைவனைவான் - ஆத்தி மாலையை அணியுஞ் சோழன். பரவும் - போற்றும் ௨௯. நம்பா - நம்முடைய பாடல். துகந்து - கசந்து. அம்பலம் ஆரினும் - அவையிலேறினும். தாள்சாத்துபண்பன் - திருவடியில் அணிந்து கொள்ளுகிற குணமுடையவர். தாணுவைஏத்துகம் - தாணுவாகிய சிவபெருமானைப் போற்றக் கடவோம்.

எள்ளா தவனை யெலும்பா பழமலை யென்றிருந்த
கள்ளா தவனை மகவரிந் தாக்கெனக் கட்டுரைத்து
விள்ளா தவனை மகிழ்பர மாவழல் வெண்மதியைத்
தள்ளா தவனை முடிசூடெம் மாது தருக்குதற்கே. (௨௯)

தருவி னிலையினி மன்னவற் கில்லையித் தண்புனத்தில்
மருவி னிலையினி மைக்கூற் றெனக்கந்தி வானநிகர்
உருவி னிலையி னியல்வேற் குகனை யுதவியகோன்
கருவி னிலையி னிகந்தோன் பழமலைக் காரிகையே. (௩௦)

காரிகை யார்க்கு வரும்பொது வோவல்ல காண்விசும்பிற்
பூரிகை யார்க்கு முதுகுன்ற நாயகன் பொங்குமருள்
வாரிகை யார்க்கு மருந்தனை யான்மலை மன்னனருள்
நாரிகை யார்க்கு மெழுவுறழ் தோட்க ணறுநுதலே. (௩௧)

நுதலரிக் கும்பரு வங்குறை என்றவ னேக்கடையா
முதலரிக் கும்பரு மேத்துந் தமிழர் முருகுபெரு
குதலரிக் கும்பரு கற்கருங் காமுது குன்றரிலார்
சிதலரிக் கும்பரு மாமரம் போற்றுயர் தின்பவரே. (௩௨)

தின்னக் கனியை விழைகூ னிளமந்தி தீங்கனியீ
தென்னக் கனியை யிரவியிற் பாய்பொழி லீண்டுகுன்றை
நன்னக் கனியை மதிவே ணியனிந்த நாம்பயந்த
சின்னக் கனியை வலத்தில்வைத் தால்வருந் தீங்கென்னையே. (௩௩)

தீங்கு திரைக்கட னேர்நரர் காடுயர் செய்மலத்திற்
காங்கு திரைக்கட நாய்க்கிரை யென்றிந்த வாகமயல்

---

௨௯. எள்ளாத - இகழாத. வனை - அழகு செய்யப்பட்ட. தவனை - தவமுடைய சிறுத்தொண்டனை. தருக்குதற்கு - களித்து வாழுதற்கு. ஆதவனை சூடு - கதிரவனை அணிந்துகொள். ௩௦. தரு - மரம். அந்திவானம் நிகர் - செவ்வானத்தைப் போன்ற. ஐயின் இயல். அழகின் இயற்கையைப் படைத்த. இகந்தோன் - நீங்கியவன். ௩௧. பூரிகை ஆர்க்கும் - பூரிகை முதலிய வாத்தியங்கள் முழங்கப் படுகிற. கையார்க்கு - வெறுக்காதவர்கட்கு. மருந்து - அமுதம். எழு உறழ் - எழுத்தம்பத்தைப் போன்ற. மருந்தனையான் தோட்கன் என இயையும். ௩௨. நுதல் - சொல்லப்பெறும். அரி - திருமால். முதலர்-முதற்கடவுள். கும்பர் - அகத்தியர். முருகு-தேன். அரிக்கும்-வண்டுக்கூட்டங்கட்கும். அரும்கா - உயர்ந்த சோலைகள். முது குன்றர் இலார் - பழமலை நாதருடைய அருளைப் பெறுதவர்கள். சிதல் - கறையான். பருமாமரம் - பருத்த மாமரம். ௩௩. கன்னி ஐ இரவியில் - குறையாத அழகையுடைய கதிரவனிடத்தே. ஈண்டு - நெருங்கிய. நக்கன் - திருவாணி. மதி இயை வேணியன் - திங்கள் பொருந்திய சடையை உடையவர். பயந்த - பெற்ற. சின்னக்கனி - சிறிய கன்னிகையாகிய பெண். ௩௪. நரர்காள் - மனிதர்களே! மலத்

நீங்கு திரைக்கட னன்முது குன்றர்க்கந் நிம்பனுக்கு
வாங்கு திரைக்கட னீயவல் லார்க்கு வணங்குமினே. (கச)

வணங்கக் கரமு மொழியப் பழமலை மன்னுருவாய்
இணங்கக் கரமு மிருப்பவைத் தேபுண ரேந்திழையார்
பிணங்கக் கரமு ஞமலியும் போலவர் பின்றொடர்வீர்
அணங்கக் கரமு தலைபோ லுமைப்பற்று மந்தகனே. (கரு)

அந்தரங் கங்கை தவரறி யாம லமுதருள்சம்
பந்தரங் கங்கை வலிபோன்மின் னாக்கினர் பாடியுனைச்
செந்தரங் கங்கை ரவமொண் கமலந் திரைத்துவருஞ்
சுந்தரங் கங்கை விரும்புமுத் தாறுடைத் தொன்மலையே. (கசு)

மலங்கலை யங்கலை கற்றேன் றனக்கருள் வாழ்வளிப்போன்
கலங்கலை யங்கலை நல்லோர் பரவுங் கழலடியான்
விலங்கலை யங்கலை வேலோன் பிதாமுது வெற்பிடத்திற்
பொலங்கலை யங்கலை யான்மூடு மீனைப் புதைத்தவளே. (கஎ)

புதைத்துக் கரக்கும் பொருளாளர் வெஞ்சொற் பொருமறலி
கதைத்துக் கரக்குங் குமமுலை பாகன்மெய் கண்டடியார்
பதைத்துக் கரக்குஞ் சிறிதா வுருகும் பழமலையான்
வதைத்துக் கரக்குஞ் சரமீர்ந் தவன்றரும் வாழ்விலரே. (கஅ)

---

திற்கு ஆம் குதிர் - மலத்திற்கான கூடு. ஐ கடம் - கோழைகள் நிரம்பிய குடம். ஆகம் மயல் - உடற்பற்று. ஐ கடம் - அழகிய காடுகள் சூழ்ந்த. நிம்பன் - வேப்பமாலையை அணிந்த பாண்டியன். வாம் குதிரைக்கடன் - தாவுகிற குதிரைகள் கொடுக்க வேண்டிய கடன். கரு. கரம் - கை. மன்உருவாய் - நிலைபெற்ற திருவுருவாகி. இணங்கு அக்கரமும் - பொருந்தி நிற்கும் திருவைந்தெழுத்தும். பிணங்க - ஊட. கரமும் ஞமலியும் போல் - கழுதையையும் நாயையும் போல. அணங்க - வருந்த. கரமுதலை - ஆண்முதலை. அந்தகன் - நமன். கசு. தரங்கம் - அலை. கைரவம் - அல்லி. கமலம் - தாமரை. சுந்தரம் - அழகைப்பார்த்து. தொன்மலை - பழமலை. கை வலிபோல் - கைவலி காட்டுவாரைப் போல. அங்கம் - எலும்பு. அமுது - ஞானப்பால். கைதவர் - வஞ்சகர். அந்தரங்கம் அருள் - மறைமுகமாகக் கொடுத்தருளும். கஎ. ஐயம் கலங்கல் கலை நல்லோர் - ஐயம் மாறுபாட்டுணர்ச்சி ஆகியவைகளை ஒழித்த மெய்யறிவாளர்கள். விலங்கலை அலைவேலோன் - கிரௌஞ்ச மலையைப் பிளந்த வேற்படையை உடைய முருகன். மீனை - மீன்போன்ற கண்களை. மலங்கலை - மயங்காதே. பொலம் கலையம் - பொற்குடம். கலையால் மூடு - ஆடையால் மறைப்பாயாக. கஅ. கரக்கும் - ஏற்பவர்கட்குக் கொடாமல் மறைக்கும். பொருளாளர் - செல்வர். வெஞ்சொல் - கடுஞ்சொல். பொரும் - மோதுகின்ற. மறலி கதை துக்கர் - நமனுடைய கதைப்படையால் துன்பத்தையடைவர். அரக்கும் சிறிதா உக்கு உருகும் - அரக்கும் சிறிதாகுமாறு நெகிழ்ந்துருகுதற் கேதுவாகிய. ஈர்ந்தவன் - உரித்தவன்.

இலங்கு மரியு மருள்கோன் முதுவெற் பிடத்துரற்கால்
விலங்கு மரியு முழலலெல் லாமுன்னி வெய்துயிராக்
கலங்கு மரியு மிருந்துயர் கூருங் கலுழ்ந்திடுந்தாய்க்
குலங்கு மரியு மொருவனும் போகுங் கொடுஞ்சுரத்தே. (௫௯)

கொடுவரி யானை யடர்ந்துறு மாறெனக் கொண்டுயர்தூ
ணொடுவரி யாதை யுறவடிப் போமென் றொருங்குவந்தே.
அடுவரி யானை நிகர்நமன் றூத ரடிமுடிமன்
நடுவரி யானை முதுகுன்றெரு டேசு நரர்தமையே. (௬0)

நரகா வலர்மட வார்க்குள் ளுருகிக்கைந் நாவிருப்ப
அரகா வலர்புனைந் துன்றனை யேத்தில ராய்ந்தறிவால்
உரகா வலரென வுய்ந்தா ரினமுள முற்றகுன்றைப்
புரகா வலரி லருட்கோயி லாகும் புராந்தகனே. (௬௧)

புரந்தர னஞ்சு பழமலை வாணன் புலவர்தொழுந்
துரந்தர னஞ்சு தலைநாக கங்கணன் றொண்டுறுமால்
நிரந்தர நஞ்சு தொழுதேத்து தாதர்க்கு நேயமொடு
வரந்தர நஞ்சு களத்துவைத் தானென்பர் மாதவரே. (௬௨)

மாதரைக் கொன்றுவ ரம்மேனி வைத்தவ மாசுணத்தை
ஈதரைக் கொன்று சிறுநாணென் றூர்க்கு மெழிலுடையாய்
நீதரைக் கொன்று நலஞ்செயல் வேண்டு நினையிகழும்
வாதரைக் கொன்று முதுகுன்ற மாநகர் மாசொழித்தே. (௬௩)

---

௫௯. அரி - திருமால். மருள் கோன் - மயங்கா நின்ற இறைவன். உரல் கால் விலங்கு - யானை. அரி - சிங்கம். உழலல் - திரிதல். வெய்து உயிரா - பெருமூச்சுவிட்டு. மரியும் இருந்துயர்கூரும் - இறத்தற்கேதுவாகிய மிகுந்த துன்பத்தையடையும். கலுழ்ந்திடும் - கண்ணீர் விட்டழும். ௬0. கொடு வரி - புலி. ஆன் - பசு. அடர்ந்துறும் ஆறுஎன - நெருங்கிப் பிடித்துக்கொண்டு போவதைப் போல. வரியா - பிணித்து. அடுவர் - கொல்லுவார்கள். அரியானை - அறிதற்கரியவனை. ஏசும் நரர் - இகழும் மனிதர்கள். ௬௧. நரகு ஆவலர் - நிரயத்தில் விருப்பம் உடையவர். காஅலர்புனைந்து - பொழிலில்உள்ள மலர்களைச்சூடி. அரஏத்திலர் - சிவனே என்று போற்றவில்லை. ஆய்ந்த அறிவு - ஆராய்ச்சி செய்த நல்லறிவு. உரகா - பாம்பணியை உடையவனே! அலர் - விளங்குவாயாக! இனம் உளம் - மெய்யறிவாளரின் உள்ளத்தில். குன்றைப்புர - பழமலைநாதரே! ௬௨. புரந்தரன் - இந்திரன். துரந்தரன் - சுத்தவீரன். தொண்டு உறும்மால் - தொண்டு பூண்டொழுகுந் திருமால். நிரந்தரம் - எப்பொழுதும். நஞ்சு - மனமுருகி. தாதர் - அடியவர். களத்து - கழுத்தில். ௬௩. மாதரை கொன்துவர் அம்மேனிவைத்தவ - கங்கை உமை என்னுந் தேவிமார்களைப் பெருமை தங்கிய பவளம் போலும் அழகிய திருமேனியில் வைத்தவரே! அரை - இடை. மாசுணத்தை ஆர்க்கும் - பாம்பைக்கட்டும். வாதர் - வாதம்புரியுந் தீயோர். மாசு - குற்றம். தரை - உலகம். ஒன்றுநலம் - ஒருநன்னெறியை.

மாசி யதிகந் துறந்தார் மகிழ்குன்றை மாநகரோ
காசி யதிகங் கொலோவென்பி ராயினக் காசியெனப்
பேசி யதிகந் தகன்றிருந் தான்பரன் பேரடலை
பூசி யதிகம் பரனீங்கி லானிப் புரியினையே. (௪௪)

புரிசடை யாள பழமலை வாண பொருப்பெடுத்த
கரிசடை யாள திகந்தீர்த் தருளக் கடுவயின்ற
பரிசடை யாள முடையா யொழித்தனள் பட்டினையத்
துரிசடை யாள தழுக்கா மெனுநின் றுகிலினுக்கே. (௪௫)

துகிலங் குருகுந் துறந்தா ளுயிருந் துறக்கநின்றுள்
அகிலங் குருகு மணிமுடி யாயெனு மத்தவளை
முகிலங் குருகு மடியாய் பரந்த முதுகிரியாய்
சகிலங் குருகுல மேத்திறை வாமைத் தடங்கண்ணியே. (௪௬)

தடுக்க மலத்தி னெடுங்குதல் போலநின் றுளிலுறும்
ஒடுக்க மலத்தி னிகழ்வால் வளையின மூர்ந்திடச்சேல்
மடுக்க மலத்தி லுகள்வயல் சூழ்குன்றை மாநகரோய்
அடுக்க மலத்தி புனையலங் கார வருளுகவே. (௪௭)

அருவரை வில்லை யுமிழ்பணி நாகமு மத்திகளும்
உருவரை வில்லை யெனப்பூண் பவரையவ் வும்பர்தொழும்
பொருவரை வில்லை யுறுமுது குன்றரைப் போந்துமருள்
ஒருவரை வில்லை வரிலொற்றி வையென வுற்றனமே. (௪௮)

உற்கைக்கு மாறு படுமணி நாக மொளித்துலவி
விற்கைக்கு மாறு சுமந்தவ சீர்முது வெற்பினின்பால்
நிற்கைக்கு மாறு வழுவா நடக்கைக்கு நேரிழையார்
சொற்கைக்கு மாறுந் தமியேனுக் கென்று துணைசெய்வையே. (௪௯)

---

௪௪. மாசி மகிழ் - மாசித் திங்கள் வரவை விரும்பும். பேர் அடலை பூசிய திகம்பரன் - பெரிய சுடலைப்பொடியைப் பூசிய திகம்பரராகிய சிவ பெருமான். ௪௫. புரி – கட்டிய. பொருப்பு-கோவர்த்தனமலை. அதிகம் தீர்த்தருள - பரத்துவ உயர்ச்சியைப் போக்கியருள. கடு அயின்ற - நஞ்சையுண்ட. பரிசு - தன்மை. துரிசு - குற்றம். துகில் - ஆடை. ௪௬. அகிலம் - உலகில்உள்ளார். குருகு - கொக்கிறகு. வளைமுகில்- சங்கையேந்திய முகில்வண்ணனாகிய திருமால். சகிலம் - வரலாறு. குருகுலம் - குருவம்சம். ௪௭. அலம் - கலப்பை. வளை இனம் - சங்குக் கூட்டம். உகள்-பாய்கின்ற. அமல்-நெருங்கிய. அத்தி புனை - எலும்புமாலையை அணிந்த. ௪௮. அருவர் - அருபமானவர். வில்லை உமிழ் - ஒளியை வெளிப்படுத்துகின்ற. மணி நாகம் - மணியைஉடைய பாம்பு. வரைவு இல்லைஎன - நீக்கமில்லை யென்று சொல்லுமாறு. ஐவர் இல் - ஐம்புலங்களுடைய இருப்பிடம். ௪௯. நாகம் ஒளித்து - பாம்பை மறைத்து. உற்கை - நெருப்புறு கொள்ளி. ஆறு - ஒழுக்கம். கைக்கும் ஆறும் - கசக்குந் தன்மையையும்.

செய்க்குத் தனங்க மலமலர் சீர்தருஞ் செய்யதிரு
மெய்க்குத் தனங்க டரவடு வாங்கிதொல் வெற்பிடத்திற்
கைக்குத் தனங்க வொழியினுந் தாடனைக் காய்வதிலேன்
வைக்குத் தனங்க ளழித்திறை யாதிந்த வையகமே. (௫0)

வைத்து மதிக்கு மருங்கிற்கைத் தாயென மந்தரமத்
துய்த்து மதிக்கு மனையின்மை யான்மறை யோதிமமுன்
எய்த்து மதிக்கு முடிமிசைக் கங்கையை யேத்தினையோ
மெய்த்து மதிக்கு மணுகவொண் ணாமுது வெற்பினனே. (௫௧)

வெற்புக் குமைய வடிவே லெறிந்தசெவ் வேண்மதவேள்
பொற்புக் குமையவ னோடரன் வாழ்முது பூதரத்தி
னிற்புக் குமையவ ளொத்திருந் தாள்குறை வின்றிவளர்
கற்புக் குமையவள் போலுநுங் காதற் கருங்கண்ணியே. (௫௨)

கருந்தடங் கட்கு முதவாய் மயிலெங்கள் கண்களுக்கு
விருந்தடங் கட்கு நலமெனப் போந்தவிண் மீன்பொரியும்
அருந்தடங் கட்கு வளையோடை யாகுக வம்புயங்கள்
பெருந்தடங் கட்கு முகமாகுங் குன்றைப் பெருந்தகையே. (௫௩)

பெருமு தலைவனை யான்போற்றுங் குன்றைப் பெருந்தகையை
இருமு தலைவனை மூப்படைந் தாண்டவற் கின்மகவைக்
கருமு தலைவனை வாயிற்றந் தானைமுன் கண்டமுது
பொருமு தலைவனை நீத்தனண் மேவினள் பூங்கொடியே. (௫௪)

பூங்குமி ழும்படி முள்ளும் பொருந்திப் புளிஞர்பொருள்
வாங்குமி ழும்படி மோது மெனல்கொடு மால்விழுங்கி
ஆங்குமி ழும்படி வந்தவெம் பாலை யடைந்தவள்கால்
வேங்குமி ழும்படி னென்னும் பழமலை வித்தகனே. (௫௫)

---

௫0. செய் - கழனி தொல் வெற்பு - பழமலை. வைக்கு - இகழ்ச்சிக்கு. இறையாது - வீணே அழித்துச் செலவிடார். ௫௧. கைத்தாய் - வளர்க்குந்தாய். மந்தர மத்து உய்த்து - மந்தரமலையாகிய மத்தைச் செலுத்தி. ஓதிமம்-நான்முகனாகிய அன்னம். எய்த்து மதிக்கும்-இளைத்துத் துணிந்த. மெய்த்துமதிக்கும்-உண்மையறிவுக்கும். ௫௨. வெற்பு குமைய - கிரௌஞ்சமலை தூளாக. மதவேள்-காமன். பொற்புஉக்கும்-அழகைக் கெடுக்கும். முதுபூதரம் - பழமலை. கண்ணி - கண்ணையுடையவள். ௫௩. குமுதம் - செவ்வாம்பல். விருந்தள் - விருந்தாக இருப்பவள். பொரியும் - பொரிந்து உதிரும். குவளை — கருங்குவளை. அம்புயங்கள் - தாமரைமலர்கள். ௫௪. பெருமுதலை - பெரிய முழுமுதற்கடவுளை. வளையான் - சங்கையுடைய திருமால். இருமு - இருமுதல் மேலிட்டு. தலைவளை - தலைவளைகின்ற. இல்மகவை - இறந்துபோன புதல்வனை. பொருமுதல் - தேம்புதல். இது நற்றாயிரங்கல். ௫௫. குமிழ் - குமிழஞ்செடி. புளிஞர் - வேடர்கள். இழும்படி - வழுக்கி விழுமாறு. மால் - திருமால். திருமாலும் இப்பாலை நிலத்தின் வெப்பத்தை நோக்கியே உமிழ்ந்தனர் என்பது கருத்து.

வித்துரு மத்தை நிகர்வா னுயிர்செய் வினையருத்துங்
கத்துரு மத்தை யிடுதயிர் போலக் கலக்குமதன்
சத்துரு மத்தை வனைமுது குன்றிறை தாள்கொடுவான்
நத்துரு மத்தை யிலவாக வெள்ளுவர் நற்றவரே. (௫௬)

நற்றவ ராக மறையவ ராகவிந் நானிலத்தில்
அற்றவ ராக மனமுடை யார்க்கன்றி யச்சமற
உற்றவ ராக மறியா தொளித்தநின் ளெண்பதங்கள்
பற்றவ ராகம லாலயன் போற்றும் பழமலையே. (௫௭)

பழங்க விகட மகமந்திக் கீபொழிற் பண்டைமறை
முழங்க விகட வுளர்க்கீயுங் குன்றை முதல்வனைவேள்
அழங்க விகட விழிதிறந் தானை யடிபரவார்
கிழங்க விகட மறவரிற் றேன்றிக் கெடுவர்களே. (௫௮)

கெடுத்துப் பணியு முடையும்வெள் காமற் கிழத்திமுலை
வடுத்துப் பணியு முரம்வேட்டு நின்றனள் வல்லியதள்
உடுத்துப் பணியு மரைக்கசைத் தோய்தொண்ட ருள்ளமெல்லாங்
கொடுத்துப் பணியு மலர்த்தாட் டிருமுது குன்றத்தனே. (௫௯)

குன்றுக ளுங்களை யொவ்வா வெனுமுலை குன்றதிர்க்குஞ்
சென்றுக ளுங்களை யுண்வண்டு மோவில் செழுங்கொன்றைமான்
கன்றுக ளுங்கனை நன்மதி வேணிக் கடவுளை
யென்றுக ளுங்களை யெம்மானைக் குன்றை யிறைவனையே. (௬௦)

இறவாத வாநந்த வெள்ளத் தழுத்தி யெனையருளால்
துறவாத வாநந்த வாள்வதென் றேமெய்த் துறவர்தொழும்
அறவாத வாநந்த னஞ்சூழ் முதுகுன் றடைந்தவர்தம்
உறவாத வாநந்த கோபால னென்றற் குடையவனே. (௬௧)

௫௬. வித்துருமம் - பவளம். கத்துரு - தலைவர். மத்தைவனை - ஊமத்தம் பூவைச் சூடிய. வானத் துருமம் - விண்ணுலகத்திலுள்ள கற்பக மரச்சோலை. இல ஆக - நிலையற்றதாக. ௫௭. நல்தவர் - நல்ல தவத்தையுடையவர். அராகம் - மூவித ஏடணைகள். பற்றவரா - இட்டு தற்கரியனவாம். ௫௮. கவிகள் - குரங்குகள். மக - மகவுக்கும். மந்தி - பெண் குரங்குகள். அவி - தேவருணவு. வேள் அழங்க - காமனழியுமாறு. விகடம் விழி - மாறுபட்ட கண். கடம் - காடு. மறவர் இல் - வேடர் குடி. ௫௯. பணி - அணிகலன். கெடுத்து - போக்கி விட்டு. வெள்காமல் - நாணாமல். கிழத்தி - உமாதேவி. துப்புஉரம் - பவழம் போன்ற மார்பு. அதள் - புலித்தோல். பணியும் அசைத்தோய் - பாம்பையுங் கட்டியவரே. ௬௦. அதிர்க்கும் - ஆரவாரிக்கும். ஓவுஇல் - நீக்க மில்லாத. உகளும் - துள்ளிப் பாயும். துகளும் - குற்றத்தையும். ௬௧. இறவாத - கெடாத. அவாநந்த - அவாக் கெடுமாறு. அறவா - அறவடிவினனே! தவாநந்தனம் - அழிவில்லாத பூஞ்சோலை. உறவா - உறவாக விருப்பவரே.

உடைய மடங்க லுதைத்தபொற் பாத வொளிசெய்மழுப்
படைய மடங்கன் முகற்காய்ந்த வீர பழமலையாய்
கடைய மடங்கல் லொடுபக லுந்தொழக் கற்றிலமெம்
விடைய மடங்கல் வருவதென் றொன்று விளம்புகவே. (சுஉ)

விளங்க வலம்புரி மால்போற்று நன்முது வெற்பகஞ்சேர்ந்
துளங்க வலம்புரி யாய்மாய் பிறிதொ ருடம்படையாய்
துளங்க வலம்புரி மென்குழன் மாதர்க்குச் சூழ்ந்துநின்று
களங்க வலம்புரி யிவ்வெற்பை யேநிலை கைவருமே. (சுங)

வருந்தா தவரை வளைத்திட் டவபவ வன்பிணிக்கு
மருந்தா தவரை மருவும் பழமலை வாணவுனைப்
பொருந்தா தவரை யுயிர்செகுத் துண்ணம் புலிமழுங்கத்
திருந்தா தவரை வரக்கூ வுருததென் சேவல்களே. (சுச)

சேவாலங் காட்டு பொழுதகஞ் சாயச் செலுத்திவரி
மாவாலங் காட்டு முதுகிரி வாணவவ் வானமுய்ய
வேவாலங் காட்டு மிடற்றுய்நின் சீர்த்தி விரித்துரையா
நாவாலங் காட்டு விலங்காயி னேனிந்த நானிலத்தே. (சுரு)

திலங்கடந் தானை மகிழ்வானைத் தன்னடி நின்றெடுங்கும்
புலங்கடந் தானை முதுகுன்ற வாணனைப் போற்றிலர்தந்
நலங்கடந் தானை முழுது மிழந்தந் நகரினிற்போய்
இலங்கடந் தானை துணிசீரை யாக்கொண் டிரப்பர்களே. (சுசு)

இரப்பாரி லாரை யிலரெனின் வைவ ரிரந்திடிற்றுங்
கரப்பாரி லாரை முகநோக்கு றுர்மழுக் கைக்குன்றையாய்

---

சுஉ. மடங்கல் - சிங்கத்தைப் போன்ற நமன். உடைய-ஆற்றல் கெட. மடங்கல் முகன் காய்ந்த வீர - திருமாலாகிய நரசிங்கத்தைப் பிளந்த வீரமுடையவரே! கடையம் - கடையேமாகிய யாம். மடங்கு - மாறி மாறி வருகின்ற. விடையம் அடங்கல் - பொறியடங்கல். சுங. வலம்புரி மால் - வலம்புரிச் சங்கையுடைய திருமால். முது வெற்பகம் - பழமலையிடம். மாய் - இறந்தொழியும். பிறிது ஒரு உடம்பு - வேறோர் உடல். நிலை - வீடுபேற்று நிலை. துளங்க-ஒளிவிட. களங்க அலம் புரி - துன்பத்திற்கேதுவாகிய செயல்களையே செய்கின்ற. உள் - மனம். சுச. வரை - மேருமலை. பவவன் பிணி - பிறவியாகிய வலிய நோய். மருந்தா - மருந்தானவரே! தவரை-தவஞ்செய்பவர்களை. உயிர் செகுத்து - உயிரைக் கொன்று. அப்புலி - திங்கள். ஆதவர் - கதிரவர். சுரு. சே - எருது. ஆலம் காட்டும் பொழுது - தண்ணீர் குடிப்பிக்கும் வேளையில். அகம்சாய - மனஞ்சோர. வரிமா - புலி. வானம்-தேவர்கள். ஆலம்-நஞ்சு. சுசு. நிலங் கடந்தான்-திருமால். போற்றிலர் - வணங்காதவர்கள். நலங்கள் - செல்வங்கள் தானை - படை. சுஎ. இலாரை - இல்லறமுடையவர்களை. நிரப்புஆரில் - வறுமை மேலும் மிகுதிப்பட்டால். ஆரை அவிப்பார்-ஆரைக் கீரையை

உரப்பாரி லாரை யுறவாகக் கொள்வர்தம் முள்ளனபோய்
நிரப்பாரி லாரை யவிப்பார்தம் மக்களை நீத்திருந்தே. (௬௭)

இருப்பு வலியை யகன்றுபொன் வல்லியை யெண்ணுதலாம்
விருப்பு வலியை முலையா ரணங்கினர் விண்ணுறுதல்
பொருப்பு வலியை யிடத்தில்வைத் தாய்மலர்ப் பூங்கணைசேர்
கருப்பு வலியை யொழித்தாய் பழமலைக் கண்ணுதலே. (௬௮)

கண்டந் தரிக்கும் விடத்தார் பழமலைக் கண்ணுதலார்
பண்டந் தரிக்கு மருங்களித் தார்தம் பழவடியார்
எண்டந் தரிக்கு மரிதாகும் பாத ரிருங்கருமா
வெண்டந் தரிக்கு மதற்காய்ந் தவரெனு மெல்லியலே. (௬௯)

மெல்ல வணங்கு நினைவா லெதிர்ந்திட வேனெடுங்கண்
நல்ல வணங்கு வளையுடை யோடு நடந்திலைநீ
கொல்ல வணங்கு மதிசுமந் தேநின்ற கொள்கையென்னோ
வெல்ல வணங்கு மலையாய் முதுகிரி வேதியனே. (௭௦)

வேதிய வாவி தனக்காவி யாகிய வித்தகப்பெண்
பாதிய வாவி மலர்த்தேன் பெருகும் பழமலைவாழ்
சோதிய வாவி வருவிடைப் பாகநின் றொண்டருறு
நீதிய வாவி யவரையென் றோசென்று நேர்குவனே. (௭௧)

நேரு மடியர் தமக்குற வாயவர் நேசமறச்
சோரு மடியர் தமையணு காதவர் தும்பியினுற்
சாரு மடியர் மணிநிற வண்ணன் றரையிடந்து
தேரு மடியர் முதுகுன்ற வாணுதற் றீக்கண்ணரே. (௭௨)

கண்டீர வந்தனை நேர்ந்தாங் கருகக் களிற்றினைமுன்
கொண்டீர வந்தனை வானோர் செயுமுது குன்றனொடு

---

அவித்துத் தின்பார்கள். உரம்பாரில் - வலிய இவ்வுலகத்தில். ஆரை - எவரை. ௬௮. பொருப்புவலி - மலைமகள். கருப்பு வலியை - கரும்பு வில்லின் வல்லமையை. வல்இயை - சூதாடுகருவியை ஒத்த. இருப்புவலி - இருப்பு விலங்கு. பொன்வல்லி - பொன்விலங்கு. ௬௯. கண்டம் - கழுத்து. சுந்தரி - உமாதேவி. மருங்கு - பக்கம். எண்தந்து - கருத்தை முடித்து. அரிக்கும் - திருமாலுக்கும். இரு - பெரிய. கருமா - பன்றி. இக்குமதன் - கரும்புவில்லையுடைய காமன். ௭௦. வேல்நெடுங்கண் - வேலைப் போன்ற நீண்ட கண்களையுடைய பெண். வளை - வளையல். உடை - ஆடை. ௭௧. பெண்பாதிய - உமாதேவியைப் பாதியுடலில் உடையவனே! வாவி - தடாகம். சோதிய - ஒளிவடிவரே. வாவிவரு - தாவிச்செல்லும். நீதி - ஒழுக்கங்கள். ௭௨. நேரும் - அன்போடையும். தும்பி - யானை. மடியர் - ஆடையை உடையவர். மணிநிற வண்ணன் - திருமால். இடந்து - தோண்டி. ௭௩. கண்டீரவம் - சிங்கம். ஈர - தோலை உரிக்க. வந்தனை - வணக்கம். கோல்புண் -

வண்டரை வந்தனை நேர்வாளைக் கோலம் மதனனெய்யும்
புண்டரை வந்தனை சேர்தியென் றோதுமின் போமின்களே. (எங)

போதுமின் மாலை வகைவகை யாகவும் பொற்றொடியீர்
ஓதுமின் மாலை தரின்வம்மி னில்லையென் றோட்டினரேல்
மாதுமின் மாலை வருமுனஞ் சாமென்று வண்கைமலர்
மோதுமின் மாலை மகிழ்குன்றை வாணர்தம் முன்னடைந்தே. (எச)

முன்னஞ் சிலம்பு சிலையாக் கியநன் முதுகிரியாய்
பொன்னஞ் சிலம்பு சிலம்புத லோடையிற் பூஞ்சிறகர்
அன்னஞ் சிலம்பு நடையிள மானை யனங்கனெய்து
தன்னஞ் சிலம்பு குவளையல் லாத தணந்தனனே. (எரு)

தணந்தவ ளக்கரி மேனிய ளாங்கொல்வெண் சங்கினங்கண்
மணந்தவ ளக்கரி னின்றழு மோவல வாவுயிர்கள்
உணந்தவ ளக்கரி தாமுது குன்றர னோங்கமர
கணந்தவ ளக்கரி யானேத் திறையன்றிக் காப்பிலையே. (எசு)

காப்புக் கரியுந் திருமக ளாயகன் காப்பவற்றின்
பூப்புக் கரியுந் தலையுடை யானும் பொருந்தவைத்தான்
மாப்புக் கரியுங் குயிலும் பயில்பொழில் வண்டில்லையான்
மூப்புக் கரியும் புலியுங்கொன் றீர்ந்த முதுகுன்றனே. (எஎ)

முதுமறை யந்த முறுபொரு ளேநன் முழுப்பணிக்கு
விதுமறை யந்த முடியாய் புராணம் விளங்கிரண்டொன்
பதுமறை யந்த முதுகுன்ற வாணநின் பாதம்வணங்
குதுமறை யந்த கனைமார்பி லெம்மைக் குறுகிடினே. (எஅ)

---

கலையினால் உண்டாகிய புண். அவம்தலை நேர்வாளை - சுகத்தை விழந்து கிடக்கும் எங்களுடைய தலைவியை. எச. போதுமின் - போங்கள். வம்மின் - வாருங்கள். ஓட்டினரேல் - துரத்துவாரானால். கைமலர் மோதுமின் - கைகளால் அறைந்து கொள்ளுங்கள். மாலை மகிழ் - திருமாலை மகிழ்ந்து அடிமை கொண்ட. எரு. சிலை - வில். சிலம்பு - மேருமலை. பொன்னம் சிலம்பு - பொற்சிலம்பு. அன்னம் சிலம்புதல் சிலம்பும் - அன்னங்கள் ஒலித்தலைப் போல ஒலிக்குமாறு. அனங்கன் - காமன். தணந்தனன் - தனது கணைகளை யெல்லாம் இழந்தான். எசு. தணந்தவள் - பிரிந்த தலைவியானவள். மணந்த - கலந்த. அளக்கர் - கடல். வலவா - தேர்ப்பாகனே. நந்த - மிகவும் அளவிடுதற்கு. ஓங்கு அமரகணம் - உயர்ந்த தேவர் கூட்டம். தவளக் கரியான் - வெள்ளை யானையை உடைய இந்திரன். எஎ. காப்புக்கு - காத்தல் தொழிலுக்கு. அரியும் - திருமாலும். பூப்புக்கு - படைத்தல் தொழிலுக்கு. அரியும் தலையுடையான் - வைரவக் கடவுளால் கிள்ளப்பட்ட தலையை உடைய நான்முகன். மா - மாமரங்கள். தில்லையான் - சிதம்பரத்தையுடையவன். மூப்பு - முதிர்ந்த. எஅ. முழுப்பணிக்கு - முழுப்பாம்புக்கு. விதுமறை - முடியிலுள்ள பிறை ஒளிக்கின்ற. இரண்டொன்பதும் அறை - பதினெட்டுப் புராணங்களும் போற்றுகின்ற. அறை - மோதுவாயாக.

குறுகு முனிவனை யன்றுண்ட விம் முது குன்றனுக்கு
மறுகு முனிவனை செய்தாலும் வாரெவர் வந்தருளென்
றறுகு முனிவனை போதுமி டார்நம ஞர்முனிவு
முறுகு முனிவனை யெய்தா ரறிவறு மூடரினே. (௭௯)

மூடா நமாதி மிரையடைந் தாயலென் முன்னணுகல்
மீடா நமாதி பெருமா னுதைக்கினு மெய்ப்புகழைப்
பாடா நமாதி யெழுத்தைந்து மோதிப் பழமலைவாழ்
வீடா நமாதி யடியா ரடியருண் மேவினமே. (௮0)

மேவத் தகரை யிவர்மக வின்றதொல் வெற்பரச
சேவத் தகரை வொடுபூசித் துன்னைவிண் செல்வமுறும்
பூவத் தகரை நகுவே மெமக்குநின் பொங்கருளால்
ஓவத் தகரை வகைப்பாச முந்தம் முரங்குலைந்தே. (௮௧)

குலையா நிலமும் விசும்புந் தொழுமுது குன்றமதிக்
கலையா நிலமும் மடியழல் காயவக் காய்கனலின்
மலையா நிலமு முடன்கூட வேமெனை வாங்குகழைச்
சிலையா னிலமு மெமதில்ல மாய்நின்று சீறுவனே. (௮௨)

சீறிரை யாக மதியுணும் பாம்பணி செல்வமறை
மாறிரை யாக மலிமுது குன்ற மருவுதற்குச்
சேறிரை யாகயி லாசவி லாசசு தேவவென்மின்
தோறிரை யாக நிலையென்று வாழன்மின் றொண்டர்களே. (௮௩)

---

௭௯. குறுகு முனிவன் - அகத்தியர். மறுகும் முனிவு - மயங்குதற்கேதுவாகிய சினம். அனை - அன்னை. உனி - உன்னி. வனை போதும் - மாலையாகக் கட்டப்பட்ட மலரும். முனிவு முறுகுமுன் - சினம் முதிர்வதற்கு முன்பாக. உனி - இடைக்குறை. ௮0. மூடா நமா - மூடனாகிய நமனே! திமிர் - ஆணவம். ஆயல் - ஆராயாதே. மீள் - மீண்டு விடுவாயாக! தாநம் ஆதி - இடமாவாய். நமாதி எழுத்து ஐந்து - திருவைந்தெழுத்து. நம் ஆதி - நமதுமுதற் பொருளாகிய இறைவன். ௮௧. தகரை இவர் - ஆட்டுக்கடாவை ஊருகின்ற. மேவ - விருப்பமாக. சேஅத்த - காளையூர்தியை உடைய தலைவரே! கரைவொடு - நெகிழ்ந்துருகும் அன்போடு. பூவத்தகரை - உலக வியாபாரிகளை. நகுவேம் - இகழ்ந்து நகைப்பேம். ஓவதகர் - ஒழியும் படியாகச் சேதிப்பீராக. உரம் - வலிமை. ௮௨. குலையா - குன்றுத லில்லாத. நில அழல் மூம்மடிகாய - நிலவுத்தீ மூன்றுபங்கு அதிகமாகச் சுட. மலையாநிலம் - தென்றற் காற்று. கழைச்சிலை - கரும்புவில். இலம் - இல்லம்; வீடு. ௮௩. மதி உணும் - திங்களைத் தின்னும். செல்வம் மறை - சிறப்பாகிய மறைகள். மால் திரைஆக - பெரியஅலை கடல்போல. கயிலாச விலாச - கயிலாசமலையை உடையவரே. சுதேவ - நல்லதேவரே. திரை - திரைந்தழியும். ஆகம் - உடல்.

தொண்டரைக் கூடல் விழையார் பொழின்மலர்த் தூளுதிர்தல்
விண்டரைக் கூட லறவுறல் போலுந்தொல் வெற்புறுமைக்
கண்டரைக் கூட லுடையாரைப் போற்றிலர் கற்றறியா
மிண்டரைக் கூடல் வழியே நடத்துபு வீழ்த்துவரே. (௮௪)

வீழி வலஞ்சுழி தில்லை சிராப்பள்ளி வேதவனங்
காழி வலஞ்சுழி யன்மேவு குன்றைக் கடவுள்விடின்
ஆழி வலஞ்சுழி வெள்வளை யானணை யன்னகல்விப்
பாழி வலஞ்சுழி யுந்தியுள் வாங்குவர் பாவையரே. (௮௫)

பாவல ருக்கு மலிபொரு ளீந்துகொள் பாட்டினர்க்கு
மேவல ருக்கு மழுவார்க்கு நன்முது வெற்பினுக்குக்
காவல ருக்கு மயலாகி நின்று கலங்குகின்றாய்
ஆவல ருக்கு விளைநில மாயினை யாயிழையே. (௮௬)

ஆயக் கலையக லுஞ்சீர் முதுகுன் றரசமுனஞ்
சாயக் கலைய னிமிர்த்தசெம் மேனிய தப்பலில்லா
னேயக் கலைய புழுக்கூ டெனுமுட னேயமெல்லாம்
மாயக் கலைய மலமாயை கன்மங்கள் வந்தருளே. (௮௭)

வந்திக்க நாவி னினையே வழுத்த மலர்விழியால்
முந்திக்க ணாவி தொலைத்தோய் நினது முதுவெற்பையே
சிந்திக்க நாவி மதநாறு மாதரைச் சேருமின்பம்
நந்திக்க ணாவி னொழிவாமென் றுன்னுற நல்குதியே. (௮௮)

நல்குர வேநல் லுரைதான் முதுகுன்றர் நாட்டுனக்குச்
சொல்குர வேநல் குரவுறு வேல தொடைகள்பல

---

*௮௪. கூடலை விழையார் - கூடியிருத்தலை விரும்பாதவர்கள். மலர் தூள் உதிர்த்தல் - மலர் மகரந்தப்பொடிகளை உதிர்த்தல். விண் - விண்ணுலகம். தரை - மண்ணுலகம். மைக்கண்டர் - கரியகழுத்தை யுடையவர். கூடல் உடையார் - மதுரையை உடையவர். மிண்டர் - கீழ்மக்கள். ஐகூடு - கோழைக் கூடாகிய உடல். நடத்துபு - நடத்தி. ௮௫. சுழிஉந்தி - கூடற் சுழிகளை எழுதி. ஆழி - உருளைப்படை. வலம்சுழி வெள்வளை - வெள்ளிய வலம்புரிச்சங்கு. அணை அன்ன - படுக்கையாகிய ஆதிசேடனைப் போன்ற. பாழிவலம் - பெரியவன்மை. ௮௬. பாவலர் - சுந்தரர் முதலியோர். மேவலர் உக்கும் - பகைவர்களை அழித்தொழிக்கும். மழுவார் - மழுப்படையை உடையவர். காவலர் - தலைவர். ஆ - வியப்பு. அலருக்கு - பழிச்சொல்லுக்கு. ௮௭. கலை அகலும் - கலையறிவுகட்கு அப்பாற்பட்டு நிற்கும். கலையன் - குங்குலியக் கலைய நாயனார். தப்பல் இல்லான் - சாக்கிய நாயனார் கல்ஐய - கற்களையுடைய தலைவரே. ௮௮. இக்கன் ஆவி - காமனுடையஉயிர். நாவி - கத்தூரி. நந்தி - அழிந்து. உன்னுற - நினைக்க. ௮௯. குரவு - குராமரம். நல்குரவு உறு - நல்ல குராமாலையை அணிந்த. ஏனல் - தினை. பலதொடைகள் - பலகட்டுக்கள். இதண் - பரண். அகம்புக்க*

மல்குர வேனு லிதண்விட் டகம்புக்க மானையிந்த
ஒல்குர வேனல் விடைக்கொடு போகலென் ரோதிலையே (அக)

ஓதித் திருக்கு மொழிவதல் லாமலுன் னுண்மைநிலை
சாதித் திருக்கு மியல்புதந் தாயிலை தன்மையெல்லாம்
போதித் திருக்கு மொழிகுன்றை வாண பொருப்புதவுஞ்
சோதித் திருக்கு மரிபாக சுந்தரன் றூதுவனே. (௧0)

தூதுகண் டாலு மதியணி வேணியர் துன்னிவந்தென்
காதுகண் டாலு முடன்மூக்கின் பெய்தநல் காரெனவெம்
மாதுகண் டாலு முவக்கப் படுமொழி வந்தனள்கார்ப்
போதுகண் டாலு மயில்வாழ் பொழிற்பழம் பூதரனே. (௧௧)

பூதர னன்று சிலைக்கென்று கொள்ளும் புராந்தகனுர்
சீதர னன்று பொழிலெனுங் குன்றைத் திருநகரார்
காதர னன்றும் விழிபெறு மாறுடைக் கண்ணுதலார்
மாதர னன்று வருமதிக் கோய்தலை மாற்றிலரே. (௧௨)

மாற்குச் சிவந்த மலர்த்தாண் முதுகிரி வாணன்மறை
நூற்குச் சிவந்த விராப்பொரு ளென்பவர் நோக்குளன்வேள்
கோற்குச் சிவந்த விறலாள னின்னுங் குறுகிலனிம்
மேற்குச் சிவந்த தறிகிலே னிவட்கு விளைவதுவே. (௧௩)

விளைய வளையு மணிநெல் வயன்முது வெற்பிறைவன்
அளைய வளையு முறவுடை யானவ் வனங்கசிலை
வளைய வளையு முடையுந் துறந்து வருந்துறுமிவ்
விளைய வளையு மொருபுடை சார விருத்திலனே. (௧௪)

இருத்த விருப்ப திடத்திலல் லாம விருப்பலென
திருத்த விருப்ப முதுகுன்ற வாணனை நீவலியுஞ்

மானை - இல்லடைந்த தலைவியை. அல்லிடை - இராப்போதில். ஒல் குரவு - இழிதொழில். ௯0. ஓதி - நூல்களைக்கற்று. திருக்கு - மாறுபாடாக. தன்மை - அருட்டிறங்கள். பொருப்பு உதவும் - இமய மலைதந்த. சோதி திருக்குமரி - ஒளிதங்கிய அழகிய உமாதேவி. ௧௧. துன்னிவந்து - நெருங்கிவந்து. தாலு - நா. நல்கார் - அருள் புரியார். கண்டு - கற்கண்டு. கார்ப்போது - கார்காலம். ஆலும் - ஆடுதலைச் செய்யும். பூதரன் - மலையை உடையான். ௧௨. சிலைக்கு - வில்லுக்கு. சீதரன் - திருமால். காதரன் - தீவினைத்தொடர்பு உடையவன். அனன்றுவரும் - தழலைப் பரப்பிவரும். ௧௩. மாற்கு - திருமாலுக்கு. உச்சி - தலை தவிராப் பொருள் - நீங்காப்பரம் பொருள். வேள் கோற்கு - காமன் கணைக்கு. குறுகிலன் - வரவில்லை. மேற்கு - கதிரவன் மறையுந் திக்கு. ௧௪. அளைய அளையும் - அன்பு காட்டத் தாமும் அன்புசெயும். அனங்கசிலை - காமன்வில். வளை - வளையல். உடை - ஆடை. இளையவளையும் - இளம்பெண்ணையும். சார - பொருந்த. ௧௫. இருப்பல் - இருக்கமாட்டேன். விருத்த

செருத்த விருப்ப வுததியை யாருணச் சித்தைசெய்வர்
திருத்த விருப்ப வலையாவர் மெல்லுவர் தேமொழியே. (கரு)

தேவியு மானும் விளையா டிடமுடைச் செங்கணுதல்
ஆவியு மானும் வருஞ்சீர் முதுகுன் றணிவிழவைக்
காவியு மானும் விழியாய்கண் டெய்தெனக் கண்மறுகின்
ஏவியு மானும் மகட்கிடர் நீர்செய்தி ரேழையரே. (கசு)

ஏடலை யாறு கிழித்தெதி ரேறவிண் ணேறுபுகழ்க்
கூடலை யாறு புலியூர் மகிழ்முது குன்றர்பெற்ற
வேடலை யாறு முயிர்த்தெடுத் தேந்துபு மென்கைகொடுத்
தூடலை யாறு வருகவென் பார்நல் லுமைதனையே. (கஎ)

உமையிடப் பாக னலங்கூர் முதுகுன் றுடையனராச்
சுமையிடப் பாக வரிதே டடியுறத் தூமலர்கள்
தமையிடப் பாக மருவுவ ரேலவர் தங்களைப்பா
ரமையிடப் பாக னணுகா னுதைநினைந் தஞ்சுவனே. (கஅ)

அஞ்சு வணத்தை வரன்முறை யோத வரக்கெறிந்த
பஞ்சு வணத்தை மருவுமென் றுளுமை பாகமொடு
செஞ்சு வணத்தை யனைய நின் கோலமென் சிந்தையுற
விஞ்சு வணத்தை மகிழ்குன் றை வாண விரும்புவனே. (கக)

விருத்தா சலசங் கராமலை மாது விழிகளிக்கும்
திருத்தா சலசந் திரன்போ லுடம்பிடை நின்றவர்தங்
கருத்தா சலசம் பவமிலர்க் காண்டறங் காட்டியசொற்
றிருத்தா சலசந் தமியேன் றலைக்குன் றிருவடியே. (க00)

பழமலையந்தாதி முற்றிற்று

---

விருப்பம் - கூத்தியற்றுதலில் விருப்பம் உள்ள. உப்பஉததி - உப்புக் கடல். இருப்பு அவல் - இரும்பாலாகிய அவல். கசு. நுதல் செங் கண் ஆவி - நெற்றியிற் சிறந்த கண்ணையுடைய சிவபெருமானுடைய உயிரைப் போன்ற இறைவி. மறுகு - தெரு. கஎ. அலை ஆறு - அலை பொருந்திய வைகை. விண்ஏறு-விண்ணுலகம் வரை ஏறிய. உயிர்த்து- உச்சி மோந்து. ஊடலைஆறு - ஊடலைத்தணி. கஅ. அராச்சுமை இடப்பு ஆக - ஆதிசேடனுக்குச் சுமையாகிய இந்நிலவுலகமானது பிளவுபட. பாகம் மருவுவரேல் - பரிபக்குவத்தை அடைவார்களானால். மையிடப்பாகன் - எருமைக் கடாவைச் செலுத்தும் நமன். உதை - முன்பு கிடைத்த காலுதை. கக. அஞ்சுவணத்தை - திருவைந் தெழுத்தை. அரக்கு எறிந்த - செந்நிறத்தை வீசுகிற. க00. சங்கரா- சுகஞ்செய்பவரே! சல சந்திரன் போல் உடம்பிடை நின்றவர் - மெய்யறி வாளர்கள். சலசம்பவம் இலர்க்கு - பொய்யாகிய பிறவியை ஒழித்த சனகாதி முனிவர்களுக்கு.

## ரு. பழமலைநாதர் பிச்சாடன நவமணிமாலை

[பிச்சா அடனம் : பிச்சா - பிச்சை, அடனம் - ஏற்றல். நவமணிமாலையாவது ஒன்பது வகை மணிகளைப் போன்ற உயர்ந்த செய்யுட்களால் செய்யப் பெறுவது. இஃது எண்ணாற் பெற்ற பெயர். ஒன்பது வகையான செய்யுட்களாற் பாடுவதும் உண்டு. முன்னாளில் சிவபெருமான் தாருகாவன முனிவர்களின் தருக்கையடக்கும் பொருட்டு ஆடையற்ற திருக்கோலத்துடன் அவர்தம் மனைக்குப் பிச்சை யேற்கச் சென்று அவர்தம் மனைவியர் கற்பைக் குலைத்து முனிவர்களின் தருக்கை யடக்கினார் என்பது புராணக் கூற்று. அதனை அடிப்படை யாக வைத்து இந்நாளில் நடைபெறும் பிச்சாண்டவர் விழாவைக் கண்ட அடிகளார் இப் பாடல்களைப் பாடினர். இதனில் இடக்கரடக்கல்கள் உள்ளன.]

நங்குற்றந் தீர்க்கும் பழமலை நாதர்க்கு நற்பலிகொண்
டங்குற்று மென்றுகில் போக்கினள் வெற்றரை யாகியந்தோ
இங்குற் றனையென வெம்பெரு மானிவ் விருநிலத்திற்
றங்குற்றம் பார்க்கு மவருள ரோவெனத் தாழ்ந்தனளே. (க)

குன்றா முதுகுன் றுடையா னிலாதவெண் கோவணத்தான்
தன்றா மரைக்கை விரன்மூன்று காட்டித் தனங்குறித்து
நன்றாக வித்தனை பிச்சையுண் டோசொன் னறுநுதலாய்
என்றா னிரண்டத் தனையுள கோடியென் றிட்டனளே. (உ)

இப்பாத் திரந்தலை கீழாப் பிடித்தனை யென்னைமுனந்
தப்பாப் பலிகொண் டறிந்திலை யோவெனத் தாழ்குழலாள்

---

க. நற்பலி - நல்ல பிச்சை. மென்துகில் - மெல்லிய ஆடை. வெற்றரை - ஆடையில்லாத அரை. தாழ்ந்தனள் - விடையின்மையிற் கீழ்ப்பட்டாள். தோற்றவர் வென்றவரை வணங்குதல் இயல்பாகலின் வணங்கினாள். தனக்கும் வெற்றவரை யென்பதுணர்ந்து தலைகுனிந்தாள். பிச்சாடனரைப் பிரிய மனமின்றித் தங்கினாள். தாழ்தல் - கீழ்ப்படுதல், வணங்குதல், குனிதல், தங்குதல். உ. குன்றா முதுகுன்றுடையான் - எக்காலத்திலுங் குறைவுபடாத பழமலைநாதர்: குன்றாகிய பழமலைநாதர்; அருள் குன்றாதவனுமாம். வளங்குன்றாத முதுகுன்றுமாம். இலாத வெண் கோவணத்தான் என்பது ஆடையற்றவன் என்னும் பொருளைத் தருவதாய் "கழிந்த பற்றுடை வசிட்டன்" என்றாற்போல நின்றது. இரண்டத்தனை சிறுமையைக் குறித்தற்குக் கூறும் எண்ணளவை; இரண்டாகிய அவ்வளவு. கோடி - கொள், புதிது. என்றிட்டாள் - ஒரு சொல். ங. எப்பாத்திரம் - சற்பாத்திரம், அசற்பாத்திரம், பிட்ச

செப்பார் பணைமுலை யாய்நிலத் தேபலி சிந்தியிட்டாய்
எப்பாத் திரத்திலு மிட்டறி யாய்கொன் முன் னென்றனரே. (௩)

வேட்டன மாதுகை தாழ்த்திட மாமுது வெற்பர்பலி
ஒட்டினை நீதொட லாமோ வெனவுமை யுந்தொடலாம்
வீட்டினில் யானென வேயவர் தாமிது வேண்டுவைகொல்
யாட்டினின் பாலென மூலமு மாமென்ப தென்றனரே. (௪)

மாண்ட வெலும்பணி கோலமொ டேபலி வாங்கிடுதற்
கீண்டு வருமுது குன்றுடை யீருமை யான்மிடற்றில்
நீண்ட வுகிருறுத் தாதனை வேனென்று நீர்தலையைத்
தீண்ட வுமது பலிப்பாத் திரமென் சிரிக்கின்றதே. (௫)

வானோர் தொழுநின் பலிப்பாத் திரத்தை வனைந்ததுநீ
தானோ வெனச்சக் கரந்தான் சுழற்றத் தகுங்குயத்தி
யானோர் குயவன்மெய் யென்றே முதுகுன் றிறையியம்ப
நானோ வொருசிற் றிடைச்சியென் றாளந் நறுநுதலே. (௬)

பங்கய மன்ன விழியார் முதுகுன்றர் பாத்திரத்தில்
அங்கையி லைய மொடுவண்டு வீழநல் கையவென
எங்கையில் வந்த தெமதாக லேவழக் கென்றுசெட்டி
மங்கையர் தங்கட் கிருங்கூ டலிலிட வைத்தனரே. (௭)

நீருக்குத் தக்க சடையார் முதுகுன்றர் நேடியுங்கள்
ஊருக்குட் பிச்சையென் றுற்றோ முண் டாயி னுரைமினென

---

பாத்திரம் முதலியன. தப்பா - தவறாத. பலிகொண்டு - பிச்சையேற்று. செப்புஆர் - செப்புக் கிண்ணம் போன்ற. பணை - பருத்த. ௪. உமை - உம்மை, உமாதேவி. வீடு - இல்லம், வீடுபேறு, ஆட்டினின் பால்இது வேண்டுவை கொல்லென என்று மாறுக. ௫. மாண்ட எலும்பு - மாண்டுபோன நான்முகர் பலருடைய எலும்பு. மிடறு - கண்டம். உகிர் உறுத்தாது-நகம் தாக்காமல். தலையைக் கிள்ளும் தன்மையை உடையவர் என்பதை உணராமல் இவர் சொல்லை நம்பினளே இவளுடைய அறியாமை இருந்தவாறென்னேயென்று நகுதலை நகைத்தது என்க. ௬. வனைதல் - செய்தல். சக்கரம், மட்சக்கரம், கண்ணாகிய அரம். சக்கு - கண். குயத்தி - குயச்சாதிப் பெண். கொங்கைகளையுடைய பெண், இளமையுடைய பெண், அல்குற்றேரையுடைய பெண், குயவன் என்பதற்கும் ஏற்ற பெற்றி சிறிது விகற்பித்து இப்பொருள் கொள்க. முதுகுன்று இறைஇயம்ப - பழமலையார் விடைகூற, பழமலைநாதர்கூற. சிற்றிடைச்சி - சிறிய இடையினையுடையவள், சிறிய இடைச்சாதிப் பெண். ஓர் - அறி, ஒரு. ௭. வண்டு - வளையல். பங்கயம் அன்ன-தாமரை மலரையொத்த. செட்டி மங்கையர் தங்கட்கு என்பது இனி வைசியப்பெண்களாய்ப் பிறக்கும் முனிமனைவியர்களாகிய தங்கட்கு எனவும் பொருள் தோன்றநிற்கின்றது. கூடல் - புணர்தல் - மதுரை. ௮. ஊருக்குள் பிச்சை - நகரத்தின்கண் பலி; மற்றொன்று

வாருக்குத் தக்க முலையா ரதற்குளர் மற்றொருவர்
யாருக்குக் கிட்டு மதுசோறு நீர்கொளு மென்றனரே. (அ)

முழங்குந் துடியொடு பிச்சையென் றேழுது குன்றர்வரச்
சழங்கு முலைமுதி யாளென் பலியெனத் தம்மனையில்
வழங்கு மனமென் றனர்புறம் போந்து வளர்முலையாள்
விழுங்கு மனம்பகற் போதுகொள் வாயென்று வேண்டினளே. (க)

பிச்சாடன நவமணிமாலை முற்றிற்று.

---

## சிறப்புப் பாயிரம்

பிச்சா டனநவ ரத்தின மாலையைப் பீடுபெறத்
தைச்சான் றுறைமங் கலமுறை சிவ தயாபரனம்
பொய்ச்சார் பதனை யொழிக்குஞ் செழும்புலி யூர்ப்புனிதன்
நற்சார்பு சார்ந்த சிவப்பிர காச நவமணியே.

---

இடக்கரடக்கல். அதற்கு ஊரு - தொடை. மற்றொருவர் - உமாதேவியார்; தங்கணவர்; அது யாருக்குக் கிட்டும் - அவ்வூருக்குட் பிச்சை எவர்க்குங் கிட்டாது. சோறு நீர்கொளும் - அவ்வுண்மையைச் சொல்லுகிறேம் நீர் ஏற்றுக்கொள்ளும்; சோற்றையும் நீர் ஏற்றுக்கொள்ளும். அதற்கு உளர் மற்றொருவர் யாருக்குக் கிட்டும் அது சோறும் நீர் கொளும் என்பதனை மற்றொருவர் அதற்கு உளர் யாருக்குக் கிட்டும் அது சோறு நீர்கொளும் என மாற்றிப் பிறர் எவர்க்குங் கிடையாது உமக்கே கிடைக்கும் அவ்வூர்க்குட் பிச்சையையும் சோற்றையும் நீர் ஏற்றருளும் என்று மற்றொரு பொருளுங் கொள்க. க0. சழங்கல் - சரிதல். பகற்போது விழுங்கும் அன்னங்கொள்வாய் என்று வேண்டினள். எனவே இராப்போது மனையில் மனம் வழங்குவன் என்றாள் என்பது குறிப்பெச்சம்.

# ௯. விருத்தகிரி பெரியநாயகியம்மை
# நெடுங்கழிநெடிலாசிரிய விருத்தம்

[நெடுங்கழி நெடிலாசிரிய விருத்தமென்பது அளவடி நெடிலடி கழிநெடிலடி என்பவற்றையுங் கடந்து நீண்டிருத்தலின் இவ்வாறு பெயர் பெற்றது. இப்பெயர் பாவாற் பெற்ற பெயராம். பத்துப்பாடல்களால் அமைந்த இதனைப் 'பெரியநாயகியம்மை பதிகம்' என்றலுந் தகும். இப்பாடல்கள் விருத்தாசலம் என்னும் பழமலையில் எழுந்தருளிய பெரிய நாயகியம்மைமீது பாடப்பெற்றது. பாடல்கள் யாவும் ஒன்பது வகைச்சுவைகளும் ஒருங்கே பொருந்திக் கற்பவர்கட்குக் களிப்பையூட்டுவனவாகத் திகழ்கின்றன.]

முழுமணி மிடற்றன் கனன்மழு வீரன்
முக்கணுண் டைநின தெழில்கூர்
முகம்புலர் தலைக்கண் டுடல்வளைந் தடியின்
முளைப்பிறைக் கோடுகொண் டுழுது
விழுமணி யரவ நுழைசடா டவியின்
விண்ணதித் தண்புனல் விடுப்ப
விரைவொடு குளிர்ந்து முகமலர் தலினுன்
மென்கொடி யெனநினை யுணர்ந்தேன்
செழுமணி நீல மழைமுகி றவழுஞ்
சிலம்பெனும் புற்றினின் றூர்ந்து
திரைபொரு கடற்பேர்ப் பெரும்படம் விரித்துத்
தினமணி யெனப்படுஞ் செங்கேழ்
கெழுமணி யுமிழ்ந்து பேரிரு டுரந்து
கிடக்குமெய்ம் முடக்குமா சுணமாய்க்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (௧)

---

௧. மணிமிடறு - நீலமணிபோலுங் கரிய கழுத்து. முகம்புலர்தல் - முகம் வாடுதல். ஊடறணியுமாறு தேவியைப் பெருமான் வணங்குங்கால் தேவி முகாம்புய மலர்தலின் அவரைக் கொடியாக உருவகஞ் செய்தார். முழுமணி - இலக்கண முற்றுமமைந்த நீலமணி. கனல்மழு - வினைத்தொகை; கனலும் மழுவும் என உம்மைத் தொகையுமாம். சிலம்பு - மலை. தினமணி - கதிரவன். மாசுணம் ஆய் - பெரும் பாம்பு போன்று. ஆதல் - உவமவுருபிடைச் சொல்.

விழைவொடு நினக்கு மாதுலன் மாமி
வெற்புவேண் டுருதுதன் மருகன்
மேலெலா மெலும்புந் தோலுமாய்க் கிடத்தல்
வெறுத்திடா திளமைநா டாது
பழமலை தனக்குச் சாதியோப் பெனவே
பார்த்துனைக் கொடுத்ததுன் றந்தைப்
பனிமலை யென்றே தன்மனை யாட்டி
பயந்திடப் பெருமக ளென்றே
கழைவரை முன்ன ரூன்றுபு நடந்து
கடிதுப்ள ளங்களின் வீழ்ந்து
கரைகளின் மெல்ல வேறிவெண் ணுரைவாய்க்
கடையுற வளைந்துருத் திரைந்து
கிழவுரு விருத்த நதியெனப் பட்டுக்
கீர்த்திமூ வுலகினும் போர்ப்பக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (௨)

காமமென் கின்ற கதுவுவெந் தீயுங்
கடுஞ்சின மெனப்படு புலியுங்
களிப்பெனுஞ் சிறுகட் புகர்முகப் புழைக்கைக்
கறையடிக் களிநல்யா னையுமே
தாமிகு மெனது மனமெனும் வனத்திற்
றனிவரல் வெருவினை யாயிற்
றழலினின் ருடிப் புலிகரி யுரிபோர்த்
தடுத்தவாண் டுணையொடும் வருவாய்
ஈமவெள் ளெலும்பிங் கிடப்படு மெனத்தா
னெலும்பணி கடவுண்மா நதியா
யிருந்துநல் லன்னங் கொண்டுமெய் வெளுப்ப
வினைதபு கங்கையை யிகழ்ந்து

௨. வரைகழை - மலையில் வளர்ந்துள்ள மூங்கில். ஊன்றுபு - ஊன்றி. வாய்க்கடை - கடைவாய். வரைகழையென மாற்றுக. உருத்திரைந்து - உருவந்திரைந்து, உருத்து இரைந்து என்க.
௩. வெருவினையாயில் - அஞ்சுவாயானால். ஆண் துணை - சிவபெருமான். ஈமம் - இடுகாடு. தடுத்தல்-வென்று உரி கவர்தலின்மேற்று. உரிபோர்த் தடுத்தவெனப் பாடங்கொண்டு கண்ணழிக்கில்மோனை நயமின்மை ஓர்க. இம்மணி முத்தநதி எலும்பிடப்படுமென்று தானும் எலும்பையணியும் தெய்வத்தன்மை பொருந்திய நதியாகி இந்நதி போலவே அன்னங்கொண்டு மெய்வெளுப்ப இருத்தலால் அக்கங்கையை இகழ்ந்து இயம்பும் கீழ்மையொன்றும் இல்லை யென்பீராயின் (கீழ்மை யடையாமை மாத்திரத்தானே) இதன் குணம் அதற்குக் கிடைக்குமோ வெனக் கூறும்படி கிளர்கதியென்க. அணிதல்-இடப்படுதல். அன்னம்-பிண்டமும், அன்னப் பறவையுமாம். இதன் குணம் சிவசாருப மளித்த

கீழ்மைசொல் கின்ற தொன்றுமின் றுயிற்
 கிடைக்குமோ விதன்குண மென்னக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
 கிரியமர் பெரியநா யகியே. (௩)

சுட்டுதற் கரிய நின்னைமெய்ஞ் ஞான
 சொரூபியென் றருமறை யனைத்துஞ்
சொல்லுவ துண்மை யென்னநன் குணர்ந்தேன்
 சுரந்தநின் றிருமுலைச் செழும்பால்
வட்டிலிற் கொச்சைப் பிள்ளைமுன் னுண்டு
 வண்புகழ் ஞானசம் பந்த
வள்ளலென் றிடப்பேர் பெற்றரன் மொழிபோன்
 மையறீர் செய்யுள்செய் தமையால்
எட்டிநற் றிகிரி பறித்தெறிந் துரற்கா
 லியானையை யுருட்டிவாங் குதிரை
எறிந்துசங் கதிர்த்துக் கொடுமர முறித்திட்
 டெதிர்ந்திடார் தமைவிடுத் தோடிக்
கிட்டினர்ப் புரட்டி முருகவேள் பூதக்
 கிளைப்பெரு வெள்ளமொத் தெழுந்து
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
 கிரியமர் பெரியநா யகியே. (௪)

உள்ளமென் மனையில் விருப்பொடு வெறுப்பா
 முறுகுழி மேடுக ணிரவி
யொழிவிலா வாய்மை மெழுக்கினுற் பூசி
 யுயர்தரு மனமெனப் படுமோர்
பள்ளிமென் றவிசி லிருத்திநின் பதியைப்
 பழுதில்யா னெனப்படு நெல்லைப்
பழமல மாயைத் தவிடுமி போக்கிப்
 பாகஞ்செய் தென்றருத் திடுவாய்
துள்ளுமொண் மறிமான் முல்லையு ளாயர்
 சூழல்வெண் ணெய்க்குட முருட்டித்

---

லாதியன. இருந்து - வினையெச்சத்திரிபு. ௪. மையல்தீர் - மயக்கந் தீர்ந்த. மணிமுத்த ஆற்றின் இயற்கை இப்பாட்டில் இயம்பப்படு கிறது. கொச்சை - சீர்காழியையும், திருத்தமுறுச் சொல்லையும்; எட்டி - எட்டி மரத்தையும், தாவியென்னு மெச்சத்தையும்; திகிரி - மூங்கிலையும், சக்கரத்தையும்; வாங்குதிரை - வளைந்த திரையையும், தாவுங்குதிரையையும்; கொடுமரம் - வலிய மரத்தையும், வில்லையும் உணர்த்தின. ௫. உள்ளம் என் மனையில் - என்னுடைய மனமாகிய மனையில். தவிசு - இருக்கை. கிள்ளை - கிளி. மலம் மாயை தவிடு உமி என்பன நிரனிறை. பாகம் - மலபரிபாகத்தையும், சமைத்

துணைமுலைக் குவட்டின் மஞ்சண்மேற் படப்போய்த்
தோய்ந்துநின் ருடிளங் கயற்கட்
கிள்ளைமென் மொழியார் துகிலெடுத் தொளித்துக்
கேடில்சீர்க் கண்ணனு டுதல்போற்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (௫)

நாடினு ருயிர்க ளாமெவற் றினுக்கு
நல்கிய தந்தையுந் தாயு
நம்பனு நீயு மல்லிர்நும் மூர்க்கே
நவின்றவம் முறையுளீர் நீவிர்
பாடியா ரணஞ்சொ லீண்டுமாய் வனதாம்
பரிந்துநீ மடிமிசைக் கிடத்தப்
பழமலை தனது பெயர்வலக் காதிற்
பகர்ந்தருள் செயப்பெறுஞ் செயலால்
ஓடியோர் காக மேறுபு கவிழ்த்த
வொருசிறு கரகநீர் தானு
மொருவனோர் செவியால் விடுத்தவப் புனலு
முமையொரு பாகர்கட் டோன்றிக்
கேடிலா னந்த வுருவமா மெனையொக்
கின்றன வோவென வதிர்த்துக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (௬)

தன்னொரு மகன்வா கனத்தினை வெறுத்தோர்
தனயன்வா கனத்தினை விரும்புந்
தண்மணிப் பணியு மதனையுள் வெருவித்
தான்வள ராமதி யமும்வாழ்
மின்னவிர் சடையான் றனைநினை யன்றி
மேவுவா னவரைநெஞ் சுன்னல்
விரிகதிர் விழுங்கு மணியினை விடுத்து
வெறுமணி கொள்ளுமா றன்றே

தலையும்; அருத்தல் - சிவபோத முளைத்தெழாது அர்ப்பித்தலையும், உண்பித்தலையுங் குறித்தன. ௬. எனையொக்கின்றனவோ என அதிர்த்து - எனக்கு ஒப்பாக இருக்கின்றனவோ என்று ஆரவாரித்து விருத்தகிரிக் கண் மாய்வனவாகிய உயிர்கள் பெறுஞ்செயலால் நாடின் நும் மூர்க்கு நவின்ற அம்முறையே நீவிருள்ளீர்; ஆகலின், எவ்வுயிர்க்கும் நீவிர் தந்தையுந் தாயும் அல்லீர்; என நிந்தாஸ்துதியின் வைத்து அத்தலத்திலருளுமாறு நிகழ்த்தியவாறு. ஒருவனென்றது சன்னுமுனிவரை. ௭ நெஞ்சு உன்னல் - மனது நினைத்தல். வெறுமணி - ஒளியில்லாத மணி. மகபதி - இந்திரன். மறலி - நமன். உரகர் - நாகர்.

மன்னவர் மனிதர் சந்திரன் பரிதி
மகபதி மலரயன் மறலி
வானவர் வசுக்கள் சித்தர்கிம் புருடர்
மாதவர் விஞ்சைய ரசுரர்
கின்னர ருரகர் மூழ்குபே ரரவங்
கேட்டொரு முராரிபாய் சுருட்டக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (எ)

படைத்திடுந் தொழிலோன் மறைச்சடங் கியற்றப்
பாவியேன் மனத்தினும் வலிய
பன்மணி குயின்ற செம்பொனம் மியினின்
பதமலர் வைத்தக லாமல்
இடத்தினி லுனைவைத் தருளுதன் முன்னே
யியற்பகை மனைவியை யிரந்தா
னிளம்பிறை சூடு மிறையவன் பின்ன
ரெங்ஙனம் போயிரந் திடுவான்
கொடுத்தெனி லிடுபொன் புலவனுக் காரூர்க்
குளத்தினிற் பழமலை யன்று
கொடுத்தது நானே கொடுத்தன னென்னிற்
குளித்தகல் பவர்க்குளத் தெல்லாங்
கிடைத்திட வொருகண் டருமெனக் கிதுசெய்
கின்றதற் புதங்கொலோ வென்னக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (அ)

பண்டுநின் கொழுநன் றந்தையுந் தாயும்
பயந்ததம் மருமருந் தன்ன
பாலனைக் கொன்று சமைத்திடக் கொள்ளும்
பாதக மொன்றுளங் கொண்டு
தொண்டர்தம் மனையிற் செல்வனென் றெழநின்
சுதனழப் பொருதுநின் முலைப்பால்
சுரந்தமு தூட்டு மன்னைநீ யாவாய்
தொழுதுபோய்ப் பிரித்திலை யென்னே

அரவம் - ஒலி. முராரி - முரன் உன்னும் அசுரனை அழித்த திருமால். பாய்சுருட்டல் பாற்கடலொலியினும் இவ்வொலி மிக்கிருத்தலாலெனக. அ. இயற்பகை நாயனாரிடம் மனைவியை இரந்தது சிவனைத்திருமணம் புரிதற்கு முன்போ மணத்திற்குப் பின்னர் எவ்வாறு இரக்க முடியும்? என்றவாறு. கொடுத்து - பழமலைநாதரால் கொடுக்கப்பெற்று. குளத்தினிற் கொடுத்தது என இயையும். குளமென்பது - நெற்றியையும் கமலாலய தீர்த்தத்தையும் சுட்டியது. நெற்றியிற் கண்தருதல் - சிவ சாருபமளித்தல். கூ. கொள்ளல்-ஏற்றல். ஆடலவாகி இங்கு இதன்

அண்டர்தங் கங்கை யன்னமங் கதன்க
ணுடல வாகிவந் தடையா
வாடியிங் கிதன்க ணமர்வுறப் பெறலா
லடைந்துவான் கங்கையை யிகழ்ந்து
கெண்டையொண் வாளை யுடனெழக் குதிப்பக்
கிளைவளைக் கமுகின்மேற் றவழக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (க)

புரிசடைக் காட்டு ளாடவிட் டிளவம்
புலியினைச் சிறப்புலி யொடுகோட்
புலிதொழ விருக்கு மொருபெருந்
தெய்வப் புலிபனி மலையிளமானைப்
பரிவுறத் தொழுது மருவிய வதனாற்
பயமறச் சாதிக டனது
பாங்கர்வந் தெய்தப் பெற்றதென் றறிந்து
பசுவெலா மருவுறப் பெறுமே
சுரிகுழற் கயற்கட் பிறைநுதற் கனிவாய்த்
துடியிடைக் குவிமுலைத் தளிர்க்கைத்
துணைவிமுற் கங்கை பெயர்சொலக் கூசுஞ்
சுடர்மணிக் கட்செவிப் பணியான்
கிரிமகட் கெடுத்தக் கறைமிடற் றிறைவன்
கிளக்குமெற் புகழெனத் தோன்றிக்
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. (கo)

பெரியநாயகியம்மை

நெடுங்கழிநெடிலாசிரிய விருத்தம் முற்றிற்று.

---

கண் அடையா ஆடி அமர்வுறவெனவும், கெண்டை குதிப்ப எனவும் இயையும். கo. இச்செய்யுளில் சிவபிரானைப் புலியாக வருணித்திருப்பது எண்ணி மகிழத்தக்கது. கோட்புலி - கோட்புலிநாயனார். புலி மானைத்தொழுது மருவியிருத்தலால் அம்மான் தனதினமாகிய பசுக்கள் தன்பாங்கரடைந்து தன்னால் அப்புலியைப் பயமற எய்தப் பெற்ற தாயிற்று என்றறிந்து அப்பசுக்களெல்லாம் அம்மானால் அப்புலியை அடையப் பெறுகின்றன வென்றது, திருவருட் சத்தியானே ஆன்மாக்கள் சிவத்தையடைய வேண்டுமென்னும் சித்தாந்த நோக்கியென்க. தன தென்றது சத்தியையும், சாதிகளென்றது ஆன்மாக்களையுமாம். தேவியார்முன் கங்கையின் பெயரையுஞ் சொல்லாத கடவுள், அத்தேவியார்க்கு எனது புகழை எடுத்துக் கிளக்குமென்று ஆரவாரித்து அக் கங்கைபோலத் தான் மறையாது வெளிப்பட்டு விளங்கும் இந்நதி யென்றலும் அத்தல மான்மியங் குறித்தென்க.

## எ. பெரியநாயகியம்மை கலித்துறை

[கலித்துறை யென்னும் பாடலாற் பெரியநாயகியம்மை மீது பாடப்பெற்றமையின் இது 'பெரியநாயகியம்மை கலித்துறை' என்று பெயர் பெற்றது. இதனிற் பத்தொன்பது கலித்துறைப் பாடல்கள் அமைந்துள்ளன. பாடல்கள்யாவும் இறைவியின் பெருமையை இனிது விளம்புவனவாக இலங்கு கின்றன.]

இறைவற்குத் தக்க விறுமாப் பெனுமொழி யின்றியொரு
மறுவற்ற தன்மனை யாட்கேற்ற தாமிறு மாப்பனெனக்
குறைவற்ற நெற்கொண் டுலகேற் றுனைப்பலி கொள்ளுமரன்
பெறவுற் றனையனை யேகுன்றை வாழும் பெரியம்மையே. (க)

பத்தர்க்கு நெஞ்ச மலர்மீ திருத்திப் பயந்துகொடுஞ்
சித்தர்க் ககற்றுநின் பாதாம் புயமொரு செஞ்சிலைமேல்
வைத்தற்கு மெண்ணி மதியுடையே னென்பன் வார்சடையான்
பித்தர்க்குத் தங்குண நூலினுஞ் செம்மை பெரியம்மையே. (உ)

இழைபொறுத் தாற்பொறை தானென்ப ரானல் லிசைப்புலவர்
மழைபொறுத் தார்புனன் முக்காற் பொறுக்கும் வழக்கதுண்டே
உழைபொறுத் தார்தல் லியற்பகை யார்மனைக் குற்றவொரு
பிழைபொறுத் தாய்நன்று காண்குன்றை வாழும் பெரியம்மையே. (ங)

கையன்று தாமரை கண்ணன் றிளமென் கயலெனவே
பொய்யன்று கங்கையை நீரென்று சாதிப்பர் போர்விடையார்
மெய்யென்று நீகொண் டிரேலற லாயினென் மென்கையிடைப்
பெய்யென்று பின்னை யறிவாய்தென் குன்றைப் பெரியம்மையே. (ச)

பொன்வாங்கு செஞ்சடைப் பாம்புகள் சுற்றும் புதுமதியி
னன்வாங்கு கோடு கிழிக்கு நகுவெண் டலைபடுங்கல்
முன்வாங்கு மெந்தைநின் பாதாம் புயத்தின் முடிவணங்கிற்
பின்வாங்கி நில்லன்ன மேகுன்றை வாழும் பெரியம்மையே. (ரு)

---

க. மறு - குற்றம். இறுமாப்பு - தருக்கியிருத்தல். உ. இருத்தி அகற்றுமென இயையும். செஞ்சிலை - ஈண்டு அம்மி. மதி - அறிவு, சந்திரன். ங. புனலும் மூக்காற்பொறுக்கும் வழக்குண்மையின் இழை பொறுத்தலாதியனவும் புலவரால் பொறையெனக் கூறப்படினும் அவை பொறையன்று. இப்பிழை பொறுத்ததே நற்பொறையென்பது. மழை - குளிர்ச்சி. உழை-மான்: ச. பொய்யன் றென்பதற்குப் பொய்யல்லை யாம்படியென்க; யான் சொல்வது பொய்யல்ல என்றலுமாம். ரு. பொன்வாங்கு - பொன்னைப்போல் விளங்கும். வணங்கில் சுற்றும் கிழிக்கும்படும் ஆகலின் பின்வாங்கி நில் என்றபடி: கல் - மேரு.

கடிநறு மென்றரு மீதிருப் பாரெனக் கங்கையென்பாள்
முடிநடு வேறி யிருந்தனள் வேனின் முதிர்விலதன்
அடியடை வாரெனச் சங்கரன் பாங்க ரமர்ந்தனைநீ
பிடிநடை யேகுயி லேகுன்றை வாழும் பெரியம்மையே. (௬)

நின்போ லிலரரு ளாளரென் றேசொல நின்கொழுநன்
என்போ னொருவன் மகன்பூங் கழுத்தினை யீர்வலென்றே
அன்போர் சிறிது மிலனுகப் போக வதற்கிசைந்து
பின்போய் விடாதுகண் டாய்குன்றை வாழும் பெரியம்மையே. (௭)

செச்சை மலர்புரை வாளுேடு மேனி திறந்துகொண்டு
கச்சை யரவொன் றசைத்துக் கபாலங் கரத்தெடுத்துப்
பச்சை மயிலனை யார்மனை தோறும் படர்ந்திரக்கும்
பிச்சை யொழிகென் றொருவார்த்தை சொல்லெம் பெரியம்மையே. (௮)

சோதிப் பதியன்றி வேறொரு தெய்வந் தொழுதற்கில்லை
ஓதிற் பிறரென வச்ச முறும லுயிர்களெல்லாம்
நீதிப் புதல்வர்க ளாயின வாதலி னீகொள்கற்புப்
பேதிப்ப தன்றுகண் டாய்குன்றை வாழும் பெரியம்மையே. (௯)

நின்னேய நாயக னென்றிருப் பாய்நினை நீத்தகன்று
தன்னேரில் பூவணத் தேயன்று போய்ச்செய்த தன்மையெலாஞ்
சொன்னே னலேனினி நின்னோ டொளிப்பதென் சொல்லுவன்யான்
பின்னே தெனக்குத் தருவாய்தென் குன்றைப் பெரியம்மையே. (௧௦)

நற்றவத் துன்னைப் பெறுமலைக் கென்னமுன் னல்கியுனைப்
பற்றுறக் கொண்ட தெலும்பே யணியும் பழமலைதான்
சற்றெனக் கையந் தராதுசொன் னும்மலைச் சாதியுள்ளே
பெற்றவர்க் கென்ன முலைவிலை குன்றைப் பெரியம்மையே. (௧௧)

---

௬. கடிநறு மென்தரு - மிகுமணம் வீசும் மெல்லிய மரம். பிடி - பெண்யானை. முதிர்வேனிலில் என்பது தாப்பிசையாய் நின்றது. ௭. ஈர்வல் - அறுப்பேன். உடன் சொல்லாமையால் நின்போல அருளாளர் இலரென்று கூறச் செய்தனை என்பது. ௮. அரவ கச்சை ஒன்று அசைத்து - பாம்புக் கச்சையொன்றைக் கட்டி. கபாலம் - மண்டையோடு. ௯. சோதிப்பதி - பேரொளி வடிவாகிய இறைவன். பேதிப்பதன்று - மாறுபடுத்தக் கூடியதன்று. ௧௦. நேயநாயகன்-அன்பு பொருந்திய தலைவன். பூவணம் - திருப்பூவணம். கதை யான் கூறுவேன்; அதற்குக் காரணம் எனக்கு விளக்குக என்பது. ஏதுவென்பதற்கு எப் பொருளெனலும் ஒன்று. ௧௧. நல்கி - கொடுத்து. பற்றுற - பற்றுண்டாகுமாறு. ஐயந்தராது - ஐயப்பாடு நேராமல். முலைவிலை - பரிசத் தொகை.

கற்று ரறிகுவர் மக்கடம் பேறெனக் கட்டுரைத்த
சொற்று ெருபெண் ணொழித்ததென் பாரொடு தொல்லுலகின்
நற்றாண் மகற்பெறு கென்றுசி சொல்பவர் நாணவுனைப்
பெற்றுன் மலையரை யன்குன்றை வாழும் பெரியம்மையே. (கஉ)

கரிய மிடறுடைப் பெம்மான் கரத்துழைக் கன்றெடுமோர்
அரிய முடியம் புலியோடு மேவினை யாடுகின்றாய்
தெரிய வரிய பதினு லுலகுமென் சிற்றிலென்பாய்
பெரியவ ளென்ப துனக்கேது குன்றைப் பெரியம்மையே. (கங)

தண்ணு ரிதழி புனைவான் விழியிணை தம்மனைகள்
பண்ணு வழிக்குமென் றேநின் றிருமுக பங்கயத்திற்
கண்ணு யினருனக் கவ்வலை மாதுங் கலைமகளும்
பெண்ணு ரமுதனை யாய்குன்றை வாழும் பெரியம்மையே. (கச)

உள்ளத் துறுபிணி யேற்கு மருந்துக்கென் றுன்னைவந்து
மெள்ளத் தொழவுந் திருமுலைப் பான்மெல் விரனுதியாற்
றெள்ளித் துளியள வாயினுந் தொட்டுத் தெறித்திலையுன்
பிள்ளைக்குங் கிள்ளைக்கும் பால்கொடுத் தாலென் பெரியம்மையே. ()

ஆறுத் துயர்கொண் டடியேன் சலிப்ப வதுசெவியில்
ஏறும லேயிருந் தாலென்செய் வேனெங்க ளீசற்கொரு
கூறுகி யண்ட முதலா யிளமை குலவுதவப்
பேறுகி வாழ்பவ ளேகுன்றை வாழும் பெரியம்மையே. (கசு)

நனைமாட்சி மென்கொன்றைத் தாரோன் றருமிரு நாழிநெல்லால்
வினைமாட்சி கொண்டுயி ரெல்லா மளித்தருண் மேன்மையினுல்
மனைமாட்சி யெய்து முனக்கே பெருங்கற்பு மாட்சியன்றிப்
பினைமாட்சி யார்க்குண் டுலகீன்ற குன்றைப் பெரியம்மையே. (கஎ)

---

கஉ. மக்கள்தம் பேறு - மக்களைப் பெறுதலின் பெருமையை. பெண்ணொழித்ததென்பது - மக்களென்னும் பொதுமொழி ஆண் பாலையே உணர்த்திற்றென்பது. என்பாரொடு சொல்பவர் நாணவென இயையும். தாள் - முயற்சி. கங. மிடறு - கழுத்து. உழைக்கன்று - மான்கன்று. அம்புலி - திங்கள். எதுவென்பது காரணப் பெயரெனவும், எவ்வாறெய்திற்றெனவும் பொருள்படும். இச்செய்யுள் சிலேடை. கச. இதழி-கொன்றை மாலை. விழியிணை - சூரியசந்திர நேத்திரங்கள். கரு. உள்ளத்துறு பிணி - மனநோய். கிள்ளையென்பது பிள்ளையென் பதற்கியைய இணைந்து வருமொழியாய்க் கிளியையுமுணர்த்திற்று. கசு. சலிப்ப - கவலைப்பட. இளமைகுலவு - இளமை விளங்குகின்ற. கஎ. நனைமாட்சி - தேன்பொருந்திய பெருமையை உடைய. வினை மாட்சி - காரியத்திறமை. கணவரளித்தது கொண்டு அறம் வளர்ப் பார்க்கே கற்புமாட்சி யுரித்தென்பது நூற்றுணிபாகலின் மனைமாட்சி யெய்து முனக்கே பெருங்கற்பு மாட்சியெனவும், அஃதியற்றுர்க்கு எங் வனமெய்து மென்பார் பினைமாட்சியார்க்குண்டெனவுங் கூறினர்.

நெடிய விலங்க லொருசிலை யாக்கிய நின்பதிமேற்
கொடிய வநங்கன் சிலைபோ யெடுத்துமுன் கொண்டெதிர்ந்த
ஒடிவி லருஞ்சிலைச் செங்கரும் போசொல் லுனதுநடுப்
பிடியு ளடங்கிய தென்னிது குன்றைப் பெரியம்மையே. (௧௮)

பண்டகு வீணை யொடுபாட வந்தவப் பாமடந்தை
கண்டழு மாறு மதிநிரை போலக் கவின்கனியும்
வெண்டலை மாலை கிடந்தொளிர் தோளிக்கு வீங்குமுலைப்
பெண்டகை மாமணி நீகுன்றை வாழும் பெரியம்மையே. (௧௯)

பெரியநாயகியம்மை கலித்துறை முற்றிற்று.

---

௧௮. நெடிய விலங்கல் - மேருமலை. அநங்கன் - காமன். முன் பதிமேலெதிர்ந்ததெனவும், உனது நடு செங்கரும்போ இதுபிடியு ளடங்கியதென் சொல் எனவுங் கூட்டுக. சிலைபோதல் - சிலையிற் றேர்தல். நடு - இடை. ௧௯. பாமடந்தை - கலைமகள். மதிநிரை - திங்களின் வரிசை. தோளி - வீணைக்குறிப்புப் பெயர். அழுமாறு நங்கணவர்தலையும் இவ்வாறுங்கொலென்னும் ஏக்கத்தா லென்க.

# அ. நன்னெறி

[இந்நூல் மக்கள் கடைப்பிடித் தொழுக வேண்டிய நல்வழிகளையெல்லாங் கூறுதலின் நன்னெறி என்று பெயர் பெற்றது. இந்நூலை அடிகளார் கடற்கரை மணலில் எழுதின ரெனவும் பின் மாணவர்கள் ஏட்டில் எழுதினரெனவுங் கூறுவர். இந்நூலின் அருமையையும் பெருமையையும் நோக்கி இதனை அறநூல்களோடு சேர்த்துப் பயின்று வருவது நெடுங்கால வழக்கமாக இருக்கின்றது. இந்நூற்பொருளை இளைஞர்களேயன்றி மற்றவர்களும் உணர்ந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும்.]

## காப்பு

மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

## நூல்

என்று முகம னியம்பா தவர்கண்ணுஞ்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்-துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழவோ
நாவிற் குதவு நயந்து. (க)

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற வின்சொற் பிறிதென்க-ஈசற்கு
நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு. (உ)

தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் றாங்கொள்க-தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொங்கையா யாவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து. (ங)

---

க. முகமன் - இனிய வரவேற்புரை. பூவில் - பூவினால். பூங்கை துன்றுசுவையை நாவிற்கு நயந்துதவும்; அது தன்னைப் புகழவோ புகழ்தற்கன்று என்பது. உ. ஏனையோர் - தீயவர்கள். பிறிது - ஈண்டுக் கொடிதென்னும் பொருட்டு. நல்லோன் - சாக்கிய நாயனார். சிலை - கல். கருப்பு - கரும்பு; மகரம் பகரமானது வலித்தல் விகாரம். ங. தங்க நெடுங்குன்று - பொன்மலை. உரியவர் - நட்புடையவர், உறவினருமாம். ஒன்றை ஒருவரிடமிருந்து பெறவேண்டுமானால், அவர்க்கு உரியவர் மூலமாகப் பெறவேண்டும்.

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்-பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. (௪)

நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கி னவர்பெருமை நொய்தாகும்-பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற்
புல்லினுந் திண்மைநிலை போம். (௫)

காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே-ஓதுகலை
எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டு மொன்றையே காண். (௬)

கடலே யனையம் யாங் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி-விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும். (௭)

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க-வெள்ளம்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு. (௮)

மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவிற்-பலியேல்
கடவு ளவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே
படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து. (௯)

---

௪. பேறு - செல்வம். புயல் - முகில். பெய்யா- பெய்து. ௫. திண்மை - வலிவு. நொய்து - சிறுமை, இங்கு அற்பமாம். புல்லினும். தழுவினாலும். ௬. ஓதுகலை எண்ணிரண்டும் ஒன்றும் மதி-சொல்லப்பட்ட பதினாறு கலைகளும் நிரம்பப்பெற்ற திங்கள். நோக்கல் - பார்த்தல். எண்ணிரண்டு கலையும் எனக்கூட்டுக. கணவனும் மனைவியும் ஒரு வேலையை ஒத்துச் செய்யவேண்டும். ௭. அனையம் - ஒப்பாவேம். அடலேறு-வளமை தங்கிய காளை. முனிக்கரசு - அகத்தியர். பனிக்கடல் - குளிர்ச்சி பொருந்திய கடல். அகத்தியரைச் சிவபெருமான் தம்மை ஒத்தவராக விதந்த சிறப்புடைமையினென்க. ௮. கவர்ந்து - வயப்படுத்திக் கொண்டு. ஓங்கு - மேன்மேல் உயருகின்ற; இங்குப் பெருகுகின்ற. தடங்கரை - பெரியகரை. ௯. விரவலர் - பகைவர். மருவில் - பொருந்தினால். பலி - பிச்சை. புள்ளரசு - கருடன். விரவலரை ஐ அச்சப் பொருளின் வந்த இரண்டனுருபு. கட்செவி - பாம்பு. இது கண்களையே செவிகளாகக் கொண்டது; அதனால் இப்பெயர் பெற்றது.

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்-திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகின்
நிறையிருளை நீக்குமே யின்று. (௧0)

பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாந்-துப்பிற்
சுழற்றுங்கோல் கற்றூணைச் சூழு வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் துரும்பு. (௧௧)

வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத லூனே புதுமை-திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு. (௧௨)

பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர்-சுரக்கும்
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர். (௧௩)

தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மென்று
தலையா யவர்செருக்குச் சார்தல்-இலையால்
இரைக்கும்வண் டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு. (௧௪)

---

௧0. விழுமியோர் - மேலோர். கறையிருள் - தன்னிடமுள்ள கறுத்த இருள். நிறையிருள் - மிகுதியான இருள். கறை - மாசு; களங்கம். நல்லோர் நிலாவைப்போலத் தங்கட்கு எவ்வளவு துன்பமிருந்தாலும் அதனைக் கருதாது பிறர் துன்பத்தை நீக்குவர். ௧௧. புல்லியர் - இழிந்தோர். மெய்ப்புலவர் - மெய்யறிவாளர்கள். துப்பு - வலிமை. புலன்கள் ஐந்தாவன: மெய், வாய், கண், மூக்குச், செவி என்பன. இவைகளால் அறியப்படுவன, ஊறு, சுவை, உருவம், நாற்றம், ஓசை ஆவனவாம். அற்பர்கள் புலன்கள் வழிப் பட்டுத் துன்பப்படுவர், உண்மையறிவு வாய்ந்தவர்கள் அவைகளால் துன்பப்படார். ௧௨. பொருந்துதல் - பொருந்தியிருத்தல். பொள்ளல்- ஓட்டை. வீதல் - புறம் போதல். ஒன்பான் வாயில் - ஒன்பது துவாரம். புதுமை - அற்புதம், இங்கு வியக்கத்தகுவது. சீதம் - குளிர்ச்சி. ௧௩. பெருக்கம் - மிகுதி. சுருக்கம் - குறைவு. கலை - நிலவொளி வளர்ந்தும் குறைந்தும் தோன்றும் நிலா. தன் கலைக்கேற்ப ஒளி தருவதுபோல் மேலான அறிவுடையவர்கள் தம்மிடத்துள்ள பொருளுக்கேற்றபடி பிறர்க்கு உதவுவர். ௧௪. தொலையா - அழியாத. தலையாயவர் - நல்லியல்புடைய சான்றோர்கள். செருக்கு - ஆணவ முனைப்பு; அதைக் கர்வம் [என்பர். இரைக்கும் - ஒலிக்கும். கோதை - இங்குப் பூமாலை; ஈர்ங்கோதை என்பது குளிர்ந்த பூமாலை.

இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும் - நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூ றெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. (௧௫)

தம்மையுந் தங்க டலைமையையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர் - தம்மின்
இழியினுஞ் செல்வ ரிடர்தீர்ப்ப ரல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல். (௧௬)

எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி. (௧௭)

இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே - பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல். (௧௮)

நல்லோர் வரவா னகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவா னழுங்குவார் - வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர. (௧௯)

பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியி னிழுதாவ ரென்க - தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்தும் பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண். (௨௦)

---

௧௫. இல்லான் - வறுமையுடையவன். மொழியிலார் - ஊமைகள். முது - பழைய. ௧௬. தலைமை - பெருமை. இழியினும் - கீழானவர்களாக இருந்தாலும். அல்குகழி - சிறிய உப்பங் கழிநிலம். ௧௭. நல்கூர்ந்தான் - வறுமையடைந்தான். அரம்பை - வாழை. ஈகை - கொடுத்தல். தொடி, தொடுக்கப்படுவது தொடி; அஃதிங்கு வளையல். அஃது அன்மொழித்தொகையாய் வளையலை யணிந்த பெண்ணையுணர்த்தி நின்றது. ௧௮. வியனுலகம் - பரந்த உலகம். தழற்கதிர் - கதிரவன்ஒளி. தண்ணென்கதிர் - நிலவுக் கதிர். இரு - பெரிய. உலகம் - இங்கே உலகத்திலுள்ளவர்களை. கதிர் - நிலா. ௧௯. அல்லோர் - தீயோர். அழுங்குவார் - வருந்து வார்கள். சுழல்கால் - சூறைக்காற்று. உறீஇ - அடைந்து; சொல் லிசையளபெடை. ௨௦. இழுது - வெண்ணெய். மண்டு - நெருங்கிய. கலுழும் - வருந்தும்.

எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணி னிலையாம்-எழுத்தறிவார்
ஆயுங் கடவு ளவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை. (உக)

ஆக்கு மறிவா னலது பிறப்பினுன்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க-நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு. (உஉ)

பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
திகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம்-நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகால்
எறும்பூரக் கற்குழியு மே. (உங)

உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே-வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்புங் கனி. (உச)

கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகன நண்ணுரே-வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள். (உரு)

உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்-மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றே விளம்பு. (உசு)

கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வர்-அம்மா

---

உக. எழுத்து - இலக்கணம். சுரநீர்மிகை - விண்ணகக் கங்கையின் பெருக்கு. வீயும் - ஒழியும். உஉ. ஆக்கும் - கல்வியால் உண்டாக்கும். மீக்கொண்ட-மேன்மையாகக் கொள்ளுகிற. அரவின்பருமணி-பாம்பின் சிறந்த மணி. கடு - நஞ்சு. உங. பகர்ச்சி - உரையாடல். பயில - பழக. நெஞ்சத்திட்பம் - மனத்திண்மை. நெகிழ்ச்சி பெறும் - தளர்ச்சியை அடையும். உச. குணம் - நல்லகுணம். கீழ் - கீழ் மக்கள். உரு. கயவர் - கீழ்மக்கள். கனநண்ணுர் - பெருமையை அடையமாட்டார்கள். வில்லார்கணை - வில்லிற்பூட்டுகிற அம்பு. நொய்து - கனமில்லாதது. உசு. ஒண்புலவர் - பேரறிவு பொருந்திய புலவர்கள். மடவரல் - இளம்பெண். உஎ. உகவாமல்-விரும்பாமல்.

முளைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று. (உஎ)

முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர்-நனிவிளைவில்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை. (உஅ)

உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கு மொருகோடி யாக-நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான். (உகூ)

கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே-வெள்ளம்
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு. (௩0)

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்-நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது. (௩க)

பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே-நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான். (௩உ)

எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞரது வேண்டாரே-தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல். (௩௩)

---

எயிறு-பல். வலியன-கடினமான உணவுப் பொருள்கள். உஅ. முனிவு-சினம். மூதறிஞர் - பேரறிஞர்கள். கதலி - வாழை. பழுத்தாயினும்-பழுத்தாலும். உகூ. பரத்துற்றோர் - பரம்பொருளை நாடியிருப்பவர்கள். பனிமொழி - குளிர்ந்தமொழி. மதிமான் - திங்களில் உள்ள மான். ௩0. கொள்ளும் - உயிரைக் கொள்ளும். குறுகுதல் - அடைதல். பெருகுதற்கண்-வெள்ளம் வந்த பொழுது. ௩க. தாக்கும்-துன்புறுத்தும். வீரம் - ஆண்மை. கோலடி - பிரம்பாலடிக்கும் அடி. கடிது-விரைவாக. ௩உ. பனுவல் பயன் - நூற்பயன். பன்னும் - கூறும். தேர்-தெளியும். காழ் - வலிமை. ௩௩. எள்ளாது - இகழாது. விள்ளா-பழிச்சொல்லுக் காளாகாத.

அறிவுடையா ரன்றி யதுபெறார் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும்-பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு. (௧௪)

கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தா மென்று மதியாரே-வெற்றிநெடு
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். (௧௫)

தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்-எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய். (௧௬)

பெரியார்முற் றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழுந்-தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து. (௧௭)

நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை யாகாதே-நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம். (௧௮)

கற்றறியார் செய்யுங் கடுநட்புந் தாங்கூடி
உற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம். (௧௯)

---

௧௪. அதுபெறார் - அறிவிலார். செறி - பொருந்திய. பிறைநுதால் - பிறைபோலும் நெற்றியை உடையவளே. இவ்வாறு பெண்களை விளித்துக் கூறுதலை மகடூஉமுன்னிலை என்பர். இத்தகைய மகடூஉமுன்னிலைகள் தமிழ் நூல்களில் பல விடங்களினும் வருவதைக் காணலாம். இவ்வாறு ஆடூஉமுன்னிலையுமுண்டு. ௧௫. காமுறுவர் - விரும்புவர். வேல் வேண்டும் - வேல் விரும்பும். ௧௬. விழுமியோர் - மேலோர். மிக்கார் - திமையில் மிக்கவர்கள். முளிபுல் - காய்ந்தபுல். ௧௭. புனைந்துரைத்த - புகழ்ந்து பேசிய. உயர்வு தரியாது அகன்று - பெருமை நில்லைபெறாமல் நீங்கி. தாழும் - இழிவடைவான். பொன்னுயர்வு - திருமகளின் பெருமையை. ௧௮. கேண்மை - நட்பு. அல்லார் - தீயோர். ௧௯. தாம் கூடியுற்றுழியும் - கூடியிருக்கும் வரையிலும்.

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றெவ்வார்-மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண். (௪0)

நன்னெறி முற்றிற்று.

---

௪0. புனை - அணி. புனையா - அணியாத. பொன்னணிந்த பிற வுறுப்புக்கள் கண்ணுக் கொப்பாகாதது போல் பொன்னணியணிந்த அரசர்கள் புலவர்கட்கு ஒப்பாக மாட்டார்கள். மன்னும் - நிலைபெற்ற.

# கூ. திருவெங்கைக்கோவை

[தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறுவகை நூல்களில் கோவை யென்பதும் ஒன்று. இக்கோவை அகப்பொருளின் மீது வைத்துப் பாடப்பெறும். அகப்பொருள் என்பது அகத்தினாலாகிய பயன். அஃது ஒருவனும் ஒருத்தியும் அன்பினாற் கூடுங் கூட்டத்தைப் பொருளாகக் கொண்டது. அக்கூட்டத்தின்பின் இன்னவா றிருந்தது என்று வாயாற் கூறமுடியாது உள்ளத் துணர்வானே நுகரப்பெறுதலின் இஃது அகப்பொருள் என்று பெயர் பெற்றது. அகப் பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாக விளங்கும் கோவை நூல் நம்தமிழ் மொழிக்கே உரிய சிறப்பு நூலாகும். ஓரின மணிகளை ஒழுங்குபெறக் கோத்தல் போல அகப்பொருட் கிளவிகளை ஒழுங்குபெறக் கோத்தலின் இது கோவை யென்று பெயர் பெற்றது. இக்கோவை களவு கற்பு என்னும் இரண் டியல்களில் இருபத்தாறு கிளவிக் கொத்துகளால் நானூறு துறைகளைக் கொண்டு முடிகிறது. 426 பாடல்களைக் கொண்டது. எல்லோரும் இந்நூலைப்பயின்று இன்புறு வார்களாக!]

## காப்பு

கட்டளைக் கலித்துறை

பூவை மலர்நிறத் தெம்பெரு மாட்டி பொருப்பரையன்
பாவை வளர்க்குங் கிளிமுன்கை யாளொரு பான்மருவுந்
தேவை வளர்சடைத் தென்வெங்கை வாணனைச் சேர்ந்துவருங்
கோவை படர்வதற் குள்ளூன்று வாமொற்றைக் கொம்பரையே.

## நூல்

## களவியல்

### கைக்கிளை

காட்சி

பூவும் பழுத்த செழுந்தீங் கனியும் பொழியமுதம்
மேவுங் குடங்க ளிரண்டுட னேயிரு மீனுங்கொண்டு

---

பூவைமலர் - காயாம்பூ. பொருப்பரையன் பாவை - உமாதேவி. கோவை - கோவையென்னும் நூலையும், கோவைக் கொடியையும்; கொம்பர் - கொம்பையுடைய யானைமுகக் கடவுளையும், அர் இறுதி பெற்ற கொம்பையு முணர்த்தலின் சிலேடை.

க. குடங்கள் - கொங்கைகள். இருமீன் - கண்கள். சேஉந்து - காளையைச் செலுத்துகிற. தூமணி-மாணிக்கம்; ஈண்டு மாணிக்கத்தைப்

சேவுந் தழகர் திருவெங்கை வாணர் சிலம்பின்மலர்
தூவும் பொழிலி லெதிர்ப்பட்ட தாலொரு தூமணியே. (க)

ஐயம்

மண்ணோ விரைச்சந் தனவரை யோமலர் மாளிகையோ
விண்ணோ வலைத்தண் புனலோ பழமலை வெங்கையன்ன
பெண்ணோ டிருக்கும் பொழுதிளஞ் சேலிற் பிறழுநெடுங்
கண்ணோ டிருக்கு முகம்போல்வ தாங்கது கண்டிலமே. (உ)

இதுவுமது

முலைப்பகை யோகட் பகையோ வவர்தம் முகப்பகையோ
மலைப்பகை யாம்வின் முழுதாளி யென்றும் வணங்குமயன்
றலைப்பகை யாய கரமுடை யான்வெங்கை சார்ந்துநின்ற
சிலைப்பகை யாகு நறுநுத லார்தந் திருமனையே. (௩)

துணிவு

சேணும் பிலமு மலர்மா ளிகையுஞ் செழுஞ்சிலம்பும்
நாணும் படிநம் படியே தவப்பய னண்ணியமை
பூணும் பணியரன் வெங்கையின் மாநிழற் பூம்பொழில்வாய்க்
காணும் பிறைநுத லாட்சும வாநின்று காட்டியதே. (௪)

குறிப்பறிதல்

பாயு மலர்த்தண் பொழில்சூழும் வெங்கைப் பழமலைசீர்
ஆயு முனிவரர் தாமே முனிவரு ளாக்குதல்போல்

---

போன்ற தலைவி. முகமாகிய தாமரை முதலியன கொண்டு எதிர்ப் பட்டதென்க. உ. விரை சந்தன வரை - மணமுள்ள பொதியமலை. மலர்மாளிகை-தாமரை மலராகிய வீடு. பிறழும்-புரளும். பெண்ணோ டிருக்கும்பொழுது கண்ணோடிருக்கும் முகம் போல்வதாகிய இடம், மண்ணுதியவற்றுள் எதுவோ அது கண்டிலம் என்பது. அவனிமங்கை வரையரமங்கை திருமங்கை தேவமங்கை நீரரமங்கையென்பவருள் எம் மங்கையோவென்பான் அவரவரிடஞ்சுட்டி ஐயுற்றவாறு, பிந்தியதும் இது. ௩. மலைப்பகையாளி - இந்திரன். அயன் - நான்முகன். ஒரு காலத்தில் மலைகள் சிறைகளையுடையனவாய்ப் பறந்து நகரங்களின் மீதமர்ந்து அந்நகரங்களைப் பாழ்படுத்த இந்திரன் அம்மலைகளின் சிறகுகளையறுத்துத் தள்ளினமையால் மலைப்பகையாளி என்றார். சிலை - வில். நறு - அழகிய. முலையும் கண்ணும் முகமுங் கூறுதலான், முறையே மலைமகளோ, கடல்மகளோ அன்றி மலர்மகளோவென ஐயப்பட்டவாறாயிற்று. நான்முகனுடைய தலைகளில் ஒன்றைக் கிள்ளி யெறிந்தபடியால் இறைவன் கை நான்முகன் தலைப்பகையாயது. ௪. சேண் - விண்ணுலகம். பிலம் - பாதாளலோகம். மலர்மாளிகை - தாமரைவீடு. நம்படி - நமதுபூமி. நம்படியே சுமவாநின்று நண்ணியமை காட்டியது என்க. ௫. நூல்பகவு - நூலிழையின்வகிர். முனிவு - சினம்.

நோயுமந் நோய்க்கு மருந்துந் தாநிற்கு நூற்பகவிற்
றேயு மருங்குற் பெருமுலை மாதர் திருக்கண்களே. (௫)

## இயற்கைப்புணர்ச்சி

### இரந்துபின்னிற்றற்கெண்ணல்

புரந்தாடு மையர் திருவெங்கை வாணர் பொருப்பினின்ற
அரந்தா முயிற்கண் மடமா திரத்தக்க ராதலினல்
இரந்தாய் குவமிவர் தந்தன நாமின் றினியநெஞ்சே
கரந்தா னமக்குப் பழியுள தாயிற் கழறுகவே. (௬)

### இரந்துபின்னிலைநிற்றல்

தானுந் தரக்கன் றனைமீண் டெடுத்துய்யத் தண்ணளியால்
ஆளும் பழமலை வெங்கையன் னீரொன் றலாதுபல
வாளுங் கணையுங் கதிர்வேலு மானு மதர்விழியால்
நீளுந் துயர்செய்து வாளா நின் றீரிது நீதியன்றே. (எ)

### முன்னிலையாக்கல்

பாரக்கைச் சூலத்தர் வெங்கையி லேகண் பகைத்துநின்ற
வாரக்கட் பூஞ்சுனைப் போதையெல் லாமட லோடுமடல்
சேரக்கட் டிக்குழற் காட்டிலி டாமற் சிறந்தவலங்
காரக்கட் பேதை தனித்துநின் றுயென்ன காரணமே. (அ)

### மெய்தொட்டுப்பயிறல்

மெய்கூ றிடும்வரை மங்கைம ணாளர்தம் வெங்கையினிற்
பொய்கூ றிலஞ்சிலர் போலிலை யேயெனப் புல்லிழையிற்

---

"இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" (கக0 - க)

என்னுந் திருக்குறட் கருத்தைக் கொண்டதிப்பாட்டு. ௬. புரந்து - யாவரையும் காப்பாற்றி. அரந்தாம் - அரத்தினல் அராவப்பட்ட. கரந்தால் - இல்லையென்று மறைத்தால்

"இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று"

என்னுந் திருக்குறளின் கருத்தது. எ. அரக்கன் - இராவணன். உய்ய - பிழைக்க. அன்னீர் - நிகர்த்தவரே. எனக்குத் துன்பஞ்செய்த நீர் அருள்புரியாமல் நிற்பது தக்கதன்று என்பது கருத்து. அ. கை பாரம் சூலத்தர் - கையிற்பாரம் பொருந்திய சூலப்படையை உடையவர். சுனைப்போது - சுனையிலுள்ள மலர்கள். குழல் காடு - கூந்தற்காடு. வார் கள் என்பதை கள் வார் என மாற்றுக. கள் வார் - தேனெழுகு கின்ற. கண்ணுக்குப் பகையாவது மலர். அது கண்ணை யொத்திருத்த லால் "கண் பகைத்து நின்ற வாரக்கட் பூ"என்றூர் என்க. கூ. புல்இழை-

செய்கூ றதிலொன் றளவுள தேயிவள் சிற்றிடைதான்
மைகூர் குழலில் வெறிகொண் டுலாவு மதுகரமே. (க)

இதுவுமது

மன்னிசை வெங்கை யுடையபி ரான்வரை மானுசுப்பைப்
பொன்னிசை கொங்கை யொடித்தாலு நிந்தை பொருந்துநுமை
மின்னிசை மென்குழ லேறன்மின் னீவிர் விளங்கிலிரோ
இன்னிசை வண்டினங் காள்காக தாலிய மென்பதுவே. (க0)

பொய்பாராட்டல்

முழுதலங் கார மழுவோன் றிருவெங்கை மொய்குழலுன்
பழுதறுங் கொங்கைக் குடைதுய ராற்பனி மாமலயம்
அழுதகண் ணீரைப் பொருநையென் பாரதன் வெய்துயிர்ப்பை
எழுதருந் தென்ற லெனவே யுலக ரியம்புவரே. (கக)

இதுவுமது

உன்மலை வார்முலை நல்லேர் கவர்ந்த துதவுதற்குப்
பொன்மலை நாணெண் கழுத்தொடு தாளுறப் பூட்டிவெங்கை
மன்மலை மாதுமை பங்காளன் முன்னம் வளைத்ததன்றி
வின்மலை யாக்குத லென்மிளிர் வேற்கண் விளங்கிழையே. (கஉ)

இடம்பெற்றுத்தழால்

வந்தாளு மையர் திருவெங்கை வாணர் வரையணங்கே
நந்தா மணிவிளக் குற்றுதிர் பூவணை நன்கமைந்த
பைந்தா துகுக்குங் கணியேறு மல்லிகைப் பந்தரிடஞ்
சிந்தா குலமற நாமிசை யோர்மணஞ் செய்வதற்கே. (கங)

---

நுண்ணிய நூல் இழை. மைகூர் குழல் - கருமை மிகுந்த கூந்தல். மை - கருமை. மதுகரம் - வண்டுகள். செய் - இங்கே வகிர்ந்த. க0. மன் - நிலைபெற்ற. மான் போன்ற சாயலுடைய தலைவி. பொன் இசை கொங்கை - பொன் போலத் தேமல் பரவியதனம்; பொன்னணிகள் பொருந்து மெனினுமாம். நுசுப்பு - இடை. மென் குழல் - மெல்லிய கூந்தல். மின் இசை - மின்னுதலைப் பொருந்திய. காகதாலியம் : ஒரு நியாயம் ; இது காக்கையேறப் பனம்பழம் விழுந்த தென்பது. இதனை அறிந்திலிரோ என்றபடி. கக. முழுதலங்காரம் - மிகுந்த அழகு. உடைதுயர் - தோற்றுப் போன துன்பம். வெய் துயிர்ப்பு - பெருமூச்சு. பொருநை - தாமிரபரணி நதி. கஉ. மலை - மலையைப் போன்ற. வார்முலை - கச்சணிந்த தனம். ஏர் கவர்ந்தது - அழகைக் கைப்பற்றிக் கொண்டது. உதவுதற்கே பொன்மலையை வளைத்தது; அல்லாமல் மலையை வில்லாக்குதல் யாண்டையதென்பது. கங. இசையோர்மணம் - காந்தருவமணம். பைந்தாது - பசிய மகரந்தப்பொடி. கணி - வேங்கை. காந்தருவ மணம் புரிதற்கு இடம் உற்று அமைந்தது என்பது.

**வழிபாடுமறுத்தல்**

அகலா தடைக்கலம் புக்கபுட் காகத்தன் னுகமெல்லா
மிகலா வரிந்து புரந்தவற் காத்தவர் வெங்கையிலே
இகலா தயற்சந் தனம்படர்ந் தேறு மிளங்கொடியே
புகலா யெனக்குயிர் போலுநன் னுனைப் புரந்தருளே. (கச)

**இடையூறு கிளத்தல்**

மதயானை யீருரி யூடே மறைந்து மழைமறைத்த
உதயா திபனென நின்றூர்தம் வெங்கையி லுன்றனைப்போற்
கதையா லெனினு மறிந்திலம் வேள்கல கத்தணங்கே
புதையாது பைம்பொற் குடங்கதிர் வானைப் புதைப்பதுவே. (கரு)

**நீடுநினைந்திரங்கல்**

சூலக் கரத்தர் திருவெங்கை வாணர்முன் சுட்டமதன்
நீலக் கணையிற்கை வைத்தா னினிச்சற்று நேரநிற்பிற்
காலற் கிரையிடு மென்று வியையிந்தக் காரிகையார்
கோலக் களபக்குன் றென்றே மருவக் குறுகுவதே. (கசு)

**மறுத்தெதிர்கோடல்**

சந்தாப வெந்தழ றன்னடி யார்க்குத் தணித்தருளுஞ்
செந்தா மரைமலர்த் தாளர்தம் வெங்கைச் செழுஞ்சிலம்பில்
நந்தா மதுகை யொடுபிறப் பேழு நமைத்தொடர்ந்து
வந்தார் தமையிந் நிறையோ வராமன் மறிப்பதுவே. (கஎ)

**வறிதுநகைதோற்றல்**

புல்லார் பவர்கணெற் சோறுபெற் றுங்குப் பொருந்தியென்றும்
அல்லார் மதிய நிலவுண் சகோர மருந்தவுங்கல்
வில்லார் திருவெங்கை யன்பர் முகாம்புயம் வீறுதவும்
நல்லார் வதன மதியிடந் தோன்று நகைநிலவே. (கஅ)

---

கச. ஆகம் - உடல். இகலாய் - மனவுறுதியோடு. இகலாது - நீங்காது. மிகல் - மிகை. புரந்தவன் - சிபிச் சக்கரவர்த்தி. அயல் படர்ந்தேறல் - தனங்களிலணியப்பட்டுப் பரவி விலவல். கரு. மதயானை ஈருரி - கயா சுரனது தோல். வேள் கலகம் - காமப்போர். பைம்பொற்குடம் - கொங்கை. உதயாதிபன் - இளங்கதிரவன். உன்றனைப் போலப் புதைப்பது கதையாலும் அறிந்திலம் என்க. இத்துறை நாணிக் கண்புதைத்தலெனவும்படும். கசு. நீலக்கணை - நீலமலராகிய அம்பு. களபக்குன்று - சந்தனமலை (கொங்கை.) இம்மலையரண் கிடைக்கின் மதனை வெல்லலாம் என்பது. கஎ. சந்தாபம் - பிறவிவெப்பம். நந்தா - கெடாத. மதுகை - வலி. நிறை - கற்பு. கஅ. புல்லார்பவர் - புல்லை யுண்பவர்கள். அல் ஆர் - இரவிற் பொருந்தும். வீறு உதவும் - பெருமகிழ்ச்சியைக் கொடுக்கும். அருந்தவம் குறைவின்றித் தோன்றும் என்பது. முகாம்புயத்துக்கு என உருபு விரிக்க.

### முறுவற்குறிப்புணர்தல்

தனிவா னவர்நந் திருவெங்கை வாணர் தழலெறிப்ப
முனிவா னகைசெய் நகைபோல்வ தன்றிம் முகின்முலையார்
பனிவாண் மதிமுகத் தேயெனை யாளப் பரிவின்மனக்
கனிவா லெழுநகை யீதம்பி காமக் கடலினுக்கே. (கக)

### முயங்குதலுறுத்தல்

கொங்கைக் குவடு மணியல்குற் பாம்புங் குறுமுனிவன்
அங்கைத் தலமடங் காவிழி வாரியு மாங்கிருப்ப
வெங்கைப் பழமலை யாரரு ளாலவ் விசும்பறியா
மங்கைப் பருவத் திவள்வா யமுதிங்கு வாய்த்ததுவே. (உ0)

### புணர்ச்சியின் மகிழ்தல்

தாண்டுஞ் சினவிடை யெம்மான் றனிவெங்கைத் தண்சிலம்பில்
யாண்டும் பெறலரு மின்பமெல் லாமைம் புலனுமின்று
தூண்டுஞ் சுடரென நின்றவிம் மாதரிற் றுய்த்தனவால்
வேண்டும் பொருணமக் கேதோ வினியிந்த மேதினிக்கே. (உக)

### புகழ்தல்

புறந்தாழ் குழலுமை பங்காளர் வெங்கை புரத்தர்வெற்பிற்
குறைந்தா லிவணுத லொவ்வாய் நினது குறைநிறைந்தாற்
சிறந்தா யிழைமுக மொவ்வாய் விளங்குஞ் செழுங்கலையால்
நிறைந்தாலென் னன்றிக் குறைந்தாலென் னெங்கட்கு நீமதியே. ()

---

கக. தழல் எறிப்ப - அனல் வீச. முனிவால் நகைசெய் - சினத்தினால் நகைத்தலைச் செய்கின்ற. அம்பி - தெப்பம்; புணை. தனி - தனக்கு ஒப்பில்லாத. பனி - குளிர்ச்சி. பரிவு - இரக்கம். வாள் - ஒளி. மதி - இங்கே திங்கள். இவள் புன்முறுவல் காமக்கடலைக் கடப்பதற்குப் புணையாயிற்றும். அம்முறுவல் பரிவொடு தோன்றுதலின் அவ்வாறாயிற் றென்க. உ0. கொங்கைக்குவடு - கொங்கையாகியமலை. விழிவாரி - விழியாகிய கடல். குவடு - உச்சி; அங்கை என்பதை அகம் கை எனப் பிரிக்க. அங்கை என்பது உள்ளங்கை. ஆங்கிருப்ப - தொழிற் படாமல் வறிதே யிருக்கவும். உக. தாண்டும் சினவிடை - தாண்டிச் செல்லுதலையுடைய சினம் பொருந்திய காளை.

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள."

என்பவாகலின் இவ்வாறு கூறினன். ஐந்திந்திரியங்களும் இன்பமெல்லாந் துய்த்தன என்க. உஉ. தாழ் - தொங்குகின்ற. திங்கள் கலை குறைந்தாலும் அன்றி வளர்ந்தாலும் இவள் முகத்துக் கொவ்வாது என்பதாம். இதனால் இவளது நலம் பாராட்டலாயிற்று. சிறந்த ஆயிழை - சிறந்தாயிழையென விலைமொழி யீற்றகரந் தொகுத்தலாயிற்று. "புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை" என்ற விடத்துப் போல.

## வன்புறை

### அணிந்துழிநாணியதுணர்ந்து தெளிவித்தல்

மன்று டியதிரு வெங்கைபு ரேசர் மணிவரைமேல்
நன்று யணிகுவ னென்றுலு நின்பெரு நாணையஞ்சிக்
குன்று ரெதிரொலி போலநின் பாங்கியர் கோலணியா
இன்று யிழையணிந் தேன்வெரு வேனெஞ் சிளங்கொடியே. (௨௩)

### பெருநயப்புரைத்தல்

கடக்கும் பவத்தர் திருவெங்கை வாணர் கனகவெற்பிற்
குடக்குங் குமமுலை யாண்மாட் டலாமற் குலவளிகாள்
நடக்குங் கமலமு நோக்குங் குவளையு நாணிலவை
அடக்குங் குமுதமுங் கண்டதுண் டோவுங்க ளாவியிலே. (௨௪)

### தெய்வத்திறம்பேசல்

சதிவசத் தாய சடையார் திருவெங்கை நாட்டொருவர்
மதிவசத் தாலன்றி வான்கூன் மதிநுதல் வல்லிசதா
கதிவசத் தால்வரும் வள்ளிதழ்ப் போதின் கடிமணம்போல்
விதிவசத் தால்வரு நங்கேண்மை யாவர் விலக்குவரே. (௨௫)

### பிரியேனென்றல்

பாவிடை வைத்த பெரும்புகழ் வெங்கைப் பழமலைகைம்
மாவிடை வைத்த விகல்வாள் விழியெழின் மாதர்தமை
நாவிடை வைத்தவன் மார்பிடை வைத்தவ னுணவகப்
பூவிடை வைத்த நினையோ பிரிகுவன் பூங்கொடியே. (௨௬)

### பிரிந்துவருகென்றல்

உழைதொட்ட வங்கையர் வெங்கையர் ஞான வொளியர்வெற்பில்
இழைதொட்டு விம்மி மலையோ டிகலு மிளமுலையாய்
மழைதொட்டு நின்றவிப் பூம்பொழிற் புக்கு மணிமகரக்
குழைதொட்டு மீளுநின் கண்போல் விரைந்து குறுகுவனே. (௨௭)

---

௨௩. மன்று - பொன்னம்பலம். நாணை - வெட்கத்தை. கோல் - செய்கின்ற. வெருவேல் - அஞ்சாதே. வரை - இங்கே மலை; இது மூங்கில் வளரப் பெறுதலால் இப்பெயர் பெற்றது. ௨௪. கடக்கும் பவத்தர் - பிறவியைக் கடந்தவர். நடக்குங் கமலம்-நடக்கின்ற தாமரை மலரைப் போன்ற காலடி. நோக்குங்குவளை - கண். நிலவு - ஈண்டு முறுவலொளி. ஆவி - தடாகம். ௨௫. சதாகதி வசத்தால் வரும் - காற்றின் வசப்பட்டு வருகின்ற. வள் இதழ் - வளவிய இதழ். ௨௬. பாவிடை வைத்த-பாக்களிலே அமைத்து வைக்கப்பட்ட. கைமா - கையிலுள்ள மான். அகப்பூ - மனமாகிய மலர். ௨௭. இழைதொட்டு - அணிகலன்கள் அணியப்பெற்று. விம்மி - பெருத்து. இகலும் - மாறுபடும். மழை தொட்டு நின்ற - முகில்கள் தவழுகின்ற. குழை-காதணி.

### இடமணித்தென்றல்

சீருக் கயல்விழி மாதேதென் வெங்கைச் செழும்பதியான்
கூருய்த் திகழ்திரு மேனியு மாதுமை கூறுடலும்
வேருய்ப் புணர்வதென் ஞேவந்துன் சாரல் வியன்பதியும்
மாருப் பழனத் தெமதூரு மொன்றி மருவுறுமே. (உஅ)

## தெளிவு

பழிமாற் றியபுகழ் வெங்கைபு ரேசர் பனிவரைமேல்
மொழிமாற் றெனும்பொருள் கோளினல் லாமன் மொழிபிறழார்
சுழிமாற் றியவுந்தி யாய்வரு வேனெனச் சொல்லியவவ்
வழிமாற்ற மும்பிறழ் மோபிற ழாது மறப்பினுமே. (உக)

## பிரிவுழிமகிழ்ச்சி

### செல்லுங்கிழத்தி செலவுகண்டுளத்தொடு சொல்லல்

உடையோர் சிறிதொரு கைதூக்கி வீசி யொருகையினைப்
புடையோ டரிக்க ணிலஞேக்கிச் சிற்ருெலிப் பூணுடனே
சடையோர் திருவெங்கை வெற்பினம் மாவி தனிநெஞ்சமே
நடையோ திமங்கள்கண் டென்னே பறக்க நடக்கின்றதே. (௩0)

### பாகனெடுசொல்லல்

பொன்னங் கிரிநிகர் திண்டேர் செலுத்தும் புகழ்வலவா
மின்னஞ் சடையர் திருவெங்கை வாணர்தம் வெள்ளருவித்
தென்னஞ் சிலம்பி லிடைமிடித் தார்தமைத் தேடியெதிர்
அன்னம் பிடியென வேநடந் தேகுநம் மாயிழையே. (௩க)

## பிரிவுழிக்கலங்கல்

### ஆயவெள்ளம்வழிபடக்கண்டிது மாயமோவென்றல்

ஆயவெள் ளத்தி னடுவே யிருக்கு மரசவன்னம்
பாயவெள் ளத்தமு துற்ருங் கெனக்ககப் பட்டதுதான்

---

உஅ. சிரு - சினவாத. கூறு - பாகம். பழனம் - வயல்; அது சார்ந்த இடமும் கொள்க. உக. பழிமாற்றிய-பழியை நீக்கிய. சுழி-நீர்ச்சுழி. உந்தி-கொப்பூழ். வழிமாற்றம்-தாழ்ந்தசொல். பிறழ்மோ-தவறுமோ? பிறழாது-தவருது. மொழிமாற்றுப் பொருள்கோள்-எண்வகைப் பொருள் கோளில் ஒன்று; அது அவ்வவ்விடங்கட்கியைய மொழிகளை மாற்றிப் பொருள் கொள்வது. வழி - முறைமை. ௩0. உடை-ஆடை. அரி-செவ்வரி. பூண்-அணிகலம். சடையோர்-சடையை உடையவர். ஆவி-உயிரைப் போன்ற தலைமகள். ஓதிமங்கள்-அன்னங்கள். புடை-பக்கம். வெற்பு-மிக உயர்ந்த மலை. ௩க. வலவன்-தேர்ப்பாகன். இடைமிடித்தார் - இடை வறுமைப்பட்டவர்;

மேயவெள் ளச்சடை யம்மான் றிருவெங்கை வெற்பிலொரு
மாயவெள் ளக்கன வோவறி யேனெஞ்ச மாழ்குவதே. (கஉ)

வாயில்பெற்றுய்தல்

சேவை யுகைப்பவர் வெங்கைபு ரேசர் சிலம்பின்மயல்
நோவை யொழிப்ப மருந்துகண் டோமினி நோவனெஞ்சே
பூவை யுருத்த மொழியார் மழைக்கட் பொறிவண்டுதாம்
பாவை யொருத்தி முகாம்புயத் தேசென்று பாய்கின்றவே. (கங)

பண்புபாராட்டல்

நிதிமுன் மிடியர் மனம்போ லவாவி நிகரில்வெங்கைப்
பதிமுன் புகுமுது குன்றுடை யார்பதம் பண்டரைத்த
மதிமுன் மரையு மரைநா யகன்முன் மதியுங்கண்டோர்
விதிமுன் கொணரு மிவர்முகம் போல வியக்கிலரே. (கச)

பயந்தோர்ப்பழிச்சல்

செந்தா மரையு மரிமார்பு மென்னத் திருமகடான்
நந்தா மனையிடை யின்றிருந் தாங்கெந்த நாளுமுற
அந்தாழ் சடையவர் வெங்கையி லேநம தாவிநிற்ப
வந்தா ரமுதிதழ் தந்தாரைத் தந்தவர் வாழியவே. (கரு)

கண்படைபெறாதுகங்குலுறுதல்

அரவாம் பணியினர் வெங்கைபு ரேச ரணியழகின்
வரவாங் கதிரென் றுறுமோ வுடுமொக்குள் வந்தெழவே
விரவாம் புயற்கர வோடவிர் மாமதி வெள்வளைசேர்
இரவாங் கடலில் விழுந்தமிழ் வேலை யெடுப்பதற்கே. (கசு)

அஃதாவது இடை சிறுத்தவர்கள். அன்னம் பிடி - அன்னமும் பெண் யானையும்; உணவு ஒருபிடி. இடைமிடித்தார் அன்னம்பிடி - என்பன சிலேடை. கஉ. ஆயவெள்ளம் - தோழியர் கூட்டம். வள்ளம் - கிண்ணம். பாயவெள்ளம் - பயவெள்ளம்; ஈண்டுப் பாற்கடல். கங. சே - காளை. நோவல் - வருந்தாதே. பூவை - நாகணவாய்ப் புள். உருத்த-வென்ற. சிலம்பு-மலை. இது எதிரொலித் தலால் இப்பெயர் பெற்றது. முகாம்புயம் - முகம் அம்புயம்; முகமாகிய தாமரை. பொறி-அறிவு. கச. நிதி-செல்வம். மிடி-வறுமை. மதி-ஈண்டு முழுத் திங்கள். மரை-முதற்குறை. தாமரையை மலர்த்துதலால் கதிரவனை மரை நாயகன் என்றார். தாமரையும் மதியும் ஒளியிழத்தலைக் கண்டவர் உவமியார்: காணாதவரே முகத்துக்கு உவமிப்பரென்பது. கரு. அரிமார்பு - திருமாலின் மார்பு. நந்தாமனை - அழிவற்ற இல்லத்தில். எந்நாளும் பொருந்த வாழிய என்று கூட்டுக. கசு. அரவாம் பணியினர் - பாம்பாகிய அணிகலன்களையுடையவர். உடு - விண்மீன். மொக்குள் - குமிழிகள். புயல் கரவோடு - முகிலாகிய முதலையோடு. வெள்வளை-வெள்ளிய சங்கம். வரவாங்கதிர்-வருதலையுடைய கதிரவன்.

## இடந்தலைப்பாடு

### தந்ததெய்வந்தருமெனச்சேறல்

மின்றந்த வேணியர் வெங்கைபு ரேசர் மிகுமருளால்
அன்றந்த வாரி நடுவே யொருவ னகற்றியிட்ட
பொன்றந்த தெய்வமன் றேமலர் மாவைப் பொழிலிடத்தின்
முன்றந்த தின்றுந் தருநெஞ்ச மேசெலின் முந்துறவே. (கஎ)

### முந்துறக்காண்டல்

அங்கஞ் சுமந்த திருமார் புடைவெங்கை யானருளால்
வங்கஞ் சுமந்த கடற்பிற வாமல் வருமமுதஞ்
சிங்கஞ் சுமந்த கரியுட னேயொண் செழுந்தரளச்
சங்கஞ் சுமந்தசெந் தாமரை தோன்றத் தனிவந்ததே. (கஅ)

### முயங்கல்

மடலு மணமு மெனவே நிறைவெங்கை வாணர்தமைத்
தொடலு மடியர் பெறும்பே றெனவிவ டோண்மருவி
உடலு முயிரு மனமுமெ லாம்வளர்ந் தோங்குமின்பக்
கடலு ளழுந்தி யவசமுற் றேதையுங் கண்டிலமே. (கசு)

### புகழ்தல்

தாங்குழை யாம லருள்வோன் றிருவெங்கை நாயகன்கைத்
தாங்குழை யேயன்றி மென்முலை தாக்கித் தளருமிடைப்
பூங்குழை யாயெப் படிகுதித் தாலுமிப் புல்லறிவாய்
நீங்குழை யோநின் மதர்வே னெடுங்க ணிகர்ப்பதுவே. (௨0)

### ஆயத்துய்த்தல்

வானோக்கி நிற்கும்பைங் கூழ்போ லவுமொரு மன்னவன்செங்
கோனோக்கி நிற்குங் குடிபோல வுந்தடங் கோட்டிமையத்

---

கஎ. மின்தந்த - மின்னலைப் போன்ற: மலர் மாவை - தாமரை மலரில் இருக்கின்ற திருமகளைப் போன்றவளை. ஏலேலசிங்கர் எறிந்து விட்ட பொன்னுருண்டை மீண்டுங் கரைக்குவந்த செய்தி இப்பாட்டிற் குறிப்பிடப்பட்டது. கஅ. அங்கம் - எலும்பு. வங்கம் - மரக்கலம். சிங்கம் - சிங்கத்தைப்போன்ற இடை. கரி - யானையைப் போன்ற கொங்கை. தரளச் சங்கம்-முத்துக்களையுடைய கழுத்து. செந்தாமரை-செந்தாமரை மலரைப்போன்ற முகம். கசு. மடல் - பூவிதழ். அவச முற்று - பரவசப்பட்டு. நெஞ்சு - முன்னிலையெச்சம். ஏ - வியப் பிடைச் சொல். ௨0. குழைதல் - பிறவித் துன்பத்தால் வருந்துதல். உழையேயன்றி - மானேயல்லாமல். நீங்கு உழையோ-ஓடிப்போகின்ற மானோ. மதர் - மதர்த்த. ௨க. வான் - இடவாகு பெயர். தடங் கோடு - பெரிய சிகரம். இமயத்தேன் என்றது உமாதேவியை. இவள்

தேனேக்கி நிற்கு மெழிலுடை யான்வெங்கைச் செல்வியுனைத்
தானேக்கி நிற்குநல் லாயத்து ளேசென்று சார்ந்தருளே. (௪௧)

## பாங்கற்கூட்டம்

### தலைவன் பாங்கனைச்சார்தல்

கன்னியுந் தானுமொன் ருனேன் றிருவெங்கைக் கண்ணுதல்போல்
வன்னியுங் காற்றுங் கலந்தே நியவெம் மதனைவெல்லச்
சென்னியுஞ் சேகர மும்போ னமக்குச் சிறந்தநண்பன்
மன்னியிங் கோர்துணை யாயினல் லாமல் வலியில்லையே. (௪உ)

### பாங்கன்றலைவனை யுற்றதுவினுதல்

இலங்கா புரிமன்னன் ருேளிற வூன்றிய வீசர்வெங்கை
உலங்கா தலிக்குந்திண் டோளுர வாகட லூர்ந்திடினும்
விலங்கா மறலி யொருகோடி தூதொடு மேல்வரினுங்
கலங்கா வுளமுங் கலங்கிநின் ருயென்ன காரணமே. (௪௩)

### தலைவனுற்றதுரைத்தல்

மலைவன் பணியரி வின்னுண் கணைசெய்து வந்துவெங்கைத்
தலைவன் புரமிரண் டொன்றே வெலவிச் சகமனைத்துஞ்
சிலைவன் குணங்கணை வேழஞ் சுரும்பலர் செய்துவென்ருேன்
முலைவன் கிரியுற வந்தநண் பாவொரு மொய்குழலே. (௪௪)

### கற்றறிபாங்கன்கழறல்

போதைப் பொதிந்திட் டிருடுங் களகப் பொருப்பிமைய
மாதைக் கலந்த திருவெங்கை வாணர் மதுரைச்சங்க
மேதைப் பசுந்தமிழ்ப் பாற்கட னீந்திய வீரமொரு
பேதைக் குடைந்துநின் ருய்தகு மோசொல் பெருந்தகையே. (௪௫)

### கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்

ஊனு மெனநஞ் சுவந்தோன் றிருவெங்கை யூரிலுயர்
சேணு முலகம் வறிதாக வந்தவச் சேயிழையார்

---

இறைவற்கு மலைத்தேன்போல் இனிமை பயத்தலால் உவமையாகு பெயர். ௪உ. வன்னி - கினி. மதனை - காமனை. ஒன்று - ஒருரு. கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடையவன். ௪௩. உலம் காதலிக்கும்- திரள்கல்லானது விரும்பும். உரவா - அறிவுடையோனே. விலங்கா - விலக்கப்படாத. ௪௪. மலை - மேருமலை. வன்பணி - வலிய பாம்பு. அரி - திருமால். இரண்டொன்று - மூன்று. வன்குணம் - வலியநாண். மலை பணி அரி வில் நாண்கணை என்பனவும் சிலை குணம் கணை வேழம் சுரும்பு அலர் என்பனவும் நிரனிறை. வந்தணண்பா என்னும் பாடத்திற்கு மொய்குழல் வந்தனள் என்க; வந்தனள் எனற் பாலது ஈண்டு அன் சாரியை தொக்கு நின்றதென்க. ௪௫. போதை பொதிந்திட்டு-மலரைச் சூடி. மேதை-அறிவு பொருந்திய. உடைதல் - தோற்றல். ௪௬. சேண் ஆம் உலகம் - விண்ணுலகம். சேயிழையார்-

பூணுர மென்முலை யின்பெருங் காட்சியும் பொய்யிடையின்
காணுமை யுங்கண் டனையாயி னண்ப கழறலையே. (௪௬)

### கிழவோற்பழித்தல்

அண்டா திபர்நந் திருவெங்கை நாயகர்க் கன்றியொரு
பெண்டா லிதய முருகினை யாயிற் பெருந்தகைநீ
விண்டா ரகைகண் டினியிந்து காந்தமு மெய்யுருகும்
வண்டா மரைகளு மின்மினி தோன்ற மலர்ந்திடுமே. (௪௭)

### கிழவோன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்

பாலார் மொழியுமை பங்காளர் வெங்கையம் பாவைதந்த
மாலாழ் தருமெனை வெவ்வுரை யானண்ப வாட்டுகின்ருய்
காலாழ் களரி னமிழ்ந்தவெங் கோட்டுக் களிற்றையொரு
வேலா லெறிபவர் போலே யிதுவென் விதிவசமே. (௪௮)

### பாங்கன்றன்மனத்தழுங்கல்

பெட்டுப்பட் டாவுரி கொண்டோன்றென் வெங்கைப் பிரான்வரையின்
மட்டுப்பட் டாவி மலர்வா ரிசமுக வல்லிமுகை
ஒட்டுப்பட் டானை யனையா னிடையெனு மோரிழையாற்
கட்டுப்பட் டானினி யென்செய்கு வேனிந்தக் காசினிக்கே. (௪௯)

### தலைவனுேடழுங்கல்

நாட்டு மலிபுகழ்ப் பெம்மான் றிருவெங்கை நாட்டிறைவ
கோட்டு வரிவிற் கொலைவேடர் தந்த கொடியிடையாள்
பூட்டு மயற்றொடர் நீயே படினெவர் போக்குறுவார்
காட்டு மிரவிக் கிரவியுண் டோவிருள் காய்வதற்கே. (௫0)

### எவ்விடத்தெவ்வியற்றென்றல்

தழைந்தார் மலிசடை யீசர்தம் மாதின் றடமுலைக்குக்
குழைந்தார் திருவெங்கை நாயக ஞரிடங் கொண்டுதனி

---

மாதரார். பொய்யிடை - நுண்ணிடை. ௪௭. அண்டாதிபர் - தேவ நாயகராகிய சிவபெருமான். பெண்டால் - பெண்ணுல். இந்து காந்தம்- சந்திரகாந்தக்கல். தாரகை - விண்மீன்கள். ௪௮. பாவை - பாவை போல்வாளாகிய தலைமகள். மால்ஆழ் தரும் - மயக்கத்தில் ஆழுகின்ற. வெவ்வுரை - கடுஞ்சொல். கோடு - கொம்பு. களிறு - ஆண்யானை. ௪௯. பெட்டு - விரும்பி. பட்டுஆ - பட்டாடையாக. உரி - யானைத் தோலை. மட்டுப்பட்டு - தேன்பொருந்தி. மூட்டுப்பட்டு - தடைப் பட்டு. ஆனை அனையான் - யானையைப் போன்றவன். ௫0. கோட்டு- வளைக்கப்பட்ட. பூட்டு - பூட்டிவிட்ட. மயல்தொடர் - மையல் விலங் கில். இரவிக்கு இரவி-கதிரவனுக்கு வேறொரு கதிரவன். ௫௧. தழைந்த- செழித்த. மாது - உமாதேவி. குழைந்தார் - நெகிழ்ந்தார். திட்டி

விழைந்தார் நினதகத் திற்றிட்டி வாயிடை வேழமொடு
நுழைந்தா ரிடமிய லெல்லா மிறைவ நுவன்றருளே. (௫௧)

*அவனைத்திவ்விடத்திவ்வியற்றென்றல்*

நறையே யிதழி புனைவார் திருவெங்கை நாதர்சடைப்
பிறையே நுதலவர் மானே கருங்கண் பிடித்ததுடிப்
பறையே யிடையணி பாம்பே யகலல்குல் பற்றுமலை
இறையே முலைமலர்த் தண்டலை யேயிட மென்னுயிர்க்கே. (௫௨)

*பாங்கனிறைவனைத்தேற்றல்*

தடங்கொண்ட கண்ணி யிடத்தார் திருவெங்கைத் தண்டலையை
இடங்கொண்டு காமப் புனனீந்தி நீகரை யேறுதற்குக்
குடங்கொண்டு நின்ற வொருமாதைக் கண்டு குறுகுமட்டுந்
திடங்கொண்டு நெஞ்சந் தளராது நிற்றி திறலவனே. (௫௩)

*குறிவழிச்சேறல்*

காவியு மாம்பலும் பூத்தசெந் தாமரை கண்டளிகள்
மாவியு மோடையும் விட்டெய்த வேபொழில் வாய்நிற்குமோ
தேவியு மானும் விளையா டிடத்தர் திருவெங்கையில்
ஆவியு மாரமு தும்போன் றிறைகண்ட வாயிழையே. (௫௪)

*இறைவியைக்காண்டல்*

முகையே முலைசெழும் போதே முகமலர் மூசுவண்டின்
தொகையே குழல்செந் தளிரே யடிநற் சுவைக்கனியே
நகையே யிதழ்திரு வெங்கைபு ரேசர்கைந் நவ்விமிகும்
பகையே யெனுங்க ணிவரே யிறைசொன்ன பைங்கொடியே. (௫௫)

*இகழ்ந்ததற்கிரங்கல்*

புடையே யுமையொடுஞ் செங்கதிர் வேற்கைப் புதல்வனொடும்
விடையே யிவர்தரும் பெம்மான் றிருவெங்கை வெற்பிலன்னப்

---

வாய் - கண்ணாகிய வழி. நுவலல் - சொல்லல். ௫௨. நறைஏய் - தேன் பொருந்திய. இதழி - கொன்றை. புனைவார் - அணிவார். துடிப் பறை - உடுக்கை. மலைஇறை - மேருமலை தண்டலை - குளிர்ச்சி யாகிய இடம். ௫௩. திறலவன் - ஆற்றல்மிக்கவன். தடம்கொண்ட - அகற்சியைக் கொண்ட. குடம் - கும்பம்; அஃது ஈண்டுக் கொங்கையை உணர்த்திற்று. ௫௪. காவி - கருங்குவளை. ஆம்பல் - செவ்வல்லி. அளிகள் - வண்டுகள். ஆம்பல் என்றது வாயை. இறை - பண்பாகு பெயர். ௫௫. குழல் - கூந்தல். முகை - மொட்டு. நவ்வி - மான். கணிவர் - கண் இவர் - கண்களையுடைய இவர். ௫௬. புடை - பக்கம். விடை - காளை. பெருந்தனத்தார் - பெரிய கொங்கைகளை

பெடையே யெனவந் திளங்கா வுறுமிப் பெருந்தனத்தார்
இடையே யிலையெனி னைந்திளை யான்கொ லிறையவனே. (௯௬)

தலைவனைவியத்தல்

சூடும் பிறையர் திருவெங்கை வாணர் சுடர்க்கிரிமேற்
பாடுங் கவியு ளடங்காக் கவினுடைப் பாவையன்னார்
கூடுங் குவிமுலைக் குன்றுங்கண் வேலையுங் கூந்தனெடுங்
காடுங் கடந்துவந் தான்மிக வீரனங் காவலனே. (௯எ)

தலைவியைவியத்தல்

பருத்த குவிமுலைப் பாரத்தி னூற்கடற் பங்கயத்தில்
இருத்த லரிதென வந்துவன் பூவி லிருக்குமிவர்
விருத்த கிரிமகிழ் வெங்கைவெற் போன்மயல் வெள்ளங்கொண்ட
வருத்த விதய மலர்மீ திருந்திட வல்லவரே. (௯அ)

தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்

இயலாற் சிறந்த திருவெங்கை வாண ரிமையவெற்ப
மயலாற் புரிந்த முலையானை யின்முன் மதர்மழைக்கட்
கயலாற் கலக்குவித் துன்கலை வேலையைக் காரளகப்
புயலாற் பருகுவித் தார்நின்று ளார்தண் பொழிலிடத்தே. (௯௯)

தலைவன்சேறல்

ஏழா முலகும் புகழ்வெங்கை வாண ரிமையவெற்பில்
ஆழா தெனைநெடுங் காமக் கடனின் றணைத்தெடுப்பார்
தாழா திசையளி மூசுமென் பூந்துணர்த் தண்கொம்பரே
சூழாய மாக நடுநிற்ப ரோவிந்தச் சோலையிலே. (௧0௦)

தலைவியைக்காண்டல்

தளைப்பாச நாசகர் வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பிற்
களைப்பான் மதிமுகக் காரிகை யீர்தண் களபமுலைக்
கிளைப்பார மென்பெருந் தோண்மே லிருத்திநை கின்றவிடை
இளைப்பாற வோதனி நின்றீரிக் காம ரிளம்பொழிற்கே. (௧0௧)

---

யுடையவர்; பெருஞ்செல்வர். ௯எ. கூடும் - ஒன்றோடொன்று நெருங்கிய. நந்தலைவன் மலையையுங் கடலையுங் காட்டையுங் கடந்து வந்தான் என்னும் நயங்காண்க. ௯அ. கடல் பங்கயத்தில் - கடலில் தோன்றிய தாமரைப் பூவில். வன் பூவில் - வலிய நிலத்தில். ௯௯. இயலால் - எல்லா இலக்கணங்களாலும். கலைவேலை - கலைக் கடல். கயல் - சேல்மீன். புயல்-முகில். பருகுவித்தல் - குடிப்பித்தல். ௧0௦. ஏழாம் உலகும் - ஏழுலகங்களும். பூந்துணர் - பூங்கொத்துக்கள். ௧0௧. களை - அழகுள்ள. காரிகையீர் - அழகையுடையவரே! காமர் - அழகிய.

**கலவியின்மகிழ்தல்**

துதிவாய் தொறுங்கொளு மென்மலர்ப் பூம்பொழில் சூழ்ந்தவெங்கைப்
பதிவாய் வரையிள மானோ டமர்ந்த பரனருளாற்
றிதிவாய் மதியமிர் தம்போ லலாமற் சிறந்தமுக
மதிவா யமிர்தமுண் டோம்வந்து கூடவிம் மங்கையரே. (கஉ)

**புகழ்தல்**

சங்கந் துறந்தன்ன மில்லாம லேயொரு தாளினின்று
பொங்கம் புனலிற் றவம்புரிந் தாலும் புரைகுவிரோ
அங்கம் பலவணிந் தார்வெங்கை வாண ரணிவரைமேல்
இங்கம் புயமுகை காளிந்த மாத ரிளமுலைக்கே. (கங)

**பாங்கியொடுவருகெனப்பகர்தல்**

பங்கே ருகத்திற் கடுத்தசெங் காவிப் பனிமலர்போல்
நுங்கே ளெனுமுயிர்ப் பாங்கியொ டேமறை நூன்முகத்திற்
சங்கேத மாம்பெயர் வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பில்
இங்கே வருகவென் னெஞ்சா லயத்தி லிருப்பவரே. (கச)

**பாங்கிற்கூட்டல்**

கார்கண்ட மஞ்ஞையுஞ் செந்தே னிரம்பக் கடைதிறக்குந்
தார்கண்ட வண்டுந் திருவெங்கை நாயகர் தாண்மலரின்
சீர்கண்ட வன்பரும் போலேநிற் கண்டு சிறக்குமுளப்
போர்கண்ட வேற்கண் மடவாரை மேவுக பூங்கொடியே. (கரு)

## பாங்கிமதியுடன்பாடு

**தோற்றத்தாலாராய்தல்**

எனையா டியபதத் தாள்வோன் றிருவெங்கை யேந்திழைநீ
சினையா டியமணிப் பொன்னூச லாடிச் செழுங்குவளைச்
சுனையாடி வண்டல் விளையாடி முத்தந் துவன்றியவம்
மனையாடி வந்தனை யோதிரு மேனி வருந்தியதே. (கசு)

கஉ. துதி - முதனிலைத் தொழிற்பெயர். வரையிளமான் - இமய மலையில் தோன்றிய உமாதேவி. பரன் - மேலானவன். திதி-வளர்ச்சி. கங. சங்கம் - கூட்டம், சங்குகள். அன்னம் - சோறு, அன்னப் பறவைகள். புரைகுவிரோ - ஒப்பாவீரோ? அங்கம் - எலும்பு. அம்புய முகைகள் - தாமரை மொட்டுகள். கச. சங்கேதம் ஆம்பெயர் - சங் கேதமாகிய பெயரையுடைய. நெஞ்சாலயம் - உள்ளக்கோயில். கரு. கார்கண்ட - முகிலைக்கண்ட. தார்கண்ட - பூவரும்பைக்கண்ட. கடை திறக்கும்-வாயிலைத் திறக்கிற; ஈண்டு இதழ்க்கதவு. தார்-மலரும் பருவத்துப் பேரரும்பு. சிறத்தல் - மகிழ்தல். கசு. சினையாடிய - மரக்கிளையிற் கட்டிய. முத்தம் துவன்றிய - முத்துக்கள் நெருங்கப் பதித்த. வண்டல் - மகளிர் விளையாட்டில் ஒன்று.

ஒழுக்கத்தாலுயர்ந்தீர்தல்

கொற்றிக் கிசைந்த புயத்தார் திருவெங்கைக் கோமளமே
நெற்றிக் குடைந்ததென் றெள்ளப் படாதந்த நெற்றியின்மேல்
வெற்றிக் கமலக் கரங்குவித் தேயின்று விண்ணினெழும்
மற்றிப் பிறைத்தெய்வங் கன்னியர் யாரும் வணங்குவதே. (சுஎ)

சுனைநயப்புரைத்தல்

கடைக்கண் சிவந்திதழ் மொன்றே வெளுப்பக் கலவையினுள்
இடைக்கண் மெலிவு தருங்கொங்கை மேலது வேயழிய
விடைக்கண் விரும்பி யுறைவார் திருவெங்கை வெற்பிடத்திற்
றொடைக்கண் மலர்க்குழ லாய்சுனை யாதினுட் டோய்ந்தனையே. ()

சுனைவியந்துரைத்தல்

ஒளியார் குமுதநல் வெள்ளாம்ப லாக வொழிவருதண்
அளியார் கருநெய்தல் வந்துசெந் தாமரை யாகச் செய்யில்
எளியா ரடியவர்க் காணர்தம் வெங்கையில் யாரொருவர்
குளியார் மதிநுத லீயா டியவக் குளிர்சுனையே. (சுக)

தகையணங்குறுத்தல்

பண்ணூடு மின்சொ லுமைபாகர் வெங்கைப் பனிவரைமேல்
விண்ணூ டிழிந்து வருந்தெய்வ மாது விளங்குறுமென்
கண்ணூ டிருந்தபெண் ணின்னீழ லாகக் கருத்திடைநீ
எண்ணூ டிருந்துக வேலிவ டானெங்க ளேந்திழையே. (எO)

நடுங்கநாட்டம்

எதிராக் கவினுமை பங்காளர் வெங்கை யிறைவர்சடை
முதிராப் பிறையைந் தலைநாக மீன்ற முழுமணியின்
கதிராற் சிவந்தது போற்சேந்த கோட்டுக் களிற்றைமலர்
உதிராக் கொடியனை யாயின்று நான்கண் டுடைந்தனனே. (எக)

பெட்டவாயில்பெற்றிரவுவலியுறுத்தல்

அருவா யுருவமு மாம்வெங்கை வாண ரரும்பதத்தைக்
குருவா லடைபவர் போலுயிர்ப் பாங்கியைக் கொண்டுமெல்லப்

---

சுஎ. கொற்றிக்கிசைந்த-துர்க்கைக் கேற்ற. உடைதல்-தோற்றல். எள்ளல் - இகழ்தல். சுஅ. கடைக்கண் - கடைக்கடை. இதழ் ஒன்றே என்றது அதரத்தை. கலவி - புணர்ச்சி. சுகூ. மதிநுதல் - பிறை போலும் நெற்றியை உடையவள். ஒழிவு அற-இடையறாத. எO. பண்-இந்தளம், பஞ்சுரம், பழம் பஞ்சுரம், குறிஞ்சி, கைசிகை, கேதாரம் முதலியன. ஊடுதல் - பிணங்குதல். எக. எதிரா - விகாரற்ற. முதிராப்பிறை-இளம்பிறை. சேந்த-சிவந்த. கோடு-கொம்பு. எஉ. அரு

பெருவா ரறநிமிர்ந் தோர்நூன் மருங்குற் பெரும்பழியை
வெருவா தெழுமுலைப் பெண்ணா ரமுதத்தை மேவுதுமே. (எ௨)

ஊர்வினுதல்

வலைநடு வந்த விளங்கலை போனும் மணிவடந்தாழ்
முலைநடு வென்ன விடமற வேவந்து முட்டுமிரு
மலைநடு வந்துநொந் தேனுரை யீர்நும் வளம்பதியா
தலைநடு வந்தனஞ் சுண்டபி ரான்வெங்கை யன்னவரே. (எ௩)

பெயர்வினுதல்

ஊரான திங்குரை யீரா யினுமென் னுளங்குளிரச்
சீரார் திருவெங்கை மாநக ரார்தந் திருப்பெயர்போற்
பாரார் பருவங்கண் டேமறை யுரகப் பகர்வதன்றே
பேரா யினுமுரை யீர்பிறை வாணுதற் பேதையரே. (எ௪)

கெடுதிவினுதல்

பைங்காஞ் சனவரை வில்லாளர் வெங்கைப் பனிவரைமேற்
செங்காந்த ளன்னமென் கைம்மட வீர்செங் குருதிபொங்க
வங்காந்த தன்பகு வாய்போல வேல்பட் டழுந்துபுண்ணோ
டிங்காம்பு னத்தயல் வந்ததுண் டோநல் விளங்களிறே. (எ௫)

ஒழிந்ததுவினுதல்

விழித்தே மதனைப் பொடித்தார்செவ் வாம்பன் மிஞிறுவப்பச்
சுழித்தே னுமிழ்வயல் வெங்கையி லேகடற் றேட்டலரை
யொழித்தே வருமட வீரளி யேனின் றுளம் வருந்த
மொழித்தே னிலாததென் னேவுங்கள் வாய்க்கு முதமலர்க்கே. (எ௬)

யாரேயிவர்மனத்தெண்ணம்யாதெனத் தேர்தல்

ஊரேதென் பாரதை விட்டே யருகுவந் தும்முடைய
பேரேதென் பார்கரி கண்டதுண் டோவெனப் பேசிநின்று
வாரேறு கொங்கைக் குடநோக்கு வார்வெங்கை வாணர்வெற்பில்
ஆரே யிவர்மனத் தெண்ணமென் னேயென் றறிந்திலமே. (எஎ)

---

ஆய் - உருவம் அற்று. மருங்குல் - இடை. வெருவாது - அஞ்சாமல். உயிர்ப்பாங்கி - உயிர் போன்ற பாங்கி. எ௩. இளங்கலை - இளமான். வந்து முட்டும் - வந்து நெருங்கின. எ௪. பாரார் - உலகத்தார். பேதையர் - பருவங்குறியாது மாதர் என்னுந் துணையாய் நின்றது. எ௫. பைங்காஞ்சனவரை - பசிய பொன்மலை. அங்காந்த - பிளந்த. பகுவாய் - திறந்த வாய். எ௬. பொடித்தார் - நீறாக்கியவர். மிஞிறு - வண்டுகள். அளியேன் - ஏழையேன். எஎ. வார்ஏறு - கச்சணிந்த. தச்சினைக்கிழித்து வெளிப்பட்ட எனலுமாம்.

எண்ணந்தெளிதல்

ஊர்கேட் கவுநம் பெயர்கேட் கவுநின் றுழல்பனைக்கைக்
கார்கேட் கவும்வந் தவரே யலரிவர் கன்னியுமை
சீர்கேட்கு மையர்தென் வெங்கையி லேயிவள் செய்யவிள
நீர்கேட்க வந்தவ ரேபற்று காம நெருப்பினுக்கே. (எஅ)

தலைவன்கையுறையேந்திவருதல்

கொடையாளர் கையிற் பொருள்போற் சிறுமென் கொடிபுரையும்
இடையா ளிகுளை யுடனிருந் தாளினி யேதுகுறை
விடையா னிணையிலி வெங்கைப் பிரான்றன் விழிக்குடைந்தோன்
படையான் மெலிந்தவெல் லாநெஞ்ச மேமுன் பகருதுமே. (எகூ)

தலைவனவ்வகைவினாதல்

கானைக் கலையொன் றெனதம்பு பாயக் கலைமதியின்
மானைப் புணர வெழல்போல வேதுள்ளி வந்ததுண்டோ
ஆனைத் தலைமகற் பெற்றோன் றிருவெங்கை யாவியிள
மீனைப் பொருதகன் றோள்வா ளிகலும் விழியவரே. (அ0)

எதிர்மொழிகொடுத்தல்

மானக் கலைகளெட் டெட்டும்வல் லீர்கொன்றை வார்சடையிற்
கூனற் பிறைபுனை யெம்மான்றென் வெங்கைக் கொடிச்சியரேம்
ஏனற் புனத்திற் கிளிபார்த் திதணி னிருப்பதன்றிக்
கானக் கலையைத் தனிபார்த் திருக்குங் கருத்திலமே. (அக)

இறைவனை நகுதல்

தேனனை யாவரு மாமல ராலச் சிலைமதவேள்
மானனை யாரை வருத்துமென் பாரின்று மாந்தழையாற்
கூனனை யாமதி வார்சடை யார்வெங்கைக் குன்றில்விழி
மீனனை யாயிவ ரெய்தார் பெருங்கலை வீழ்ந்திடவே. (அஉ)

---

எஅ. நின்றுழல் பனைக்கைக்கார் என்றது யானையை. சீர் - அழகின் பெருக்கம். யானை பனைமரம் போன்ற கையை உடையதாகலின் "பனைக்கைக்கார்" என்றார். "பனைக்கை மும்மத வேழமுரித்தவன்" என்றார் பிறரும். எகூ. கொடையாளர் - வள்ளன்மையுடையவர். புரைதல் - நிகர்த்தல். விழி - நெற்றிக்கண். உடைதல் - தோற்றல். மெலிதல் - இளைத்தல். அ0. கானைகலை ஒன்று - காட்டில் வாழ்கிற அழகிய மான் ஒன்று. ஆனைத் தலைமகன் - ஆனைமுகக் கடவுள். துள்ளல் - துடித்தல். இகலல் - பகைத்தல். அக. மானக்கலைகள் - பெருமை பொருந்திய கலைகள். எட்டெட்டும் - அறுபத்து நான்கும். ஏனல்புனம் - தினைப்புனம். அஉ. சிலைமதவேள் - கருப்பு வில்லையுடைய காமன். கூனனையா என்ற சிறப்பால் மதி இளம்பிறைக்காயிற்று. பெருங்கலை - பெரிய நூலறிவு. வீழ்ந்திட - விரும்ப என்றுமாம்.

பாங்கிமதியினவரவர் மனக்கருத்துணர்தல்

மான்வேட்ட மீதும் புனங்காவன் மீதினும் வைத்தமனந்
தான்வேட்ட காதன் மறைப்பவெல் லாமயன் ருதையொடு
நான்வேட்ட செம்மலர்த் தாளான் றிருவெங்கை நாட்டிலிவர்
தேன்வேட்ட பூங்கண்க ளேயலர் தூற்றித் தெரிவிக்குமே. (அரு)

## பாங்கியிற்கூட்டம்

தலைவனுட்கோள்சாற்றல்

நற்றே மொழியுமை பங்கன் றிருவெங்கை நாடனையீர்
முற்றே ரிழைமுலை மேனகை யாதியர் முற்றுநுங்கள்
குற்றேவல் செய்யு மடந்தைய ராகக் கொடுப்பனின்னே
சற்றே யருட்கடைக் கண்பார்த்தென் னுவியைத் தாங்குமினே. (அச)

பாங்கிகுலமுறைகிளத்தல்

பொய்ம்மே வரும்புனங் காவலர் யாங்கள் புனநடுவின்
வம்மே வுறுமது காப்பவ னீவனை சூழ்வதெம்மூர்
நம்மே லருள்வைத் தளிப்பார் திருவெங்கை நாட்டிலுன்னூர்
கும்மேல் வரும்வனை செய்காட்டு வதொண் குலோத்துங்கனே. (அரு)

தலைவன் றலைவிதன்னையுயர்த்தல்

அலைமக ளன்ன விலங்கிலை வேற்க ணரிவைநல்லாய்
கலைமகள் வந்தனை செய்வெங்கை நாதற்குக் கைகொடுத்து
மலைமக ளண்ட முழுதாளி னுங்கண் மலையரையன்
தலைமக ளன்மைப் பெருமையை யாதென்று சாற்றுவனே. (அசு)

பாங்கியறியாள்போன்றுவினுதல்

இஞ்சிப் புரமொரு மூன்றெரித் தார்வெங்கை யீர்ம்பொழில்வாய்ப்
பஞ்சிற் சிறுதளிர் மெல்லடி மாதர் பலரினுந்தான்
வஞ்சித் தெமையெம் முடனே யிருப்பினும் வந்துனது
நெஞ்சிற் புகுந்து மறைந்தவள் யார்சொன் னெடுந்தகையே. (அஎ)

---

அரு. வேட்டம் - வேட்டை. புனம் - தினைப்புனம். அயன் - அஜன் என்னும் வடசொற்றிரிபு; பிறவாதவன் என்பது பொருள். அச. முற்றுநர் - முழுவனப்பமைந்த. மேநகை - மேநகை என்னுந் தேவதாசி. குற்றேவல் - சிறு பணிவிடைகள். அரு. புனம் - தினைக் கொல்லை. புனநடுவே வமேவுறுவது புவனம்; கு மேல்வரும் வனை - குவனை. உத்துங்கம் - உயர்ச்சி. ஒட்பம் - வடுவின்மை. அசு. அலை - அலைகளையுடைய கடலுக்காயினமையால் ஆகுபெயர்; அலைமெனவாளா கூறினுரேனும் திருமகளையின்றமை பற்றிப் பாற்கடலெனக் கொள்க. அஎ. இஞ்சி - மதில். மறைந்தவள் - ஒளித்தவள். நெடுந்தகை - பெருங் குணமுள்ளவன்.

இறையோ னிறைவி தன்மையியம்பல்

போதே முகமிளஞ் சேலே விழிபசும் பொன்னுரைத்த
சூதே முலைசெந் தளிரே யடிகதிர்ச் சோதியொடு
வாதே புரியுந் திருமே னியர்வெங்கை மங்கையர்க்கு
மாதே யிடையொன்று மல்லாமற் பொய்யல்ல மற்றவையே. (அஅ)

பாங்கி தலைவியருமை சாற்றல்

ஒறுத்துப் புரஞ்சுட் டு மெம்மான் றிருவெங்கை யூரின்மலர்
பொறுத்துக்கொளும்பொனெனென் றெண்ணே லிராசிப் புதுத்துலையாற்
கறுத்துத் தழைந்த குழலோடு கொங்கைக் கனத்தசெம்பொன்
நிறுத்துக்கொளும்பொனன் றோவெளி தோசொ னெடுந்தகையே. ()

தலைவ னின்றியமையாமை யியம்பல்

பொங்கூ ழொளிநிகர் வெங்கைபு ரேசர் பொருப்பிடத்தில்
வங்கூழ் வழங்கும் வியன்ஞாலந் தன்னில் வளர்ந்தெழுந்த
பைங்கூழ் புயலின் றமையாத வாறெனப் பாவைநல்லாய்
இங்கூழ் தருமென் கொடியன்றி வாழ்தலின் றென்னுயிரே. (கூ0)

பாங்கி நின்குறை நீயேசென் றுரை யென்றல்

தீயே னுளங்குடி கொள்வெங்கை வாணர் செழுஞ்சிலம்பில்
வீயேறு மென்றொடைத் தோளண்ண லேயயல் வேறொருவர்
போயே யுரைப்பின் மனமிரங் காளெங்கள் பூங்கொடிக்கு
நீயே வணங்கி மனமுளைந் தோதுக நின்குறையே. (கூக)

பாங்கியைத் தலைவன் பழித்தல்

கல்லைக் குழைத்துப் பயின்றுள தாகிய கல்வியுடைத்
தில்லைப் பதியி னடமாடும் வெங்கைச் சிவனையல்லாற்
சொல்லைக் கொடுநின் மனநாங் குழைப்பத் துணிதலொரு
புல்லைக் கொடுதண் கடனீந்த வுன்னுதல் பூங்கொடியே. (கூஉ)

பாங்கி பேதைமையூட்டல்

மானைக் கவர்வம் மழுவிலை யேல்வெங்கை வாணர்க்கந்த
வானைப் புணர்மதி கீள்வே மகப்படின் மானுக்கென்னுஞ்

---

அஅ. போது - தாமரைமலர். பசும்பொன் உரைத்த சூது - பசும்பொன்னுரைக்கப்பெற்ற சூதாடுகருவி. அகூ. மங்கையர் என்பது பருவங் குறியாது நின்றது. ஒறுத்து - வருத்தி. இராசிப்புதுத்துலையென்றது துலாராசியை. பொன் - தேமல். கூ0. ஊழ் - வெயிற்கற்றை. வங்கூழ் - காற்று. ஊழ்தரும் - ஊழிறைற் கொணர்ந்துதரப்பெற்ற. இன்று - இல்லை. கூக. வீஏறு - வண்டுகள் ஏறப்பெற்ற. உளைந்து - வருந்தி. கூஉ. கல்லை குழைத்து - மேருமலையை வளைத்து. பயின்று - பழகி. கல் - கல்லாலமைந்த மலை. கூ௩. கவர்வம் - பற்று

சேனைக் குறவர் மகளா கியவித் திருந்திழையாள்
ஆனைத் திறலுடை யாயறி யாளுன் னருந்துயரே. (கங)

காதலன்றலைவி மூதறிவுடைமை மொழிதல்

விடுத்த மயலுடை யெம்மான் றிருவெங்கை வெற்பனாங்கே
எடுத்த விடைமுறிக் குங்கொங்கை யேயன்றி யென்னையெய்யத்
தொடுத்த குவளைக் கணைவாங்கி வின்மதன் றூணியிட
அடுத்த கடைக்கண்வைத் தாரறி யாமை யறிந்திலரே. (கச)

பாங்கி மூன்றுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்

மருவீர வெண்மதி வேணிப்பி ரான்வெங்கை வான்பொழில்வாய்
இருவீரு மொத்துப் புணர்ந்தாற் பயநுமக் கென்னையொன்னார்
பொருவீர வாள்விழிக் காப்பதி ருயிரம் பொய்யுரைத்து
வருவீ ரறிந்திலி ரேயுல கோதும் வழக்குரையே. (கரு)

தன்னிலைதலைவன்சாற்றல்

மண்ணைக்கொண் டுண்ட பெருமான் றொழும்வெங்கை வாணர்வெற்பிற்
பண்ணைக்கொண் டுற்ற மொழியா யுனையன்றிப் பாரமுலைப்
பெண்ணைக்கொண் டின்பம் பெறநான் விரும்பப் பெறிலதுதான்
கண்ணைக்கொண் டன்றி வழிதா னடப்பக் கருதுதலே. (கசு)

பாங்கியுலகியலுரைத்தல்

வெண்டாம ரைமுளைப் பாலிகை வாளர விந்தச்செந்தீக்
கொண்டாவி யிற்சங்க மார்ப்பக் குவளை மணம்புணர்ந்து
வண்டாடு நல்லிய லூரவெம் மான்வெங்கை மாதினைநீ
கண்டாசைப் பட்டனை யேல்வரைந் தேகொள் கடைப்பிடித்தே. (கஎ)

தலைமகன்மறுத்தல்

தாமக் குழலை வரைந்துகொண் டேவெங்கைத் தாணுவெற்பிற்
காமக் கனலைத் தணிப்பாயென் றோதிய காரிகைநீ
நாமக் கிணறகழ்ந் தந்நீர் கொடுநன் னகரிற்பற்றி
வேமக் கனலை யவிப்பாயென் பார்களின் வேறல்லையே. (கஅ)

---

வோம். திருந்திழையாள் - திருத்தமாகிய அணிகலன்களையணிந்தவள். அருந்துயர் - பொறுத்தற்கரிய துன்பம். கச. விடுத்த மயலுடை - மையலைவிட்ட. தூணியிட - ஆவத்தில் வைக்குமாறு. தூணி - அம்பு வைக்குங்கூடு. அறியாமையறிந்திலர் - அறிவறிந்தவர். கரு. மருவீர வெண்மதி - ஈரம்மருவு வெண்மதி. வேணி - சடை. ஒன்னார்-பகைவர். வழக்குரை - உலக வழக்கச்சொல். கசு. மண்ணைக்கொண்டுண்ட பெருமான் - திருமால். பண்ணைக்கொண்டு - இசையைக்கொண்டு. கஎ. அரவிந்தம் - தாமரை. ஆவி - தடாகம். கடைப் பிடித்தல் — உறுதியாகப் பற்றுதல். கஅ. தாமம் - மாலை. குழல் - குழலை யுடையவள். நாமம் - அச்சம். தாணு - சிவபிரான்.

பாங்கியைச் சுறுத்தல்

பால்கொண்ட வத்தி யெனவே யுடல்வடுப் பட்டவெமர்
வேல்கொண்ட தம்முடற் புண்ணிலிட் டேவளை வேனிமிர்ப்பார்
சேல்கொண்ட கண்ணி யிடத்தார் திருவெங்கைச் சேயிழைக்கு
மால்கொண்டு நின்றுழ லேல்விரைந் தேகுக மன்னவனே. (கக)

தலைவன்கையுறைபுகழ்தல்

கொண்டலங் கண்டர் திருவெங்கை வாணர் குளிர்சிலம்பிற்
றண்டளிர் வென்றசெந் தாண்மட வீர்நுந் தடமுலையாம்
முண்டக மென்முகை மேல்வாழ வூசி முனையினின்று
வண்டவஞ் செய்திங்கு வந்தகண் டீரிம் மணிவடமே. (க00)

பாங்கி கையுறைமறுத்தல்

மல்லார்க்குந் தோளண்ண லேவெங்கை வாணர் வரையிற்பெண்கள்
எல்லார்க்கும் வந்த விடைபோல்வ தன்றிங் கிவட்கன்றியே
வில்லார்க்கு நின்னணி கொங்கையிற் காணிலெம் வேடரென்னும்
பொல்லார்க்கு றங்கும் புலிவா யிடறுதல் போன்றிடுமே. (க0க)

ஆற்றுநெஞ்சிநேருடவன்புலத்தல்

பாமாலை கொண்ட திருவெங்கை வாணர் பனிவரைமேல்
மாமாலை நண்ணிய வென்னெஞ்ச மேயிவ் வரியளிகள்
தாமாலை மென்குழ லார்தமை வேண்டினந் தாண்முறித்த
பூமாலை யேறுங்கொ லோவவர் வார்முலைப் பொற்குன்றமே. (க0உ)

பாங்கியாற்றுவித்தகற்றல்

ஆனுக் களித்த கொடியாளர் வெங்கை யணிநகராய்
பானுக் களித்து வருங்காலை நீவரிற் பைந்தொடிக்கைத்
தேனுக் களிக்கு மலர்த்தொடை வார்குழற் றேமொழியெம்
மானுக் களித்துக் கலையாக் குவனுன்கை வண்டலையே. (க0௩)

---

கக. வளைவேல் - வளைந்த வேல். சேயிழை - அன்மொழித் தொகை. செவ்விய அணிகலன்களை அணிந்தவள் என்பது பொருள். மால் — காம மயக்கம். க00. கொண்டல் - முகில். முண்டகம் - தாமரை. முகை - மொட்டு. ஊசி முனையில் நிற்றலாவது ஊசி நுனியாற் கோக்கப்படுதல். க0க. மல்ஆர்க்கும் - மற்போரின் பொருட்டு ஆரவாரித்துக் கொண்டிருக்கும். வில்ஆர்க்கும் - ஒளிவீசும். நின்னணி - நீ கையுறையாகத் தரும் அணிகலம். க0உ. மாமாலை - பெரிய மயக்கத்தை. தாம்-தாவுமென்பதன் விகாரம். வார்-கச்சு. க0௩. பானு- கதிரவன். தேனுக்கு - வண்டுகளுக்கு. எம்மான் - எம்முடைய தலைவி.

*இரந்துகுறைபெறாதுவருந்தியகிழவோன் மடலேபொருளெனமதித்தல்*

எண்ணைவிட் டோங்கும் புகழாளர் வெங்கை யிமையவெற்பில்
விண்ணைவிட் டெய்து மிவட்டரு வாயென மேவியுழும்
பண்ணைவிட் டூர்தொறும் புக்கிரப் பாரிற் பசியமடற்
பெண்ணைவிட் டோர்பெண்ணை நாம்வேண்டி நிற்பது பேதைமையே.

*பாங்கிக்குலகின்மேல் வைத்துரைத்தல்*

வாமத் துமைமகிழ் வெங்கைபு ரேசர் மணிவரைமேல்
தாமக் குவிமென் முலைமட்டு வார்குழற் றையனல்லாய்
நாமக் கடலைக் கலமிவர்ந் தேறுவர் நானிலத்தோர்
காமக் கடலை மடன்மா விவர்ந்து கடப்பர்களே. (௧௦௫)

*அதனைத்தன்மேல் வைத்துச்சாற்றல்*

பாவாக்கி யைப்பெண் பனையாக வாண்பனை பாட்டருளுந்
தேவாக்கி யாளுந் திருவெங்கை வாணரிற் றேர்ந்தெருக்கம்
பூவாக்கி மாலை யணிந்துபொன் னேயொரு பொற்பனையை
மாவாக்கி நாளையும் மூர்நடு வீதி வருகுவனே. (௧௦௬)

*பாங்கி தலைமகளவயவத்தருமை சாற்றல்*

மந்தா கினியணி வேணிப்பி ரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே. (௧௦௭)

*தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்*

ஐயா னனமுடை யார்வெங்கை வாண ரணிவரைமேற்
பொய்யா விளமுலை மங்கைநல் லாரிடை பொய்யென்பதை
மெய்யாகச் சாதித் தெழுதா விடிற்புகழ் வேண்டியயான்
கையா லெடுத்தது தூரிகை யேயன்று காரிகையே. (௧௦௮)

---

௧௦௪. எண்ணை - எண்ணத்தை. பண்ணைவிட்டு - வயலைவிட்டு. பசிய மடற்பெண்ணை - பச்சையான மடலோடு கூடிய பனை; பனை மடல். ஓர் பெண்ணை - பாங்கிப்பெண்ணை. மடலேறுதலை விட்டு இரப்பது அறிவின்மையென்க. ௧௦௫. மட்டுவார் குழல் - தேனொழுகுங் கூந்தல். நாமம் - அச்சம். கலம் இவர்ந்து - மரக்கலமேறி. மடன்மா - மடற்குதிரை. ௧௦௬. தேவாக்கி - தெய்வத்தன்மை பொருந்திய வாக்கையுடையவரை. தேர்ந்து - ஆராய்ந்து. மாவாக்கி - குதிரையாகச் செய்து. ௧௦௭. மந்தாகினி-விண்ணகக் கங்கை. கொந்து- பூங்கொத்துகள். நுட்பம் - நுண்மை. நந்தா - கெடாத. ஆர்தல் - பொருந்தல். ௧௦௮. ஐயானனம் - ஐந்து திருமுகம். அவை ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம். சத்தியோசாதம் என்பன. இவை ஐந்தும் ஐந்தொழில்களையும் நடத்துவன. தூரிகை - ஓவியமெழுதுங் கோல்.

பாங்கியருளியல்கிளத்தல்

வென்றிப் படைநன் மழுவுடை யார்திரு வெங்கையிலே
குன்றிற் பொலியுங் குவிமுலை யாளொடு கூடவெண்ணி
நின்றிப் படிதளர் வேலண்ண லேயென்று நீக்கமற
அன்றிற் பெடையொடு வாழ்வதன் றேபனை யாவதுவே. (க0க)

பாங்கிகொண்டுநிலைகூறல்

மூலத் தனிமுத லானூர் திருவெங்கை மொய்வரையாய்
நீலத் தடங்கண்ணி னுட்குன் குறைசொல நேர்ந்திலளேற்
கோலத் தளிரியன் மாதின் கருங்கட் குடங்கவரத்
தாலத் திவர்க நினையாவர் பின்னைத் தடுப்பவரே. (கக0)

தலைவி யிளைமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்

பொடிக்கின்ற கொங்கை யிடைவருத் தாமுனம் பூவிரவி
முடிக்கின்ற கங்குல் களம்வருத் தாமுன முத்தலைவேற்
பிடிக்கின்ற வங்கையர் வெங்கையி லேயிளம் பெண்ணினுக்கா
வடிக்கின்ற வேலண்ண லேயென்கொ லோசொல் வருந்துவதே.

தலைவன்றலைவி வருத்தியவண்ண முரைத்தல்

கருவுக்கு மாமருந் தானூர்தென் வெங்கைக் கனகவெற்பிற்
பொருவுக்கு மாறொன்றி லாதெழுந் தோங்கிய பூண்முலையாய்
திருவுக்கு மாலைத் தருமெழில் கூர்நுந் திருந்திழைக்கு
மருவுக்கு வாசனை போல்வந்த தாலென்னை வாட்டுவதே. (ககஉ)

பாங்கி செவ்வியருமை செப்பல்

கிளிக்குஞ் சுவையமு தூட்டாளக் கிள்ளைசொற் கேட்டுவவாள்
குளிக்குஞ் சுனையிற் குளியாள் சிலம்பெதிர் கூவுகிலாள்
அளிக்குந் தொழிலுடை யார்வெங்கை வாண ரணிவரைமேல்
துளிக்குஞ்செந் தேன்மலர்த் தாரா யவட்கென்ன சொல்லுவனே.

---

க0கூ. வென்றிப் படை - வெற்றியைத் தருகிற படை. அன்றில்- கிரௌஞ்சப் பறவை. நீ பனைமடலைக்கொண்டு மடலேறப் பனை மடலை யழிப்பதாகக் கூறுகிறாய்; எந்நாளும் இணைபிரியாதவைகளாகிய அன்றில்கள் அம்மரத்தில் வாழ்கின்றன. அவை மரத்தைப் பிரிய நேரும் என்றாள். கக0. மொய் - வலிமை. நேர்ந்திலளேல் - உடன்படாளாயின். தாலத்து - பனை மரத்தின். கட்குடத்தைக் கவரப் பனையிலேறுக என்னும் பொருளுந் தொனிக்கின்றது. கககூ. பொடித்தல்-அரும்புதல். விரவல் - கலத்தல். கங்குல் - இரா; அஃது இரவைப் போலுங் கூந்தலையுணர்த்திற்று. வடித்தல் - கூர்மையாக்குதல். ககஉ. பொருவுக்கு - ஒப்புச் சொல்வதற்கு. மால் - ஆசைப் பெருக்கம். கூர்தல் - மிகுதல். மரு - மணம். ககங. அளிக்குந் தொழில் உடையார் - காக்குந் தொழிலையுடையவர். உவவாள் - மகிழாள்.

தலைவன் செவ்வியெளிமைசெப்பல்

தேன்வந்த கொன்றைச் சடையாளர் வெங்கைச் செழுஞ்சிலம்பில்
கான்வந்த வேரிப் புனற்கோர் சிறுவழி காட்டுதல்போல்
யான்வந்த வாறு சிறிதுரைத் தாலிடை யீடின்றியே
தான்வந்து குங்குமக் கொங்கைக ளாரத் தழீஇக்கொளுமே. (௧௧௪)

பாங்கி யென்னைமறைத்தபி னெளிதெனநகுதல்

குற்ரு லமுந்தென் றிருவால வாயுங் குடியிருப்புப்
பெற்ருர் பவர்திரு வெங்கையி லேயெங்கள் பெண்ணணங்கின்
முற்ரு முலையை யெனைமறைத் தின்ப முயங்குறுதல்
கற்ரு வினைமறைத் தேயதன் பாலைக் கறப்பதுவே. (௧௧௫)

அந்நகைபொருஅ தவன்புலம்பல்

தடாது விளங்கொளி யானுர் திருவெங்கைத் தையனல்லாய்
படாது வளர்முலை யால்வரு நோயைப் பரிகரித்து
விடாது நகைசெய் திகழ்வ தளற்றில் விழுந்தவரை
எடாது மரும முருவச்செவ் வேல்கொண் டெறிவதுவே. (௧௧௬)

பாங்கி தலைவனைத் தேற்றல்

தொடர்ந்தாளும் வெங்கைப் பழமலை வாணரச் சுந்தரர்சொற்
கடந்தாலு மென்சொற் கடவாள் வரிச்செங் கயன்மருட்டும்
விடந்தா ழுயிற்கண் மடமான் றருமயல் வெள்ளத்திலே
கிடந்தா குலமுற்றி டேல்விடு வாயுன் கிலேசத்தையே. (௧௧௭)

பாங்கி கையுறையேற்றல்

ஏக நிலைத்த வுமைபாகன் வெங்கை யிமையவெற்பில்
மாக நிலத்தி லரிதாய வின்பம் வளர்ந்தெழுமே
பாக நிலப்பிறை வாணுத லாடன் பரவையல்குற்
போக நிலத்திலிட் டாளைய னேயுன்கைப் பூந்தழையே. (௧௧அ)

---

௧௧௪. கொன்றை - இருமடியாகு பெயர். கான் - காடு. ஏரி - பெருநீர்நிலை. இடையீடு - தடை. ௧௧௫. ஆர்தல் - வாழ்தல். பெண்ணணங்கு - பெண் தெய்வம். முயங்குறுதல் - புணரப்புகுதல். ௧௧௬. தடாது விளங்கொளி - ஒரு பொருளாலுந் தடுக்கப்படாமல் விளங்குகிற ஒளி. பரிகரித்தல் - ஒழித்தல். அளறு - சேறு. மருமம் - மார்பு. ௧௧௭. தொடர்ந்தாளல் — எழுமையுந் தொடர்ந்தாளுதல். மடமான் - உவமையாகுபெயர். மால் - மையல். வெள்ளம் - பெருக்கு. ஆகுலம் - வருத்தம். ௧௧அ. ஏகம் நிலைத்த-ஒன்ருந்தன்மை நிலைபெற்ற. மாகநிலத்தில் - விண்ணுலகத்தில். மாகம் - விண்; மா - கம் எனப் பிரித்துப் பெரிய விண் எனினுமாம். பரவை - பரப்பு.

### கிழவோனுற்றல்

வன்மொழி போல வுரைத்தவெல் லாமிந்த மங்கைநல்லாள்
இன்மொழி யேமனத் தன்புவி டாம லிசைத்தமையால்
மென்மொழி வாய்மைத் திருத்தொண்டர் தாமுனம் விட்டெறிந்த
கன்மொழி மாமல ரன்றே திருவெங்கைக் கண்ணுதற்கே. (ககூ)

### இறைவன் றனக்குக்குறைநேர்பாங்கி யிறைவிக்கவன் குறையுணர்த்தல்

வத்திர மைந்துடை யார்வெங்கை வாணர் வரையணங்கைப்
பத்திரங் கொண்டருச் சித்தே வரங்கொளும் பான்மையரை
ஒத்திரங் குள்ள மொடுபூந் தழைக்கை யொருவரின்று
சித்திர மொன்றனை யாயடைந் தார்நந் திருப்புனத்தே. (கஉ0)

### இறைவி யறியாள்போன்று குறியாள்கூறல்

வேலுக்கு மம்புக்கு மாறுகொண் டோடும் விழிமடவாய்
மாலுக்கு நன்மனை யாண்மனை யாகி வழங்கும்வல்ல
கோலுக்கு வல்லவண் ணமலை யார்கட்டு கோயிலகப்
பாலுக்கு வந்தது கண்டாய்நம் வெங்கைப் பழமலையே. (கஉக)

### பாங்கி யிறையோற்கண்டமை பகர்தல்

போரையும் வேலையு மாற்றிதன் வெங்கையிற் போதக்கண்டேன்
வாரையுங் கீள்பெருங் கொங்கையின் மேன்மனம் வைத்திருண்ட
காரையுஞ் சீறு மலர்க்குழ லாய்கரி யுங்கிரியும்
பேரையுஞ் சீரையுங் கேட்டுமுன் போந்த பெருந்தகையே. (கஉஉ)

### பாங்கியைத் தலைவிமறைத்தல்

நாரண னுன்முகன் காணார் சதானந்தர் ஞானபரி
பூரணர் வெங்கைப் பழமலை வாணர் பொருப்பின்மலர்த்
தாரணி வார்குழ லாய்நிந்தை கூறத் தகாதுகண்டாய்
காரண மின்றிக் கலுழ்வா ரொருவரைக் கண்டுகொண்டே. (கஉங)

### பாங்கி யென்னைமறைப்பதென்னெனத்தழாஅல்

மேலிலை யென்ன வுயர்ந்தார் திருவெங்கை வெற்பிலுள
மாலிலை யென்ன வெனைமறைத் தாய்திரு மாலுறங்கும்

---

கககூ. இசைத்தல்-சொல்லுதல். வாய்மை-உண்மை. கஉ0. வத்திரம்-முகம். அணங்கு - தெய்வப்பெண். பத்திரம் - தழை. பான்மை-தன்மை. இரங்குள்ளம் - இரக்கங்கொண்ட மனம். கஉக. மாறுகொண்டு-பகைமைகொண்டு. வழங்கல்-கொடுத்தல். கஉஉ. இருண்ட கார் - இருண்ட முகில். கீள் - கிழிக்கின்ற. பெருந்தகை - பெருங் குணமுள்ளவன். கஉங. பொருப்பு - மலை. தார் - மாலை. வார் - நீட்சி. கலுழ்தல் - மனங் கலங்குதல். கஉச. மேல் இல்லை என்ன-தமக்கு

ஆலிலை யன்ன வயிற்றணங் கேயருந் தாய்க்கொளித்த
சூலிலை நெஞ்சறி யாவஞ் சகமிலைச் சொல்லுதற்கே. (கஉ௫)

பாங்கி கையுறைபுகழ்தல்

நீரை யணியுந் திருச்சடை யார்வெங்கை நித்தர்வெற்பில்
தாரை யணியு மதன்றேர்கண் டம்ம தழைத்ததுகாண்
வாரை யணியு முகிண்முலை யாயணி வாய்த்தவல்குற்
றேரை யணியுந் தகுதிய தாமிந்தச் செந்தழையே. (கஉ௬)

தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தல்

வளங்கனி வெங்கைப் பழமலை வாணர் வரையினவர்
உளங்கனி வெண்மருப் போர்மத யானை யொளிர்நுதலாய்
களங்கனி யன்ன மடப்பிடி வாயிற் கனிந்துவிழும்
விளங்கனி நல்கக்கண் டாரைஃ துண்ணும் விளங்கனியே. (கஉ௭)

மறுத்தற் கருமைமாட்டல்

நந்தா வொளியர் திருவெங்கை நாட்டி னமக்களிப்பச்
சந்தா டவியு ளிறைவர்கொய் யாப்பைந் தழையுமில்லை
முந்தா வவர்க்கெதிர் நானுரை யாப்பொய்ம் மொழியுமில்லை
வந்தா லினியெனக் கில்லை பெண் ணேயொரு வார்த்தையுமே. (கஉஎ)

தலைவன் குறிப்புவேறாக நெறிப்படக்கூறல்

போருடை யானுடை யார்வெங்கை வாணர் பொருப்பின்மணித்
தேருடை யார்கருத் தேதோ வறிந்திலந் தேமொழியாய்
ஆருடை யானினும் வேம்புடை யானினு மையபனைத்
தாருடை யானல னேமதி மானெனச் சாற்றினரே. (கஉஅ)

தலைவியை முனிதல்

மறியே றியகைத் திருவெங்கை வாணர் மணிவரைமேல்
சிறியேனம் மெய்க ளிரண்டினும் வாழ்ந்திடுஞ் செய்யவுயிர்
எறியே ரயில்விழி யாயின்று காறு மிரண்டென்பதை
அறியே னறிந்தன னேலுரை யேனிவ் வடாதனவே. (கஉகூ)

மேலொரு தெய்வம் இல்லையென்னுமாறு. மால் - ஆசை. என்னை மறைத்தாய் - எனக்கு ஒளித்தாய். கஉ௫. மதன்தேர் - தென்றற் காற்று. அணிவாய்த்த - அழகு பொருந்திய. கஉ௬. வளம்கனி - எல்லா வளங்களு மிகுந்த. களங்கனி - களாப்பழம். கஉஎ. நந்தா ஒளியர் - கெடாத ஒளியை உடையவர். சந்தாடவி - சந்தனக்காடு. கஉஅ. ஆன் உடையார் - காளையூர்தியை உடையவர். ஆருடையான் - சோழன். வேம்புடையான் - பாண்டியன். பனைத்தாருடையான் - சேரன். ஆருடையான் சிவபெருமான், வேம்புடையான் ஆனைமுகக் கடவுள், பனைத்தாருடையான் பல தேவன் என்னும் பொருளுந் தோன்றுகின்றது. கஉகூ. மறி - மான்கன்று. மெய் - உடம்பு. அடாதன - தகாத வார்த்தைகள்.

தலைவி பாங்கியை முனிதல்

நாட்டு மலிபுகழ் வெங்கைபு ரேசர் நயந்துகதி
காட்டு மமல ரருளான்முன் றெய்வங் கடைப்பிடித்துக்
கூட்டு மொருவரைத் தானே நடுநின்று கூட்டுதல்போல்
ஈட்டு மொழிகள் பலபகர்ந் தாளிவட் கென்சொல்வதே. (கக0)

தலைவி கையுறையேற்றல்

பலர்செய்த மென்றுதி யாயினுங் கொச்சையம் பாலன்முதற்
சிலர்செய்த வின்றமி ழிச்சையி னார்திரு வெங்கையன்னாய்
அலர்செய்து நிற்பதொன் றுயினு மாக வனங்கனெய்யும்
மலர்செய்த நோய்மருந் தாமாயி னல்குக மாந்தழையே. (ககக)

இறைவி கையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல்

இரைத்துப் பொருகங்கை வேணியர் வெங்கை யிறைதழையென்
றுரைத்துக் கொடுத்தலு மோடிவந் தேற்ற துயிர்த்துமுத்தம்
நிரைத்துக் கிடக்கு முலைமே லழுத்தின ளேரிழைதான்
அரைத்துக் குடித்தில ளன்பசெய் யாதது மவ்வளவே. (ககஉ)

பாங்கி தலைமகற்குக் குறியிடங்கூறல்

அகலி லிருக்குஞ் சுடரென வெங்கை யகத்திருக்கும்
புகலி லிருக்கும் பொருளனை யார்தம் பொருப்பருகே
இகலி லிருக்குங் கதிர்வே லிறைவ விரவுகடும்
பகலி லிருக்கும் பொழில்பகல் யாங்கள் பயிலிடமே. (ககங)

பாங்கி குறியிடத்திறைவியைக் கொண்டுசேறல்

புணர்பூத்த வார்முலை யாய்மலர் தாங்கொய்யப் போதுவமந்
தணர்பூத்த சொன்மலர் வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பில்
இணர்பூத்த கட்கவர் வண்டிசை கூரு மிளங்கொடிப்பெண்
துணர்பூத்த கொம்பர்க் கொழுநனொ டாடிய சோலையிலே. (ககச)

குறியிடத்துய்த்து நீங்கல்

மானேநின் கண்ணிகல் பெற்றுள வாவி மருவலரை
யானே யளியினம் பின்றொடர்ந் தார்ப்பக்கொண் டிங்குறுவேன்

---

கக0. அமலர் - தூயவர். நற்கதி - வீடுபேறு. தெய்வம் - ஊழ். ககக. மென்துதி - இனியதுதி. கொச்சை - சீகாழி. அநங்கன் - உருவிலி. ககஉ. பொருதல் - கரையை மோதுதல். உயிர்த்தல் - மூச்சு விடுதல். ஏரிழை - அன்மொழித்தொகை. ககங. புகலில் இருக்கும் - சொல்லினிடத்தே யிருக்கிற. இகலில் இருக்கும் - பகைவர் மீதே நாட்டமாயிருக்கிற. ககச. புணர்பூத்த - நெருக்கத்தைக் கொண்ட. இணர்பூத்த-பூங்கொத்துக்களில் உண்டாகிய. இசை கூரும்- இசையைப் பாடும். ககரு. இகல் பெற்றுள்ள-பகைமையைக் கொண்

ஆனே ருடையர் திருவெங்கை வாண ரருண்முருகன்
தானே முறுமவி லாடல்கண் டேநிற்க தண்பொழிற்கே. (கடூ)

இறையோனிடத்தெதிர்ப்படுதல்

இயலோடு மல்குந் திருவெங்கை வாண ரிமயவெற்பிற்
கயலோடு வள்ளைக் கொடியோடு மோர்பைங் கமுகணங்கும்
புயலோடு நல்லிள நீரோடு நின்று புடைபெயருஞ்
செயலோடு நிற்பவிங் கின்றுகண் டேனொரு தீங்கரும்பே. (கடசு)

புணர்ச்சியின் மகிழ்தல்

மற்றின்ப முண்டென்ப தன்றோ லிவடர வந்தவின்பஞ்
சிற்றின்ப மென்பது தென்வெங்கை வாணர் திருநடனம்
உற்றின்பஞ் செய்யுஞ் சிதாகாசந் தன்னை யுணர்வுடைமை
பெற்றின்ப மெய்தினர் சொல்வர்சிற் றம்பலப் பேர்புனைந்தே. (கடஎ)

புகழ்தல்

வெங்கைப் பழமலை யெம்மா னுமையும் விளங்குமவன்
பங்கைப் பெறுமுமை செங்கா வியுமவள் பாலனொரு
செங்கைக் கதிர்வடி வேலுந் தரிப்பது செப்பிலிந்தக்
கொங்கைக் குடமுடை யாள்விழி காட்டுங் குறிப்பதுவே. (கடஅ)

தலைமகளைத் தலைமகன்விடுத்தல்

நீயாவி வந்தளித் தாய்தமி யேற்கு நிலாமலினிப்
பேயாவி நல்கிநிற் காணு தலமரும் பூவையர்க்கு
மாயாவி னோதர் திருவெங்கை வாணர் வரையினெதிர்
கூயாவி மென்மலர் கொய்துநின் றுடுக கோமளமே. (கடகூ)

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்

நஞ்ச மமுதுசெய் வெங்கைபு ரேசர்நன் னுடனையாய்
அஞ்ச முறவளி யெல்லா மடக்கி யமுதவொளி

---

டிருக்கிற. ஆவி மருவலரை-தடாகத்தில் உள்ள மலர்களை. மருஅலர்-மணமுள்ள மலர். ஏமுறும்-மகிழும். கடூ. இயலோடு மல்கும்-இயலோடு பொருந்திய. அணங்கும் - வருத்துகிற. தீங்கரும்பு - தலைவி. கயல் - கண். வள்ளைக் கொடி - காது. பைங்கமுகு - கழுத்து. புயல்-கூந்தல். இளநீர் - தனம். கடஎ. ஆன்றோர்கள் பேரின்பந்தரும் பேரம்பலத்தைச் சிற்றம்பலமென்று கூறுவார்கள். அதைப்போல இவள் தரும் பேரின்பமுஞ் சிற்றின்பம் என்று கூறப்படுகிறது. இதனினும் பேரின்பம் என்பது ஒன்று இல்லை யென்பதாம். கடஅ. உமை-மான். பங்கு-பாகம். வடிவேல்-வடித்தவேல். செப்புதல்-சொல்லுதல். கடகூ. ஆவி-உயிர். அளித்தல் - கொடுத்தல். அலமரல் - மனங் கலங்கல். பூவையர்-பூவைபோல்வார். ஆவி மென்மலர் - நீர்ப்பூ. கோமளம் - இளமையும் அழகுமுடையவள். கஎ0. வளியெல்லாம் அடக்கி-வாயு முழுவதையும்

விஞ்சு மதிகண் டிதழ்மூடி யோகம் விளைத்ததனுற்
கஞ்ச மிதுமுக சாரூபம் பெற்றது கைக்கொள்கவே. (கசo)

தலைவியைப் பாங்கிற்கூட்டல்

கங்கை விழியு முகமுஞ்செவ் வாயுங் கரத்துமைக்குச்
செங்க யலுஞ்செங் கமலமு மாம்பலுஞ் செப்புமவர்
வெங்கை யனைய விலங்கிலை வேற்கண் விளங்கிழையாய்
மங்கை யரையடைந் தம்மனை யாடுகம் வந்தருளே. (கசக)

நீங்கித் தலைவற்கோம்படைசாற்றல்

பிறவா வடிவன் றிருவெங்கை மேவும் பிரானெடுபோய்
உறவா ருயிருற வேயாக்குஞ் சத்தியை யொப்பவின்று
குறவாணர் தங்கண் மடமாதை நின்னெடு கூட்டுமெனை
மறவா திருமன் னவாவிது வேநல் வரமெனக்கே. (கசஉ)

உலகியன்மேம்பட விருந்துவிலக்கல்

மாயற் கரியர் திருவெங்கை வாணர் மணிவரைமேல்
ஈயற் பொரியுங் குறும்பூழ்க் குழம்புட னேனமெல்லூன்
தீயற் கறியுந் தினைமூ ரலுமெஞ் சிறுகுடில்வாய்
நேயத் திவண்மிசைந் தேகிலென் னுகு நெடுந்தகையே. (கசங)

விருந்திறை விரும்பல்

நானக் களப முலையீ ரெனக்கு நவில்வதென்னீர்
வானத் தவர்தொழு தேத்துறுஞ் சீர்வெங்கை வாணர்க்குங்கள்
கானக் குறவ ரிறைமகன் ருன்முனங் கல்லையிற்பெய்
ஏனத் தசைக்கறி யன்றே மிகவு மினியதுவே. (கசச)

## பகற்குறி

இடிவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்

நந்தா மதுகைப் பழமலை யார்வெங்கை நாடனையாய்
வந்தாவி யம்புயம் விட்டுமுன் னளிலம் மாலையன்று

---

அடக்கி. முகசாரூபம் பெற்றது - உன் முகவடிவத்தைப் பெற்றது. அஞ்சம் உற - அன்னப் பறவை பொருந்த. கசக. கரத்தல்-மறைத்தல். விளங்கிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். கசஉ. பிரான் - உபகார குணமுள்ளவன். குறவாணர் தங்கள் மடமாது - தலைவி. நல்வரம் - சிறந்த வரம். கசங. மாயற்கரியர் - திருமாலுக்கும் அருமையானவர். ஈயல்-இந்திரகோபம். குறும்பூழ் - காடை. ஏனம் - பன்றி. மூரல் - சோறு. மிசைதல் - உண்டல். கசச. நானம் - கத்தூரி. களபம் - கலவைச் சந்தனம். நவில்வது - சொல்வது. வானம் - இடவாகு பெயரால் விண்ணுலகத்தைக் குறித்து நின்றது. கல்லை - இலைக்கலம். ஏனம் - பன்றி. கசரு. நந்துதல் - கெடுதல். மதுகை - வலி. தனித்தார் -

சிந்தா குலமுற வேதனித் தாரைச் செறுக்குமதன்
செந்தா மரையை மலர்த்துமிம் மாலைச் சிறுபொழுதே. (கசரு)

பாங்கிபுலம்பல்

அருந்தா விடமு மருந்தியவ் வானவ ராருயிரைத்
தருந்தாரு வெங்கையி லெவ்வகை யானுந் தனைத்தப்பியே
இருந்தாலு மாவி கவர்வான் மதிப்பிள்ளை யீன்றுவைக்கும்
பெருந்தாப மாலைக் கிவளென்கொ லோபிழை செய்ததுவே. (கசசா)

தலைவனிடத் தலைவிவருந்தல்

கருமுன் படுந்துயர் தீர்ப்பார்நற் கட்செவிக் கங்கணவீ
ரிருமுன் கரமுடை யார்வெங்கை வாண ரிமயவெற்பில்
அருமுன் மணியும் புனைபூந் துகிலுங்கொண் டாயவெள்ளம்
வருமுன்வந் தாரிலை யேயணை கோலநம் மன்னவரே. (கசஎ)

தலைவியைப் பாங்கிகழறல்

புணர்ந்தாருள் வெங்கை புரநாதர் பாகம் புணர்ந்தநறு
மணந்தாழ் குழலுமை மங்கையல் லாமன் மகிழ்நர்தமைத்
தணந்தா ரமைகிலர் நீதரி யாமற் றளர்ந்தனையேல்
பணந்தா ழகலல்கு லாய்நகு வார்நினைப் பார்த்தவரே. (கசஅ)

தலைவி முன்னிலைப்புறமொழி மொழிதல்

உரையாத முன்ன முணர்வார் தமக்கன்றி யுற்றதன்னோய்
வரையாம லுள்ளவெல் லாமுரைத் தாலு மதித்துமனங்
கரையாத வர்கட் குரைப்பதின் வெங்கைக் கடவுளுண்ட
திரையால முண்டுயிர் நீத்தாலு நன்று தெரிந்தவர்க்கே. (கசகூ)

பாங்கியொடு பகர்தல்

வன்பந் தகனை யழைக்குநஞ் சூணின் மறைப்பவர்போல்
முன்பந் தனையிலர் வெங்கையின் மேவி முயங்குறுபேர்
இன்பந் தருமவ ரவ்வின்ப மூடுற வின்றுபிரி
துன்பங் கலந்தளித் தாரறிந் தேனிலைத் தூமொழியே. (கருo)

---

தனித்திருப்பவர். கசகூ. தாரு - கற்பதருவை நிகர்த்த சிவபிரான். வானவர் - விண்ணுலகத்திலுள்ள தேவர்கள். தாபம் - வெப்பம். கசஎ. கருமுன் - கருப்பத்தில். கட்செவி - பாம்பு. அணைகோல - அணைகட்ட. முன்மணி - முத்து. கசஅ. புணர்ந்தார் - கூடியவர். தாழ்தல் - தங்குதல். தரித்தல் - ஆற்றியிருத்தல். நகுதல் - நகைத்தல். பணம் - பாம்பின் படம். தணத்தல் - பிரிதல். கசகூ. உணர்வார் - குறிப்பறிவோர். வரைதல் - அளவு படுத்தல். கடவுள் - தொழிலாகு பெயர். திரை - அலை. அது கடலையுணர்த்தலாற் சினையாகு பெயர். கருo. வன்பு - வன்மை, அந்தகனையழைத்தலாவது சாவுக்கேதுவாதல்.

பாங்கியச்சுறுத்தல்

கலைக்காவி யன்ன விழிநீ புனத்திற் சுகங்கடியா
துணைக்காதல் செய்தவர் தம்பொருட் டாக வுலைதல்கண்டு
வினைக்கா டெறியு மழுவார் திருவெங்கை வெற்பிலன்னை
தினைக்காவன் மற்றெரு வர்க்களித் தாலென்னை செய்குவையே. ( )

நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்

தம்மா வியுந்தந் தலைவரும் வேறு தருமவரே
அம்மா வுலகிற் பிரிந்திருப் பாரளி மூசுமதக்
கைம்மா வுரியர் திருவெங்கை வாணர் கனகவெற்பில்
எம்மா வியேயவ ரென்றுற் பிரிகுவ தெவ்வண்ணமே. (கருஉ)

தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றல்

கடிக்குங் கரும்பு மதவேள் சிலையவன் கைப்பகழி
முடிக்குங் கடிமல ராமினிக் கேள்வெம் முயலகன்மேல்
நடிக்குங் கமல பதத்தார் திருவெங்கை நாடனையாய்
வடிக்குஞ் சுடரிலை வேலன்பர் தேரின் மணிக்குரலே. (கருங)

சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்

தழலாற் கடிய வளியே நறுமென் றழைகள்கொய்யக்
கழலார்ப் புறுமென் பதத்தார் புனத்தினுங் காவகத்துஞ்
சுழலாத் திரியுங் கிளிகா ளினிவெங்கைச் சோதிவெற்பில்
நிழலாற் பொலிந்த விளம்பொழிற் கேயிரு நெஞ்சுவந்தே. (கருச)

முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்

தொண்டா வெமையுடை யான்வெங்கை சூழிளஞ் சோலையிற்பூந்
தண்டா தளவு மளிகா ளுமக்குத் தகாதுகண்டீர்
கண்டா னினைந்துபின் காணுத போதெங் களைமறக்கும்
வண்டா ரிறைவ ரொடுகூடி யெம்மை மறப்பதுவே. (கருரு)

முன்னின்றுணர்த்தல்

நனைகாத்த பூமட வார்விழி யாக நயந்தருளங்
கனைகாத்த பாகர்தம் வெங்கையி லேவண்டு காவிமலர்ச்

---

கருக. காவி-கருங்குவளை மலர். புனம்-தினைப்புனம். கடிதல்-ஓட்டுதல். உலைதல் - வருந்துதல். வினைக்காடு - தீவினைக்காடு. எறிதல் - அறக்களைதல். கருஉ. அளி - வண்டு. மூசல்-மொய்த்தல். கைம்மா - யானை. உரி - தோல். கனகம் - பொன். ஆவி - உயிர். ஏ : இரங்கற் குறிப்பு. கருங. கடிக்கும் கரும்பு - நீ கடித்துண்ணுங் கரும்பாகும். முடிக்கும் - தலையில் அணிந்து கொள்ளும். கருச. தழல்-கவண். கொய்தல் - பறித்தல். பதம் - பாதம். கா - சோலை. நெஞ்சுவந்து இரும் என இயைக்க. கருரு. வள்தார் - வளவிய பூமாலை. அளவுதல் - அளைதல். கருசா. அங்கனை - பெண். செறித்து - இற்

சுனைகாத்த வெற்பெமர் வேலன்ன வேயிச் சுகங்கடிந்து
தினைகாத்த வெம்மைத் துயர்புகக் காப்பர் செறித்தினியே. (௧௱௬)

முன்னின்றுணர்த்தி யோம்படைசாற்றல்

அந்திப் பொழுதிற் பெடைதா மரையு ளகப்படநோம்
புந்திச் சுரும்பு கதிர்வருங் காறும் புறந்திரியும்
நந்திக் கொடிவலங் கொண்டோன் றிருவெங்கை நாட்டிறைவ
சிந்தித் தெமைமற வாதிரு நீநின் றிருவுளத்தே. (௧௱௭)

கிழவோன்றஞ்சம் பெறாது நெஞ்சொடுகிளத்தல்

தூற்றிக் கடிமலர்ப் பைந்தேன் கவர்ந்து சுரும்பினங்கள்
ஏற்றிக் குவடுற வைத்தாங் கிதணி னிருந்தவரை
நீற்றிற் றிகழ்வடி வார்வெங்கை வாணர் நெடுஞ்சிலம்பிற்
போற்றிக் குறவர்வைத் தான்மன மேயென் புரிகுவமே. (௧௱௮)

## பகற் குறியிடையீடு

இறைவனைப்பாங்கி குறிவரல்விலக்கல்

கானக் குறவர் திருவெங்கை வாணர் கனகவெற்பில்
ஏனக் குரலரி வான்குறித் தாரன்னை யென்பவளும்
மானக் கயல்விழி யாள்குர லீர வருவதுபோற்
றேனக் கலர்தொடை யாய்வரு வாளித் தினைப்புனத்தே. (௧௱௯)

இறைவியைக் குறிவரல்விலக்கல்

மாடுண்ட வீரப் பிறையார்தென் வெங்கை வரையினிலுன்
சேடுண்ட கொங்கைப் பசலைகண் டேதினைக் காப்பயிர்த்துத்
தோடுண்ட காதுடை யாயன்னை தானுந் துணிந்திலளீ
யோடுண்ட கூழெைன வேமறு காநிற்கு முள்ளமுமே. (௧௱௰)

---

செறித்து. காப்பர் - காவல்செய்வர். பூமடவார் என்றது திருமகள். கலைமகள், மண்மகள் என்பவரை. ௧௱௬. பெடை - பெண்வண்டு, அகப்பட - சிக்கிக்கொள்ள. சுரும்பு - ஆண்வண்டு. புறந்திரியும் - புறத்தே திரிகிற. ௧௱௭. தூற்றுதல் - இறைத்தல். கடி - மணம் பரண்மீதிருந்தவர் என்றது தலைவியை. வடிவு-திருமேனி. போற்றுதல்- சிறைப்படுத்தல். புரிதல் - செய்தல். ௧௱௮. கானம் – காடு. அரி வான் - அரிய. அரிதல் - கொய்தல். குறித்தல் - நினைத்தல். குரல் - தினைக்கதிர். ஈர்தல் - கொய்தல். நகுதல் - விளங்குதல். தொடை - மாலை; தொடுக்கப்பெறுவது தொழிலாகு பெயர். ௧௱௯. தோடுண்ட- தோடணிந்த. மாடுண்ட - செல்வமாகக் கொண்ட. ஈரம் - குளிர்ச்சி. சேடு - அழகு; இளமை திரட்சி என்பனவுமாம். அயிர்த்தல் - ஐயுறல். துணிதல் - உறுதி செய்தல். மறுகுதல் - மயங்குதல்.

இறைமகளாடிட நோக்கியழுங்கல்

நீடுந் தினையிற் கிளிநோக் குதலென நின்றுநம்மோ
டாடுந் தலைவர் வரனேக் கிதனு மவருடனே
கூடுந் தொழின்மறைக் குஞ்சுனை யோடலர் கொய்யுமலர்க்
காடும் பிரிவுறச் செய்வதென் னேவெங்கைக் கண்ணுதலே. (௧௧௧)

பாங்கியாடிடம் விடுத்துக்கொண்டகறல்

வயிரோ சனனுக் குலகீந் தவர்வெங்கை மன்னனுக்குப்
பயிரோ டுறவற நீத்தாளென் றெண்ணிப் பழுதுரையல்
செயிரோ சிறிது மிலாக்கிளி காடன் சிறுகுடிலுக்
குயிரோ டரிவை நடந்துசென் றுளென் றுரைமின்களே. (௧௧௨)

பின்னுணெடுந்தகை குறிவயினீடுசென்றிரங்கல்

தன்னே டிருந்த பொழுதிளஞ் சோலைசெய் தன்மைகண்டேற்
கன்னே தனியிருந் தாற்செய்யு மாறு மறிவிக்கவோ
மின்னே வெனநின் றவிர்சடை யார்திரு வெங்கைவெற்பில்
என்னே வறிந்தருள் செய்வான் வராம லிருந்ததுவே. (௧௧௩)

வறுங்களநாடிமறுகல்

பெறுங்கள நஞ்ச முடையா ரடியவர் பிள்ளைதனை
அறுங்கள மென்னு மொருவெங்கை வாண ரணிவரைமேல்
நறுங்கள வன்ன குழனீங்க மங்கல நாணிழந்த
வறுங்கள மென்ன விருந்ததந் தோவிம் மணியிதணே. (௧௧௪)

குறுந்தொடிவாழு மூர்நோக்கி மதிமயங்கல்

அறத்தா றுடையர் நுகர்பெரும் போக மறமறியா
மறத்தா றுடையர் விரும்புதல் போலும் வளர்சடையின்
புறத்தா றுடையர் திருவெங்கை வாணர் பொருப்படைந்த
குறத்தா றுடையர் மடமாதை மேவக் குறிப்பதுவே. (௧௧௫)

---

௧௧௧. தினையில் - தினைப்புனத்தில். என்னேவென்னுமோகாரம் இரங்கல். ௧௧௨. வயிரோசனன் - மகாபலி. இவன் விரோசனன் என்பவனுடைய மகனுகையால் வயிரோசனன் எனப்பட்டான். செயிர் - குற்றம். ௧௧௩. தன்னேடு - தலைவியோடு. இளஞ்சோலை செய் தன்மை - இன்பம். தனியிருந்தாற் செய்யுமாறு - துன்பம். என்னே: இரங்கற் குறிப்பு; வியப்பிடைச் சொல்லுமாம். ௧௧௪. களம் - கழுத்து. அடியவர் என்றது சிறுத்தொண்டரை. பிள்ளையென்றது. சீராளனை. வறுங்களம்-வெறுங்கழுத்து. தலைவியிருந்தபோது மங்கலமாகக் காணப்பட்டது பின் தலைவி சென்றபிறகு அமங்கலமாகக் காணப்பட்டதென்பது கருத்து. ௧௧௫. அறத்தாறு - அற நெறி. நுகர்தல் - அனுபவித்தல். பெரும்போகம் - பேரின்பம். உடையர் - பாவிகள். குறத்தாறு - குறவர் மரபு.

## இரவுக்குறி

### இறையோ னிருட்குறிவேண்டல்

பொருந்தா ரரணம் பொடித்தோர் பவப்பிணி போக்குதற்கு
மருந்தா மிறைவர் திருவெங்கை வாணர் வரையனையீர்
திருந்தார் கலியிற் புகுந்துநன் மீன்வரச் செய்துமக்கு
விருந்தாக வைத்தகன் றுனளி யேனையவ் வெய்யவனே. (கசசு)

### பாங்கிநெறியின தருமைகூறல்

அங்க முழுவணி யானேன்றென் வெங்கை யரனருண்மா
தங்க முழுமத யானையன் றாடகற் சாடுமொரு
சிங்க முழுவரி யன்றெ வேழமுஞ் சீயமுஞ்சேர்
துங்க முழுவன மெவ்வா றிருள்வரச் சொல்லுவதே. (கசஎ)

### இறையோனெறியின தெளிமைகூறல்

பங்கந் தனக்கிலன் வெங்கையி லேறும் பணைமுலைமா
தங்கந் தனக்குமம் மாதங்க பாரந் தரிக்குமிடைச்
சிங்கந் தனக்குந் தளர்வதல் லாமற் சினவிலங்கின்
சங்கந் தனக்கொரு நானோ தளர்குவன் றாழ்குழலே. (கசஅ)

### பாங்கி யவனாட் டணியியல் வினாதல்

போதேது கொய்வ ரிழையே தணிவர் பொழில்விளையாட்
டேதேது செய்வர் புனலேது தோய்வ ரெமைத்துதிப்பிற்
றீதேது மில்லை யெனும்வெங்கை வாணர் செழுஞ்சிலம்ப
சூதே தெனுமுலை யாருங்க ணாட்டியற் சொல்லுகவே. (கசக)

### கிழவோனவணாட் டணியியல் விறுதல்

என்னாட் டணியிய லென்னுயி னென்னுனக் கென்றனக்குப்
பொன்னாட் டணியிய லெல்லாங் கவர்ந்து புகழ்மலிந்த
சொன்னாட் டணியியல் வெங்கைபு ரேசர் சுடர்க்கிரிசூழ்
நின்னாட் டணியிய லெல்லா முரைத்தரு ணேரிழையே. (கஎ0)

---

கசசு. பொருந்தார் - பகைவர். அரணம் - மதில். ஆர்கலி - கடல். மீன் - உடுக்கள். கசஎ. மாதங்கம் - யானை. ஆடகன் - இரணியன். முழு அரி - முழுச் சிங்கம். துங்கம் - உயர்ச்சி. முழு வனம் - பெருங்காடு. கசஅ. எக்காலத்தும் அழிவற்றவனுகையால் இறைவனைப் பங்கந் தனக்கிலன் என்றார். பணைத்தல் - பருத்தல். சங்கம் - கூட்டம். கசக. இழை - அணிகலன். பொழில் - சோலை. தோய்தல் - மூழ்குதல். சூது - சூதாடு கருவி. கஎ0. பொன்னாட்டு - தேவருலகத்தின். சொல் நாட்டு - சொல்லை நிலைநிறுத்தின. நேரிழை - அன்மொழித் தொகை. கவர்தல் - பற்றுதல்.

அவற்குத் தன்னுட்டணியியல் பாங்கிசாற்றல்

பிறைக்கோலஞ் செய்யு நுதற்சூட் டணிகுவர் பெய்வளையால்
இறைக்கோலஞ் செய்வர் சினையா டுவரவ் விரதிதனைச்
சிறைக்கோலஞ் செய்யும் விழியார்தம் வெங்கைச் சிலம்பமதன்
நறைக்கோலஞ் செய்ய நறைக்கோலஞ் செய்வரென் னுட்டவரே. ( )

இறைவிக் கிறையோன் குறையறிவுறுத்தல்

வன்மானு மென்முலைச் சேயரி வாட்கண் மடந்தைநல்லாய்
வின்மான் மதிக்கை யரவிந்தம் வாடவவ் வேள்விதரும்
நன்மான் கரத்தர்தம் வெங்கையி லேயிற்றை நாளிரவில்
நின்மான் மதிமுகங் காண்பான் விரும்பு நெடுந்தகையே. (௧௭௨)

நேராதிறைவி நெஞ்சொடுகிளத்தல்

ஒலியா லசையச் சருகெழத் தோகை யுடன்குதிப்பப்
புலியா வெனவெழக் குஞ்சர மோடப் புளிநரெல்லாம்
மெலியா விரையும் வனத்தே யிறைதிரு வெங்கைவெற்பில்
மலியா ரிருள்வர நெஞ்சமெவ் வாறு வலிப்பதுவே. (௧௭௩)

நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல்

மின்னோடு வந்த விரிசடை யோன்றிரு வெங்கைவெற்பர்
மன்னோடு நீயிருள் வந்தே கெனச்சொன் மடந்தைநல்லாய்
என்னோடு கூடி யிருப்பது போல விருந்துமனம்
உன்னோடு கூடி னினியேது நானிங் குரைப்பதுவே. (௧௭௪)

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தல்

கொலையைக் குறித்த விலைவே லவநின் குறிப்பிசைய
முலையைப் புணர்மென் கொடியிடை யாடன் முரணுமனச்
சிலையைக் கரைத்துவந் தேனொரு நான்வெங்கைச் செல்வரைப்போல்
மலையைக் குழைக்கவும் வல்லே னினியிந்த மாநிலத்தே. (௧௭௫)

குறியிடைநிறீஇத் தாய்துயிலறிதல்

விந்தா சலமுனி மாதவன் போற்றரன் வெங்கைவெற்பில்
சந்தா டவிகண் முறித்தெறி வேலொடு தண்புனத்தில்

---

௧௭௧. நுதற் சூட்டு - நெற்றிச்சுட்டி. பெய்தல்-இடுதல். இறை-முன்கை. ஆடுதல் - குளித்தல். நறைக்கோல்-மணமுள்ள மலர்க்கணை. ௧௭௨. வல்மானும் - சூதாடு கருவியை ஒக்கும். சேயரி - செவ்வரி. வில் - ஒளி. ௧௭௩. குஞ்சரம் - யானை. தோகை - சினையாகுபெயர். மலியார் இருள் - மிகப்பெரிய இருள். வலிப்பது - உறுதி கொண்டிருப்பது. ௧௭௪. மின்னோடுவந்த - மின்னோடு கூடிவிளங்குகிற. மன்னோடு - தலைவனோடு: ௧௭௫. ஒருநான் - ஒப்பற்ற நான். முரணும்-மாறுபட்ட - மனச்சிலை - மனமாகிய கல். ௧௭௬. விந்தாசலம் - விந்தமலை. முனி - சினந்த. சந்தாடவிகள் - சந்தனக்காடுகள். ஆகுலம் -

வந்தா குலநமக் காக்கிய வாரணம் வந்துற்றதோ
நந்தா வனத்திற் பறவையெல் லாமு நரல்கின்றவே. (கஎச)

இறைவிக் கிறைவன் வரவறிவுறித்தல்

மேனைக் குரிய மருமக ஞர்திரு வெங்கைவெற்பில்
மானைக் கடந்து செவியள வோடு மதர்விழியாய்
யானைக் கரியு மரிக்குச் சரபமு மாகியிந்தக்
கானைக் கடந்துவந் தாருயிர் போலுநங் காவலரே. (கஎஎ)

அவட்கொண்டு சேறல்

முருந்தா நகையுமை பங்காளர் வெங்கை முதுகிரிமேல்
இருந்தா மரைகண் மறுத்தவிப் போதி லிதழ்திறந்து
விருந்தா மளிகட் கினிதூட்டு மல்லிகை மென்மலர்கொய்
தருந்தா ரணிகுவ னில்லா தெழுந்தரு ளாரணங்கே. (கஎஅ)

குறியுய்த்தகறல்

காதா ரமுதம் பெறவேண்டி யன்றொரு காரிகைபாற்
றூதாய் நடந்த திருவெங்கை வாணர் சுடர்க்கிரிமேற்
போதார் மலர்மல் லிகையொடு முல்லையும் போய்க்கொணர்வேன்
பாதார விந்தம் வருந்தா திவணிற்க பைங்கொடியே. (கஎகூ)

வண்டுறைதாரோன் வந்தெதிர்ப்படுதல்

தாட்டா மரையென் றலைக்கணி வோன்வெங்கைத் தண்சிலம்பிற்
றீட்டா வொருநடை யோவியம் போலுந் திருவுருவீர்
ஆட்டா னெனுங்கதி ரேடாங் கதவடைத் தாங்கதன்மேற்
பூட்டா மளியுறப் பூட்டிற்றன் றேவுங்கள் பூவகமே. (கஅ0)

பெருமகளாற்றின தருமைநினைந்திரங்கல்

விண்டெரி யாது முகிலான் முகில்பொழி வெள்ளத்தினால்
மண்டெரி யாதெவ் வகையடைந் தாயன்ப மாறன்வயற்
கண்டெரி யாவிரு ளிற்போ மருமை கருதியன்றே
பண்டெரி யாயொளிர் வெங்கைப் பிரான்பதம் பாலித்ததே. (கஅக)

---

வருத்தம். நரலல் - ஒலித்தல். கஎஎ. மேனை - மேருமலையின் மகள்; மலையரசன் மனைவி; இவளுக்கு மநோரமை என்றும் பெயருண்டு. கங்கையும் உமாதேவியும் இவளுடைய பெண்கள். மானைக்கடந்து - மானைவென்று. கான் - காடு. கஎஅ. முருந்து - மயிலிறகின் அடி. பங்காளர் - இடப்பாகத்திலுள்ளவர். கஎகூ. காதாரமுதம் - சுந்தரருடைய தேவாரப்பாடல்கள். காரிகை - பரவையார். ஆர்தல் - உண்டல். போது - பேரரும்பு. கஅ0. தாட்டாமரை - தாளாகிய தாமரை; தாமரை மலர்போலுந் தாள். தீட்டல் - எழுதுதல். நடை ஓவியம் - நடத்தலைச் செய்யும் ஓவியம். கஅக. வெள்ளம் - நீர்ப் பெருக்கு. மாறன் - இளையான் குடிமாறநாயனார். பதம் - திருவடி. பாலித்தல் - தந்தருளல்.

### புரவலன் றேற்றல்

முன்காட்டு பந்தமும் வீடுமுள் ளோன்வெங்கை மொய்வரைசூழ்
கொன்காட்டி லுன்குழல் போலே யிருண்டவிக் கூரிருள்வாய்
பொன்காட்டு நல்லெழி லுன்னிடை போலப் புயனுடங்கு
மின்காட்டி வந்ததிங் குன்னூர் வழியை விழியினுக்கே. (கஅஉ)

### புணர்தல்

ஓர்போ தெனும்பிறை வேணியிற் சூடு மொருவர்வெங்கை
தேர்போ லகன்ற மணியல்கு லாயிரு செய்யவிள
நீர்போ லமைந்தின்ப மேதிரண் டாங்குறு நின்முலைகள்
மார்போ டழுந்தத் தழுவவென் னுன்செய்த மாதவமே. (கஅங)

### புகழ்தல்

பெண்காட் டியவொரு பங்குடை யாருதிர் பிட்டினுக்கா
மண்காட் டியபொன் முடியார் திருவெங்கை வாணர்வெற்பிற்
றண்காட் டியமலர்க் கோதாய் குரும்பைக டாமொருமுக்
கண்காட்டு மாயினு மொவ்வா நினதொரு கண்முலையே. (கஅச)

### இறைமகளிறைவனைக் குறிவரல்விலக்கல்

அரவெளி தோவவ் வனமெளி தோவன்றி யாற்றின்மடுக்
கரவெளி தோநந் திருவெங்கை வாணர் களமருட்டும்
இரவெளி தோவிவை யெல்லாங் கடந்திங் கெனையளிப்ப
வரவெளி தோவென் னுயிர்க்கர ணாகிய மன்னவனே. (கஅரு)

### அவனிறைவியை யில்வயின்விடுத்தல்

வலம்பொலி வீர மழுவாளன் வெங்கை மணிவரைமேல்
நலம்பொலி வானுதல் வேற்கணல் லாயுன் னடைவிரும்பி
அலம்பொலி யோடு தொடரோ திமமிலை யஞ்சலைதாட்
சிலம்பொலி யாமற் பரிகரித் தேகுன் றிருமனைக்கே. (கஅசு)

### இறைவியையெய்திப் பாங்கிகையுறைகாட்டல்

முட்டுப் படாத திருவாளன் வெங்கை முளரிமுகை
நட்டுப் படாத விளமுலை யாயுன் னகையுடனே

---

கஅஉ. பந்தம் - பிறவிப் பிணிப்பு. வீடு - திருவடிப்பேறு. மொய் - வலி. கொன் - பெருமை. கூர் - மிகுதி. பொன் - திருமகள். நுடங்கல் - அசைதல்; துவளல். கஅங. ஓர்போதெனும் பிறை - ஒருகலையை உடைய திங்கள். வேணி - சடை. தேர் - தேர்த்தட்டு. கஅச. மண்காட்டிய - மண்சுமந்த. பொன்முடி - அழகிய திருமுடி. கஅரு. அரவு - பாம்பு. வனம் - காடு. கரவு - முதலை. எனை அளிப்ப - என்னைக் காக்க. கஅசு. வலம் - வெற்றி. ஓதிமம் - அன்னம். பரிகரித்து - அடக்கி. அலம்புதல் - ஒலித்தல். கஅஎ. முட்டுப் படாத - குறையுண்டாகாத. திருவாளன் - செல்வன். முளரி -

மட்டுப் படாம லிகலுந் தளவின்று மட்டுப்பட்டுக்
கட்டுப் படாமலென் கைக்கேவந் துற்றது கண்டருளே. (கஅஎ)

இற்கொண்டேகல்

சூடுந் துளப மணிநீல வெற்புந் தொடர்ந்துமுனம்
நாடுந் திருவடி யெம்மான் றிருவெங்கை நாடனையாய்
ஆடுங் கலாப மயில்போ லுறங்குநம் மன்னையினுற்
றேடும் பொருளல்ல மோசெல்லு வோநந் திருமனைக்கே. (கஅஅ)

பிற்சென்றிறைவன் வரவுவிலக்கல்

தம்மேற் பணிபுனை வெங்கைபு ரேசரைச் சார்கிலர்போற்
கைம்மேற் பொருடெரி யாவிருள் வாய்வெங் கரியுடனே
தெம்மேற் புலிதிரி யுங்காட்டி னீயிச் சிறுவழிவந்
தெம்மேற் பழிசுமத் தாதகல் வாயெம் மிறையவனே. (கஅக)

பெருமகன்மயங்கல்

ஆய்வா ரளவி னளவாகும் வெங்கை யமலர்வெற்பிற்
றேய்வா னுடங்கிடை யாயறிந் தாரைச் செலவிடுப்போர்
போய்வாவென் பாரிவ் வுலகினிற் போவென வேமுடித்து
நீவாவென் றுயிலை கண்ணேட்ட மில்லைகொ னின்றனக்கே. (ககo)

தோழிதலைமகடுயர்களைந்துவிடுத்தல்

வம்பு குறித்து வருமா ரளியின மல்லிகைப்பூங்
கம்பு குறிக்கும் பொழுதில்வெங் கேசரைக் கைதொழுது
நம்பு குறிக்கண் வருமண்ண லேநின் னகரினிற்போய்க்
கொம்பு குறித்து வரக்காட் டொலியையெங் கொம்பினுக்கே. (ககக)

திருமகட் புணர்ந்தவன் சேறல்

முப்போ தினுமந் தணர்தொழு தேத்துறு முத்தலைவேல்
அப்போ தகன்றிரு வெங்கையன் றுளல்குற் காடரவம்
ஒப்போ தெனவொண் மணிவிளக் கேற்றி யுதவிசெய்யுஞ்
செப்போ திளமுலை யாய்செல்லு வேனென் றிருநகர்க்கே. (ககஉ)

---

தாமரை. நட்டல் - நட்புச் செய்தல். நகை - பல். மட்டு - அளவு. தளவு - முல்லை. மட்டு - தேன். கஅஅ. துளபம் - துளசிமாலை. நாடுதல் - தேடுதல். கலாபம் - தோகை. கஅக. சார்கிலர் போல் வந்து என இயையும். தெவ் - போர். பழி - பழிச்சொல். ககo. ஆய்வார் என்றது பக்குவிகளை. அமலர் - தூயவர். செலவிடுத்தல் - அனுப்புதல். கக௧. வம்பு - மணம்; போராட்டமுமாம். குறித்தல் - ஊதுதல். குறி - குறித்தவிடம். கொம்பு - ஊதுகொம்பு. ககஉ. ஏத்துறும் - போற்றுகின்ற. போதகன் - ஞானாசிரியன். செப்பு - செப்புக் கிண்ணம்.

## இரவுக்குறியிடையீடு

### இறைவிக் கிருளை யிறைவ ரவுணர்த்தல்

வள்ளலம் பாகு மரியாளன் வெங்கை மணிவரைமேல்
விள்ளலம் பானல் விழியாய் துணைபுணர் மென்சிறகர்
உள்ளலம் பாது துயில்கூர் தருத லொழிந்தெழுந்து
புள்ளலம் பாநின்ற தென்னோ நமதிளம் பூம்பொழிற்கே. (ககந)

### தான்குறி மருண்டமை தலைவி யவட்குணர்த்தல்

கானலை வேனின் முதிர்வா லெதிருறக் கண்டுமறி
மானலை நீரென வோடுதல் போல்வெங்கை வாணர்வெற்பிற்
றேனலை வார்தொடை யார்குறி யாமெனச் சென்றுநைந்தேன்
பானலை வென்றகண் ணாய்குறி வேறுறப் பைம்பொழிற்கே. (ககச)

### பாங்கிதலைவன் றீங்கெடுத்தியம்பல்

மறிக்கும் புலனுடை யன்பர்தம் பாவ மரமுறியத்
தறிக்குங் கனன்மழு வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பில்
வெறிக்குங் குமமுலை மெல்லிய லாயிந்த மேதினியோர்
குறிக்குங் குறிசெய்வ ரோநமை யாளக் குறித்தவரே. (ககரு)

### புலந்தவன் போதல்

மறந்தடுக் குஞ்செயல் வெங்கைபு ரேசர் மறைவனத்தில்
அறந்தழைக் குந்திரு வாலயம் போலுல காரிருளைப்
பிறந்தழித் தென்று மொளியோ டுலாவரும் பேரிருவர்
திறந்தடைக் கின்றதன் றோநெஞ்ச மேநந் திருமனையே. (ககசு)

### புலர்ந்தபின் வறுங்களந் தலைவி கண்டிரங்கல்

பணஞ்செய் பொறியிள நாகா பரணர் பகைதடிந்து
திணஞ்செய் சுடர்மழு வெங்கைபு ரேசர் நெடுஞ்சிலம்பிற்
குணஞ்செய் கதிரிலை வேலன்பர் தாங்குளிர் மாலையிட்டு
மணஞ்செய் தனரென வோதழைந் தாய்மலர் மாதவியே. (ககஎ)

---

ககந. அரி - திருமால். வள்ள லம்பாகு மரியாளன் - திருமாலை வலிய அம்பாக வுடையவன். மணி - அழகு. விள்ளல் - மலர்தல். பானல் - கருங்குவளை. ககச. கானல் - கானல்நீர். இது பேய்க ளுக்குத் தேராதலால் இதனைப் பேய்த்தேர் என்பர். மறிமான் - மான் கன்று. பானல் - கருங்குவளை. ககரு. மறிக்கும்-தடுக்கும். தறிக்கும் - வெட்டுகிற. குறித்தல் - செய்தல்; நினைத்தல். ககசு. மறம் தடுக்கும்-தீவினையைப் போக்கும். மறைவனம்-திருமறைக்காடு. ககஎ. பணம் - படம். பொறி - புள்ளி. தடிதல் - வெட்டுதல், திணம் - கொழுப்பு. சிலம்பு - மலை; மாதவி - குருக்கத்தி,

தலைமகன்பாங்கியோடுரைத்தல்

நல்லார் தொடர்பிளங் காய்முதிர் வாமென நாடுரைப்ப
அல்லார் மணிமிடற் றெம்மான் றிருவெங்கை யாதிவெற்பில்
மல்லார் திணிபுயத் தன்பர்நம் பான்முனம் வைத்தநட்பு
வில்லார் சிறுமென் றளிர்முற்ற லாகி விளைந்ததுவே. (௧௯௮)

தலைமகளவலம் பாங்கிதணித்தல்

தீங்கையொன் றுனு முறுகிலர் போற்றுந் திருவடியான்
காங்கையன் றாதைதன் வெங்கையி லேபைங் கனகநிறக்
கோங்கையென் றேங்கு முலையாய்நம் மன்பர் குறிபிழையார்
வேங்கையென் றுயினும் பூத்ததுண் டோமுல்லை மென்மலரே. (௧௯௯)

இறைவன்மேற்பாங்கி குறிபிழைப்பேற்றல்

பொருவோ விலர்திரு வெங்கையி லேமுன் புனத்திலெமை
உருவோ டுயிரமு தென்றுபொய் கூறி யுழன்றவரே
வெருவோ மிரவும் பழியுமும் மூர்க்கு வினவிவழி
வருவோம் வரினு மெமைநோக்கு றீரென வந்திலமே. (௨௦௦)

இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றல்

நறவே யிதழியுங் கங்கையும் பாம்பு நகைமதியும்
உறவே யணியு மணிமுடி யார்வெங்கை யூரனைய
புறவே யிளமயி லேயமு தேபசும் பொற்கொடியே
மறவே னுனையென்று நீநினை யாமன் மறப்பினுமே. (௨௦௧)

தலைவி குறிமருண்டமை பாங்கி தலைவற்குரைத்தல்

ஈயா தவரைக்கண் டீவ ரெனச்செல் லிரவலர்போற்
போயாவி யிற்சிறு மாங்கனி வீழப் புரவலனே
நீயாவி யிற்செய் குறியென வேசென்று நித்தர்வெங்கை
வீயா மலர்க்குழ லாள்வறி தேநொந்து மீண்டனளே. (௨௦௨)

அவன்மொழிக்கொடுமை பாங்கியவட்கியம்பல்

கள்ளெழுங் கொன்றையர் வெங்கையி லேமைக் கடலின்மதி
நள்ளெழுங் காலம் பெறவே குறியிட நான்மருவி

௧௯௮. தொடர்பு - நட்பு. முதிர்வு - முதிர்தல். அல் - இருள். மணி - நீலமணி. மிடறு - கண்டம். மல் - மற்றொழில். திணி - திண்மை, வலி. வில் - ஒளி. ௧௯௯. உறுகிலர் - அடையாதவர். காங்கையன் - முருகன். கோங்கு - கோங்கரும்பு. ௨௦௦. உயிர் அமுது - சீவ அமுதம். உழன்றவர் - திரிந்தவர். வெருவோம் - அஞ்சோம். ௨௦௧. நகைமதி - ஒளியுள்ள இளம்பிறை. உற - பொருந்த. ௨௦௨. வீயாமலர்க் குழலாள் - மலர் நீங்காத கூந்தலையுடையவள். ஈயாதவர் - உலோபர். இரவலர் - இரப்போர். நித்தர் - அழியாதவர். வீஆம் மலர் என்று பிரிப்பின் வண்டுகள் மொய்க்கும் மலர் என்க. ௨௦௩. கள் - தேன். எழுதல் - பெருகுதல். மை - கருமை. நள் -

உள்ளெழுங் காம மருந்து பெரும லுழன்றுசென்றேன்
புள்ளெழுங் காலையென் றூரன்பர் தாமிளம் பூங்கொடியே. (௨0௩)

### என்பிழைப்பன்றென் றிறைவி நோதல்

அஞ்சா மதற்றெறும் வெங்கைபு ரேச ரணிமிடற்றில்
நஞ்சா மிருளிற் குறிபிழை யாதொரு நான்குறித்துத்
துஞ்சா திருந்துந்துஞ் சுற்றா ளெனவவர் தூற்றப்பட்டேன்
எஞ்சா வமுதனை யாயினி நானிதற் கென்செய்வதே. (௨0௪)

### தாய் துஞ்சாமை

கயிற்றா னிகழர வம்போற் சகந்தனிற் கற்பனையாக்
குயிற்றா நிகழிறை வெங்கையி லேயெழுங் கூன்பிறையோர்
எயிற்றா னிகழு மிளம்பேதை யாமிவ் விரவுவந்து
துயிற்றா வனைதனை வெங்கால தூதர் துயிற்றுகவே. (௨0௫)

### நாய் துஞ்சாமை

சுனைவாய் மடைதிறக் கும்பல வான்வயற் றேன்றுசெந்நெல்
விளைவாய் மலியுந் திருவெங்கை வாணர்தம் வெற்பிடைமா
தளைவாய் மடமயி லேதனி வேழந் தனையொருபுன்
வளைவாய் ஞமலி குரைத்திங் குறுமன் மறித்ததுவே. (௨0௬)

### ஊர் துஞ்சாமை

நீர்துஞ்சுஞ் செஞ்சடை யார்வெங்கை வாணர் நெடுஞ்சிலம்பில்
வார்துஞ்சு மென்முலைக் கோமள மேவந்து மால்வரைமேற்
கார்துஞ்சு மாவின மெல்லாமுன் றுஞ்சக் கடலுந்துஞ்ச
ஊர்துஞ்சி லாததென் னேவிது நான்செய்த வூழ்வினையே. (௨0௭)

### காவலர் கடுகுதல்

தேவாதி தேவர் திருவெங்கை வாணர் சிலம்பர்நமை
மேவாத வண்ணங் கதிர்வேன் மருட்டும் விழிமடவாய்

---

நடு. மதி-மதுவையுடையது. மருவல்-பொருந்தல். ௨0௪. தெறும்-வென்ற. துஞ்சுற்றாள் - தூங்கினாள். தேவர்கள் முதலானோரைக் காத்தமை நோக்கி 'அணிமிடறு' என்றார். எஞ்சாவமுது - குறையாத அமுதம். ௨0௫. கயிறு - பழுதை. அரவம் - பாம்பு. கற்பனை - இல்லதை உள்ளதுபோற் கற்பித்தல். குயிற்றல் - செய்தல். எயிறு - பல். ௨0௬. மாதளைவாய் - மாதுளங்கனிபோலும் வாய். மாதளை - மாதுளம் பூவுமாம். ஞமலி - நாய். மறித்தல் - தடுத்தல். ௨0௭. ஊர்-ஊரிலுள்ளாரை யுணர்த்தலால் ஆகுபெயர். வார் - கச்சு. வரை - மூங்கில். கார் - முகில். மா - விலங்கு. வார் துஞ்சு மென்முலைக் கோமளம் என்றது பாங்கியை. ௨0௮. தேவாதி தேவர் - தேவர்களுக்கெல்லாம் முதல் தேவர். சிலம்பர் - வெற்பர். மேவல்-கூடல். மருட்டல் - வெருட்டல். நெய்தற்பறை - சாப்பறை. அறைகூவுதல் - வலிந்

கூவா மறுகிற் றிரிகா வலர்கையிற் கொட்டுபறை
வாவா வெனநெய்த லம்பறை கூவுநம் வாய்தலுக்கே. (உ0அ)

*நிலவு வெளிப்படுதல்*

ஒழுங்கி யிருந்த சடையாளர் வெங்கை யொருவர்வெற்பில்
புழுங்கி யிருந்த மனத்தன்பர் தாம்வந்து போமளவும்
மழுங்கி யிருந்து மிளிர்திங் களையொரு வாளரவம்
விழுங்கி யிருந்து விடாதுகொ லோதளிர் மெல்லியலே. (உ0க)

*கூகை குழறுதல்*

நாகா பரணர் திருவெங்கை நாயகர் நல்லடிக்கன்
பாகா தவரெனக் கூகூவென் றத்தி யதிலிருந்து
நீகா வலரை விலக்குகின் றுயுயிர் நீத்திலனேற்
கூகாய் நினதடல் காண்பேன் விடியிற் கொடிமுன்னமே. (உக0)

*கோழி குரல்காட்டல்*

வாய்மை யெனினும் புலரியைக் கூறுதல் வாரணங்காள்
சேய்மை யறுநங் கொழுநர்தங் கூட்டஞ் சிதைத்தெமக்குத்
தீமை பயந்தமை யால்வெங்கை நாயகர் செய்தவறத்
தூய்மை யுணர்ந்தவர் வாய்மையன் றுமெனச் சொல்லுவரே. (உகக)

## வரைதல் வேட்கை

*தலைமகளைப்பாங்கி பருவரல் வினவல்*

என்னிடத் துற்ற குறையுள வோநம்மை யீன்றவன்னை
தன்னிடத் துற்ற முனிவோ வுலகந் தருமிமய
மின்னிடத் துற்ற பழமலை யார்திரு வெங்கை யன்னுய்
நின்னிடத் துற்றதென் னேவுரை யாய்நின் னினைவினையே. (உகஉ)

*அருமறை செவிலி யறிந்தமைகூறல்*

வேலையி லேவரு நஞ்சமுண் டார்திரு-வெங்கைவெற்பில்
மாலையி லேவண் டிசைபாடு மென்குழல் வாணுதலாய்

தழைத்தல். உ0க. ஒழுங்கி - ஒழுங்காகி. புழுங்குதல் - வருந்துதல். மழுங்கி - ஒளிகுன்றி. மிளிர்தல் - விளங்குதல். உக0. பிறவிப் பெருங்கடற்கொரு மரக்கலமாதல்பற்றி இறைவன் திருவடியை நல்லடி யென்றார். அன்பு - ஆகுபெயர். காவலர் - அரசர் (தலைவர்) அத்தி - ஒருமரம்; என்புக் குவியலுமாம். விலக்கல் - தடுத்தல். கூகாய் - கூகை; விளி. கொடி - காக்கை. உகக. வாய்மை - உண்மை. புலரி- வைகறை. சேய்மை - தொலை. கொழுநர் - கணவர். கூட்டம் - கூடுதல். உகஉ. முனிவு - சினம். இமயமின் - மலையரையனின்ற மின்கொடி போல்வாள். இடம் - இடப்பாகம். நினைவு - கருத்து. உகங. வாணுதலாய் - ஒளி பொருந்திய நெற்றியை உடையவளே.

சோலையி லேநங் கொழுநர்வந் தேகதிர் தோன்றுசிறு
காலையி லேதரு மாலையன் ஞேவன்னை கண்டனளே. (உகங)

தலைமகன் வருந்தோழிக் கருமைசாற்றல்

தாயுஞ் சுணங்கனு மூரும்வெங் காவலுஞ் சந்திரனுந்
தீயுங் குடிஞையுஞ் சேவலுந் தப்புஞ் செயலெளிதோ
பாயுஞ் சினவிடை யார்வெங்கை வாணர் பனிவரைமேற்
காயுங் கதிரிலை வேல்வீரர் நம்மைக் கருதினுமே. (உகச)

தலைமகனூர்க்குச் செலவொருப்படுதல்

அறிவே யொருவடி வாமீசர் வெங்கையி லன்னமன்னுய்
எறிவே லிறைவர்தம் மூர்க்கேகி யாங்கவ ரெண்ணமெல்லாம்
அறிவே மவரன் பிலாமைகண் டாலுரை யாடலமாய்
மறிவே மறிந்தபி னந்தக னூர்க்கு வழிக்கொள்வமே. (உகரு)

பாங்கியிறைவனைப் பழித்தல்

வன்பற் றவர்தொழும் வெங்கைபு ரேசர் மணிவரைமேல்
நின்பற் றிலர்கை விடுத்தா ரிறையவர் நீயவர்மேல்
அன்பற் றிலையணங் கேசிறி தேனுமன் பற்றவரைப்
பின்பற் றுவருள ரோவிது தான்மிகப் பேதைமையே. (உகசு)

இறைவி யிறையோன்றன்னைநேர்ந் தியற்படமொழிதல்

சுரும்பு களிக்கும் பொழில்வெங்கை வாணர் சுடர்க்கிரிமேல்
அரும்பு கடுக்கு முலையா யுலகுள வாவியெல்லாம்
விரும்பு கொடைத்தண் ணளிவேந்தர் நம்மை வெறுப்பவரோ
கரும்பு கசப்பது வாய்க்குறை யேயிந்தக் காசினிக்கே. (உகஎ)

கனவுநலிபுரைத்தல்

ஓடுஞ் செயல்செயு மாசைத் தளையை யொடித்திருத்தல்
கூடும் படிசெயும் வெங்கைபு ரேசர் குவட்டில்விழி
மூடும் பொழுதெதிர் தோன்றிநிற் பார்கண் முகிழ்திறந்தால்
நீடும் புகழுடை யாரெதிர் தோன்றிலர் நேரிழையே. (உகஅ)

---

சிறு காலை - கதிரவன் தோன்றுஞ் சமயம். உகச. சுணங்கன் - நாய். குடிஞை - கூகை. பாயுஞ் சினவிடை - பகைவரைப் பாய்வதுஞ் சினப்பதுஞ் செய்யும் விடை. உகரு. இறைவர் அறிவே உருவாகப் பெற்றவராகையால் அறிவேயொரு வடிவாமீசர் என்னப் பெற்றார். மறிதல் - மீடல். அறிதல் - ஆராய்தல். உகசு. வன்பு - வன்மை. வலிய பற்று - மிக்க அன்பு. பின்பற்றுதல் - பின்தொடர்தல். உகஎ. சுரும்பு - வண்டுகள். கடுத்தல் - நிகர்த்தல். தண்ணளி - அருள். காசினிக்கு - உருபுமயக்கம். உகஅ. ஓடுஞ்செயல் - மனத்தின் அலையச் செய்யுஞ் செயல். ஆசைத் தளை - அவாவாகிய விலங்கு. கூடும்படி-உண்டாகும்படி. குவடு-மலை. விழிமூடல்-கண்ணுறங்கல்.

*களவழிபுரைத்தல்*

ஈயார் பொருளு மிறையாக் கிணறு மெனத்துணைவர்
தோயா முலைக ணலமிழந் தேன்மதி சூடுமொரு
மாயா மயமலர் வெங்கைபு ரேசர் மணிவரைமேல்
வேயாம் பணைபுரை மென்றோட் கருங்கண் விளங்கிழையே. (உகக)

*தன்றுயர்தலைவற்குணர்த்தல் வேண்டல்*

விழிக்கிட னுகு நுதலார்தம் வெங்கையில் வேந்தொடுபெண்
பழிக்கலை யென்றொரு வார்த்தையை யாரும் பகர்ந்துமிகுஞ்
சுழிக்கிட னுகுந் திருப்பாற் கடலெனத் தோன்றுபுகழ்
மொழிக்கிட னுகுது மென்பாரைக் கண்டில மொய்குழலே. (உஉ0)

*துன்புறுபாங்கி நீசொல்லெனச்சொல்லல்*

பொறியா லயம்பொய்கை சூழ்வெங்கை வாணர்தம் பூங்கரத்தில்
மறியா மெனப்பிறழ் சேயரி வாட்கண் மடந்தைநல்லாய்
பிறியாதுன் னுள்ளத் திருப்பார்க் கயலவர் பேசுவதென்
அறியா தவர்தமக் கன்றோ வொருவ ரறிவிப்பதே. (உஉக)

*அலர்பார்த்துற்ற வச்சக்கிளவி*

கலரா லறிவரி யார்வெங்கை வாணர் கனகவெற்பிற்
பலரா லணியும் புகழார் பிறப்பொன்றிற் பாவிமதன்
மலரால் வருந்துயர் நீக்குவ ராயினு மண்ணுளர்வாய்
அலரால் வருந்துயர் நீக்குகிற் பாரை யறிந்திலமே. (உஉஉ)

*ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி*

ஒருகோடு தம்மிற் குறைந்தநல் வாரண மொன்றுமன்றி
இருகோடு வந்து மிகுங்களி றேனு மிகன்மதமா
அருகோடு வெவ்வத ரென்றாலும் வெங்கை யமலர்தரும்
முருகோ டுறமும் வடிவா ரிடைமன முந்துறுமே. (உஉ௩)

---

உகக. ஈயார் - உலோபர். துணைவர் - தலைவர். தோய்தல் - புணர்தல். நலம் - அழகு. மதி - திங்கள்துண்டம். மாயாமயமலர் - மாயையைக் கடந்தவர். உஉ0. மொய்குழல் - அன்மொழித் தொகை. விழிக்கிடனுகு நுதலார் என்றது கண்ணுதலார் என்றபடி. வேந்து - ஆகுபெயர். உஉக. பொறி - திருமகள். ஆலயம் - இடம். திருமகள் இருப்பிடம் தாமரை மலராகையால் தாமரை மலருள்ள இடம் பொறியாலயப் பொய்கை யென்னப்பட்டது. உஉஉ. கலர் - கீழ்மக்கள். மண்ணுளர் - மண்ணுலகில் உள்ளவர். வாயலர் - பழிச்சொல். உஉ௩. வெம் அதர் - கொடிய வழி. முருகோடு உறமும் - முருகரை நிகர்த்த. ஒருகோடு குறைந்த வாரணம் - ஆனைமுகக் கடவுள்,

காமமிக்க கழிபடர்கிளவி

மாமாய னுந்தொழும் வெங்கைபு ரேசர் மணிவரைமேற்
பாமா முனிவன் மலயா நிலமொரு பாலசைய
வேமாயர் வேய்ங்குழ லாலூத மேனி விறகிற்பற்றுங்
காமா னலமவி யாகட லேழுங் கவிப்பினுமே. (உஉச)

தன்னுட்கையா றெய்திடுகிளவி

வம்புற் றனைவெண் மதியா லொடுங்கினை வண்டிழந்தாய்
அம்புற் றனைமிகு கண்முத் துகுத்தனை யம்புயமே
நம்புற் றரவணி யெம்மான் றிருவெங்கை நாட்டிறையை
வெம்புற் றனையெனைப் போலென்ப தின்று வெளிப்பட்டதே. (உஉரு)

நெறி விலக்குவித்தல்

நீரலை வேணியர் வெங்கையில் வாழு நெடுந்தகையைச்
சீரலை வாய்வருஞ் செவ்வேண் முருகனுஞ் சேறலருஞ்
சாரலை மேவு மொருபெருங் காட்டுத் தனிவழியில்
வாரலை நீயென் பவர்க்கே வருவன வண்புகழே. (உஉசா)

குறி விலக்குவித்தல்

பிளவு மதிச்செஞ் சடையாளர் வெங்கைப் பெருந்தகைதான்
தளவு நகைக்கருங் கண்மட வாய்விண் டலமுகட்டை
அளவு பொழிற்குறி வந்தாற் றுயில்பொழு தார்க்கும்புள்ளாற்
களவு வெளிப்படி னென்னாய் முடியுநங் காரியமே. (உஉஎ)

வெறி விலக்குவித்தல்

மறிகொண்ட வங்கையர் வெங்கையி லேமென் மலர்ப்பொழில்வாய்க்
குறிகொண்ட வன்பர் தருநோயென் றன்னை குறித்திலளாய்
நெறிகொண்ட தெய்வ மணங்கிற்றென் றேதன் னினைவழிந்து
வெறிகொண்ட னண்மற் றெருவிதி யோவிது மெல்லியலே. (உஉஅ)

---

உஉச. பாம்-எங்கும் பரவும், பாவும் என்பது பாம் என இடைக்குறையாயிற்று. மலயாநிலம்-தென்றற் காற்று. வேம்-வெந்த; வேவும் என்பது வேம் எனக் குறைந்து நின்றது. காமாநலம் - காமத்தீ. உஉரு. வம்பு - தீச்சொல்; மணம். வெண்மதி - வெள்ளறிவு; வெள்ளிய திங்கள். வண்டு - வளையல்; வண்டுகள். இருகண்முத்து - இரு கண்ணீர். வெம்புறல் - விரும்பல். உஉசா. சேறலரும் - செல்லுதற்கரிய. வாரலை - வராதே. வண்புகழ் - பெரும்புகழ். உஉஎ. தளவு - முல்லையரும்பு. நகை - பல். விண்டலம்-விண்ணுலகத் தலம். ஆர்த்தல் - ஒலித்தல். உஉஅ. பொழில் - சோலை. குறி - குறியிடம். குறித்தல் - நினைத்தல். அணங்குதல் - வருத்துதல். வெறி - வெறியாடல்.

*பிற விலக்குவித்தல்*

அருங்கண்ணி வெண்மதி சூடும் பிரான்வெங்கை யாவிமலர்க்
கருங்கண்ணி கங்கையின் மென்றூவி யன்னங் கருதிவைத்த
பெருங்கண்ணி யிற்புனற் காக்கைபட் டாங்குப் பிறர்நமதில்
மருங்கண்ணி வந்தன ரென்பது கேட்டின்னு மாய்ந்திலமே. (உஉக)

*குரவரை வரைவெதிர்கொள்ளுவித்தல்*

பூண்கொண்ட மென்முலை யாய்வெங்கை வாணர் பொதியவெற்பில்
ஏண்கொண்ட நங்கருத் தீன்றவர்க் கோது மிசைவுபெரு
நாண்கொண்டு நங்கற் பழிதனன் றேவன்றி நாணிழந்து
மாண்கொண்ட வங்கற் புறுதனன் றேநம் மரபினுக்கே. (உஉ0)

## வரைவு கடாதல்

*வினவியசெவிலிக்கு மறைத்தமைவிளம்பல்*

வண்டு கலிக்குந் தொடையாயெம் மன்னையிம் மாதுதுயில்
விண்டு தரித்தில ளென்கொலென் றுளரன் வெங்கைவெற்பிற்
பண்டு புனத்தில் வருமத வாரணம் பாய்கனவு
கண்டு பிணைத்துயின் றுளிலை யென்று கரந்தனனே. (உஉக)

*அலரறிவுறுத்தல்*

கோட்டு மலைவில் விறலாளர் வெங்கைக் குளிர்சிலம்பிற்
றீட்டு மிலைமலி வேலண்ண லேநின் றிருக்கரத்தால்
வேட்டு மகிழ்செய் யணங்கென வேயிவண் மென்குழலிற்
சூட்டு மலர்கண் டுலகமெ லாமலர் சூட்டியதே. (உஉஉ)

*தாயறிவுணர்த்தல்*

நீர்பூத்த செஞ்சடை யார்வெங்கை வாணர் நெடுஞ்சிலம்பிற்
கார்பூத்த வண்மை மடங்கலன் னுயன்னை காலமன்றி
ஏர்பூத்த பைந்தளிர் மெல்லிய லாமிவ் விளங்கொடிமேற்
பீர்பூத்த தென்னைகொ லோவறி யேனெனப் பேசினளே. (உஉஙட)

---

உஉகூ. கண்ணி - மாலை; கண்களையுடையவள்; வலை. அன்னம் கருதி-அன்னத்தைப் பிடிக்க எண்ணி. அண்ணல்-கிட்டல். உஉ0. பூண்-அணிகலம். இசைவு - உடன்பாடு. நாண் - நாணம். மாண் - பெருமை. உஉக. கலிக்கும் - ஒலிக்கும். துயில் விண்டு - துயில் நீங்கி. பாய் - பாய்ந்த. தரித்திலள் - ஆற்றிலள். கரத்தல்- மறைத்தல், உஉஉ. கோட்டும் - வளைத்த. விறல் - வெற்றி. தீட்டுதல் - கூராக்கல். அலர் இரண்டனுள் முன்னையது மலர், பின்னையது பழிதூற்றல். உஉஙட. பீர் - பசலை, வண்மை - வள்ளன்மை. மடங்கல் - சிங்கம்,

வெறியச்சுறுத்தல்

அலைமேற் கிளர்பொறி வாழ்வெங்கை வாண ரணிவரைமேற்
சிலைமேற் பயில்கைத் தலத்தைய நீயெமைச் செய்துயர்க்குத்
தலைமேற் படுமெறிக் கோர்கான் முடக்குந் தகைமையென்னக்
கொலைமேற் பயிலு மெமர்வெறி யாடல் குறித்தனரே. (உகச)

பிறர்வரைவுணர்த்தல்

மகவா னிறைஞ்சுந் திருவெங்கை வாணர் வரையணங்கின்
முகவா ரிசமு முலையுங்கண் டான்மிகு மோகமுறுஞ்
சகவாழ் வினரை யுரைப்பதென் யான்மறை சாற்றுகின்ற
சுகவாம தேவரு மின்றே விடுவர் துறவினையே. (உகரு)

வரைவெதிர்வுணர்த்தல்

கொன்னெறி வேற்கு மரன்போ லெமரெதிர் கொண்டுதரும்
நன்னெறி யாற்பெற லாகவுந் தென்வெங்கை நாதர்வெற்ப
செந்நெறி யாற்செல் பதிக்கோர் கொடுநெறி செல்பவர்போல்
மின்னெறி வேற்கண் ணியைக்கள வாற்பெற வேண்டினையே. ( )

வரையுநாளுணர்த்தல்

பணிவாய் விரிசடைப் பெம்மான்றென் வெங்கைப் பனிவரைமேற்
கணிவாய் மலர்ந்து மணநா ளுரைப்பக் கடன்றரக்கிண்
கிணிவாய் மலரனை யாண்மறிப் பாயிடுங் கீற்றெனவொண்
மணிவாய் புயத்தன்ப லூர்கொண்ட தால்வெண் மதியமுமே. (உகஎ)

தலைமகளறி வறிவுறுத்தல்

பிற்பழி யாது மிலரால சுந்தரர் பித்தவெனுஞ்
சொற்பழி யாளர் திருவெங்கை வாணர் சுடர்க்கிரிமேற்
றற்பழி யாகநின் றன்பழி நாணித் தலைவவறக்
கற்பழி யாது மடமா தெனையுங் கரந்தனளே. (உகஅ)

---

உகச. கிளர்தல் - தோன்றல். சிலை - வில். பயிலல் - பழகுதல். வெறியாடல் - வேலனாடல். உகரு. மகவான் - இந்திரன். முகவாரிசம் - முகமாகிய தாமரை. மகவான் என்பதற்குப் பூசிக்கப் படுவோன் என்றும் வேள்வி செய்வோன் என்றும் பொருளுரைப்பர். உகசு. கொன் - பெருமை; அச்சமெனினுமாம். எறிதல் - வீசுதல். செந்நெறி - நேர்வழி. கொடு நெறி-கோணலாகிய வழி. உகஎ. வாய்-பொருந்திய. கணி - வேங்கை. வாய்மலர்ந்து - வாய் திறந்து. கணி - சோதிடன். மறிப்பு - தடை. கீற்று - கோடு. ஊர் - பரிவேடம். உகஅ. யாதும் - சிறிதும். அறக்கற்பு - அறத்தோடு கூடிய கற்பு. கரத்தல் - தலைமகன் பிரிவால் பீர்பூத்தல் வளைகழலல் முதலியன புலப்படாவகை மறைத்தல்.

குறிபெயர்த்திடுதல்

ஐயுற் றெமர்தெளி வானிருந் தார்நும் மடிச்சுவடு
கொய்யுற்ற பூம்பொழி லூடுகண் டேமென் குழலுமையாள்
மெய்யுற்ற வங்கணர் வெங்கையி லேகுறி வேறுகொண்டு
மையுற்ற கண்ணி யொடும்வினை யாடுக மன்னவனே. (௨௩௯)

பகல்வருவானை யிரவுவருகென்றல்

நந்தே டவிழ்ந்து நறவூற் றிருக்கு நளினமிசை
வந்தேறி மென்றுயில் கொள்வெங்கை வாணர் வரையின்மலர்க்
கொந்தேறு மென்குழ லாண்முக வாவிக் குமுதமலர்ச்
செந்தே னிரவினல் லாற்கிடை யாதென்ன செய்யினுமே. (௨௪0)

இரவுவருவானைப் பகல்வருகென்றல்

சேல்கொண்ட தண்பணை சூழ்வெங்கை வாணர்தஞ் சேய்திருக்கை
வேல்கொண்ட கண்ணிளம் பெண்ணோடு கூட விருப்பமுறும்
மால்கொண்ட வெங்களி றன்னாய் மலர்மனை வாய்திறக்குங்
கோல்கொண்டு வந்திலை யேலரி தாலவட் கூடுதலே. (௨௪௧)

பகலினுமிரவினும் பயின்றுவருகென்றல்

சொல்லும் பொருளு மெனநிறை வாரிளஞ் சூன்மிடற்ற
நெல்லுங் கரும்பு நிறைவெங்கை வாணர் நெடுஞ்சிலம்ப
வில்லும் பிறையும் பணிவா ணுதற்றளிர் மெல்லியலை
அல்லும் பகலு மகலா திவண்வந் தடைந்தருளே. (௨௪௨)

பகலினுமிரவினு மகலிவணென்றல்

பாவலர் பாடும் புகழ்வெங்கை வாணர் பனிவரைமேல்
மேவல ராருயி ருண்டமை வேலவ வெம்பகலில்
ஏவல ராய நெருங்குமின் றேன்வண் டெனவிரவிற்
காவலர் சூழ்ந்து திரிவார்பொன் காத்த கடியெனவே. (௨௪௩)

---

௨௩௯. சுவடு - அடையாளம். கொய்தல் - பறித்தல். மெய் - திருமேனி; இஃது இடப்பாகத்தைக் குறித்தது. அங்கணர் - அருளையுடைய கண்ணர். ௨௪0. நந்து - சங்கு. நறு - தேன். நளினம் - தாமரை. குமுதம் - செவ்வல்லிமலர். இது தலைவியின் வாயை உணர்த்திற்று. ௨௪௧. சேல் - மீன்வகைகளில் ஒன்று. பணை - வயல். சேய்- முருகக் கடவுள். மால் - மதமயக்கம். மலர்மனை வாய்திறக்குங் கோல் என்றது கதிரவன் ஒளிப்பிழம்பை. திறக்குங் கோல் - திறவு கோல். ௨௪௨. இளம்சூல் மிடற்ற-இளஞ்சூலைக் கொண்ட கழுத்தினையுடைய. எங்கும் நிறைந்தவர் என்பார் சொல்லும் பொருளுமென நிறைவார் என்றார். ௨௪௩. பாவலர் - சமயாசாரியர்கள் நால்வர். மேவலர் - பகைவர். ஆயம் - தோழியர் கூட்டம். காவலர் - ஊர்காவலர்.

உரவோனுடு முருங்குலனு மரபும்புகழும் வாய்மையுங்கூறல்

துதியுந் தொடையும் புனைபுயத் தாய்மணஞ் சூழ்ந்திலையேல்
நதியும் பணியும் புனைவே ணியர்வெங்கை நாட்டினினின்
பதியுங் குலனு மரபுதல் வாய்மையும் பல்புகழும்
மதியுங் களங்கமும் போலொழி யாமன் மறுப்படுமே. (உ௪௪)

ஆறுபார்த்துற்ற வச்சங்கூறல்

அரியும் பணியுந் திருவெங்கை வாண ரடியரல்லார்
திரியும் பவநெறி போன்ஞெழி யாதிரை தேர்ந்துகொடு
வரியுங் கரியுஞ் செறியுஞ் சிறுவழி வாரலைநீ
புரியுங் கருங்குழ லாள்பொருட் டாகப் புரவலனே. (உ௪௫)

ஆற்ருத்தன்மை யாற்றக்கூறல்

அழுவான் மொழிதளர் வாளைய கோவென் றலமருவாள்
விழுவாள் புரண்டெழு வாள்வெங்கை வாணரை வேண்டியடி
தொழுவா ளநங்கன் கொடியனென் பாளுயிர் சோர்ந்திடுவாள்
முழுவாள் விழிமட மாதெண்ண மன்ப முடித்தருளே. (உ௪௬)

காவன்மிகவுரைத்தல்

ஆக்குறுங் காரணர் வெங்கைபு ரேச ரணிவரையாய்
தாக்குறுஞ் சீயமும் வேழமும் வேங்கையுந் தப்பிவந்து
மாக்குறுஞ் சோலையெம் மூர்புகுந் தாலு மனையருகு
காக்குறுங் காவலர் தம்மையெவ் வாறு கடப்பதுவே. (உ௪௭)

காமமிகவுரைத்தல்

தாள்வலி கொண்டு பகடுந்து காலன் றனைமருட்டும்
ஆள்வலி கொண்டவர் வெங்கைவெற் பாநின் னணியலர்கற்
றோள்வலி கொண்டு தவிர்ப்பினல் லாமற் றுயர்விளைக்கும்
வேள்வலி கொள்ளுந் துணையெங்கள் பேதைக்கு வேறில்லையே. ()

---

உ௪௪. மணஞ்சூழ்தல் - வரைதல். ஒழியாமல் - எப்பொழுதும் நீங்காமல். மறு - குற்றம்; களங்கம். படுதல் - உண்டாதல். உ௪௫. அரியும் என்ற உம்மை உயர்வு சிறப்பு. அடியரல்லார் - தீவினையாளர்கள். செறிதல் - நெருங்குதல். புரிதல் - விரும்புதல். உ௪௬. மொழிதளர்தல் - சொற்குழறுதல். அலம்வரல் - சுழலல். அநங்கன் - காமன். முழுவான் - பெரிய வான். உ௪௭. ஆக்குறும் - எல்லாவற்றையும் படைக்கின்ற. தாக்குறும் - ஒன்ருேடொன்று முட்டிப் பொரும். சீயம் - சிங்கம். வேழம் - யானை. உ௪௮. பகடு - எருமைக் கடா. மருட்டல் - வெல்லல். ஆள்வலி - ஆளும் வலி. கொள்ளல் - கவர்தல். பகடுந்துகாலன் றன்னைத் தாள்வலி கொண்டு மருட்டும் எனக் கூட்டுக.

*கனவுநலிபுரைத்தல்*

மனவே யணியுந் திருவெங்கை வாணர் வரையணங்கு
சினவே லிறைவநின் ருேளொடு கொங்கை திளைக்கவருங்
கனவே யுயருந் துறக்கமென் பாணிளைக் காண்பரிய
நனவே துயரந் தருகின்ற தீவெந் நரகென்பளே. (உசக)

*கவினழிபுரைத்தல்*

கருவரை யெங்க டிருவெங்கை வாணர்தங் கண்ணழித்த
ஒருவரை யன்ன வெழிலுடை யீரிங் குமதருளால்
இருவரை பொன்னு மிருவேலை முத்தமு மீன்றனவாற்
குருவரை யன்னமென் ருேளுடை யாட்குக் குறையென்னையே. ( )

## ஒருவழித்தணத்தல்

*தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல்*

என்மன நல்லிளம் பூங்கொடி பால்வைத் திளங்கொடிதன்
நன்மன மென்றெடு கொண்டூர் புகுந்திங்கு நான்வருவேன்
வன்மனம் வந்து புகாவீசர் வெங்கை மருவலர்போல்
தின்மன மஞ்சலை செங்கயல் வாட்கண் ணிரைவளையே. (உருக)

*பாங்கிவிலக்கல்*

ஊனு ருடலி னுயிர்போல வேயவ் வுயிரினுயிர்
தானு மொருவன் றிருவெங்கை வெற்பிலுன் றன்பதிக்குப்
போனல் விரைந்து வருவா யலையன்ப போகலைநீ
யானு யிழைதுயர் கண்டாவி கொண்டிங் கிருக்கிலனே. (உருஉ)

*தலைவனீங்கல்வேண்டல்*

நீர்புக்கு வாழு நெடுமீனந் நீர்தனை நீங்கியுய்ந்தாற்
றூர்புக்கு வாழு முலையாளை யானுந் தணந்துய்குவேன்
மார்புக்கு மாலை யரவா னவர்வெங்கை வாணர்வெற்பில்
ஊர்புக்கு நான்வர வேண்டுமின் னேநின் னுளத்திசையே. (உருங)

---

உசக. மனவு - அக்குமணி. துறக்கம் - சுவர்க்கம். திளைத்தல் - அழுந்தல். காண்பு - காண்டல். உருO. கருவரை - கருப்ப வேதனையை ஒழிக்கின்ற. அஃது இங்குப் பிறவியென்னும் பொருட்டு. கண்ணழித்த - கண்ணால் அழிக்கப்பட்ட. உருக. இளம்பூங்கொடி என்றது தலைவியை. ஊர் புகுந்திங்கு நான் வருவேன் என்றது அங்குத் தாழ்க்காது விரைந்து வருவேன் என்றபடி. வன்மனம் - வன்னெஞ்சு. உருஉ. ஊன் - ஆகு பெயர். ஒருவன் - ஒப்பிலி. பதி - ஊர். ஆவி - உயிர். ஆயிழை - அன்மொழித் தொகை. உருங. உய்தல் - உயிர் வாழ்தல். தார் - முத்துமாலை, பூமாலை. தணத்தல் - பிரிதல். மின் : உவமையாகுபெயர். இசைதல் - உடன்படல்.

### பாங்கிவிடுத்தல்

கொந்தார் மலர்க்குழல் வெண்முத்த வாணகைக் கோமளத்தின்
சிந்தா குலமுற்று நீயறி வாயன்ப தேமொழிக்கு
நந்தா மணிவிளக் கன்னூர்தம் வெங்கை நகரினிற்போய்
வந்தா ரெனச்சென்று நான்கூற நீசென்று வந்தருளே. (உ௫௪)

### பாங்கிதலைவிக் கவன்செலவுணர்த்தல்

அம்மூல காரணர் வெங்கைபு ரேச ரணிவரைமேற்
செம்மூரி வேலவர் நீயா ரணங்கின்முன் செல்லுமுனம்
எம்மூர் புகுந்து வருவலென் றேகின ரேந்திழையாய்
நம்மூர் மருங்குற விந்நேரம் வந்து நணுகுவரே. (உ௫௫)

### தலைவிநெஞ்சொடு புலத்தல்

விளித்தா ருயிரை யடிநீழல் வைப்பவர் வெங்கையிலே
அளித்தார் புனைகுழ லாயக லேனென் றகந்தெளியத்
தெளித்தா ரகன்றன ரேலவர் வார்த்தை தெளிந்துமனங்
களித்தார் தமக்குள தோபிழை தானிந்தக் காசினிக்கே. (உ௫௬)

### சென்றோனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி

பூளை யணியுஞ் சடையாளர் வெங்கை புரேசர்வெற்பிற்
பாளை மணங்கமழ் மாதிருப் பாளெனப் பச்சைமயிற்
காளை யனையநங் காதலர் தாமலர்க் கால்வருந்த
நாளை வராம லிடம்போய் மறியுநன் ஞரைகளே. (உ௫௭)

### தலைவியைப்பாங்கி யாற்றுவித்தல்

பொலம்புரி வார்சடை யார்வெங்கை வாணர் பொருப்பணங்கே
கலம்புரி மேனியிற் குங்குமந் தோய்தண் களபமென்ன
நலம்புரி காதலர் தம்பதி நோக்கி நடந்தவழி
வலம்புரி தோன்று மடிப்பொடி பூசுக வந்தருளே. (உ௫௮)

---

உ௫௪. கொத்து - கொந்து என மெலிந்து நின்றது. கோமளம்-பண்பாகு பெயர். சிந்தாகுலம் - வடநூன் முடிபு. உ௫௫. மூல காரணர் - உலகத் தோற்ற மறைவுகட்குக் காரணமாக இருப்பவர். மருங்கு - அருகு. நணுகல் - சேர்தல். உ௫௬. விளித்தார் - சாங் காலத்தில் கூப்பிட்டவர். விளிந்தார் என்பது விளித்தார் என வலித்தல் பெற்றதென்றலு மொன்று. விளிதல் - இறத்தல். உ௫௭ பூளை - பூளைப்பூ; ஆகுபெயர். பச்சை மயில் என்ற சிறப்பால் காளை முருகனை உணர்த்திற்று. உ௫௮. பொலம் - பொன். பொலம் புரி வார்சடை யென்றதனாற் பொன்னின் மிக்குப் பொலிவதிறைவர் சடையென்ற வாறுயிற்று. கலம் - பூண்.

**தலைவன் வந்தமை பாங்கியுணர்த்தல்**

மலையானை மாதுல னென்பார்தம் வெங்கை வரையிடைப்பூஞ்
சிலையானை வென்ற வெழிலுடை யார்நஞ் செழும்பதிக்குக்
கொலையானை மேற்பசும் பொன்னோடு வந்தனர் கோதைகமழ்
முலையானை மேற்பசும் பொன்னொழி வாய்மலர் மொய்குழலே. (௨௫௯)

**பாங்கிதலைவனொடு நொந்துவினுதல்**

காரார் மணிமிடற் றெம்மான் றிருவெங்கைக் காரிகைதன்
பீரார் நுதலு முடியாக் குழலும் பெருவிழியில்
நீரார் நிறைகுட முங்கண்ணு ருமைநன் னீதியென்றோ
வாரா தொழிந்தனை நின்கருத் தேதுசொன் மன்னவனே. (௨௬௦)

**தலைவன் பாங்கியொடுநொந்துவினுதல்**

அலையா நிலையர் திருவெங்கை வாண ரணிவரையீர்
கலையா னிறைமதி வேய்ங்குழல் சோலைக் கருங்குயில்யாழ்
மலையா னிலநல்ல வோவல்ல வோவம் மதனனெடுஞ்
சிலையா னுமிழ்வ தலரோவம் போவென்ன செப்புமினே. (௨௬௧)

**தலைவியையாற்றுவித்திருந்த வருமைசாற்றல்**

நீர்மல்கு கண்ணும் வளைதீர்ந்த கையும்வெந் நெட்டுயிர்ப்பும்
பீர்மல்கு கொங்கையு மாய்ப்பின்னை வேறு பிழைப்பிலதாய்
ஆர்மல்கு செஞ்சடை யார்வெங்கை வாண ரருளதனால்
தார்மல்கு தோளண்ண லேபுரந் தேனின் றனியுயிரே. (௨௬௨)

## வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல்

**என்பொருட்பிரிவுணர்த் தேந்திழைக்கென்றல்**

இடைநிலை யாம்பொரு ளுண்டேன் முதனிலை யெய்தறமுங்
கடைநிலை யாமின் பமுமேவு மென்றனர் காதலரென்

---

௨௫௯. மலையான் - மலையரையன். பூஞ்சிலையான் - மலர்வில்லை யுடையவன். ௨௬௦. மணி நவமணிக்கும் பொதுவாயினும் காரார் என்ற அடையால் நீலமணி எனக் கொள்க. காரிகை-ஆகுபெயர். பீர்-பசலைநிறம். நுதல் - நெற்றி பெருவிழியினீரார் நிறைகுடம் - கொங்கை. கண்ணுருமை - நோக்காமை. ௨௬௧. அலையாநிலையர் - சலிக்காத நிலையை உடையவர். கலையால் நிறைமதி - முழுத்திங்கள். வேய்ங்குழல்-மூங்கிற்குழல். இதனைப் புள்ளாங்குழல் என்பர். பொள்ளாங்குழல் என்பது திரிந்தது. பொள்ளல் - தொளைத்தல். ௨௬௨. வளை - வளையல். மல்கல் - நிறைதல். தீர்தல் - ஒழிதல். பிழைப்பு-உய்வு. புரத்தல் - காத்தல். ௨௬௩. ''வடுவிலா வையத்து மன்னிய மூன்றனுள், நடுவண தெய்த விருதலையு மெய்தும்'' என்பது கண்டு நினைவுகூரற்பாலது. பூங்கொடி - உவமையாகு பெயர்.

றடைநிலை யாம்பதத் தெம்மான் றிருவெங்கை யாயிழைக்குத்
தொடைநிலை வார்குழற் பூங்கொடி யேசென்று சொல்லுகவே. ()

நின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றல்

என்னோடு சொல்லுக செல்லாமை யுண்டெனி னீரமதி
தன்னோடு மல்கு சடையாளர் வெங்கைத் தடஞ்சிலம்பிற்
பொன்னோடு சொல்லுக நீநின் செலவைப் பொருணினைந்து
முன்னோடு பின்னு மிழப்பான் கருதிய முன்னவனே. (உகச

நீசேடனென்றவ னீங்கல்

மாணிக்க வாசகன் செந்தமிழ் மாலை மணக்குமுடி
வேணிக் கடவு ளிடமா கியதிரு வெங்கையன்னாய்
ஆணிக் கனக மனையாள் செயலிங் கறிந்துசெல்வேன்
பாணிக் குமாறிருந் தாலெனைப் போலிலைப் பாவிகளே. (உகரு)

பாங்கி தலைவிக் கவன்செல வுணர்த்தல்

இருளா லயமன்ன வார்குழ லாய்நம் மிறைவரின்று
வெருளா லமுண்ட திருவெங்கை வாணர்தம் மெல்லடியை
அருளா லலதெய்த லாகாத வாறென வானைமிசைப்
பொருளா லலதுனை யெய்தவொ ணாதென்று போயினரே. (உகசு)

தலைவியிரங்கல்

பொழியு மருளுடை யார்வெங்கை வாணர் பொருப்பருவி
விழியு மெலிவும் பசப்பூர் முலையுமவ் வின்மதனால்
அழியு மனமு நினைந்தில ராயினு மாவொருபெண்
பழியு நினைந்தில ரேபொருண் மேற்சென்ற பாதகரே. (உகள)

தலைவியைப்பாங்கி கொடுஞ்சொற்சொல்லல்

அரியா ரறிதற் கரியார் திருவெங்கை யாயிழையாய்
பிரியார் பிரியப்பட் டாரிலை யோநின் பெருமணக்குக்

உகச. "செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின், வல்வரவு வாழ்வார்க் குரை" என்பது திருக்குறள். முன் - அறம். பின்-இன்பம். பொன் - ஆகுபெயர். முன்னவன் - தலைவன். உகரு. மாணிக்க வாசகன் செந்தமிழ் மாலை - திருவாசகம். முடிவேணி-திருமுடிச்சடை. ஆணிக் கனகம் - உரையாணிக் கிளைக்காத பொன். பாணித்தல்- காலந் தாழ்த்தல். உகசு. இருள் ஆலயம் அன்னவார்குழலாய் - இருளுக்கிருப்பிடம் போன்ற நீண்ட கூந்தலையுடையவளே. ஆலம் - நஞ்சு. ஆனைமிசைப் பொருள் - யானைச்சுமையாக்கிக் கொணரும் பொருள். உகள. இழிதல் - இறங்குதல். பாதகர் - தீவினையை உடையவர். பொருண்மேல்-பொருளீட்டத்தின்மேல். உகஅ. ஆயிழை- அன்மொழித் தொகை. மணத்துக்கு எனற்பாலது அத்துச்சாரியை

கரியார் பொருடரச் சென்றூர் பொருட்டுக் கயன்மருட்டும்
வரியார்கண் ணீர்மல்க வென்னைகொ லோநின்று மாழ்குவதே. ()

தலைவி கொடுஞ்சொற் சொல்லல்

நீடறி வாய்நின்ற வெம்மான் றிருவெங்கை நேரிழையாய்
பீடறி வாய்நம் முயிரனை யார்தம் பெரும்பணை நீர்
நாடறி வாய்பொரு ணச்சியிப் போது நடந்தகொடுங்
காடறி வாய்துணிந் தாயுனைப் போலிலைக் கன்னெஞ்சரே. (உகக)

வருகுவர்மீண்டெனப் பாங்கிவலித்தல்

வலையிற் படுகலை கண்டிள மான்பிணை மாழ்கிநிற்கும்
நிலையிற் படர்வனஞ் சென்றனங் காதலர் நெஞ்சுருகிக்
கொலையிற் படுமழு வார்வெங்கை மாதுன் குளிர்தரள
மலையிற் படர்தனம் பீர்மீள மீண்டு வருகுவரே. (உஎ0)

பருவங்கண்டுபெருமகள்புலம்பல்

பூட்டாத வில்வளைத் தார்த்தாங் கிடித்துப் புயலெழுந்து
தீட்டாத வம்பு பொழியுமிக் காலந் தெரிந்திலரோ
காட்டாத நன்னிலை யார்வெங்கை வாணர் கனகவெற்பில்
ஈட்டாத பொன்னனை யாயகன் றூபொரு ளீட்டுதற்கே. (உஎக)

இகுளைவம் பென்றல்

வெயிலே யெனமணி கண்டிதழ் கூம்பி விரைக்குவளை
துயிலே புரியுஞ் சுனைவெங்கை வாணர் சுடர்க்கிரியின்
மயிலே யுளங்கவ லேலிது தான்மழை வம்பொடுங்கிக்
குயிலே மருபரு வத்தாற் பொழிதருங் கொண்டலன்றே. (உஎஉ)

இறைமகண் மறுத்தல்

கொங்கைப் பசப்பெனக் கொன்றைகள் பூத்த குருகொழிந்த
அங்கைத் தலமெனத் தோன்றியுந் தோன்றின வன்னவயல்
வெங்கைப் பதியிற் பழமலை நாதர் மிடறெனவே
மங்கைப் பருவத் தணங்கே முகிலெழும் வம்பலவே. (உஎங)

---

குறைந்து மணக்கு என நின்றது. மாழ்கல் - மயங்கல். உசூகூ. நீடறி வாய் - பேரறிவு வடிவமாய். பீடறிவாய் - பெருமையை அறிவாய். நச்சல் - விரும்பல். உஎ0. கலை - கலைமான். மாழ்கி - மயங்கி. தரளம், முத்துமாலை. வலை - கண்ணி. படுதல் - அகப்படுதல். படர்வனம் - பெருங்காடு. உஎக. பூட்டாத வில் - நாண்பூட்டாத வில். ஆர்த்து - முழங்கி. நாண்பூட்டாத வில்-வானவில். தீட்டாத அம்பு-நீர். ஈட்டல்-தேடுதல். உஎஉ. வெயிலே யென்னு மேகாரம் தேற்றம். கவலல்-கலங்கல். பருவத்தால்-உருபுமயக்கம். கொண்டல்-முகில். உஎங. கொங்கை-தனம். பசப்பு - பசலை. குருகு - பறவை. அங்கை - உள்ளங்கை. அழகிய கை யெனினுமாம். தோன்றி-செங்காந்தள். மிடறு-கழுத்து.

அவர்தூதாகிவந் தடைந்ததிப் பொழுதெனத் துணைவிசாற்றல்

இணர்வார் சடைமுடி யார்வெங்கை வாண ரிமயவெற்பிற்
புணர்வார் முலையிள மென்கொடி யேநம் புலம்புறுநோய்
உணர்வார் பொருளொடும் வந்தாரென் றேகை யுரைத்துமுகில்
வணர்வார் குழலெழில் வாங்குதல் வேண்டிமுன் வந்ததுவே. (உஎச)

தலைமகளாற்றல்

பொருநாண் மதனை யழித்தே யிமயப் பொருப்பின்மணத்
திருநா ளதிற்றரும் வெங்கைபு ரேசர் செழுஞ்சிலம்பிற்
கருநாண் மலர்விழி மாதேயென் றுயினுங் காதலரீங்
கொருநாள் வருவரென் றேநின்ற தாவி யுடலகத்தே. (உஎரு)

அவனவட்புலம்பல்

ஓடுந் தடங்கண் மணற்கேணி யாகவவ் வூற்றிறைக்கும்
நீடும் புளின முலையாக் குறைவு நிறைவுமின்றிச்
சூடும் பிறையர் திருவெங்கை வாணர் சுடர்க்கிரிமேற்
பாடுஞ் சுரும்பலர் மொய்குழ றேம்பிப் பதைத்திடுமே. (உஎசு)

பாகனொடுசொல்லல்

வார்கொண்ட மென்முலை யாளிடை யேபோய் வருவலென்னுங்
கார்கொண்ட வென்னிடை யில்லைபொய் யென்னக் கடுக்கைநறுந்
தார்கொண்ட செஞ்சடை யார்வெங்கை வாணர் தடஞ்சிலம்பிற்
றேர்கொண்ட சீர்வல வாவிரைந் தேகச் செலுத்துகவே. (உஎஎ)

மேகத்தொடு சொல்லல்

சென்னிப் பிறையர் திருவெங்கை வாணர் செழுஞ்சிலம்பில்
மன்னிப் படருங் கொடிபோற் றழைத்து மலர்வதன்றெங்
கன்னிப் பசுங்கொடி வாடுங்கண் ணீர்மெய் கருகிநின்று
மின்னிப் பொழியி லெனையன்று போய்க்கரு மேகங்களே. (உஎஅ)

பாங்கி வலம்புரிகேட் டவன்வர வறிவுறுத்தல்

தெண்ணீர் முடியர் திருவெங்கை வாணர் செழுஞ்சிலம்பிற்
புண்ணீர் முழுகு மிலைவே லிறைவர்பொற் றேரின்மிசைப்

---

உஎச. இணர்-பூங்கொத்து. வார்-நீண்ட. புணர்-நெருங்கின. உகை - உவகை. புலம்பு - துன்பம். வாங்குதல் - பெறுதல். உஎரு. பொருதல்-போர்செய்தல். அழித்தல்-நீறுபடுத்தல். தருதல்-படைத்தல். உடலகத்து - உடம்பினுள்ளே. உஎசு. ஓடுதல் - காதளவோடுதல். தடங்கண் - விசாலமாகிய கண். புளினம் - மணற்றிடர். தேம்புதல் - வாடல். பதைத்தல் - துடித்தல். உஎஎ. வார்கொண்ட மென்முலையாள் என்றது தலைவியை. இடை - மருங்குல். கடுக்கை - ஆகுபெயர். செலுத்துக-வியங்கோள். உஎஅ. மன்னி - நிலைபெற்று. மெய்கருகிநின்று - உடல்கறுத்துநின்று. உஎகூ. தெண்ணீர் என்றது

பண்ணீர் மொழியணங் கேகிளர்ந் தார்க்கும் பணிலமுன்றன்
கண்ணீர் வழியடைத் தற்குரித் தாகிய கல்லெனவே. (உஎக)

வலம்புரி கிழத்தி வாழ்த்தல்

வேயின் கவின்புனை தோளுமை பங்கர்தம் வெங்கைநகர்க்
கோயின் முனம்புகுஞ் சங்கென வாழ்கநங் கொண்கர்சுரம்
போயின் றணைவ லெனவோ தியமொழிப் பொய்மைபடா
வாயின் புகழ்திரண் டாலென வார்க்கும் வலம்புரியே. (உஅ0)

தலைவன்வந்துழிப் பாங்கி நினைத்தமைவினுவல்

அம்மை யிடத்தர் திருவெங்கை வாண ரணிவரையெங்
கொம்மை முலைத்தட மெல்லாம் பசலை கொளக்கொடுத்துச்
செம்மை மனத்திற் பொருள்விழைந் தார்தரச் சென்றவிடத்
தெம்மை நினைத்ததுண் டோவிலை யோசொல் லிறையவனே. ()

தலைவ னினைத்தமை செப்பல்

புறந்தாழ் குழலுமை பங்காளர் வெங்கை புரத்தரயன்
பறந்தாலு மென்னென் றிருக்கின்ற வேணிப் பரமர்தமைத்
துறந்தார் மனமென வெங்கொடுங் காட்டுச் சுரத்திடைநான்
மறந்தா னினைத்தலு முண்டுபொன் னேயுங்கள் வஞ்சியையே. ()

பாங்கி தலைவியை யாற்றுவித் திருந்தமைகூறல்

விண்மணி பொய்ப்பினும் பொய்யாநின் வாய்மை விளம்பியெங்கள்
கண்மணி யொத்தசெவ் வேலிறை வாவுயிர் காத்தளித்தேன்
ஒண்மணி கண்டத் தொருவெங்கை வாண ருயர்சிலம்பிற்
பெண்மணி யைப்பிறை வாணுத லீர்ங்குழற் பேதையையே. (உஅக)

களவியல் முற்றிற்று.

---

விண்ணகக்கங்கையை. முடி-சடை. புண்ணீர் - இரத்தம். பொற்றேர்- அழகிய தேர். உஅ0. வேய் - மூங்கில். கவின் - அழகு. சுரம் - அருநெறி. பொய்மைபடுதல் - பொய்படுதல். உஅக. எங்கொம்மை முலைத்தடம் என்றுள் தனக்குந் தலைவிக்கும் ஒற்றுமையுண்மையான். சென்றவிடத்து - பொருள்தேடச் சென்றவிடத்து. உஅஉ. என்னென் றிருத்தல் - பராமுகமாயிருத்தல். பரமர் - மேலானவர். பறத்தல் - அன்னமாகப் பறந்த வரலாறு குறித்தது. உஅங. கண்மணி - கட்பாவை. பெண்மணி யென்பதற்குப் பொருள் பெண்களுட் சிறந்தவள் என்பது.

## வரைவியல்

### வரைவுமலிவு

காதலன் முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தல்

மலைவிலை யென்ற நிலைவெங்கை வாணர் மணிவரைமேல்
இலைவிலை யிந்த மணிக்கு முலைக்குமென் றெண்ணியொரு
கொலைவிலை வென்ற நுதன்மட வாய்நங் கொழுநர்முகிழ்
முலைவிலை நல்கின ரைந்தலை நாக முழுமணியே. (உஅச)

காதலி நற்றாயுள்ளமகிழ்ச்சி யுள்ளல்

நான்ற சடிலத் திருவெங்கை நாயகர் நல்குமொரு
கான்ற குருதிக் குடர்மாலை வேலுடைக் காளையெழில்
போன்ற வுருவத் திறைவர்மென் றேளிடு பூந்தொடைகண்
டீன்ற பொழுதிற் பெரிதுவ வாநிற்கு மெம்மனையே. (உஅரு)

பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்

புரவல ரொக்குங் குடிவாழும் வெங்கை புரத்தரிந்தீ
வரவல ரொக்கு மிடற்றூர்தங் கையிள மான்விழியாய்
இரவல ரொக்கு மிறையோன் முலைவிலை யின்மொழியாற்
றரவல ரொக்கு மெதிர்புகுந் தார்க்குந் தடமுரசே. (உஅசு)

தலைமக ளுவகையாற்றா துளத்தொடுகிளத்தல்

வில்லுங் கணையு மதவேளு மாய விழித்தவரெஞ்
சொல்லும் புனையுந் திருவெங்கை வாணர் சுடர்க்கிரிமேற்
கொல்லுந் துயர முலைமேற் பசப்பினைக் கொண்டுநெஞ்சே
செல்லுஞ் செலவை யுணர்த்திய தாமிச் செழுமுரசே. (உஅஎ)

தலைவனைப் பாங்கிவாழ்த்தல்

கணத்தி னிலங்கு மதிப்பிள்ளை யொன்றிளங் கட்செவியின்
பணத்தி னுறங்குஞ் சடையாளர் வெங்கைப் பனிவரைமேற்
குணத்தி னுயர்ந்த கொடியிடை யாவி கொடுப்பதற்கா
மணத்தி னலங்கல் புனையுநங் காதலர் வாழியவே. (உஅஅ)

---

உஅச. மலைவு - மயக்கம். மலைவிலை என்ற நிலை - அசையாத யோகநிலை. விலையிலை - மதிப்பில்லை. முழுமணி - பொள்ளா மணி. உஅரு. நான்ற - தொங்குகிற. சடிலம் - சடாபாரம். கான்ற குருதி - உமிழ்ந்த இரத்தம். குடர்மாலை-குடராகிய மாலை. உஅசு. இந்தீவரம் அலர் ஒக்கும் - கருங்குவளை மலரை நிகர்த்த. தடமுரசு - பெரிய முரச வாத்தியம். உஅஎ. கணை-அம்பு. மதவேள்-இருபெயரொட்டு. மாய்தல்-மடிதல். புனைதல் - தரித்தல். பசப்பு-பசலைநிறம். செலவு-போக்கு. உஅஅ. கணம்-விண்மீன். மதிப்பிள்ளை யொன்று-ஒருதலையாகிய திங்கள். கொடியிடை-அன்மொழித் தொகை. அலங்கல்-தொழிலாகு பெயர்.

*தலைவிமணம்பொருட்டாக வணங்கைப்பராநிலைகாட்டல்*

நிலமா தணிநிகர் வெங்கையு ளான்றரு நீமுனமெங்
குலமா தினைமணஞ் செய்தாங் கெனையுங் கொழுநர்வந்து
நலமா மணம்புணர்ந் தால்விழ வாற்றுவ னெனவே
பலமா தருந்தொழும் பாவைசெவ் வேளைப் பரவுறுமே. (உ அக)

*அதுகண்டோன் மகிழ்தல்*

மால்பற் றியபொழில் வெங்கைபு ரேசர் மணிவரைமேற்
சேல்பற் றியவிழி யாளுல கோர்முனஞ் செங்கையினற்
கால்பற்றி யம்மியின் மீதே யிருத்தல் கடைப்பிடித்து
வேல்பற் றியதெய்வ சூளா மணியினை வேண்டுமென்னே. (உகம)

## அறத்தொடுநிற்றல்

*கையறுதோழி கண்ணீர்துடைத்தல்*

கோலம் புனைதலிற் குற்றமின் றுன்மலர் கொய்துவருங்
காலந் தவறில பந்திடைத் தோல்வியுங் கண்டிலமால்
ஆலந் திகழ்மிடற் றார்வெங்கை நாட்டுன தம்புயத்தில்
நீலஞ் சிறுமுத் துதிர்ப்பதென் னேவுரை நேரிழையே. (உகக)

*தலைமகள் கலுழ்தற் காரணங்கூறல்*

தெண்ணீர் முடியர் திருவெங்கை வாணர் செழுஞ்சிலம்பிற்
பண்ணீர்மை மென்மொழிப் பாவைநல் லாயிப் படிமுழுதும்
எண்ணீர்மை யன்பரைக் கண்டன மால்வந்த தென்றெனது
கண்ணீர் கொடுமென் முலைமேற் பசப்பைக் கழூவுறவே. (உகஉ)

*தலைவன்தெய்வங்காட்டித் தெளிப்பத் தெளிந்தமைகூறல்*

கொலைசூழ் குருகுமொன் றுண்டாற் கரிநெறு கூறுமெனில்
இலைசூழ் மனையின் முனிவரெல் லாந்தொழு மெங்கள்பழ
மலைசூழ் மறுகெழில் வெங்கைநன் னாடர் மனந்தெளியச்
சிலைசூழ் வனந்திகழ் தெய்வதங் காட்டித் தெளித்ததற்கே. (உகங)

---

உஅக. விழா – திருவிழா. ஆற்றல் - செய்தல். பாவை - ஆகு பெயர். பரவுறல்-வழிபடல். உகம. மால்-மேகம். பற்றல்-தவழ்தல். கடைப்பிடித்தல் - உறுதியாகப் பற்றுதல். உகக. கோலம் புனைதல் - தலைப்பணி திருத்தல் முதலிய அழகு செய்தல். பந்து - பந்தாட்டம். தோல்வி - தோற்றல். ஆலாலம் - பாற்கடலில் தோன்றிய நஞ்சு. உகஉ. பண்ணீர்மை-பண்ணின் குணம்; அஃதாவது இனிமை. பாவை- பொம்மை. கழுவுற - கழுவ உகங. இலைசூழ்மனை - பர்ணசாலை. பர்ணம் - இலை. இதனை இலைக்குடில் என்பர். மறுகு - தெரு. வனந் திகழ் தெய்வதம் - வனதேவதை. தெளித்தல் - தேற்றுதல். கொலை சூழ்தல் - கொன்றுண்டல்.

### பாங்கி யியற்பழித்தல்

முனங்குழை யாத மலைகுழைத் தார்தம் முதல்விகன
தனங்குழை யாது குழைந்தார்தம் வெங்கைத் தடஞ்சிலம்பிற்
கனங்குழை யாயுனக் கீந்தா ரிலைகொனங் காவலனூர்
மனங்குழை யாமன் முனந்தா மருந்து மருந்தினையே. (உகச)

### தலைமக ளியற்படமொழிதல்

உழைகா தலிக்குங் கரத்தார் நிறைமதி யொத்தசங்கக்
குழைகாதிற் பெய்பவர் தென்வெங்கை வாணர் குளிர்சிலம்பின்
மழைகா தலிக்குங் கொடையன்பர் மேற்பிறர் வாயுரைக்கும்
பிழைகாதிற் கேட்பவந் தோபடைத் தானயன் பெண்பிறப்பே.(உகரு)

### தெய்வம்பொறைகொளச் செல்குவமென்றல்

புற்றங் கதமணி வெங்கைபு ரேசர் பொருப்பிலெங்கள்
சுற்றந் தொழுமெங் கொழுநர்நிற் காட்டிமுன் சூளுரைத்த
குற்றம் பொறுத்தரு ளென்றடி போற்றிக் கொழுமலர்தூய்ச்
செற்றந் தணிக்குதும் பெண்ணே யினிக்குல தெய்வத்தையே. ( )

### தலைவி யில்வயிற்செறித்தமை யியம்பல்

சுட்டா வறிவுரு வானுரவ் வானிற் சுரர்தமக்குங்
கிட்டா வமுதனை யார்வெங்கை வாணர் கிரியணங்கே
மொட்டா முலையிற் பசலைகண் டேமனை முன்றில்விடாள்
இட்டா ளிலைவிலங் கென்பதொன் றேகுறை யீன்றவட்கே. (உகஎ)

### செவிலி கனையிருளவன்வரக் கண்டமைகூறல்

மீனைக் கடந்த பொழில்சூ ழரன்றிரு வெங்கைவெற்பர்
கானைக் கடந்து குறிவா யிருள்வரக் கண்டனள்யாய்
மானைக் கடந்த விழியாய் தரள மணிவடத்த
ஆனைக் கடந்த விளஞ்சிங்க மோவென் றயிர்த்தனளே. (உகஅ)

---

உகச. குழையாமை மலைக்கியல் யென்பது தோன்றக் குழையாத மலையென்றூர். மலை யிங்கு மேருமலையைக் குறித்தது. கனதனம்-பெருங் கொங்கை. உகரு. உழை காதலிக்கும் கரத்தார் என்றமையால் திருக்கையின் பேரழகு பெறப்படும். சங்கக்குழை - சங்கினுலியன்ற தோடு. பெய்தல் - இடுதல். மழை காதலிக்கும் கொடையன்பர் என்றமையால் பெருங்கொடையார் என்பது பெறப்படும். அந்தோ - இரக்கக்குறிப்பு. பிறர் என்றது பாங்கியை. உகசா. அங்கதம் - பாம்பு. பொருப்பு - மலை. சுற்றம் - ஆகுபெயர். சூளுரைத்தல் - உறுதியாக ஆணையிடல். செற்றம் - கோபம். உகஎ. மனேவாக்குக் காயங்களாற் சுட்டியறியப்படாதவராகலானும் ஞானவடிவாயிருப்பவ ராதலானும் இறைவர் சுட்டாவறிவுருவானூர் என்று சுட்டப்பட்டார். மொட்டு-அரும்பு. உகஅ. மான்விழி-ஆகு பெயர்கள். வெற்பர்-மலை நாடர். கான் - காடு. யாய் - தாய்.

எறிவலைவேற்றுமைக் கேதுவினுதல்

களம்வேறு பட்ட மிடற்றூர்தம் வெங்கைக் கனகவெற்பில்
புனம்வேறு பட்டிங்கு வந்தவன் றேநம் புரிகுழற்குத்
தனம்வேறு பட்டு விழிவேறு பட்டுத் தளர்ந்துமொழி
மனம்வேறு பட்டதென் னோவுரை யாய்செவ் வரிக்கண்ணியே. ()

பாங்கி வெறிவிலக்கல்

வீட்டை யுவந்து தருவார் திருவெங்கை வெற்படுத்த
காட்டை விரும்பி யுறைதெய்வ மேயெங்கள் கன்னிபடும்
பாட்டை நினைந்திலை வாளா வுலகிற் பலர்விரும்பும்
ஆட்டை விரும்பினை நன்றோ விதுசொல் லறிவினுக்கே. (௨௦௦)

வெறிவிலக்கியவழி செவிலிவினுதல்

மின்னோ டுவமிக்குஞ் செஞ்சடை யார்திரு வெங்கைவெற்பிற்
பொன்னோய் விலக்குவ மென்றெண்ணி யாங்கள் புகும்பொழுதில்
என்னோ வெறிவிலக் குற்ற யிளமுலை யேந்திழையாள்
தன்னோ யறிந்தனை யேலுரை யாய்மைத் தடங்கண்ணியே. (௨௦௧)

பூத்தருபுணர்ச்சியா லறத்தொடுநிற்றல்

தடுக்க நிறைபுனற் பண்ணையிற் சூன்முதிர் சங்கம்வந்து
படுக்க நளின மலர்வெங்கை வாணர் பனிவரைமேல்
உடுக்க வுதவினன் மாந்தழை மாமல ரொண்ணுதற்குக்
கொடுக்க மதனை விடுத்தகன் றானொரு கோமகனே. (௨௦௨)

புனறருபுணர்ச்சியா லறத்தொடுநிற்றல்

வான்கற்ற வண்புகழ் வெங்கைபு ரேசர் மணிவரைமேற்
றூன்கற்ற கல்வி தளர்வூ டுதவுந் தகையெனவே
தேன்கற்ற மென்மொழி யாள்வரு நீரொடு செல்பொழுதில்
ஊன்கற்ற வேலுர வோனொரு வேந்த னுதவினனே. (௨௦௩)

களிறுதருபுணர்ச்சியா லறத்தொடுநிற்றல்

ஐங்கைக் களிறு தரும்வெங்கை வாண ரணிவரைமேல்
வெங்கைக் களிறு தனைப்பாய் வுறவர மெய்ந்நடுங்கிக்

---

௧௯௯. கனம்-முகில். வேறுபடல்-பகைத்தல். புரிகுழல் - அன்மொழித் தொகை. தனம்வேறு படல் - பசத்தல். செவ்வரிக்கண்ணி என்றது பாங்கியை. ௨௦௦. வீடு - வீடுபேறு. காட்டை விரும்பியுறை தெய்வம் - வனதேவதை. பாடு - துன்பம். ௨௦௧. பொன்னோய் - பொன்போன்றவளாகிய தலைவியினுடைய துன்பத்தை. வெறி - வெறியாடல். ௨௦௨. பண்ணை - வயல். உதவல் - கொடுத்தல். ஒண்ணுதல் - அன்மொழித் தொகை. ௨௦௩. வான் - ஆகு பெயர். உதவல் - கொடுத்தல். வருநீர் - புதுவெள்ளம். ௨௦௪. தேமொழி என்றது

கொங்கைக் களிறு புறம்பாய் வுறப்புல்லிக் கொண்டனள்வேற்
செங்கைக் குமரனை யன்று னொருவனைத் தேமொழியே. (கடுஎ)

*மணம் விலக்கல்*

வன்னித் திருவிழி யார்வெங்கை வாணர் மணிவரைமேல்
இந்நித் திலவட நல்கினற் கேயன்றி யேதிலர்க்குக்
கன்னிக் குமரி மணமுடை யாளல்லள் காண்டகைய
சென்னிக் கணிமுடி தாட்கணி யாகுஞ் செயலில்லையே. (கஙூ)

*தலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய்செவிலியைவினவுதல்*

நெடுங்கோ வளவயல் வெங்கைபு ரேசரை நெஞ்சிருத்தாக்
கொடுங்கோ லரசர் குடைக்கீ ழடங்குங் குடியெனவே
இடுங்கோல் வளைவிழி நீரொழி யாம விருப்பதென்னோ
அடுங்கோல் புரைவிழி வெண்முத்த வாண்கை யாயிழையே. (கஙசு)

*செவிலிநற்றாய்க்கு முன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்*

புலங்கண் டளவின் மறைவெங்கை வாணர் பொருப்பிடைச்செந்
நிலங்கண் டளவி லுறைதிரிந் தாங்கொர் நெடுந்தகைதன்
நலங்கண் டளவி னலந்திரிந் தாண்மென் னகின்மிசையோர்
கலங்கண் டளவின் மிகநோ மருங்குலுன் காரிகையே. (கஙஎ)

*நற்றாய் தமருக் கறத்தொடுநிற்றல்*

வேலோடு வாளும் பயினமர் காணம் விளங்கிழையைப்
பாலோடு தேன்கலந் தாங்கிள வாளை பணைமருதச்
சேலோடு பாயுந் திருவெங்கை வாணர் சிலம்பினெடும்
மாலோடு மானு மொருவே லவற்கு மணஞ்செயுமே. (கஙஅ)

## உடன்போக்கு

*பாங்கி தலைவற்குடன்போக்குணர்த்தல்*

தாயிற் சிறந்த திருவெங்கை வாணர் தடஞ்சிலம்ப
போயிப் பொழுது வருவலென் றேகிற் பொறுக்கறியாள்

---

செவிலியை. தலைவியை எனக்கொள்ளுதலும் அமையும். புல்லல் - தழுவல். தேமொழி-அன்மொழித் தொகை. கஙடு. வன்னி-நெருப்பு. தேவர்களுக்கு அவியுணவு கொடுப்பவன் என்பது பொருள். ஏதிலர் - அயலார். தகை - அழகு. கஙசு. கோ - ஆகாயம். கோல்வளை - அன்மொழித் தொகை. கோல் - புள்ளி. கஙஎ. பொருப்பு - மலை. செந்நிலம்-செந்தரை; உறைநீர். திரிதல் - வேறுபடல். நெடுந்தகை - பெரியோன். நலம் - அழகு. நலந்திரிதல் - நலம் வேறுபடுதல். கஙஅ. நெடுமால் - திருமால். மானல் - நிகர்த்தல். சிலம்பு - மலை. கஙகூ. சிலம்பன் - மலைநாடன். பதைத்தல் - துடித்தல். திரு-

தீயிற் புழுவென வேபதைப் பாணின் றிருவருளால்
நீயித் திருவை யுடன்கொடு போநின் நெடுநகர்க்கே. (கூ0க)

தலைவ னுடன்போக்குமறுத்தல்

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத ரடிமலர்க்குச்
சனித்த நெருஞ்சிப் பழமென் றறிந்துந் தகுவரன்றி
மனித்தர் வழங்கரும் வெங்கொடும் பாலை வழியொருநான்
இனித்த மொழியுடை யாரையெவ் வாறுகொண் டேகுவனே. (கூக0)

பாங்கி போக்குடன்படுத்தல்

துணையிற் புணர்களி வண்டிளம் பூந்தண் டுணர்பொதுளும்
பணையிற் றுயில்பொழில் வெங்கைபு ரேசர் பனிவரையாய்
பிணையிற் பிறழ்கருங் கண்ணுட்கு நின்னைப் பிரிந்தமலர்
அணையிற் கொடியது வோவைய நீசெல் லழற்சுரமே. (கூகக)

தலைவன் போக்குடன்படுதல்

நாமொழி யாது புகழ்வா னருள்வெங்கை நாதரைச்சொற்
பாமொழி யானெய்த லாம்பாலை ஞானசம் பந்தனுக்குத்
தேமொழி யாயுன் னுயிரனை யாட்கருஞ் செம்பவள
வாய்மொழி யாளிளங் காவாகும் பட்ட மரங்களுமே. (கூகஉ)

பாங்கி தலைவிக்குடன்போக்குணர்த்தல்

தேவியுஞ் சம்புவு நீங்காத வெங்கைச் செழுஞ்சிலம்பர்
காவியுங் கஞ்சமு மாம்பலும் பூத்துக் கவின்கனியும்
வாவியும் பெண்ணணங் கென்ருர் கதிர்தெறும் வன்சுரத்திற்
காவியுங் கண்ணு மமுதமும் போன்றெளி ராரணங்கே. (கூகங)

தலைவி நாணழிவிரங்கல்

ஊணிலை யாகநஞ் சுண்டோன் றிருவெங்கை யூரனைய
வாணிலை யாகு மதர்விழி யாய்முன் வனைந்திருந்த

---

திருவைப் போல்வாள்; உவமையாகு பெயர். கூக0. "அனிச்சமு மன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்" என்பது திருக்குறள். அனிச்சம் - அனிச்சமலர். அன்னத்தூவி - அன்னத்தின் மெல்லிய சிறகு. ஈற்றேகாரம்-இரங்கல். இனித்த மொழி-இன்சொல். கூகக. பொதுளும் - நிறைந்த. பனிவரை - குளிர்ந்த மலை. பிணை - பெண்மான். பிறழ் - பிறழ்கின்ற. கூகஉ. புகழ்வான் - புகழ. பாமொழி - தேவாரத்திருப்பதிகம். பாலைநெய்தலாகப் பாடியது திருநனி பள்ளியில்; தேமொழியாய் என்றது பாங்கியை. கூகங. சம்பு - சிவபெருமான். கவின் கனிதல் - அழகு முதிர்தல். தெறும் - வருத்தும். வன்சுரம் - வலிய பாலைநிலம். கூகச. வாள் நிலையாகும் - வாளினது தன்மையைப் போன்ற. மதர் - மதர்த்த.

பூணிலை யாகு மவயவம் போலப் பொலிவழிவார்
நாணிலை யாகிற் றனுவாற் பயனென்னை நங்கையர்க்கே. (கடகச)

கற்புமேம்பாடு பூண்முலைப்பாங்கி புகறல்

சேண்போலு மேனியர் தென்வெங்கை வாணர் செழுஞ்சிலம்பிற்
பாண்போலு மென்மொழிச் செந்துவர் வாய்மலர்ப் பாவையன்னாய்
பூண்போலு நாண்முத லெல்லாமு மங்கலப் பூங்கழுத்தில்
நாண்போலு மாணுறுங் கற்பொன்று மேகுல நாரியர்க்கே. (கடகரு)

தலைவி யொருப்பட்டெழுதல்

நரைப்பால் விடையர் பிறையார் சடையர்மெய்ஞ் ஞானமயர்
வரைப்பாவை பங்கர் திருவெங்கை வாணர் மணிவரைமேல்
உரைப்பா ருரைப்பவை யெல்லா முரைக்க வுனக்கிசைவேற்
றிரைப்பாவை யேசெல்லு வேனன்ப ரோடருந் தீச்சுரமே. (கடகசு)

பாங்கி சுரத்தியல்புரைத்துழித் தலைமகள் சொல்லல்

மாவோ வெனுங்கறைக் கண்டர்வெங் கேசர் மணிவரைமேல்
ஏவோ வெனுங்கண் ணிளங்கொடி யேமத னெய்யுநறும்
பூவோ புயல்வெண் மதியோ கனிகொளும் பூங்குயில்வாழ்
காவோ விறைவ ருடனே புகுங்கள்ளிக் காடெனக்கே. (கடகஎ)

பாங்கி கையடைகொடுத்தல்

இறந்தார் பிறந்துழ லாதே முதுகுன் றியற்றுசெயல்
சிறந்தார் புகழ்வெங்கை செய்வா னருளுஞ் சிவனுமையை
அறந்தா னுருவுகொண் டன்னன் வசிட்ட னருந்ததியைத்
துறந்தாலு நீதுற வேலைய னேநின் றுணைவியையே. (கடகஅ)

பாங்கி வைகிருள் விடுத்தல்

வெங்கே தகைமுனி வார்வெங்கை வாணர்தம் வெற்பிலன்னை
எங்கே மகளென் றிருப்பா ளவட்குன் னியல்பதனை
இங்கே யிருந்துரைத் தோரிமைப் போதினு ளெப்படியும்
அங்கேவந் துன்னொடு கூடுவ னுன்மல ராரணங்கே. (கடகக)

---

பொலிவு - அழகு. ஊண் - ஆகுபெயர். கடகரு. சேண் - ஆகாயம். பாண்போலும் - இசையைப் போலும். செந்துவர் - செம்பவளம். மாண் உறும்-மாட்சிமை பொருந்திய. திகம்பரராகையால் சேண்போலு மேனியர் என்றார். கடகசு. நரைப்பால்-மிகுவெண்மை. வரைப்பாவை-உமாதேவி. இசைவு - உடன்பாடு. திரைப்பாவையே என்றது பாங்கியை. கடகஎ. மா - நீலமணி. கறை - விடம். ஏ - அம்பு. இளங்கொடியே என்றது பாங்கியை. கா - சோலை. கடகஅ. செய்வான் - செய்ய. ஐயனே யென்றது தலைமகனை. துணைவி - தலைவி. துறத்தல்-கைவிடுதல். கையடை-அடைக்கலம். கடகக. வெங்கேதகை-வெவ்விய தாழம்பூ. முனிவார்-வெறுப்பவர். இயல்பு-சுரத்திற் சென்ற செய்தி.

தலைமகளைத் தலைமகன்சுரத்துய்த்தல்

கொடும்பா விகளு மொருமா தவப்பயன் கொள்வரென
நெடும்பார் மிசையின் றறிந்தாம் விழிபொழி நீர்பெருகச்
சுடும்பா லையிலுன் றிருவடித் தாமரை தோய்ந்தமையால்
அடும்பா தகதஞ்ச முண்டமை வார்வெங்கை யாரணங்கே. (கஉ0)

தலைமகன் பொழில்கண்டுவியத்தல்

பிறப்பாம் வனம்புக் குழல்வார் தமக்குப் பெரிதுமுன்செய்
அறப்பா லுதவுந் திருவெங்கை வாண ரடிநிழல்போல்
உறப்பாலை செய்துய ரெல்லா மொழிய வொளியிழைதாழ்
திறப்பார மென்முலை யாய்பொழி லோவொன்று நேர்ந்ததுவே. ()

தலைமகன் றலைமக ளசைவறிந்திருத்தல்

ஆடும் பதத்தர் திருவெங்கை வாண ரதிகபுகழ்
பாடுங் குமுதம் புனலூற வெய்ய பரிதியினல்
வாடுங் கமல முகவேர் புலர மலர்ந்துதென்றல்
ஓடுங் குளிர்தண் பொழிற்கே யிருந்தரு ளொண்ணுதலே. (கஉஉ)

உவந்தலர்சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல்

எண்ணிய வெண்ண முடிப்பார்தம் வெங்கை யிமயவெற்பில்
நுண்ணிய நூன்மருங் குற்கனி வாயின் னுதலியுன்றன்
மண்ணிய நீல மணிவார் குழலின் மலர்புனையப்
பண்ணிய புண்ணிய முன்ன மென்னோவென்றன் பாணிகளே. ()

கண்டோரயிர்த்தல்

நந்தனும் வெள்ளை மதகரி வேந்து நறியவர
விந்தனு முள்ளங் கசிந்தேத்தும் வெங்கை விமலர்தருங்
கந்தனும் வள்ளியு மோவறி யேமிந்தக் காளையெழின்
மைந்தனும் வள்ளிதழ்ப் போதணி வார்குழன் மங்கையுமே. (கஉச)

கண்டோர் காதலின்விலக்கல்

தாதை யனைய திருவெங்கை வாணர் தடஞ்சிலம்பில்
சீதை யொடுவரு மாலனை யாயித் திருந்திழையாள்

---

கஉ0. மாதவம் - பெருந்தவம். கொள்வர்-பெறுவர். தோய்தல் - படிதல். அடுதல் - கொல்லுதல். கஉக. அறப்பால் - அறப்பயன். உற - மிகுதியாக. பாரம் - பொறை. கஉஉ. ஆடும்பதத்தர் - திருக்கூத்தியற்றும் திருவடியை உடையவர். பாடுங்குமுதம் - வாய். வேர் - வியர்வை. ஓடுதல் - இயங்குதல். ஒண்ணுதல் - அன்மொழித்தொகை. கஉங. மண்ணிய - அலங்கரிக்கப்பட்ட. பாணிகள் - கைகள். என்னோ - யாதோ? கஉச. நந்தன்-சங்கையுடையவனாகிய திருமால். வெள்ளை மதகரி வேந்து - வெள்ளானையை உடைய இந்திரன். அரவிந்தம் - செந்தாமரை மலர். விமலர் - இயற்கையாகவே மலமற்றவர். கஉரு. மால் அனையாய்-இராமபிரானைப் போன்றவனே

கோதை வெயிலிடைப் பட்டனை யாளெங் குடிலில்வைகி
மாதை யுடன்கொண்டு நாளையுன் னூர்க்கு வழிக்கொள்கவே. ()

கண்டோர் தம்பதி யணிமைசாற்றல்

பணியே றியசெஞ் சடைவெங்கை வாணர் பனிவரைமேல்
கணியேறு மாவிற் படர்கொடி மீது கழனிவளை
அணியேறு வேழம்பர் போலே தவழு மணிநகரம்
மணியேறு தோளண்ண லேயுங்கண் மாட வளநகரே. (௧௨௬)

தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்

பன்னகர் கின்னர மன்னவ ரென்றும் பரவுவெங்கை
நன்னகர் தன்னக ரென்னுமெம் மான்கிரி நன்னுதலாய்
பொன்னக ரென்னக ரிந்நகர் முன்னெனப் போற்றலுறும்
இந்நக ரென்னகர் நின்னக ராக வெழுந்தருளே. (௧௨௭)

## கற்பொடுபுணர்ந்த கௌவை

செவிலிபாங்கி யையினுதல்

சொன்மாது தன்புகழ் யாழிலிட் டேத்தித் தொழுமிமய
நன்மாது பங்கர் திருவெங்கை வாணர்நன் னுடனையாய்
என்மாது சென்ற விடமே தறிந்தில னின்முழுதும்
பொன்மாது சென்ற மனைபோற் பொலிவறப் புல்லென்றதே. ()

பாங்கி செவிலிக்குணர்த்தல்

சாந்தந் தருபவர் வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பில்
சேந்தங் கயல்விழி நீர்மல்க வேநின்று தேம்புமன்னே
காந்தந் தொடர்கரும் பொன்போல வின்றுதன் காந்தனைக்கண்
டேந்தங் கலமுலைச் செம்பொனன் னுடொடர்ந் தேகினளே. (௧௨௯)

செவிலி யினையலென்போர்க் கெதிரழிந்துமொழிதல்

அனையே யனைய வருளாளர் வெங்கை யணிவரைமேல்
இனையே லெனவெனக் கோதிநிற் பீரெனைப் போலவொரு
புனையே டவிழ்மலர்க் கோதையைப் பாலையிற் போக்கிநின்றால்
வினையே னுறுதுய ரெல்லா முமக்கு வெளிப்படுமே. (௧௩௦)

---

கோதை - பூமாலை. வைகல் - தங்கல். வழிக்கோடல் - பயணப்படல். ௧௨௬. பணி - பணத்தையுடையது பாம்பு. பணம் - பாம்பின்படம். கணி - வேங்கைமரம். வேழம்பர் - கழைக்கூத்தர். ௧௨௭. பன்னகர் - பாம்பு வடிவமுடைய ஒரு தேவசாதியார். பரவு - வழிபடுகின்ற. ௧௨௮. சொல்மாது - கலைமகள். பொன்மாது - திருமகள். பொலிவு - விளக்கம். புல்லெனல் - ஒளிமழுங்கல். ௧௨௯. சாந்தம் - மௌனநிலை. சேந்து என்பதற்குப் பகுதி செம்மை. மல்கல் - ததும்பல். தேம்புதல் - அழுதல். கரும்பொன் - இரும்பு. காந்தன் - கணவன். செம்பொன் - திருமகள். ௧௩௦. இனைதல் - வருந்துதல். புனையேடவிழ் மலர்க் கோதை - பெண். பாலை - கடுஞ்சுரம்.

செவிலி தன்னறிவின்மை தன்னைநொந்துரைத்தல்

புன்றோ லுடையர் திருவெங்கை வாணர் பொருப்பணங்கு
வன்றோ ளிராம னெடுசீதை தங்கண் மனைகடந்து
சென்றோர் வனம்புகுந் தாளென்பர் மாசி றெரிவையர்க்கு
நன்றோ வதுபிழை தானோவென் றுளது நாடிலனே. (௬௬௧)

செவிலி தெய்வம்வாழ்த்தல்

செடிமுழு தும்புலி துஞ்சுபொல் லாதவெந் தீச்சுரத்தில்
அடிமுழு துஞ்செம் புனல்பாயச் சென்ற வணங்குவந்தால்
படிமுழு தும்புகழ் வெங்கைபு ரேசர்தம் பாலனுக்கெங்
குடிமுழு துந்தொழும் பாளாக வோலை கொடுக்குதுமே. (௬௬௨)

செவிலி நற்றாய்க்கறத்தொடுநிற்றல்

வேலைத் தரளமு மைந்தலை நாக வியன்மணியுஞ்
சோலைச் செழுமல ரும்போல நம்மைத் துறந்துமெல்ல
மாலைக் குழலி தனக்குரி யானை மணந்துசென்றாள்
பாலைப் பொருமொழி பங்கர்வெங் கேசர் பனிவரைக்கே. (௬௬௩)

நற்றா யயலார்தம்மொடு புலம்பல்

பொன்போ லொருபெண் டிருவெங்கை யானருள் பூண்டுபெற்றோர்
என்போ லிலையுல கம்பதி னுன்கினு மிப்பொழுது
துன்போ டழுங்கு மவருமென் போலிலைச் சோகமுறேல்
என்போ ரறிகுவ ரோவறி யாரிவ் விரண்டையுமே. (௬௬௪)

நற்றாய் தலைமகள் பயிலிடந் தம்மொடுபுலம்பல்

ஆவிக் குரியர் திருவெங்கை வாண ரணிவரைமேல்
மேவிக் குடையுஞ் சுனையே மலர்கொய்யு மென்பொழிலே
வாவிக் குமுத மலர்வாய் சிறிது மலர்ந்துபெற்ற
பாவிக் குரையுமென் றென்சொல்லிப் போயினள் பாதகியே. (௬௬௫)

---

௬௬௧. புன்தோல் - இழிந்த தோல். நாடல் - ஆராய்தல். ௬௬௨. படிமுழுதும் - உலகம் முழுவதும். செடி - சிறுதூறு. துஞ்சல் - உறங்கல். செம்புனல் - உதிரம். தொழும்பு - அடிமை. ௬௬௩. வேலை - கடல். தரளம் - முத்து. வியல், வியன் இரண்டற்கும் பொருள் வேறுபாடின்று. மணத்தல் - கூடல். பாலைப்பொருமொழி - பாலை யிகர்த்த மொழியினையுடையாள். ௬௬௪. அழுங்கல் - வருந்தல். சோகம் - துக்கம். இவ்விரண்டையும் என்றது இவளைப் பெற்ற பொழுதின் மகிழ்ச்சியும் இழந்தபொழுதில் துக்கமும் எனக் கொள்க. ௬௬௫ ஆவி - உயிர்கள். குடைதல் - மூழ்குதல். பொழில் - சோலை. வாவி - தடாகம். குமுதம் - செவ்வல்லிமலர். பாதகி யென்றது தலைவியை.

### நிமித்தம் போற்றல்

பாவிரி மாபுகழ் வெங்கைபு ரேசர் பனிவரைமேல்
பூவிரி வான்பொழில் காப்பதற் காகப் பொருதிரைத்தண்
காவிரி மாதை வருவித்த காக்கையுங் காக்குங்கொலோ
மாவிரி மாகுழ லன்மாதை யீங்கு வரவழைத்தே. (௧௧௬)

### சுரந்தணிவித்தல்

சங்கலைத் தொண்புன லூர்வய லுவற் றலைவனுக்குச்
செங்கலைப் பொன்செய்த தென்வெங்கை வாணர் திருவருளால்
பொங்கலைத் தண்புனற் காவிரி நாட்டிற் பொலிகநிலை,ற
அங்கலைத் திங்கண் முகமாது சென்ற வருஞ்சுரமே. (௧௧௭)

### தன்மகள் மென்மைத்தன்மைக் கிரங்கல்

நோக்கக் குழையுஞ் சிலையாளர் வெங்கையி னுண்ணிடையார்
மோக்கக் குழையு மனிச்சமென் பூவின் முகந்தருத்தித்
தூக்கக் குழையும் பதங்கள்வெம் பாலைச் சுடுபரலில்
தாக்கக் குழையுங் கொலோகுழை யாதெங்க டையலுக்கே. (௧௧௮)

### இளமைத்தன்மைக் குளமெலிந்திரங்கல்

பேதைப் பருவ மிறந்தே பெதும்பைப் பிராயமுறும்
போதைத் தொடங்கி மருண்மாலை போல்பவள் போனதென்னோ
மாதைக் கலந்த விடத்தார் திருவெங்கை வாணர்வெற்பில்
கோதைச் செழுங்கதிர் வேல்வேந் தொடுமக் கொடுஞ்சுரமே. (௧௧௯)

### அச்சத்தன்மைக் கச்சமுற்றிரங்கல்

ஆல மெழும்பொழு தவ்வெங்கை வாணர்க் கபயமென
ஓல மிடுஞ்சுரர் போலே யபயமென் றேடுங்கொலோ
ஞால மிடந்து திரிந்தவக் கோலமு நாணவொரு
கோல மெழும்பொழு தஞ்சிமுன் போந்த கொழுநனுக்கே. (௧௨௦)

---

௧௧௬. பாவிரி-பாக்களில் விரிந்துகிடக்கிற மாவிரி-வண்டுக்கூட்டம் போல விரிந்த. மாகுழல் - நீண்டகூந்தலையுடைய. காவிரிமாது - காவிரியாகிய பெண். ௧௧௭. ஒண்புனல் - ஒள்ளியநீர். நாவல் தலைவனுக்கு - சுந்தரமூர்த்தியடிகளுக்கு. ௧௧௮ நோக்கக் குழையுஞ்சிலை - பொன்மலை. சிவபிரானுடைய கண் நெருப்பாகையாலும் நெருப்பைக்காணிற் பொன் குழைதலியல்பாகலானும் 'நோக்கக் குழையுஞ் சிலையாளர்' என்றார். ௧௧௯. பேதைப் பருவம் - ஏழுவயதுப் பருவம். பெதும்பைப் பருவம் - ஒன்பது வயதுப் பருவம். மருண்மாலை-மயக்கத்தைச் செய்கின்ற மாலைக்காலம். ௧௨௦. ஆலம் - பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சு. ஓலமிடல் - முறையிடல். சுரர் - தேவர். ஞாலம் - பூமி. இடத்தல் - பிளத்தல். கோலம் - பன்றி. கொழுநன்-கணவன்.

கண்டோரிரக்கம்

துன்படு மையர் திருவெங்கை வாணர் சுடர்க்கிரிமேல்
மின்படு நுண்ணிடை யாள்வினை யாடிய மென்பொழிலும்
பொன்படு மூசலும் வண்டலம் பாவையும் பூவையுங்கண்
டென்படு மோவறி யேம்பெற்ற தாயென் றிருப்பவளே. (கசக)

செவிலியாற்றுத்தாயைத் தேற்றல்

வெல்லப் படாத வயில்விழி யாள்செயல் வேறொன்றன்றிச்
சொல்லப் படாத செயலாய் முடியிற் றுயர்தனன்றே
அல்லற் படாதியன் னேவெங்கை வாண ரருள்கொடுநான்
செல்லப் படாத விடமேனுஞ் சென்று திருப்புவனே. (கசஉ)

ஆற்றிடை முக்கோற்பகவரை வினுதல்

தன்னைத் தலைவனை நின்றுங் கறிந்து தவம்புணர்ந்து
முன்னைப் பவந்தொலைத் தீருண்மை கூறுமின் மூரிவெள்ளம்
மின்னைப் பொருசெஞ் சடையில்வைத் தார்வெங்கை வெற்பிலெங்கள்
பொன்னைக் கரந்தொரு காளைகொண் டேதனி போயினனே. (கசங)

மிக்கோ ரேதுக்காட்டல்

சேவிற் பிறங்குங் கொடிவெங்கை வாணர் சிலம்பணங்கே
பூவிற் பிறந்த பசுந்தேன் விரைவழி போந்தணுகும்
மாவிற் கலது மலர்க்கேது செய்யுமவ் வாறெனவே
ஏவிற் சிறந்த விழியா ணமக்குமென் றெண்ணுகவே. (கசச)

செவிலியெயிற்றியொடு புலம்பல்

அள்ளி யணைந்து பசுந்தா தளியின மம்புயமென்
பள்ளி யுறங்குந் திருவெங்கை வாணர் பனிவரையாள்
வள்ளி நடந்த வழிதூர்ந் திடாதவ் வழிநடந்தாள்
கள்ளி படர்ந்த சுரத்தே வருமறக் காரிகையே. (கசரு)

செவிலி குரவொடு புலம்பல்

புரவே புரியுந் திருவெங்கை வாணர் புனையுமணி
அரவே புரையு மகலல்கு லாளொ டனைதுயர

கசக. துன்பு - துன்பம். (பிறவித்துன்பம்) மின்படும் என்பதில் படும் உவமவுருபு. பூவை - நாகணவாய்ப்புள். கசஉ. அயில் - வேல். வெல்லப்படாத அயில் விழியாள் என்றது தலைவியை. துயர்தல் - துக்கித்தல். அல்லற்படல் - துன்பப்படல். திருப்புதல் - மீட்டல். கசங. மூரிவெள்ளம் - பெருவெள்ளம். பொருதல் - நிகர்த்தல். பொன் - திருமகள். முக்கோற் பகவர் - மூன்று கோல்களையுடைய துறவிகள். கசச. சே - இடபம். பிறங்கல் - விளங்கல். சிலம்பு - மலை. அணங்கு - பெண். விரை - மணம். அணுகல் - சேர்தல். மா - வண்டு. ஏ - அம்பு. கசரு. அணைதல் - பூசுதல். தாது - மகரந்தம். பள்ளி - படுக்கை. மறக்காரிகை - மறப்பெண். கசசு. புரவு -

வரவே தருவதன் றென்று யிலைமலர் வாய்திறக்குங்
குரவே மொழிநல் குரவை நினக்கிது கூறுதற்கே. (கூசசு)

கவடு கண்டிரங்கல்

புலியோ டரவு தொழுங்கூத் துடையவர் பூவையர்கைப்
பலியோ டுயிர்கவர் வெங்கைபு ரேசர் பனிவரைமேல்
மலியோ தியினிசை வண்டுபண் பாடுறும் வஞ்சியடி
கலியோ முனஞ்செலும் வெள்ளடி யோடு கலந்ததுவே. (கூசஎ)

செவிலி கலந்துடன்வருவோர்க் கண்டுகேட்டல்

வேண்டா ருயிர்கவர் செவ்வே லிறைவனு மெல்லியலும்
மீண்டா ரெனவுண் மகிழ்ந்துநின் றேன்மலர் வேதன்முதல்
மாண்டா ரெலும்பணி வெங்கைபு ரேசர் மணிவரைமேல்
தூண்டா விருஞ்சுடர் போல்வரு வீரெதிர் தோன்றுறவே. (கூசஅ)

அவர் புலம்பதேற்றல்

என்னூர் பெயரவ் விளங்கா ளையுமிவ் விலங்கிழையாள்
தன்னூர் பெயர்நும் பிணைவிழி யாளுந் தனிவினவிப்
பொன்னூ புரவடி வஞ்சிபங் காளர் பொருந்துகொடி
மின்னூர் முகிலுறங் கும்பொழில் சூழ்வெங்கை மேவினரே. (கூசக)

செவிலி புதல்வியைக் காணாது கவலைகூர்தல்

சேணா டியமதில் வெங்கைபு ரேசர் செழுஞ்சிலம்பில்
மாணா வலர்மொழி வார்க்கேது சொல்வனென் வாய்திறந்து
நாணா தினியெங்ஙன் மீண்டுட னன்னகர் நான்புகுவேன்
காணா மருங்கு லொருமாதை யாற்றிடைக் கண்டிலனே. (கூ௫0)

## மீட்சி

தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல்

கூறும் பிறையொன் றணிவார்தம் வெங்கைக் குளிர்சிலம்பில்
ஊறுங் குருதியுந் தோய்வடி வேல வொருவனொடு

---

புரத்தல், காத்தல். புனைதல் - தரித்தல். மணி - மாணிக்கம். துயர்தல்- துன்புறல். நல்குரவு - வறுமை. குர - குரா. கூசஎ. புலி - வியாக்கிரபாதர். அரவு-பதஞ்சலி முனிவர். ஓதி - கூந்தல். கூசஅ. வேண்டார் - பகைவர். மீளல் - திரும்பல். உள் - மனம்; ஆகுபெயர். தூண்டா - தூண்ட வேண்டாத. இருஞ்சுடர் - பெருவிளக்கு. கூசக. பொன்நூபுரம் - பொன்னாலியன்ற சிலம்பு. இளங்காளை - என்றது தலைமகனை. இலங்கிழையாள் என்றது தன் மனைவியை. பிணைவிழியாள் என்றது தலைவியை. கூ௫0. சேண் ஆகுபெயர். நாடல்-தேடல். மாணாவலர்என்றபடியால் இழிவாகிய அலரெனலாயிற்று. கூ௫க. பணி- வணங்குதற்குரிய. அரிமாவழங்கு - சிங்கங்கள் இயங்குகின்ற. கான்

மானுங் கயலும் பணிவிழி யாளரி மாவழங்கு
கானுங் கரைபொரு கான்யாறுங் குன்றுங் கடந்தனளே. (கஉக)

தலைவன் றம்மூர்ச்சார்ந்தமை சாற்றல்

சேய்விளை யாடுந் திருமார்பர் வெங்கைச் செழுஞ்சிலம்பில்
நீவிளை யாடுஞ் சுனையீது நாண்மலர் நீபறிப்ப
மாவிளை யாடும் பொழிலது காணிள மந்திமுதிர்
வேய்விளை யாடுமவ் வெற்பேநம் வெற்பு விளங்கிழையே. (கஉஉ)

தலைவி முன்சென்றோர் தம்மொடு தான்வரல் பாங்கியர்க்குணர்த்தி விடுத்தல்

வேலையிற் றோன்றுநஞ் சுண்டோன் றிருவெங்கை வெற்பிலளி
சோலையிற் பாடுமெம் மூர்புகு வீரிது சொன்மினறு
மாலையிற் றோன்றுங் கதிர்வே லவனொடு மாவழங்கு
பாலையிற் போயின மாதுவந் தாளென்று பாங்கியர்க்கே. (கஉங)

ஆங்கவர் பாங்கியர்க்குணர்த்தல்

வெளிறுந் தரள நகையீ ரரன்றிரு வெங்கைவெற்பில்
களிறும் பிடியு முடங்குளைக் கோளரி கண்டுடைந்து
பிளிறுஞ் சுரத்திடைப் புக்கநும் மாது பிறழுமின்போல்
ஒளிறுங் கதிர்வடி வேலுடை யானொடிங் குற்றனளே. (கஉச)

பாங்கியர் கேட்டு நற்றாய்க்குணர்த்தல்

கீற்றுப் பிறையர் திருவெங்கை வாணர் கிரியிலன்னை
கூறறுக் குடித்த வுயர்மீண் டெனத்தன் கொழுநனொடு
வேற்றுப் புலத்தினின் றுற்றா ளெனச்சிலர் மெய்யுரைத்தார்
ஆற்றுப் படுத்துன் மனத்தே யிருந்த வருந்துயரே. (கஉரு)

நற்றாய் கேட்டவனுளங்கோள் வேலனை வினாதல்

கைக்கா லசூலத்தர் வெங்கையி லேநற் கடவுடர
முக்கா லமுமுணர்ந் தீருல காளு முடிமன்னவன்

---

யாறு - காட்டாறு. அரிமா இருபெயரொட்டு பண்புத் தொகை. கஉஉ. சேய் - முருகக் கடவுள். நாள்-புதுமை. பறித்தல்-கொய்தல். மந்தி - குரங்கு. வேய் - மூங்கில். விளங்கிழை - அன்மொழித் தொகை. கஉங. நஞ்சு என மேல் வருதலால் வேலை ஈண்டு பாற்கடலை உணர்த்தியது. வேலை - கடல்; இது வேலா என்னும் வடசொல் திரிபென்பர். மா - விலங்கின் பொது. கஉச. வெளிறும் - வெளுத்த. முடங்கு - வளைத்த. நகை - பல். உளை - புறமயிர். கோளரி - ஆண் சிங்கம். உடைதல்-மனங்கலங்கல். பிளிறல்-பேரிரைச்சலிடல். பிறழ்தல்-மின்னுதல். ஒளிறல் - மிக்குவிளங்குதல். கஉரு. வேற்றுப்புலம் - பாலைநிலம். நின்று ஐந்தாவதன் சொல்லுருபு. அருந்துயர் - பொறுத்தற்கரிய துன்பம். ஆற்றுபடுத்து - தணிப்பாயாக. கஉசா. கால சூலம் - மழுவைப் போன்ற சூலம். உவாளு முடிமன்னவன் என்றது

மைக்கா வியங்கண் மடமா துடனெம் மனைவ நமோ
தக்கார் புகழ்தன் மனைபுகு மோவென்று சாற்றுமினே. (கருசு)

## தன்மனை வரைதல்

### நற்றாய் மணமயர்வேட்கையிற் செவிலியை வினாதல்

மின்னைப் பயந்த வெனக்கோ கதிர்வடி வேலொருவன்
தன்னைப் பயந்த வனைக்கோ திருவடித் தாமரையில்
என்னைப் புரந்தவர் வெங்கையன் னைய்மண மேற்றுவக்கும்
முன்னைத் தவமெவர்க் கோவறி யேம்வந்து முற்றுவதே. (கருஎ)

### செவிலிக்கிகுளை வரைந்தமையுணர்த்தல்

செவ்வாய் மடமயி றன்னையின் னேமணஞ் செய்திருந்தார்
அவ்வா ளரியனை யாரென்று தூத ரறைந்தனரால்
சைவா கமந்திகழ் வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பில்
எவ்வா றறைவ தறங்கோடி செய்து முன் னீன்றவட்கே. (கருஅ)

### வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தல்

பொன்னு ரிதழித் தொடையாளர் வெங்கைப் பொருப்பிலிந்த
நன்னு ளினிவருங் காலத் துரூதென நன்மணஞ்செய்
தன்னாய் வருகின் றனர்மட மாதுட னன்பரென்று
சொன்னார் மொழிபிற ழாதுண்மை கூறுநற் றாதுவரே. (கருகூ)

### தலைவன் பாங்கிக்கியான்வரைந்தமை நுமர்க்கியம்பு சென்றென்றல்

ஊனெழு வாய்மழு வெங்கைபு ரேச ருயர்சிலம்பில்
தேனெழு வார்குழ லாய்நுமர் தேறத் தெளித்தருள்வாய்
வானெழு மீர மதிவாண் முகத்துங்கள் வல்லிதனை
யானெழு தாவொன்று சான்றாகச் செய்த விருமணமே. (கசுo)

### பாங்கிதானதுமுன்னே சாற்றியதுரைத்தல்

பன்னு ளருந்தவஞ் செய்ததன் மாதைப் பனிமய
நன்னுக நல்க வரைந்தார் திருவெங்கை நாடளிக்கும்

---

தலைமகனை. மடமாது-தலைமகள். கருஎ. மின்னை - மின்னற் கொடி போல்பவளாகிய தலைவியை. பயத்தல்-பெறல். கதிர்வடி வேலொருவன் என்றது தலைமகனை. உவத்தல் - மகிழ்தல். கருஅ. செவ்வாய் மடமயில் - சிவந்த வாயினையுடைய இளமை தங்கிய மயில் போன்ற தலைவி. அறங்கோடி - பலவகையான அறங்கள். கருகூ. பொன்னார் என்பதில் ஆர் உவம உருபு. இதழி : ஆகுபெயர். தொடை - மாலை. இனி வருங்காலம்-எதிர் காலம். கசுo. வாய்-மழுவின்கூர் பொருந்திய பக்கம். தேன்-வண்டுகள். தெளித்தல்-விவரித்துச் சொல்லல்-எழுநா—நீ. திக்கு எழுநாக்களுண்மையால் இவ்வாறு பெயர் உண்டாயிது. கசுக. பன்னாள் - நெடுங்காலம். நாகம் - மலை. வரைதல் - மணஞ்

மன்றவெம் மேம வரைவளர் மாதை வரைந்தமை தான்
முன்னு வறிந்து பயந்தா டனக்கு மொழிந்தனனே. (௧௪௧)

## உடன்போக்கிடையீடு

*நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன் செலவுணர்த்தல்*

வெறிமேவு கொன்றையம் பூந்தொடை யார்திரு வெங்கைவெற்பில்
கறிமேவு முப்பென வன்பரிற் கூடிவெங் கானகத்தில்
நெறிமேவு மங்கை மகிழ்ந்துசென் ருளென நீநுரையின்
மறிமேவு முண்கண் மடக்கொடி மாதர்க்கு மாதவரே. (௧௪௨)

*தலைமகடன் செலவின்றாட்குணர்த்தல்*

மின்னைத் திருத்து மவிர்சடை யார்திரு வெங்கைவெற்பில்
பொன்னைப் பரித்த திருமார்ப ரோடதர் போயினளென்
றென்னைக் கொடுத்துக் கலங்கவிழ் நாய்க னெனக்கவலும்
அன்னைக் குரைத்தரு ளீர்வழு வாநெறி யந்தணரே. (௧௪௩)

*நற்றாய்க்கந்தணர் மொழிதல்*

அல்லஞ்சு கண்டர் திருவெங்கை வாண ரணிவரையீர்
இல்லஞ் சுரமச் சுரமேதன் னில்ல மெனக்கருதி
வல்லஞ்சு மென்முலை யாணடந் தாளென் வழிச்செலவைச்
சொல்லந் தணவனைக் கென்றுவெம் பாலைச் சுரத்திடையே. (௧௪௪)

*நற்றாயறத்தொடு நிற்றலிற்றமர்பின் சேறலைத் தலைவிகண்டு தலைவற் குணர்த்தல்*

கல்வளைத் தன்று புரமெரித் தார்கநங் காவியங்கட்
பல்வளைச் செங்கைக் கொடிபாகர் வெங்கைப் பனிவரையாய்
வில்வளைத் தம்பு பொழிந்தார்த் தெழுந்து வியன்சிலம்பைச்
செல்வளைப் புற்றது போலவளைந் தாரெமர் தேரினையே. (௧௪௫)

*தலைமகடன்னைத்தலைமகன் விடுத்தல்*

செருகிக் கிடந்த மதிவே ணியர்திரு வெங்கைவெற்பில்
சருகிற் புகுஞ்சுழல் காற்றுத வன்பகைச் சார்வினரேல்

---

செய்தல். அளித்தல் - காத்தல். ஏமம்-பொன். பயந்தாள்-ஈன்றவள். ௧௪௨. வெறிமேவு - மணம் பொருந்திய. வெங்கானகம் - பாலைநிலம். நெறி - கற்புநெறி. மறி - மான். உண்கண் - மையுண்டகண். ௧௪௩. மின்னைத்திருத்தலாவது-மின் விளங்குமாறு செய்தல். பரித்தல்-தாங்குதல். அதர் - அருநெறி. கலம் - மரக்கலம். நாய்கர் - வணிகர் கவலல் - துன்புறல். வழுவாநெறி - துறவறநெறி ௧௪௪. அல்லஞ்சு கண்டர் - இருளும் அஞ்சுமாறு மிக்க கறுத்த கண்டத்தையுடையவர். வல் - சூதாடு கருவி. ௧௪௫. கல் - மேருமலை. இறைவர் வளைத்தது பொன்மலையாயினும் சாதியாப்புமை கருதிக் கல் என்றார். செல் - முகில்கள். வில் வளைத்து - வானவில்லை வளைத்து. ௧௪௬. சுழற்

குருகிற் சிறந்தனைத் தோகாய் நுமரைக் கொணர்மையினால்
அருகிற் செலவஞ்சு வேனிற்க நீயிவ் வதரிடையே. (௧௬௬)

தமருடன் செல்பவளவன்புறநோக்கிக் கவன்றாற்றல்

கன்மலை யென்னினு மவ்வோர் பெய்யுங் கணைமழைக்கிங்
கென்மலை யென்னும் புயத்தோர்க் கிடந் தரு மிம்மலைதான்
பன்மலை யென்னு மணிமாட வெங்கைப் பழமலைவாழ்
பொன்மலை வெள்ளி மலைபோற் பொலிக புகழ்படைத்தே. (௧௬௭)

## வரைதல்

சென்றோன்மீண்டுவந் தந்தணர்சான்றோரைமுன்னிட் டருங்கலந்
தந்துவரைந்துழிக் கண்டோர்சாற்றல்

கருவே ரறுக்குந் திருவெங்கை வாணர்க்குங் கற்புமைக்கும்
அருவேள்வி நன்மணஞ் செய்துசெம் பாதிமெய் யாயினவால்
வருவேத நன்னெறி தான்வழு வாமன் மணம்புணர்ந்து
பொருவே லிறைவற்கு நன்மா தினுக்குமெய் பூரித்தவே. (௧௬௮)

வரைவியல் முற்றிற்று

## கற்பியல்

### இல்வாழ்க்கை

தலைவன் றலைவிமுன்பாங்கியைப் புகழ்தல்

கலைகா ணரும்புகழ் வெங்கைபு ரேசர் கனகவெற்பில்
குலைகா ணலைபுனற் பண்ணையி னுக்குதைங் கூழ்விளைவுற்
றுலைகா ணளவும் வருந்துகின் றாரினென் னெண்டொடையின்
முலைகா ணளவும் வருந்தினை வாழி முகின்முலையே. (௧௬௯)

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்

மால்போ லிருக்கு மிறைநீ யணிந்தநன் மங்கலநாண்
பால்போ லிருக்கு மொழியாட்கு வெங்கைப் பரனணிந்த

---

காற்று - குறைக்காற்று. குருகு-வளையல் நுமர்-நும்மவர் தோகை: இருமடியாகு பெயர். ௧௬௭. மலையென்னும் புயத்தோர் - தலைவர். மணி மாடம் - மணிகள் பதிப்பிக்கப்பட்ட மாளிகைகள் ௧௬௮. கரு-பிறவி. வேர் அறுத்தல் - அடியோடொழித்தல். மெய் - பொய்யாகிய உடலை மெய் என்றது மங்கலவழக்கு. பூரித்தல்-நிரம்பல் ௧௬௯. இறை: வனுடைய புகழ் கலைகளால் அளவிடற்கரியதாகலின் கலைகாணரும் புகழ் என்றார். கனகம்-பொன். குலை-கொத்து. பண்ணை-வயல். ௧௭௦. இறை பண்பாகு பெயர். அண்மைவிளியாதலின் இயல்பாயிற்று அணிதல் - பூட்டுதல், பால் போலிருக்கு மொழி-இன்மொழி. பரன்-மேலானவன்,

சேல்போ லிருக்கும் விழிமா துமையின் றிருக்கழுத்தின்
நூல்போ லிருக்கப் பெறுகதின் மாதவ நோக்கடைந்தே. (கஎ0)

பாங்கி தலைவியை வரையுநாளளவும் வருந்தாதிருத்தமை
யுரையாயென்றல்

போற்றலர் போற்றுங் கதிர்வே லவன்றொடை பூணளவும்
நீற்றலர் மேனியர் வெங்கைபி லேயுண் ணிரம்புசெந்தேன்
ஊற்றல ரொன்றிற் கொடிநுசுப் பாயிவ் வுலகநிறை
தூற்றல ரெங்ஙன நீசுமந் தாற்றினை சொல்லுகவே. (கஎக)

பெருமகளுரைத்தல்

வினைக்கூறு செய்தன் றிருவடித் தாமரை மேவுறவென்
றனைக்கூவு மையர் திருவெங்கை வாணர் தடஞ்சிலம்பில்
முனைக்கூ ரயில்விழி யாபின்று காறு முதல்வருடன்
எனைக்கூ றிடுமல ரேதுணை யாக விருந்தனனே. (கஎஉ)

தலைவனைப் பாங்கி வரையுநாளளவுநிலைபெறவாற்றிய நிலைமைவினுதல்

வேலை தருவிட முண்டோன் றிருவெங்கை வெற்பிலெழு
காலை யிரவி யனையாயெவ் வாறு கனலி முனஞ்
சோலை யிளமயி லன்னாள் கழுத்திற் சுரும்பு முரல்
மாலை யிடுமள வும்பொறுத் தாய்மலர் வாளியையே. (கஎங)

மன்றன்மனைவரு செவிலிக் கிகுளை யன்புறவுணர்த்தல்

இலரு முளரு மலர்வெங்கை வாண ரிரயவெற்பில்
அலரு மலரு மலர்த்துவெய் யோனுமன் றொன்றற்கொன்று
மலரு மிநபொரு ளுண்டாயின் மங்கைக்கு மன்னவற்கும்
பலரு மிசையவெப் பாகுமன் னேயிப் படியகத்தே. (கஎச)

பாங்கியில்வாழ்க்கை நன்றென்று செவிலிக்குரைத்தல்

பல்லற மாற்றியு மெல்லா மொருங்கு படத்துறந்தோர்
நல்லற மாற்றுந் துணையாக வுபெறு நன்மையினால்

---

மாதவன் - திருமகள் கொழுநன். கஎக. போற்றலர் - விரும்பாதவர். நீறு - திருவெண்ணீறு. ஊற்றுதல் - வார்த்தல். அலர் - மலர், பழிச்சொல். கொடி - பூங்கொடி. நுசுப்பு - இடை. கஎஉ. வினை - நல்வினை, தீவினை. ஊறுசெய்தல் - கெடுத்தல். தீவினையையேயன்றி நல்வினையையுங் கெடுத்தல் எற்றுக்கெனின் இருவினைகளுமே பிறவிக்குக் காரணமாதல் பற்றியென்க. கூவுதல் - வலிந்தழைத்தல். கஎங. கனலி - தீ: வினையாலணையும் பெயர். கனல் - சுடுதல். முரலல் - ஒலித்தல். பொறுத்தல் - ஆற்றியிருத்தல். கஎச. இலரும் - இல்லாதவரும். உளரும் - உள்ளவரும். அலரும் அலரும் - மலர்கின்ற மலரும். படி - உலகம். இசைய - உடன்பட. கஎரு. ஒருங்கு பட - ஒருமிக்க. பல்லறம் - இல்லறத்தார்க்

அல்லற மாற்றுங் களத்தார் திருவெங்கை யாரணங்கின்
இல்லற மாற்றவு நன்றெனு மாலிவ் விருநிலமே. (கசஎ)

மணமனைச்சென்றுவந்தசெவிலி பொற்றொடிகற்பியலை நற்றாய்க்குணர்த்தல்

மெய்யா மிறைவர் திருவெங்கை வாணர்தம் வெற்பில்வளைக்
கையா ளுடனவ் வருந்ததி மாதொப்பள் கற்பினென்றால்
பொய்யா மருங்கு லவள்வாழு மூர்க்குப் புயல்களென்றும்
பெய்யா விவளிடந் திங்கண்மும் மாரியும் பெய்திடுமே. (கசஅ)

நன்மனைவாழ்க்கைத் தன்மையுணர்த்தல்

நூருஞ் செறியிதழ்த் தாமரைத் தேனுமந் நுண்டுகளுஞ்
சேரும் பழனத் திருவெங்கை வாணர் செழுஞ்சிலம்பில்
பேரும் பெருவிருந் தோடுதன் கேளைப் பிடிகடொறும்
வேருஞ் சுவைபெற வூட்டிப்பின் றானுணு மெல்லியலே (கஎஎ)

செவிலி நற்றாய்க்கிருவர்காதலையு மறிவித்தல்

கருமா மணிகண்டர் தென்வெங்கை வாணர்கைக் கார்முகமாய்
ஒருமா மலையை வலங்கொண்டு காலை யுதயவெற்பில்
வருமா தவன்றிருத் தேர்மெய்ம்மை போலப்புன் மாலையினில்
செருமா முகமுறச் சென்றாலு மன்பர்தந் தேர்வருமே (கஎஅ)

## பரத்தையிற் பிரிவு

காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமவ்விறைவிக்கென்றல்

வெண்டா மரைமனை யாள்புகழ்ந் தேத்தரன் வெங்கைவெற்பில்
தண்டா மரையை யிசை மடி யாடித் தடவும்வரி
வண்டா மெனமட வார்பலர் சூழ்ந்தனர் மன்னவனைக்
கண்டா லனமனை யாளுடற் கீங்கிது காரணமே. (கஎக)

தனித்துழியிறைவி துனித்தழுதிரங்கல்

நினைப்போ ரகத்தி னடமாடும் வெங்கை நிமலர்வெற்பில்
நினைப்போ துமன்ப தொருவாத காதலர் தீர்ந்ததெவ்ணிக்

---

குரிய முப்பத்திரண்டறங்கள். கசகூ. மெய் ஆம் - உண்மையாகிய பொய்யா மருங்குல்-நுண்ணிய இடை. மாரி-மழை. பெய்தல்-பொழிதல். கஎஎ. நூருஞ் செறியிதழ்த் தாமரை - நூறு இதழ்கள் பொருந்திய தாமரை. துகள் - பராகம். பழனம் - வயல். கேள் - கேளாந் தன்மை. கஎஅ. கருமாமணிகண்டர் - மிகக் கறுத்த கழுத்தை யுடையவர். கார்முகம் - வில். ஆதவம் - வெயில்; ஆதவத்தையுடையவன் ஆதவன். கஎகூ. வெண்டாமரை மனையாள் - கலைமகள்; வெண்டாமரையை இருப்பிடமாகக் கொண்டிருத்தலின் இவ்வாறு பெயரடைந்தாள். ஊடல் - பிணங்குதல்: கஅO. நினைப்போர் - இடைவிடாது எண்ணுவோர். நிமலர் - மலமற்றவர். புலர்ச்சி - புலர்வு.

களைப்போ திருளின் புலர்ச்சியென் றென்று கருத்தழிந்திட்
டெளைப்போற் றுயினீத் திருப்பவர் யாரிவ் விருநிலத்தே. (௧௮0)

சங்கிதுவென்னெனப் பாங்கிவினுதல்

திரியா வருநிலை யார்வெங்கை வாணர் செழுஞ்சிலம்பில்
கரியா னுமார்பிற் றிருமாது மென்னக் கணவனுரம்
பிரியா தமையுமிக் காலத்தி லேமன் பிரிந்தவர்போல்
தரியா தழுங்கினை மாதே யுனக்கென்கொல் சார்ந்ததுவே. (௧௮௧)

இறைமகன்புறத்தொழுக் கிறைமகளுணர்த்தல்

செய்ச்சே தகத்திற் குளிர்நடந் தாங்குச் செறிந்தவடு
மெய்ச்சே யிழைக்கொடி யன்னார் கடைத்தலை மேயினதால்
கைச்சே ரிடபக் கொடியாளர் வெங்கைக் கனகவெற்பில்
மைச்சேல் விழிச்செந் திருவேநம் வாய்தன் மணிவையமே. (௧௮௨)

தலைவியைப் பாங்கிகழறல்

பலமா தருள்வெள் வளையூ டுயர்ந்த பழுதில்சலஞ்
சலமா மெனவுயர் மாதே திருவெங்கைத் தாணுவெற்பில்
நலமா மனையறஞ் செய்கடன் பூணு நயன்றிருந்து
குலமாதர் தங்கட் கியல்போதங் கேள்வர் குறைசொல்வதே. (௧௮௩)

தலைவி செவ்வணியணிந்து சேடியைவிடுப்புழி யவ்வணி
யுழையர்கண்டழுங்கிக்கூறல்

நறுவாய் முருகுமிழ் வெண்டா மரையி னகைமதியம்
மறுவா யளிமுரல் செய்வெங்கை வாணர் வரைமடவீர்
வெறுவாய்மெல் வார்கட் கவல்கிடைத் தாங்குமுன் வீணிவிக
முறுவார் தமக்கிவ் வரத்தமெய் கேவந் துதவியதே. (௧௮௪)

பரத்தையர்கண்டு பழித்தல்

பரைகவர் பங்கர் மதிவார் சடையர் பணியணியர்
தரைகவர் வண்புகழ் வெங்கைபு ரேசர் தடஞ்சிலம்பில்

---

நீத்திருத்தல் - ஒழித்திருத்தல் ஒருவல் - நீங்கல். களை - மிகுதி. இருட்போது - இராக்காலம். ௧௮௧. திரியாவருநிலை - ஒரு காலத்திலும் அழியாத அரியநிலை. அமைதல் - கூடியிருத்தல். மன் - கணவன். அழுங்கல் - வருந்தல். சார்தல் - நேர்தல். ௧௮௨. செய் - வயல். சேதகம் - சேறு. குளிர் - நண்டு. செந்திரு - ஆகுபெயர். வாய்தல் - வாயில். வையம் - தேர். ௧௮௩. வெள்வளை - வலம்புரிச் சங்கு. சலஞ்சலம் - ஆயிரம் வலம்புரிச்சங்கு சூழ நடுநாயகமாய் வீற்றிருப்பதாகிய சிறந்த சங்கு. தாணு - ஊழிக்காலத்திலும் அழியாதிருப்பவன். மனையறம் - இல்லறம். கேள்வர் - கேளாந்தன்மையர். ௧௮௪. விரை - நறுமணம். வாய்முகம் - முருகு-தேன். நகை - ஒளி. மறு - களங்கம். அரத்தம் - செந்நிறம். உதவல் - துணைசெய்தல் ௧௮௫. பரை - மேலானவளாகிய உமாதேவி. மதி - மதுவையுடையது. வார் - நீட்சி,

விரைகவர் வண்டு தொடர்வெட்சி சூடுமிம் மெல்லியலார்
நிரைகவர் கின்றவ ரோவறி யேமிவர் நெஞ்சகமே. (௧௮௫)

பரத்தையருலகியலோர்க்கிவிடுத்தலிற்றலைமகன்
வரவுகண்டுவந்துவாயில்கண்மொழிதல்

நாவல ரென்றும் புகழ்வெங்கை வாணர்நன் னுடனையாய்
ஏவலர் தம்மை யெதிர்கண்ட போதி லிரவியெதிர்
பூவலர் கின்ற தெனவே மகிழ்ந்து புவிபுரக்குங்
காவலர் வந்தனர் தாமே யுலகியல் காப்பதற்கே. (௧௮௬)

வரவுணர்பாங்கி தலைவிக்குணர்த்தல்

மின்னு கியசெஞ் சடையார் திருவெங்கை வெற்பிலுனை
உன்னு தகன்றவர் வந்தா ரவர்செய லுன்னலைநீ
இன்னுசெய் தாரை யொறுத்திடி னன்மை யியற்றுகெனச்
சொன்னர் புலவ ரறிந்திலை யோபொற் சுடர்த்தொடியே. (௧௮௭)

தலைவனைத்தலைவியெதிர்கொண்டுபணிதல்

அரவிடுங் கங்கணக் கையாளர் கொன்றையு மாத்தியுமே
விரவிடுஞ் செஞ்சடை வேதிய னுர் திரு வெங்கைவெற்பில்
பரவிடு மெங்கள் விழியாரக் கண்டுன் பதம்பணிய
வரவிடு மங்கையர் பல்லாண் டிருந்துயிர் வாழியவே. (௧௮௮)

புணர்ச்சியின் மகிழ்தல்

நாவுண் கடல மு தொப்பா குவதன்று நல்லளிகள்
பூவுண் பொழில்புடை சூழ்வெங்கை வாணரைப் போற்றலுறும்
பாவுண் செவிச்சுவை யேயென லாமலர்ப் பாயலினில்
ஏவுண் கருங்கண் மடப்பாவை நல்கிய வின்பினையே. (௧௮௯)

---

அணி - அணியப்படுவது. விரை - வாசனை. வெட்சி - செங்கடம்பு. நெஞ்சகம் - மனக்கருத்து. ௧௮௬. நாவலர். அறிஞர்கள்; நால்வர் எனினுமாம். ஏவலர் - ஏவலாளர். இரவியெதிர் அலர்கின்றது என என்றமையால் பூவென்றது தாமரைப் பூவையே குறித்தது. புரத்தல் - காத்தல். காவலர் - அரசர். உலகியல் - உலகநடை. ௧௮௭. உன்னாது - நினையாமல். உன்னலை - நினையற்க. அகலல் - பிரிதல். இன்னா - தீங்கு. ஒறுத்தல் - தண்டித்தல் "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்துவிடல்" என்பது திருக்குறள். ௧௮௮. அரவு கங்கணம் - பாம்புக்காப்பு. ஆத்தி - ஆத்தி மலர். விரவிடும் - கலந்தணியும். பரவிடல் - பரத்தல். ௧௮௯. ஏ - அம்பு. கடல் அமுது - பாற்கடலில் தோன்றிய அமுதம் பூ : ஆகு பெயர். பா - பாடல். பாயல் - படுக்கை. நல்கல் - கொடுத்தல்.

வெள்ளணியணிந்துவிடுத்துழித் தலைமகள்வாயில்வேண்டல்

மலைமகள் பங்கர் திருவெங்கை வாணர் மணிவரைமேல்
அலைமக ளென்ன வருமட வார்வெள் ளணியணிந்து
கலைமக ளென்ன வடைந்தன ராலினிக் கானவர்தந்
தலைமகன் மெய்ந்நலங் காண்பா னெனையார் தருபவரே. (௧௬0)

தலைவிநெய்யாடியதிருளிசாற்றல்

மையா டியதடங் கண்ணு ளொருநன் மகவுயிர்த்து
மெய்யா டியதிரு வெண்ணீ றழகர்தம் வெங்கையிலே
செய்யா டியநல் வலம்புரி யீன்ற செழுமணிபோல்
நெய்யா டினணல் வினைப்பயன் மேவு நெடுந்தகையே. (௧௬௧)

தலைவன்றன்மனத்துவகைகூர்தல்

பத்திர தன்மக னின்றேத்தும் வெங்கைப் பழமலையார்க்
கத்திர மன்ன விழியுமை யாளயில் வேலவனைப்
புத்திர னென்னும் பொருள்பட வீன்றிலள் பொன்னுரைத்த
சித்திர மன்னவள் புத்திரற் பூத்துச் சிறந்தனளே. (௧௬௨)

தலைவிக்கவன்வரல்பாங்கியுணர்த்தல்

ஆடுந் தொழிலர் திருவெங்கை வாண ரணிவரைமேல்
பாடுஞ் சுரும்பு படர்ந்தலர் பூத்த பசுங்கொடியை
நேடும் பணியென நன்மக வீன்ற நினைவிரும்பிக்
கூடும் படிவந் தனர்பிரிந் தேகிய கொற்றவரே. (௧௬௩)

தலைவியுணர்ந்து தலைவனொடுபுலத்தல்

பண்கா னுறுமென் மொழிப்பங்கர் வெங்கைப் பனிவரையாய்
கண்கா தளவுமக் காதேந் திளமுலை காறுமுள
பெண்கா ளெனமுன் புரைத்தது நீபெறும் பிள்ளைசுவைத்
துண்கால மென்முலை நுண்ணிடை காறு முளையென்றதே. (௧௬௪)

---

௧௬0. அலைமகள் - திருமகள். வெள்ளணி - வெள்ளாடை முதலியன. காண்பான் - காண. பான்: வினையெச்ச விகுதி. ௧௬௧. மெய்யாடிய திருவெண்ணீற்றழகர் - உடல் முழுதும் திருவெண்ணீறு மிகுதியாகப் பூசப்பெற்றுச் செம்மேனியெம்மான் திருமேனி வெண்மேனி யாகிற்றலையால் திருவெண்ணீற்றழகர் என்றார். மை - அஞ்சனம். நெய்யாடுதல் - நெய் பூசி மூழ்குதல்; இது பிள்ளைப்பேற்றுச் சடங்குகளில் ஒன்று. ௧௬௨. பத்திரதன் - தசரதன். அத்திரம் - அம்பு. அயில் - கூர்மை. பொன்னுரைத்தல் - பொன்னுருக்கு நேர்பூசல். ௧௬௩. ஆடுந்தொழில் - கூத்தாடுந் தொழிலையுடையவர். நேடும்பணி - தேடுந்தொழில். பணி - தொழில், ௧௬௪. பண் - இந்தளம், காந்தாரம், பஞ்சுரம் முதலியவை; பைரவி. தோடி முதலிய இராகங்களெனினுமாம். காறும் - அளவும். உளை - உள்ளவளாவை,

### தலைவிபாணனைமறுத்தல்

பைத்தலை நாக மணிவோன்றென் வெங்கைப் பனிவரைமேல்
செய்த்தலை யூர னுனையீங்கு விட்டது தேரினொரு
மெய்த்தலை நீட்டி நுழைவான் கருதிமுன் வெங்கரவன்
பொய்த்தலை காட்டிய தன்றோபண் பாடும் புலைமகனே. (௧௯௫)

### வாயின்மறுக்கப்பட்ட பாணன்கூறல்

வெல்வீர வாள்விழி மங்கைபங் காளர்தம் வெங்கைவெற்பில்
நல்வீ கமழ்புயத் துங்கா தலர்பெயர் நானுரைப்பில்
செல்வீ யுலக ரெனைவியந் தேகட் செவியுமிழ்செங்
கல்வீ சுவரின்று நீவீ சினைகருங் கல்லினையே. (௧௯௬)

### விருந்தொடு வந்துழிப்பொறுத்தல்கண்டிறையோன் மகிழ்தல்

திருந்து மரவப் பணியாளர் வெங்கைச் செழுஞ்சிலம்பில்
அருந்து மமுத மருந்தாய்ப் பிணிகளைந் தாங்குமுத்தும்
முருந்து மனைய நகையா ளிதய முனிவகற்றும்
விருந்து வருகதில் லென்றுமெப் போதுமெம் வீட்டினுக்கே. (௧௯௭)

### விருந்துகண்டொளித்தவூடல்வெளிப்படநோக்கிச் சீறேலென்றவள்சீறடிதொழுதல்

அறத்தா றறியுந் திருவெங்கை வாண ரணிவரைமேல்
வெறுத்தா லுனைமுனி வாற்றுநர் தாஞ்சிலர் வேறுளரோ
ஒறுத்தார் பெறுமின் பமுநினை யாம் லொருவர்பிழை
பொறுத்தார் புகழு மறிந்திலை யேமலர்ப் பூங்கொடியே. (௧௯௮)

### இஃதெங்கையர்காணினன்றன்றென்றல்

மையென்ற கண்டர்தம் வெங்கையி லேவண்டு வாரிசமென்
கையென் றலம்வரு நல்வய லூரகண் ணுற்றனரேல்
பொய்யென் றறிகில ரெங்கையர் நீசெயும் பொய்ம்மையினை
மெய்யென் றுளங்கொண் டொழியா ரெழுந்ததம் வெஞ்சினமே. ()

---

௧௯௫. பைத்தலை - படத்தோடு கூடிய தலை. தேர்தல்-ஆராய்தல். நுழைவான் - நுழைய. கரவன் - கள்ளன். புலைமகன் - நீசன். ௧௯௬. வீரம் - வாளுக்கிலக்கணை. வீ - மலர். கமழ்தல் - மணம் வீசுதல். செல்வி - திருமகள். வியத்தல் - புகழ்தல். கட்செவியுமிழ் செங்கல் - மாணிக்கம். ௧௯௭. பணி - அணிகலம். அமுதம்-பால். களைதல் - ஒழித்தல். முருந்து - மயிலிறகினடி. நகை - பல். இதயம் - மனம். விருந்து : ஆகுபெயராய் விருந்தினரை யுணர்த்திற்று. ௧௯௮. அறத்தாறு - அறநெறி. முனிவு ஆற்றுநர் - சினந்தணிப்பவர். ௧௯௯. மை - முகில். மெல்கை - மெல்லிய கை. அலம்வரு - மயங்காநின்ற. வாரிசம் - தாமரை. வாரி - நீர், சம் - பிறப்பது; நீரிற் பிறப்பது.

நின்னலதியாரையு நினையேனென்றல்

மின்னை யலாம லுவமையில் வேணிதம் வெங்கைபுரி
மன்னை யலாம லடியார் பிறரை மதிப்பரெனில்
நின்னை யலாம லினிவேன் பிறரையென் னெஞ்சகத்தில்
பொன்னை யலாம லெதிரிலை யாகிய பூங்கொடியே. (௪௦௦)

காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல்

மறிந்தே தெருவிற் சிறுதே ருருட்டுறு மைந்தனைப்போய்ச்
செறிந்தே தழுவக்கண் டுன்மகன் காணெனச் செப்பவெள்கிப்
பிறிந்தே கினளொரு பெண்சோதி வெங்கைப் பெருந்தகையாய்
அறிந்தே னவளையிங் குன்மா மகன்றனக் கன்னையென்றே. (௪௦௧)

தாமக்குழலியைப் பாங்கி தணித்தல்

ஏயே திலரை விடாதன்பர் தாம்வந் திறைஞ்சிடவும்
நீயே துமெண்ணலை யென்கொல்பொன் னேவிழி நீர்ப்பரவை
தூயேறு வந்தவர் தென்வெங்கை நாயகர் தூதுவராய்ப்
போயே யிரந்து கொளத்தீர்ந் தனடன் புலவியையே. (௪௦௨)

தலைமகள் புலவிதணியாளாகத் தலைமகனூடல்

விரும்பா மறவர் புரமூன் றெரித்தவர் வேணியினில்
அரும்பா மதியொன் றணிந்த பிரான்வெங்கை யன்னவயற்
கரும்பா மொழியென் மடமாதி னுக்கெந்தக் காலமுமிவ்
இரும்பா மனமிலை யாரே வறிதிங் கிருந்தவளே. (௪௦௩)

பாங்கி யன்பிலைகொடியையெனத் தலைவனையிகழ்தல்

தீம்பால் கமழு மணிவாய்ப் புதல்வர்க்குச் சிற்றெலும்பு
பூம்பா வையாக வருள்வோன்றென் வெங்கைப் பொருப்பிலிளங்
காம்பா னதோளிமுன் வேம்புதந் தாலுங் கழைக்கரும்பாம்
வேம்பா முனக்குக் கரும்பாயினு மின்று வேலவனே. (௪௦௪)

---

௪௦௦. எதிர் - ஒப்பு. மன் - இறைவன்; நிலைபேறுடையவன் ௪௦௧. செறித்தல் - கிட்டுதல். வெள்கல் - நாணல். பெருந்தகை. பெருங்குணம். இறைவன் எல்லா ஒளிகட்கும் மேற்பட்ட பரஞ்சோதி யாகலின் சோதியென்று சுட்டப்பட்டார். ௪௦௨. ஏதிலர் - அயலார். விடல் - அனுப்பல். இறைஞ்சல் - வணங்கல். தூயேறு-வெள்விடை. புலவி - ஊடல். தீர்தல் - நீங்குதல். ௪௦௩. மறவர் - பகைவர். வயலுக்கு அன்னம் அழகு செய்வதாதலால் அன்ன வயல் என்றார். ௪௦௪. பூம்பாவை - அழகிய பெண். தீம்பால் கமழும் மணிவாய்ப் புதல்வர் - அழகிய திருவாயை உடைய திருஞானசம்பந்தர். காம்பு - மூங்கில். கழைக் கரும்பு - சிறந்த கரும்பு. இப்பாட்டில் திருமயிலையில் திருஞானசம்பந்தர் திருப்பதிக மோதி எலும்பைப் பெண்ணாக்கிய செய்தி கூறப்படுகிறது.

ஆயிழைமைந்தனுமாற்றுமையுமேவாயிக்களாகவரவெதிர்கோடல்

அறந்தாங் குமையவள் கொங்கைத் தழும்பழி யாவுரத்தர்
பிறந்தாங் கறிகிலர் வெங்கைமன் றுதுப் பிலகுமொரு
நிறந்தாங் கரவிந்த வண்டோர்புன் முள்ளி நினைந்ததுபோல்
மறந்தாங் கிராம லெமைநீ நினைந்ததெம் மாதவமே. (சo௫)

மணந்தவன்போயபின் வந்தபாங்கியோ டிணங்கிய
மைந்தனை யினிதிற்புகழ்தல்

பிறந்தவன் றேநன் மணிநேர் புதல்வன் பிறர்கடைத்தேர்
பறந்தடைந் தாங்குநம் வாய்தலி லேவரப் பண்ணினனால்
இறந்தவங் கம்புனை யெம்மான்றன் வெங்கையி லிம்மையினுஞ்
சிறந்தவின் பந்தர வல்லவ னேயெனத் தேறினமே. (சoசு)

தலைவி தலைவனைப் புகழ்தல்

பண்ணுற்ற மென்மொழி யாய்தமிழ் நூலிசைப் பாவலர்தம்
எண்ணுற்ற நம்முயிர்க் காதலர் போல்பவ ரில்லையெனப்
பெண்ணுற்ற பங்கர்தம் வெங்கையி லேதண் பெரும்பொழில்வாய்க்
கண்ணுற்ற காதலை யின்றள வாகவும் காட்டினரே. (சoஎ)

கிலேநுதற்பாங்கி தலைவியைப் புகழ்தல்

கேளோர் பரத்தையிற் போகா திருத்தலிற் கீர்த்திபெற்று
நாளோ டிலங்கு மருந்ததி யோவொப்பு நாகமணி
தோளோ னொருதெய்வ சூளா மணிவெங்கைத் தொன்னகரில்
வாளோ வெனுங்கட் பிறைவா ணுதலெங்கண் மாதினுக்கே. (சoஅ)

## ஓதற்பிரிவு

ஓதற்குப்பிரிவுதலைமகன்றன்னுணர்ந்ததோழி தலைமகட்குணர்த்தல்

விண்ணுடை யார்புகழ் நூபுர பாதர்வெல் வேனெடுங்கண்
பெண்ணுடை யார்மகிழ் தென்வெங்கை மாநகர்ப் பெண்ணணங்கே
கண்ணுடை யார்கற் றவரேகல் லார்கண் முகத்திரண்டு
புண்ணுடை யாரெனக் கூறிநங் காதலர் போயினரே. (சoகூ)

---

சo௫. அறந்தாங்குமையவள் - எண்ணான்கறங்களையும் வளர்ப்பவள். தழும்பு - வடு. உரம் - மார்பு. துப்பு - பவளம். அரவிந்தம்- செந்தாமரை மலர். சoசு. வாய்தல் - வாயில். அங்கம் - எலும்பு. அஃது ஆகுபெயராய் அதனாலமைந்த மாலையை உணர்த்திற்று. இம்மை - இவ்வுலகம். தேறல் - தெளிதல். சoஎ. எண்உற்ற - மதித்தற்குரிய. பண்ணுற்றமென்மொழியாய் என்றது தோழியை. கண்ணுறல் - காண்டல். சoஅ. கேள் - கணவன். பரத்தை - விலைமாது. நாள் - நாண்மீன். எங்கள் மாதினுக்கு அருந்ததியோ ஒப்பு என்று முடிக்க. சoகூ. விண்ணுடையார்-தேவர்கள். நூபுரம் - காற்சிலம்பு.

தலைமகள் கார்ப்பருவங்கண்டுவருந்தல்

சிலையோடு வந்தன வென்செய்கு வேன்முகில் செங்கமலன்
தலையோடு கொண்டவர் வெங்கையி லேசெந் தமிழ்முதலாங்
கலையோது வான்விழைந் துற்றார்க்கக் கல்விக் கடலதனுள்
இலையோவொன் றேனு மருள்வேண்டு மென்ன விசைப்பதுவே. ()

பாங்கியாற்றுவித்தல்

என்போ டரவணி யெம்மான் றிருவெங்கை யேந்திழையாய்
நின்போ தகமன்ன மன்னவர் நாமின்றி நீகளிப்பத்
துன்போடு கல்விக் கடன்மேய்ந்து செய்யுளஞ் சோனைபெய்து
தன்போல் தருவரென் றேவந்த தாலிச் சலதரமே. (௪௧௧)

## காவற்பிரிவு

காவற்குப்பிரிவு தலைமகன்றன்னுளுணர்ந்த தோழி தலைமகட்குணர்த்தல்

கருமா முகிலுறங் குஞ்சோலை வெங்கைக் கடவுண்முக்கட்
பெருமா டொழிலை யொருநீ பெறினும் பெறுகவென்றே
ஒருமா நிலந்தனி னம்முயிர்க் காவல ரோங்குபுகழ்த்
திருமா ரெழில்வை குதுமென்று போயினர் தேமொழியே. (௪௧௨)

தலைமகள் கூதிர்ப்பருவங்கண்டு வருந்தல்

கணையிலை வேலெனுங் கண்மாது பங்கர் கருப்பவில்லிற்
கிணையிலை யென்னுந் திருவெங்கை நாட்டி லிறைவரின்றே
அணையிலை யென்செய்கு வேன்மறை யோவென் றரற்றுகினுந்
துணையிலை யென்பது கொண்டோவிவ் வாடை துயர்செய்வதே. ()

தோழியாற்றுவித்தல்

பனிபொரு செஞ்சுட ரன்னார் திருவெங்கைப் பாவைநல்லாய்
முனிபொரு வித்த மெனவே கணவர்தம் முன்புரத்தில்
கனிபொரு மெல்லிதழ் நன்மாதர் கொங்கை கரந்திடப்பன்
துனிபொரு காலம் வரக்கா தலர்நமை நோக்குவரே. (௪௧௪)

---

௪௧0. சிலை - வானவில். தலையோடு - கபாலம். விழைதல் - விரும்புதல். இசைத்தல் - சொல்லுதல். ௪௧௧. என்பு : ஆகுபெயர். போதகம் - யானை; யானைக் கன்றெனினுமாம். சோனை - விடாமழை. ௪௧௨. கருமாமுகில் உறங்குஞ்சோலை என்றபடியால் சோலையின் உயர்ச்சி தோன்றிற்று. பெருமான் - பெருமையை உடையவன். ௪௧௩. பங்கர் என மேல் வருதலால். கணையிலை வேலெனுங் கண்மாது உமாதேவியைக் குறித்தது. அரற்றல் - பேரிரைச்சலிடல். வாடை - வடகாற்று. ௪௧௪. பாவை-பொம்மைவடிவம். நலலாய்-பெண்ணே. முனி - அகத்தியமுனி உரம் - மார்பு. கனி - கோவைக்கனி. இதழ் - அதரம். கரத்தல் - மறைத்தல்.

## தூதிற்பிரிவு

**தூதிற்குப் பிரிவு தலைமகன்றன்னுணர்ந்த தோழி தலைமகட் குணர்த்தல்**

சடைநின்ற கங்கையர் வெங்கையி லேயொரு சந்துசென்றார்
படைநின்ற கண்ணி நங் காவல ரின்றுபற் றாசொன்றுதான்
தொடைநின்ற நேரிசை முன்குற ளுந்தனிச் சொல்லு மற
இடைநின்று கூட்டுதல் போலிரு வேந்தை யிசைப்பதற்கே (௨௪௫)

**தலைமகள் முன்பனிப்பருவங்கண்டு வருந்தல்**

கருங்காள கண்டர் திருவெங்கை வாணர் கனகவெற்பில்
பொருங்கா வலர்தம் பகைதணிப் பான்முனம் போயினவர்
பெருங்கால முன்பனி நாள்வந்தும் வந்திலர் பேதையர்மேல்
வருங்காம வெஞ்சரந் தன்னையு மாற்ற மனமதித்தே. (௨௪௬)

**தோழியாற்றுவித்தல்**

போதாகி வந்த பிறைவே ணியர்வெங்கைப் பொன்னகரில்
காதாகி வந்தநல் வள்ளையிற் றூங்கு கனங்குழைசேர்
மாதாகி வந்தசெந் தேனே யவர்தம் வரவுசொலத்
தூதாகி வந்தது முன்பனி நாண்மன்னர் தூதுவர்க்கே. (௨௪௭)

## துணைவயிற்பிரிவு

**துணைவயிற்பிரிவு தலைமகன்றன்னுணர்ந்த தோழிதலைமகட்குணர்த்தல்**

கடுக்கை யணிந்த முடியோன் றிருவெங்கைக் காரிகையாய்
உடுக்கை யிழந்தவன் கையோர் பொருளை யொழித்ததனைத்
தடுக்கை விரைந்தது போனட்ட வேந்தன் றனக்குதவி
அடுக்கை விழைந்து நினைவிடுத் தார்நட் பறிந்தவரே. (௨௪௮)

**தலைமகள் பின்பனிப்பருவங்கண்டு வருந்தல்**

நன்பனி வெண்மதி யொன்றுடை யோன்வெங்கை நாட்டொருதம்
அன்ப னிருந்துயர் தீர்துணை யாக வடலரிபோல்
முன்பனி கஞ்செலச் சென்றவர் காண்கிலர் மூடியெங்கும்
பின்பனி பெய்து பெருந்துயர் வேலை பெருகுவதே. (௨௪௯)

---

௨௪௫. சந்து சென்றார் - தூது சென்றவர். படைநின்ற கண்ணி-வேற்படைபோல் அமைந்த கண்ணையுடையவள். பற்றாசு - இரண்டை ஒன்று சேர்ப்பது. ௨௪௬. காளம் - நஞ்சு. பொருதல் - போர் செய்தல். தணிப்பான் - தணிக்க. காமசரம் - காமன்கணை. ௨௪௭. போது - அரும்பு. வள்ளை - வள்ளைத் தண்டு. தூங்குதல் - தொங்குதல். கனங்குழை - கனவிய குழை (இது காதணி.) ௨௪௮. கடுக்கை - கொன்றைமாலை. உடுக்கை - ஆடை. விழைதல் - விரும்பல். விடுத்தல் - நீங்கல். ௨௪௯. இருந்துயர் - பெருந்துன்பம். அடல்அரி - வலிமை மிகுந்த சிங்கம். அனிகம் - படை.

**தோழியாற்றுவித்தல்**

தின்பா லுதவி நினைந்துவந் தார்கைந் நிமிர்த்தலரும்
பின்பாய் பனிவரு நாளயில் வேற்கட் பிறைநுதலாய்
தன்பாத மென்றலைக் கீவோன் றிருவெங்கை தன்னிலொரு
மன்பா லுதவி நினைந்துமுன் போயின மன்னவரே. (சஉ0)

## பொருள்வயிற்பிரிவு

**பொருள்வயிற்பிரிவு தலைமகன்றன்னுளுணர்ந்த தோழி தலைமகட்குணர்த்தல்**

திரைப்பா லெழுநஞ்ச முண்டோன் றிருவெங்கைத் தென்கயத்தின்
விரைப்பா னலங்கண் விளங்கிழை யாய்மக மேருவென்னும்
வரைப்பா னிதியந் தரற்கே கினர்கடன் மாநிலத்தில்
இரப்பார் மிடிகள் புகுமிடந் தேட விறையவரே. (சஉக)

**தலைவி யிளவேனிற்பருவங்கண்டு வருந்தல்**

போதந் திறைப்ப வழறென்றல் பற்றுதல் போலவிளஞ்
சூதந் தழைக்குமிந் நாள்கண்டி லார்கொ றுணிவொடுநால்
வேதந் துதிக்குந் தனிமூல காரணர் வெங்கைவெற்பில்
பாதஞ் சிவக்கப் பொருள்வயிற் போயின பாதகரே. (சஉஉ)

**தோழியாற்றுவித்தல்**

நாகூ ரரவணி வெங்கைபு ரேசர்நன் ஞட்டிலொரு
பாகூர் மணிநெடுந் தேரன்பர் கேட்டுநின் பாலடைந்தார்
ஆகூழ் பெறுவலி வெஞ்சின வேள்வந் தமர்புரியக்
கூகூ வெனவிள மாவேறி யேகுயில் கூவுவதே. (சஉங)

**தலைமகன் றலைமகளதுஉருவெளிப்பாடுகண்டுள்ளே வியத்தல்**

கூர்க்குங் கனன்மழு வார்வெங்கை வாணர் குளிர்சிலம்பில்
சீர்க்குங் கயலுங் கரும்புய லுந்தொண்டைத் தீங்கனியும்
வார்க்குங் குமமுலை யுங்கொண்டு மாதெதிர் வந்துநின்றாள்
பார்க்குந் திசைதொறு மெங்கேயிம் மாயை பயின்றதுவே. (சஉச)

---

சஉ0. கைந்நிமிர்த்தல் அருமையாயது குளிர்மிகுதியால் என்க. பிறை - எட்டாம் நாட்பிறை. நுதல் - நெற்றி. சஉக. திரை - ஆகுபெயர். கயம்-ஓடை. விரை - வாசனை. பானல் - கருங்குவளை; ஆகுபெயர். வரை-மலை. புகுமிடம்-புகுந்தொளிக்குமிடம். சஉஉ. போதந்து வந்து. இறைத்தல் - வீசுதல். சூதம் - மாமரம். சஉங. நாகு - இளமை. ஊர்தல் - தவழ்தல்; செலுத்துதல். பால் - ஏழனுருபு. ஆகூழ் - நல்வினைப்பயன். வேள் - காமன். சஉச. கூர்த்தல் - கூரிதாதல். கயல் - மீன். தொண்டை - கொவ்வை. பயிலல் - பழகல்.

**பாசறைமுற்றி மீண்டூர்வயின்வந்த தலைமகன் பாகற்குப்பரிவொடு மொழிதல்**

கார்கண்ட கண்டர் திருவெங்கை வாணர் கனகவெற்பில்
போர்கண்ட மன்னவர் நல்வலவா நம் புரவிநெடுந்
தேர்கண்ட போதி லிரிந்தா ரினிமணித் தேரெதிர்செந்
நீர்கண்ட மீனென வுண்மகிழ்ந் தேவரு நேரிழையே. (௪௨௦)

**தலைமகனோடு கலந்துறைந்ததலைமகள் கார்ப்பருவங்கண்டு களித்தியம்பல்**

கயலே யனைய விழியாளும் யானுங் கலந்துபுணர்
செயலே மருவி யிருக்கின் றனமலர்த் தேனொழுகி
வயலே விளையுந் திருவெங்கை வாணர் வரையில்வரும்
புயலே யினிமதி யொன்றின்முக் காலும் பொழிபொழியே. (௪௨௧)

## கற்பியல் முற்றிற்று.

## திருவெங்கைக்கோவை முற்றிற்று.

---

௪௨௦. கார்கண்ட-கார்போலும்; கண்ட: உவமவுருபு. கனகம்-பொன். வெற்பு-மலை. வலவன்-தேர்ப்பாகன். இரிதல்-ஓடுதல். செந்நீர் - புதுவெள்ளம். ௪௨௧. புணர்தல்-சேர்தல். செயல்-தொழில். மருவல் - பொருந்தல். ஒழுகல் - பாய்தல். முக்கால்-மூன்றுதரம். பொழி பொழி - மழையைப் பொழியக் கடவாய், பொழியக் கடவாய்.

# ௧௦. திருவெங்கைக் கலம்பகம்

[கலம்பகமாவது ஒருபோகும் வெண்பாவும் கலித்துறையும் முதற்கவியுறுப்பாக முறகூறப்பெற்றுப் புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் இப்பதினெட்டுறுப்புக்களும் பொருந்த மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை யென்னுமிவற்றைக் கொண்டு இடையே வெண்பா, கலித்துறை விரவ அந்தாதித் தொடையால் பாடப் பெறும். இவ்வாறு பாடப்பெறும் இந்நூல் தேவர்க்கு நூறும், அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், வைசியர்க்கு ஐம்பதும், வேளாளர்க்கு முப்பதுமாகப் பாடப்பெறும். இக்கலம்பகம் திருவெங்கையில் எழுந்தருளிய சிவபிரான் மீது இயற்றப்பட்டபடியால் நூறுபாடல்களைக் கொண்டது. கலம்பகத்திற்குரிய இலக்கணங்களும் சிறப்புக்களும் நன்கமைந்து விளங்குவது. கற்பார்க்குப் பெருமகிழ்ச்சியை அளிப்பது.]

## காப்பு

*நேரிசைவெண்பா*

பொன்னுலவும் வெங்கைப் புனிதற் கடியேனும்
உன்னுங் கலம்பகப்பாட் டோதுகேன்—தன்னைநிகர்
முத்திதரு மன்னோன் முழுதருளி னுற்பூத்த
அத்திதனைக் கண்டவத னால்.

*ஒருபோகுமயங்கிசைக் கொச்சகக்கலிப்பா*

சீர்பூத்த நிறைமதிமான் றிருக்கரங்கொண் டம்மதியை
ஏர்பூத்த சடாமௌலிக் கியையவிர்ந் தனையிருத்தி
மற்றையவோர் பகவுமணி மார்பகத்திற் கிடந்திமைப்பக்
கொற்றவநீ யிருங்கேழற் கோடெனப்பூண் டருளினைகொல்

(காப்பு) பொன் - திருமகள், அழகு, செல்வம். முன்னும் - எண்ணும். அத்தி - ஆனைமுகக் கடவுள். ௧. நிறைமதி - கலைகள் நிறைந்த முழுத்திங்கள். மௌலி - முடி. ஈர்ந்தனை - பிளவு செய்தனை. பகவு - பிளவை. இருங்கேழல் - பெரியபன்றி. கோடு -

பூம்புனலோ பொன்முடிக்கட் புல்லோ தஞ் சுமிழெயிற்றுப்
பாம்பினமோ கண்டுனது பாணியின்மான் ருவுவதே.

இது ஆறடித்தரவு.

காமத்திற் படிலுமையாங் கடுநிரயத் திடுவமென
நாமத்திற் படவெமக்கு நவின்றொருவன் றாதாய்நீ
யாமத்திற் றனியிருட்க ணேந்திழைபா லெய்தியதென்.

நீவிர்புல வருந்திலெரி நிரயத்தி லிடுவமெனத்
தேவவெமக் கியம்பினை நீ சிலைவேட னிடும்பிசிதம்
ஆவலொடு மிசைந்தவனுக் கருளினைமெய்க் கதியென்கொல்.

ஒன்றொருயிர் தனைச்செகுப்பி னுமைநிரயத் திடுவமென
மன்றறைய வெமக்கியம்பி மைந்தனைமுன் றந்தைதனைக்
கொன்றவரை யுவந்தருளிக் கொடுத்தனைவா னுலகென்கொல்.

இவைமூன்றும் மூவடித்தாழிசை.

எனமிகு வளமுள வியலதி சயமொடு
முனிவரர் பலவகை மொழிதரு புகழினை.
பலகலை வலபுல னிலைமல வலைமலை
சிலரல துலகலை கலர்சொல விலகிலை.

இவையிரண்டும் ஈரடியராகம்

எனவாங்கு, இது தனிச்சொல்

எழிலிகண் படுக்கும் பொழில்புடை சூழ்ந்த
வெங்கையம் பதிவா ழெங்க ளையக
பழமலை நாதநிற் பரவுவன் விசும்பின்
அரையனுக் கரைய னுகுமந் நிலையும்
நினைகிலன் றமியே னின்னடி யவர்கட்
கென்று மடியவ னுகும்
ஒன்றொரு வரமு முதவுதி யெனவே. (க)

இஃது ஏழடிநேரிசையாசிரியச்சுரிதகம்.

---

கொம்பு. பாணியின் மான் - கையிலுள்ள மான். காமத்திற்பட - அச்சத்தையடைய. ஏந்திழை - பரவை நாச்சியார். புலவு - ஊன். பிசிதம் - ஊன். செகுப்பின் - கொன்றால். மைந்தனை - சோழனை. மலவலை - மலமாகிய வலையை. கலர் - கீழ்மக்கள். இலகிலை - விளங்காதவனே! எழிலி - முகில்கள். விசும்பின் அரையன் - தேவர் கோமான். ஒன்று - பொருந்திய.

நேரிசைவெண்பா

எவ்வா றளித்த திமையப் புதுமலைதன்
ஒவ்வா விளமை யொருமகளை—அவ்வான்
பரவுதிரு வெங்கைப் பழமலையே நிற்கு
விரவுகிளை யோடும் விழைந்து. (உ)

கட்டளைக்கலித்துறை

விழக்க மலங்களை மோதிவல் வாளை வியன்படுகர்
உழக்க மலங்கனை போய்ப்புகும் வெங்கை யொருவவிண்ணோர்
தொழக்க மலங்களை மாமதி வேணி சுமந்தருள்வோய்
பழக்க மலங்களை யான்பவ வேரைப் பறிப்பதற்கே. (௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பரந்தபுகழ்த் திருவெங்கைப் பழமலையார்
தமைத்துதித்துப் பதத்து மென்பூச்
சொரிந்துபணிந் திரந்திடவு மெமக்கருளச்
சிறிது முளந் துணிந்தா ரல்லர்
திருந்தவையிற் பித்தவென வைதுகல்லா
லெறிந்துபொருஞ் சிலையான் மோதி
அரந்தையின்மெய்க் கதிதருதி யெனக்கேட்போர்க்
கன்றியவ ரளித்தி டாரே. (௪)

மறம். எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அளியாரு மலர்ப்பொழில்சூழ் வெங்கை யீச
ரம்மலையி லெம்மூர்மான் பிடிப்போ மென்றுங்
களியாரும் வேடரியா மெம்ம கற்குக்
கன்னிதனைத் தருகவெனக் கொடுத்த வெம்மை
எளியாரென் றெருதூதா மாது வேண்டி
யிறைவர்திரு முகமெனமற் றென்று தந்தாய்
ஒளியாம லுரையவன்யா ரியாங்க ளின்னே
யுண்மையவன் திருமுகங்கொண் டெய்து வோமே. (௫)

உ. ஒவ்வா - ஒப்பற்ற. வான்பரவு - விண்ணவர் போற்றுகிற. விரவு - சூழ்ந்த. கிளை - உறவினர். விழைந்து - விரும்பி. ௩. வியன் படுகர் - ஆழ்ந்த குளங்கள். மலங்கு - விலாங்குமீன். அளை - சேறு. கமலம் - நீர். பழக்க மலங்களை - பழக்கமாகவுள்ள மும்மலங்களை. பவவேர் - பிறவிவேர். ௪. பதத்து - திருவடிகளில், பித்தவென வைதவர் சுந்தரர். சிலையால் மோதி - கல்லால் அடித்து. வில்லால் அடித்து எனினுமாம். கல்லால் அடித்தவர் சாக்கிய நாயனார்; வில்லால் அடித்தவன் அருச்சுனன். அரந்தை இல் - துன்பமில்லாத. ௫. அளி - வண்டுகள். எம்மூர்மான் - எமது ஊரிலுள்ளமான்; மானைப் போன்ற பெண். எளியார் - எளிமையுள்ளவர்கள்.

நேரிசைவெண்பா

மேதகைய வில்லிறைவன் வில்லிளவல் வல்வீரர்
காதனிக மற்றுங் கருதெவையும்—பாதத்
தொருவிரலாம் வெங்கையர னென்றுமை யாசைப்
பருவரலாற் காணப் படும். (௬)

மடக்கு தாழிசை

படுமத்தமிழுக் குவந்தவிறை விடுமத்தமிழுக் குவந்தவிறை
பண்டங்கரிய வடிவாமன் கண்டங்கரிய வடிவாமன்
சடையற்படுமம் புயனிசையான் றொடையற்படுமம் புயனிசையான்
சம்புவனமாக் குணர்வாகனம்புவனமாக் குணர்வாகன்
கடலேக்கலக்கு மலேவில்லா னுடலேக்கலக்கு மலேவில்லான்
கங்கைப்பதியன் பரையானென் வெங்கைப்பதியன் பரையானன்
அடலேப்புரத்தங் கணேயெய்தா னுடலேப்புரத்தங் கணேயெய்தான்
அன்பினிகழ வணங்கீரே துன்பினிகழ வணங்கீரே. (௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கீற்றுப் பிறையை யணிந்ததிரு வெங்கை விருத்த கிரிநாதன்
ஆற்றுப் பொருளேக் குளத்திலொரு புலவர்க் களித்தன் றருளினேன்
சோற்றுத்துறையுந் திருநெய்த்தா னமுமீங் குடையான் சுழலாமல்
தோற்றுப் பசிநோய் தொலேப்பனவன் றனேயே துதியீர் புலவீரே. (௮)

அம்மானை. மடக்கு. கலித்தாழிசை

புண்ணியனம் வெங்கைப் புனிதனயன் மாலெதிரே
அண்ணலரும் பேரொளியா யன்றெழுந்தா னம்மானே
அண்ணலரும் பேரொளியா யன்றெழுந்தா னுமாகில்
கண்ணி லவரெளிதிற் காணுரோ வம்மானே
கண்ணின்றிக் காணுங் கதிரொளிகா ணம்மானே. (௯)

---

௬. வில்லிறைவன் - இராமன். வில்லிளவல் - இலட்சுமணன். காதனிகம் - கொலே செய்கிற படை. ஒருவிரலாம் - ஒருவிரலால் அடக்கியவன். பருவரல்-துன்பம். ௭. படும்-நிறைந்த. இழுக்குவந்த-தவறு பொருந்திய. இறை-விடையும். விடும்-நீங்கிய. உவந்த இறை-விரும்பிய இறைவர். பண்தங்கு-குணம் பொருந்திய. சம்பு-நரி. வனமா-அழகிய குதிரை. அம்புவனம் ஆக்கு-அழகிய உலகங்களேப் படைக்கிற. உணர்வு ஆகன் - ஞானவடிவன். உடலேக்கலக்கு மலேவு இல்லான் - உடலேக் கலங்கச் செய்கிற மயக்கமில்லாதவன். பரையானன் - பராசத்தியாகவும் விளங்குபவன். வணங்கீர் - வணங்குவீர்களாக. அணங்கீர் - வருந்துதலடைய மாட்டீர். ௮. ஆற்றுப்பொருள் - மணிமுத்தாநதியிலிட்ட பொருள். குளத்தில் - திருவாரூர்க் கமலாலய தடாகத்தில். ஒருபுலவர் - சுந்தரர். சோற்றுத்துறை - திருச்சோற்றுத் துறை என்னுஞ் சிவப்பதி; திருநெய்த்தானம் - திருநெய்த்தானம் என்னுஞ் சிவப்பதி. சுழலாமல் - எங்கும் போய் அலேயாமல். ௯. அயன் - நான்முகன். மால் - திருமால்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அம்புமே லிருக்கு நாரி யடற்சிலை கொண்ட வெங்கை
எம்பிரா னெடும்பார் செய்வ னென்றுதன் னிதயத் தெண்ணி
அம்பின்மே லிருக்கு நாரி யருஞ்சிலை கரங்கொண் டுற்றேன்
எம்பெரு வமுதன் னானை யென்செயா னுலகிற் றனே. (க0)

கலிநிலைத்துறை

தாமங் கமழு மொய்ம்புடை யன்பர் தமியேன்வெங்
காமங் கனலு மனமொடு துன்பக் கடல்வீழ
ஏமங் கருதிச் சென்றன ளுமையன் றிதுகொண்டோ
வாமங் கலவெங் கைப்பர னேடொன் றுனளே. (கக)

கலிவிருத்தம்

ஆயிழை மகளிர்வா ழகங்க டோறுமுன்
நீயிரும் பலிகொள நினைந்து வெங்கையில்
தூயநின் சடையினிற் சோமன் சுற்றியே
ஏயினை வெற்றரை யாகி யென்னையே. (கஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

என்றனை முகத்தின் வென்று ளிவளெனும் பகையுட் கொண்டோ
பின்றலி லன்ப ரென்று பிரிவரென் றிருந்து வெங்கை
மின்றிகழ் சடிலத் தண்ணன் மேவலர் போல்வெண் டிங்காள்
வன்றுய ருழக்க வென்மேன் மலிதழல் சொரியும் வாறே. (கங)

மேற்படிவேறு

வாசக் கமல மலர்த்திருவே மயிலே யென்கண் மணியேநின்
ஆசைக் குமுத மலர்வாயி னமுதம் பெறுதற் கரிதாயோ
ஓசைக் கடலைக் கடைந்துகடு வுமிழ விமையோ ரொடும்வெங்கை
ஈசற் கபய மபயமென விரிந்தான் மேனி கரிந்தானே. (கச)

---

க0. அம்பு - கணை. பெரு - பெறுதற்கரிய. சிவபெருமானுக்கு அம்பு திருமாலும் நாண் ஆதிசேடனுமாகலின் அம்புமேலிருக்கும் நாரி என்றும், காமனுக்கு அம்பு மலரும் நாண் வண்டுமாகலின் அம்பின் மேலிருக்கும் நாரி என்றும் முரண்பட விதந்தபடி. கக. தாமம் - மாலை. மொய்ம்பு - தோள். கனலும்-வெதுப்பும். ஏமம்-பொன். வாமம்- இடப்பாகம். கஉ. ஆயிழை - ஆராய்ந்தெடுக்கப்பட்ட அணிகலன்கள். சோமன்-திங்கள்; ஆடை. ஏயினை -சென்றாய். கங. முகத்தில் வென்றாள்-முகத்தினால் தோற்கடித்தாள். பின்றலில் - மாறுதலில்லாத. மேவலர் - பகைவர். கச. வாசக்கமலம் - மணம்பொருந்திய தாமரை. கடுஉமிழ-நஞ்சை வெளிப்படுத்த. இரிந்தான் - ஓடினன். மேனி கரிந்தான் - திருமால்.

வண்ணம்

கன்றுக்கர மலராண்முக விந்துத்தவி சடைமீனிகர்
கண்டத்தணி மணிமாலையள் கயிலையங்கிரியார்
கங்கைச்சடை முடிநேடிய துங்கப்பற வையுநாடுறு
கஞ்சத்திரு வடியீதென நவில்சிலம்படியாள்
வென்றிச்சிலை மதன்வாள்களி னஞ்சைத்தட வுதல்போலமை
விஞ்சப்புனை விழியாளொளி பெருகுசெங்குழையாள்
விம்பப்பிறை யெனநீறிடு சந்தச்சிலை நுதலாடிரு
வெங்கைப்பழ மலைநாயகர் பவனிவந்திடவே
சென்றுற்றன டொழுதாளுமை தங்கப்படு புறநாடினள்
செஙகைக்கவி னுழையீதிவள் பயில்வதொன்றறியாள்
சிந்தித்தன ளொருமாதினி யிந்தப்புற முறமாறெழி
செங்கைக்கணு மிவரேகொளி னனிசிறந்திடுமே
என்றித்தகை பலகூறினள் கொங்கைச்சுவ டுறுமார்பினை
யின்பத்தொடு மெதிர்நாடின ளெனையணைந்தருளா
லிந்தப்படி தமியேன்முலை சந்தத்திரு மணிமார்பழ
செஞ்சப்படு கிலர்பாரென மதிமயங்கினளே.(க௫)

நேரிசையாசிரியப்பா

மதிநுதற் பவள வாய்க்கருந் தடங்கட்
குவிமுலைப் பசும்பொற் கொடிதனை யமையாக்
காதன்மீ தூரக் கலவிசெய் திடுவான்
புகும்பொழு தவளொரு பொருளமையுட் கிடப்பப்
படர்முதிர் வேனிற் பகற்கொடு பாலை
நிலத்துநீர் வேட்டோ னீரரி தினிற்பெற்
றுண்புழி யுண்ணு தொல்லையிற் றடுக்குஞ்
செயலென வெனைநீ தீண்டே லென்று
நின்மே லாணை நிகழ்த்திட நீங்கிப்
புணரியுண் டெழுந்த புயனிகர் வளர்குழல்
அஃதுணு முகில்போன் றழகுறுங் காறுந்
தீண்டா தொருபூஞ் சேக்கையிற் றுயின்று
மாறு வன்பு வளர்மனத் தவனே
மிளிர்தரு தூர்த்த வேடமா தவனாய்

க௫. கன்று - வளையணிந்த, கன்றிய. முகஇந்து - முகமாகிய திங்கள். கஞ்சத் திருவடி - தாமரை மலரைப்போன்ற திருவடி. விஞ்ச - மிகவும். பிறை விம்பம் - பிறைவடிவம். க௬. அமையா - அளவு படாத. உண்புழி - உண்ணும் பொழுது. ஒல்லை - விரைவு. புணரி - கடல். புயல் - முகில். சேக்கை - படுக்கை. தூர்த்த வேடம் - காமப்பித்தேறிய கோலம். ஒன்னலர் - பகைவர். கரந்து - ஒளித்து. அடியவன் - மானக்கஞ்சாற நாயனார். செந்நீர் - குருதி. சரம் - அம்பு

நீமுன் கற்பு நீங்கா மாதைத்
தருகெனக் கொடுத்துத் தனபெருங் கிளைஞர்
மானமீக் கூர வந்தனர் சூழ
ஒன்னலர் போல வுடன்றவர்ப் படுத்துக்
கரையில்பே ருவகைக் கடல்படிந் தவனே
திருமணக் கோலஞ் செய்துவீற் றிருந்த
அருமகள் கூந்த லையநின் னுருவங்
கரந்துசென் றிரப்பக் களித்தக மணப்பூம்
பந்தரிற் கிளைஞர் பலருங் காண
அரிந்து கொடுத்த வடியவன் றானே
நின்னொரு விழிசெந் நீர்கொளக் கலங்கித்
தன்னொரு விழிவெஞ் சரத்தினு லிடந்து
சாத்தி மற்றைத் தடங்கணவ் வகைபெற
இன்னமுண் டொருக ணென்றுளங் களித்து
மற்றதுங் களைவான் வாளிநட் டவனே
மருவலன் புணர்ப்பான் மாய்ப்பமெய்த் தவன்போல்
வந்தனன் படையான் மார்பிடைத் தாக்கக்
கண்டுட் கடைத்தலைக் காவல னொருவன்
வெகுண்டவற் றுணிப்பான் விரைந்துசென் றெய்த
ஆணையாற் றடுத்த வரச ரேறே
பொருகளத் தொட்டலன் புனைநுத லீறு
கண்டுனைப் போலக் கருதிமற் றவனைத்
தன்படை சாய்த்தவன் றன்படை மார்பில்
தாக்கக் கொடுத்த தளர்விலன் பினனே
அருஞ்சிறு மகனை யரிந்துநிற் கட்டுப்
படைத்துக் களிகூர் பரிவுடை யவனே
நின்சின கரத்து நீக்குபூ மோந்த
மாதுமூக் கரிந்த மலிபெருந் தவனே
துணுக்கென வவள்கை துணித்தகொற் றவனே
சந்தன மாகச் சாத்தநின் றனக்கு
முன்கை தேய்த்து முகமலர்ந் தவனே
செயற்கருஞ் செய்கை செய்தவன் யார்கொல்
பகருதி வெங்கைப் பழமலை நாத
பராபர முக்கட் பகவசங் கரசிவ

---

**இடந்து** - தோண்டி. வாளிநட்டவன் - கண்ணப்ப நாயனார். **புணர்ப்பு** - வஞ்சனை. வந்தனன் - முத்தி நாதன். காவலன் ஒருவன் - **தத்தன்**. **அரசர்ஏறு** - மெய்ப்பொருணாயனார். பொருகளம் - **போர்க்களம்**. **ஒட்டலன்** - **பகைவன்**. தளர்விலன்பினன்-ஏனாதிநாத நாயனார். **அட்டு**- சமைத்து. பரிவுடையவன் - சிறுத்தொண்ட நாயனார். **சினகரம்** - **கோயில்**. மலிபெருந்தவன் - செருத்துணை நாயனார். **துணித்த**

கருணா கரதிருக் கயிலை நாயக
என்றருந் தவர்க ளேத்தும்
பின்றிகழ் சடிலப் பெருந்தகை யோனே. (கசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பெருந்தகைமை தனக்கன்றி மற்றையபூ
வினுக்கிலையென் பெற்றி யன்றோ
திருந்துதட மதிற்குவளை குமுதமொரோ
ருறுப்பினையே சிவண நிற்ப
முருந்துநகை யுமைகணவன் றிருவெங்கை
யனையாயுன் முகம்பொற் ருள்கை
புரைந்திடுதற் கரவிந்த மொருதாளி
னின்றுதவம் புரித ருனே. (கஎ)

தாழிசை

தாரம விருந்தாரெனை யாளாம லிருந்தார்
தனிவெங்கையை யுள்ளார்மய றவிரும்படி யுள்ளார்
சீராரிசை வண்டேயொழி கிலவேள்கர வண்டே
செறிகின்றிலை குருகேதுய ரறிகின்றிலை குருகே
வாராய்மட மயிலேமிகு தாய்மார்சொலு மயிலே
வானூடெழு மதியேயெனை முனியாதருண் மதியே
ஊரார்புகல் வம்பேயென விழியோவில வம்பே
யுரையாயவ ருழையேயென தகலாவிட ருழையே. (கஅ)

வஞ்சிவிருத்தம்

உழையென வெங்கை யுவப்பானுர்
தழலுரு வென்ற தரத்தாலோ
விழவெமை யின்று வெதுப்பாமே
எழுமதி யொன்றை யெடுத்தாரே. (ககூ)

நேரிசை வெண்பா

எடுக்குமான் வெங்கையிறை யேந்திழாய் நின்னெஞ்
சடுக்குமால் பங்கினள்கே ளாமல்—கெடுக்கவே

---

கொற்றவன் - கழற்சிங்க நாயனுர். முகமலர்ந்தவன் - மூர்த்தி நாயனுர். கஎ. பெற்றி - பெருமை. சிவண - பொருந்த. முருந்து நகை - மயிலிறகின் அடிபோன்ற பல். புரைந்திடுதற்கு - ஒப்பாதற்கு. அரவிந்தம் - செந்தாமரை. கஅ. இரும்தார் - பெரியமாலை. உள்ளார் - உடையவர்; எண்ணுதவர். குருகு - வளையல்; நாரை. அயிலே - வேலுக்கு நிகரே. மதி - திங்கள்; என்னைமதிப்பாயாக. வம்பு - வம்புமொழி. ஓவில அம்பு - கண்ணீர் ஒழியவில்லை. உழை - இடம்; மான். ககூ. உழை - இடம். தழல்உரு - தீவடிவம். தரம் - தன்மை. வெதுப்புதல் - சுடுதல். எடுத்தார் - தாங்கினுர். உ0. எடுக்குமான் -

காதின் மறையாய்நின் கண்போன்ற தாதலால்
ஓதுஞ் செயல்பா ருவந்து. (௨0)

கட்டளைக் கலித்துறை

துன்னுரை வென்ற சிலையாளர் வெங்கைச் சுடர்க்கிரிமேல்
என்னுவி கொள்ள வரிப்புள்ளி மானுக் கெளிதன்றென்றே
பொன்னூர் சுணங்குப் புகர்முக வேழம் புயனுணங்கும்
மின்னு மருங்கு லணங்கே தடாமல் விடுத்ததுவே. (௨௧)

நேரிசை வெண்பா

வேலைக் கடுவயின்ற வெங்கையர னரிவட்குச்
சாலத் திருமறுகிற் றந்துபோம்—மாலிப்
பெருமையாற் போக்கும் பிணியோ வவர்த்தாழ்த்
தருமையாற் போக்கு மது. (௨௨)

புயவகுப்பு

அந்தி யொடுமாறு பட்டுத் திகழ்ந்தன
வன்று தமிழ்மூவர் வைப்பச் சுமந்தன
புந்தி மகிழ்மாது கட்டக் குழைந்தன
புண்ட ரிகமாலை யுற்றுக் கிடந்தன
நந்து தலைமாலை யிட்டுச் சிறந்தன
நன்றி மறைநாலு மற்பிற் புகழ்ந்தன
விந்த மகமேரு வொப்பக் கிளர்ந்தன
வெங்கை புரிநாதர் வெற்றிப் புயங்களே. (௨௩)

கலிநிலைத்துறை

புயலே யுனையங் கெதிர்கண் டிடுமப் பொழுதேவன்
குயிலே யனையா ளென்வர வினைநீ கூறுங்கால்
மயிலே யனையாள் பழமலை வெங்கை வளமன்னன்
வெயிலே யிழையா ணின்பகை நிற்றாழ் விப்பாளே. (௨௪)

---

கையிலேந்தியமான். அடுக்கும்மால் - பொருந்திய காமநோய். பங்கினன் - உமையவள். ௨௧. துன்னுரை - பகைவர்களாகிய முப்புர அசுரர்களை. ஆவி - உயிர். பொன்னூர் சுணங்கு - பொன் போன்ற தேமல். தடாமல் - தடுக்காமல். ௨௨. வேலைக் கடுவயின்ற - கடலில் தோன்றிய நஞ்சை புண்ட. பெருமை - பெரிய ஆடு ௨௩. அந்தி - மாலை. மாது - உமையவள். கட்ட - தழுவ. புண்டரிகம் - தாமரை. அற்பில் - அன்பில். விந்தம் - விந்தமலை. மகமேரு - மேருமலை. கிளர்ந்தன - சிறந்து விளங்கின. ௨௪. வெயில்ஏய் - ஒளி பொருந்திய. இழையாள் - அணிகலன்களையுடையவள். நின்பகை - உன்பகையாகிய கூந்தலை. நின்தாழ்விப்பாள் - உன்னை வணங்கச் செய்வாள்.

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

விழியொன் றியநன் னுதற்பரமர்
வெங்கை விரும்பும் விமலேசர்
எழிலொன் றிரதக் காலிரதக்
காறெற் கெழுந்தே யோடுகினும்
பிழையொன் றிடினு மவர்வாளி
வாளி பிறழா தியான்புகலும்
மொழியொன் றகலே னுனையெனமுன்
மொழிந்தா ரென்னை யொழிந்தாரே. (௨௫)

எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

ஒழியாத னங்க வொருகோடி வாளி
யுளவேனு மெய்தி யினியென்
விழியான வுன்னை யுருவில்லி யென்ன
வயலோர்கண் முன்செய் விமலன்
உழியான வெங்கை தனிலேநின் மாது
முருவில்லி யென்று நினையே
பழியாட வின்று செயுமன்பர் வந்த
படியா லொழிந்த பயமே. (௨௬)

கலிவிருத்தம்

பரவும் வெங்கைப் பழமலை நாட்டுளேன்
வெருவ வெந்தழல் வீசுகின் றுய்மதீ
பரிவி லாருனைப் பாம்பு கடிக்கநீ
மருவு பெண்பழி மாற்றிட வல்லையோ. (௨௭)

கட்டளைக் கலித்துறை

வல்லெனு மாமுலைக் கோதைய ராசை மறந்தவர்க்கே
ஒல்லையி னீகுவன் கம்புமுன் னுழி யுடையன்றங்கை

---

௨௫. இரதக்கால் - கதிரவனது தேருருளை. வாளி வாளி - சிவபிரானுடைய பாணமாகிய திருமாலின் (இராம பிரானின்) அம்பு. விமலேசர் எழிலொன்றிரதக்கால் என்றது சிவபிரான் கொண்டருளிய பூமியாகிய தேரின் உருளையாகிய கதிரவனை; பின்னர் இரதக்கால் என்றது அக்கதிரவனுடைய தேரின் உருளையை. வாளிவாளி என்றது அப்பெருமானுடைய பாணமாகிய திருமாலின் பாணத்தை. எனவே, என்றும் முறையாகக் கிழக்கே தோன்றி மேற்கே யோடுங்கதிரவனுடைய தேருருளை தெய்வகதியால் அங்ஙிலைமாறி தெற்கே தோன்றி வடக்கே யோடினும், சுட்டிவிடப் பட்டாரைத் தப்பாது கொன்றே மீளும் அத்திருமாலின்கணை தவறுதலடையினும் அக்காலத்தும் என்மொழி பிறழாதெனத் தலைமகன் இசைத்தான் என்க. ௨௬. அனங்க - காமனே! எய்தி - எய்வாயாக. உழி - இடம். பழியாட - பழிகூற. ௨௭. பரவும் - போற்றும். வெருவ - அஞ்ச. மதீ - திங்களே! பரிவு - அன்பு. மருவு - பொருந்திய. ௨௮. வல் -

நெல்விரு நாழி கொளக்கொடுத் தோனெடு வான்கதிரின்
பல்லுக மோதிய வெங்கைப் பிரான்றன் பதாம்புயமே. (உஅ)

சம்பிரதம். எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

பலவரைகள் கரத்தடக்கிக் காட்டுவோ நீர்
பார்ப்பவரே கங்கடலை யருந்து வோநாம்
இலகுறநும் மனையிடத்தி னுலோக மெல்லா
மிக்கணமே காட்டிடுவோ முலகி லெண்ணில்
கலையறிவோ மொருகாலும் பொய்ம்மைபகர்ந் தறியோங்
கண்ணனென னுமவன்வாயின் மண்விழுமுன் னருளால்
அலையிலெழுங் கடுமிடற்றி னடக்கு மீச
னமர்ந்ததிரு வெங்கையினின் றடைந்து ளோமே. (உக)

நேரிசை வெண்பா

மேகத்தை யொத்துவளர் மென்குழலைச் சார்ந்திலநின்
ஆகத்தை யொத்துவள ரந்திதனில்—வேகத்து
வேளிக் குவளையுமே வெங்கையம லாபடுமே
வாளிக் குவளையுமே வந்து. (௩0)

கைக்கிளை. மருட்பா

வம்புலவு மீர்ங்கோதை வாடுகின்ற தென்மனம்போல்
அம்புவியிற் றேய்ந்த வடித்தா மரையதனுல்
செங்கமலை பேதையாச் செய்யு மடந்தையிவள்
வெங்கைநகர் மேவிய விமலன் திருவருளால்
விண்ணின் பெருமையும் வியனீர்
மண்ணின் சிறுமையு மறவரு மணங்கே. (௩க)

கட்டளைக் கலித்துறை

அற்போ டமரர் குழாம்போற்றும் வெங்கை யமலர்வெற்பில்
நற்போ தகமன்ன மன்னநின் காத னலமறியாள்
பொற்போ டரவுமிழ் செங்கேழ் மணியைப் புனத்தில்வெறுங்
கற்போ லெறிந்து சுகம்போக்கி நிற்கின்ற கன்னிகையே. (௩உ)

---

குநாடு கருவி. கம்பு - சங்கு. ஆழி - உருளைப்படை. கதிர்-கதிரவன். பல்லுக - பற்கள்சிந்த. பதாம்புயம் - திருவடித் தாமரை. உக. பலவரைகள் - பலமலைகள். இலகுற - விளங்க. உலோகம் - தாதுப் பொருள்கள். எண்ணில்கலை - அளவற்ற கலைகள். ௩0. ஆகத்தை - உடலை. வேள் இக்குவளையும் - காமனுடைய கரும்புவில் வளையும். ௩க. வம்பு - மணம். செங்கமலை - திருமகள். ௩உ. நற்போதகம் - நல்லயானை. பொற்பு - அழகு. செங்கேழ்மணி - செம்மையானநிறம் பொருந்திய பாம்புமணி.

வஞ்சித் துறை

கன்னனை டுஞ்சிலைவேள்
தன்னதி ருங்கணைபோ
தென்னநம் வங்கையுளாய்
மின்னைய ணைந்தருளே. (௧௩)

எழுசீர்க்கழிநெடிலடி வண்ண விருத்தம்

அருளாளர் வெங்கை புரமேவு கின்ற
வாருனை நம்பு கிளர் பால்
மருளா வயர்ந்து தமியே யனிருந்து
மறு வழிந்து விடவோ
பொருளா தாங்கொ டகறு யகன்ற
நெடு நா வணைந்து புகலாய்
உருளா விரைந்து திரைமோது கின்ற
வொழியா வளங்கொள் கடலே. (௧௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கடகரி நரம டங்கல் காலன்வெண் மதிய ரக்கன்
அடுமுய லகன்ப தை ப வடர்த்தனை பதத்தாற் கஞ்சன்
நடுமுடி கரத்திற் கொண்டாய் நகைத்துமுப் புரமெ ரித்தாய்
படைகள் கைக் கொண்ட தென்கொல் பகருதி வெங்கை யோனே. (௧௫)

கலிவிருத்தம்

வெங்கைப் பதிமே வியவித் தகநின்
துங்கப் படுதேர் மிசையே சுடர்கால்
தங்குற் றவியங் குறுதன் மையெவன்
நங்கட் கதியம் புதிநன் குறவே. (௧௬)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

நன்போது கொடுபுலவர் பரவுதிரு
வெங்கைபுர நாதர் நாட்டில்
முன்போத வறிவனைத்து முயிர்மதவே
ளெடுத்தசிலீ முகங்க டாக்கிப்

---

௧௩. கன்னல் - கரும்பு. போது - மலர். மின்னை - மின்னலை யொத்த பெண்ணை. ௧௪. மருளா - மருண்டு. அயர்ந்து - சோர்ந்து. ஆதரம் - அன்பு. உருளா - உருண்டு. ௧௫. கடகரி - மதயானை. நரமடங்கல் - நரசிங்கம். அடர்த்தனை - வருத்தினாய். கஞ்சன் - நான்முகன். ௧௬. துங்கப்படு - தூய்மை பொருந்திய. சுடர்கால் - ஞாயிறு திங்களாகிய உருளைகள். எவன் - என்ன காரணம். ௧௭. போது - மலர். முன்போத - முன்போக. சிலீமுகம் - கணை.

பின்போது மமயத்தோ வெமக்குமணி
வாய்மருந்து பெறவ ளிப்பீர்
பொன்போல வடிவுபடைத் திரும்புபோன்
மனம்படைத்த பொருவின் மாதே. (கஎ)

நேரிசை வெண்பா

பொன்னுண் கவினிமைக்கும் பூவையர்சொற் கண்கைவேன்
வின்னுண் கணைநிகர்க்கும் வெங்கைபுர—மன்னுமுன்
நீர்க்குப் பயந்தவடா னிநெருப்பா யன்றெழுந்த
சீர்க்குப் பயந்திலளோ செப்பு. (கஅ)

தழை.—கட்டளைக் கலித்துறை

செவ்வா யிளந்திரு நீதந்த மாந்தழை சீறடிக்கும்
ஒவ்வா தெனநினை யாதுகண் ணேடொற்றி யோதிவைத்தாள்
அவ்வா னவர்புக ழெம்மான் றிருவெங்கை யன்பமதன்
வெவ்வா ளிகள்விலக் காமருந் தாக வியந்தனளே. (கக)

நேரிசை வெண்பா

விழுமுருளு மேங்குமெழும் வெங்கைக்கோ விந்தா
எழுமதிய மென்னு மிரங்குந்—தொழுமிதழி
இன்று மரைக்க ணிராமா வருளெனுநீர்
தன்று மரைக்கண் டர. (௪0)

கட்டளைக் கலித்துறை

தடுத்திலே யைம்புல வேழங்க டம்மைத் தவநெறியில்
அடுத்திலே யன்ப ரினமே மருவி யவலரினம்
விடுத்திலே யெங்க டிருவெங்கை வாணர் விரைமலர்த்தாள்
எடுத்திலே நெஞ்சக மேவிடு மோநம் மெழுபிறப்பே. (௪க)

---

போதும் அமயத்தோ-உயிர்போகுஞ் சமயத்திலோ. பொன்போல வடிவு என்றான். காட்சிக் கினிமையாய் விருப்பஞ் செய்தலினால். இரும்பு போல் மனம்: என்றது காதல் வேட்கைக் கினிதினிசையாத வன்மை கருதி. பொருவு இல்-ஒப்பில்லாத. கஅ. பொன்-திருமகள். நாண்-நாணுமாறு. கவின் இமைக்கும்-அழகு விளங்கும். நீர்க்குப் பயந்தவள்-கம்பைநதி பெருகி வந்தபோது அஞ்சியவள். கக. இளந்திரு-தலைவி. ஓதி வைத்தாள்-கூந்தலி லணிந்தாள்; புகழ்ந்து வைத்தாள். ௪0 இதழ்-இதழ்களைய. இன்-இனிய. தாமரைக்கண் இராமா அருள் எனும். வெங்கைகோ-வெங்கைக்குத் தலைவரே! இந்தா—வாரும். கோ-கண்ணை. இந்தா-திங்களாக உடையவரே. ௪க. அடுத்திலே-செல்லவில்லை. அவலர் இனம்-கீழ்மக்கள் கூட்டம். எடுத்திலே-எடுத்துப் புகழவில்லை.

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

என்னடிகள் வெண்குறணே ரடியி ரண்டு
　　மென்றலையி லிருத்துமிறை வெங்கை நாட்டில்
முன்னடிக ளிரண்டுநெடி லடிகள் பின்னர்
　　முயங்கடிக ளிரண்டுநே ரடிக ளாகப்
பன்னடிக ளொருநான்கு கொடுந டக்கும்
　　பழுதகல்வெண் டுறைபோலப் படர்த லாலே
பின்னடிக ளெங்கடிரு வடிகண் முன்னர்ப்
　　பெயர்ந்தவடி யெழிலிளஞ்சே யடிக ளாமே. (௪௨)

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஆர ணங்களு மோத ரும்புக ழாளர் வெங்கைபு ரேசனூர்
பூர ணந்திரி யாது ணர்ந்திலர் போல வன்றுயர் கூடவே
வார ணங்கனி தானி ரும்பிடி வாயி னுங்குற வேகொடா
நேர ணைந்திடு கான கம்புகு நேயர் வந்திலர் மீளவே (௪௩)

### கட்டளைக் கலித்துறை

மீனக் கருங்கண்ணி வேள்கணை யாற்சிலை வேடர்வைத்த
கானக் கருங்கண்ணி மான்போற் பதைத்தனள் காரளிகள்
தேனக் கருங்கண்ணி யீந்தரு ளீர்திரு வெங்கைநகர்
மானக் கருங்கண்ணி மாறீர்ந் தவளுயிர் வாழ்வதற்கே. (௪௪)

### சித்து. எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வாளா யொளிர்கட் பொனணைந் திடுமான்
　　மாலா கவிளங் குறுபொன் னனையாள்
நீளா சையினுய்த் தகரும் பொனெலா
　　நிகழ்செம் பொனெனப் புரிசித் தர்பெறும்
ஆளா யவர்வெங் கையிருப் பமவ
　　ரருளப் பொடியா குமருந் துதனைக்
கேளா யெளிதா கவளித் திடுவேங்
　　கிளர்நம் பசிதீ ரவனம் படையே. (௪௫)

---

௪௨. என்னடிகள் - திருவள்ளுவர். ௪௩. எங்கள் திருவடிகள் - எங்களுடைய திருமகளைப் போன்ற பெண்ணினுடைய அடிகள். எழில் இளம் சேயடி - அழகிய இளைய தலைமகன் அடிகள். ௪௪. மீனக்கருங் கண்ணி - மீனைப் போன்ற கரிய கண்களையுடையவள். கரும்கண்ணி - பெரியவலை. தேன் நக்கு-தேனை நக்குகிற. அருங்கண்ணி-அரியமாலை. கரும் கண்ணி — கரிய கண்களையுடைய தலைவி. மால் - காம மயக்கம். ௪௫. பொன்னனையாள் - திருப்பூவணத்துப் பொன்னனையாள். கரும் பொன் - இரும்பு ஆள் - தொழில் புரிவோர்.

பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

படத்தினிற் பொதிந்த குடத்துவெள் ளெலும்பு
பரிந்துபெண் ணாக்கவு மறியா
பரவையிற் புணைபோன் மிதந்துவந் தணையப்
பருங்கல்பண் ணாக்கவு மறியா
வடுத்துல கனைத்தும் பரவுற மறைந்த
வரியகண் ணாக்கவு மறியா
அமலவென் கவிக ளடியனேன் மனத்தை
யளிந்தபுண் ணாக்கவே யறியும்
எடுத்தசங் கதனை விடுத்திவற் றெதனை
யெடுப்பமென் றரியுள மருள
விவர்ந்திடு மெகின்விட் டிவற்றெதை யூர்வ
மெனவயன் கருதுறக் குவளை
விடுத்திவற் றெதனைப் பறிப்பமென் றுசாவ
வின்மதன் பணிலம்வா லெகினம்
விரிந்ததண் குவளை பரந்தவொண் பழன
வெங்கைவா ழெங்கணா யகனே. (சக)

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

நாடா வுழைகள் புனநாடு நாணுஞ் சுகமுஞ் சுகமாகும்
ஆடா மயிலு மரவுணவுண் டாடு மரவு மெலியுண்ணும்
பீடார் கயிலை மலைப்பெருமான் பிரியா வெங்கை புரநாட்டில்
கோடா விதணிற் புனத்திருந்த கொடியார் சென்ற படியாலே. (சஎ)

மேற்படி வண்ணவிருத்தம்

படியறு சிம்புள தெழநீடும் பயமொடு மங்கரி யினமோடப்
பிடியொடு மங்கரி யினமோடப் பெருவரி வெம்புலி பொருகேழல்
மடிமயி ரெண்கதிர் திசையோடும் வனவழி வெங்கையி லுறுமீசர்
அடிதவிர் நெஞ்சக மெனநீளு மகலிரு ளிங்குற லயநீயே. (சஅ)

---

சக. படத்தினிற் பொதிந்த-துணியால் மூடப்பட்டிருந்த. பரவை-கடல். புணை-தெப்பம். பண்ணாக்கவும்-பண்பாகச் செய்யவும். அரியகண் ஆக்கவும்-அருமையான கண் மீண்டும் பார்வை பெறவும். எகின் - அன்னம். அரிஉளம் மருள-திருமால் மனம் மயங்க. சஎ. நாடா-வராத. உழைகள் - மான்கள்; சுகம் - கிளி. அரவுணவு - பாம்பாகிய உணவு. பீடார் - பெருமை பொருந்திய. கோடா - கோணுதலில்லாத. இதண்-பரண். கொடியார் - கொடிபோலும் இடையை உடையவர்; கொடியவர் என்னும் பொருளும் தொனிக்கிறது. சஅ. படி - ஒப்பு. சிம்புள் - சரபப்பறவை. அரி - சிங்கம். அம்கரி - அழகிய யானைகள். பொரு கேழல் - போர் செய்கிற பன்றி. மடிமயிர் எண்கு - மடிந்த மயிர்களையுடைய கரடி. அடிதவிர் நெஞ்சகம் - ஆணவ இருள் பொருந்திய மனம். அய - ஐய.

*நேரிசை வெண்பா*

நீத்தவினை யார்புகழும் வெங்கையோய் நின்னடியால்
தேய்த்த மதியைத் திரும்பநீ—வாய்த்தநறுந்
தேனணைக்குங் கொன்றைமுடி சேர்த்தி யழல்விக்க
யானுனக்குச் செய்தகுறை யேது. (௪௯)

*கட்டளைக் கலித்துறை*

ஏட விழுங்குவ ளைத்தாரிற் றேனெ டிசைச்சுரும்புங்
கூட விழுங்குவ வுத்தோட் டிருவெங்கைக் கோன்றுணையாங்
கேட விழுங்குவ ரிப்புன லுண்பவன் கேழ்மதியம்
வாட விழுங்குவ தெய்தாமை நான்செய்த வல்வினையே. (௫௦)

*கொச்சகக்கலிப்பா*

வல்லங்க மானமுலை மாதுமையா ளென்றனிணை
இல்லங்க மானநுத லின்பகையென் றவண்முனியச்
சொல்லங்க மீதிற் சுமப்பதென்கொ னீயிந்த
வில்லங்க மாம்பிறையை வெங்கை புரத்தரனே. (௫௧)

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்*

புரந்தரனு மரியயனும் பரவுபரன்
 றிருவெங்கை புரமே யன்னாள்
இருந்தரள வடம்புரளு மிளமுலைக
 ளோடாறு மெழுந்து யர்ந்து
வருந்தமரை மலர்த்தானூ லெனத்தினமுந்
 தேய்மருங்கை வருத்த நீருந்
திருந்துநெடுங் குழலிசைதல் வண்டினங்கா
 டகுதிகொலோ செப்பி டீரே. (௫௨)

*கலிநிலைத்துறை*

செங்கையில் வில்லே றிடுகணை யோடுஞ் சினவேளை
இங்குற வாவா வென்ன விருந்தே குயில்கூவ

---

௪௯. நீத்தவினையார் - வினைகளைப் போக்கியவர்கள். அழல்விக்க - கொளுத்துவிக்க. ௫௦ ஏடு - இதழ்கள். குவவு தோள் - திரண்ட தோள். கோன் - தலைவன். கேடு அவிழும் - குற்றம் நீங்கிய. கேழ் மதியம் - நிறம் பொருந்திய திங்கள். விழுங்குவது எய்தாமை - விழுங்குதலைச் செய்யாமை. ௫௧. வல்அங்கமான - சொக்கட்டான் காயின் உருவத்தைப் போன்ற. முனிய - சினக்க. வில்லங்கமாம் - துன்பந்தருவதான; வில்லின் வடிவத்தைப் போன்ற. ௫௨. புரந்தரன் - இந்திரன். அரி - திருமால். அயன் - நான்முகன். பரவு - போற்றுகிற. தரளவடம் - முத்துமாலை. மரைமலர்த்தாள் நூல் - தாமரைத்தாள் நூல். ௫௩. சினவேள் - சினத்தையுடைய காமன். மா - மரம். வடு -

மங்கையர் தானே மாவை வளர்த்தேன் வடுவுற்றேன்
வெங்கையின் மேவுங் கண்ணுத லாரும் வினவாரே. (௫௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வில்வளைத்தைங் கணைகொடுபோர்த் தொழில்புரிய
வரும்பொருவில் வீர வேளே
கல்வளைத்தன் றொருகணையான் முப்புரங்கண்
முருக்குபெருங் கழற்கால் வீரன்
பல்வளைத்தெண் புனற்பழன வெங்கையாண்
டகையொடுபோர் பயிலப் போதி
எல்வளைத்தண் டளிர்க்கையிளம் பெண்ணொடமர்
செயலாண்மைக் கியன்றி டாதே. (௫௪)

கலிவிருத்தம்

இந்து வந்து வெதிர்ப்ப விருந்தமிழ்
வந்து வந்து மலைப்பதை யின்றொடை
தந்து வந்து தவிக்கிலர் செய்க்கரை
நந்து வந்துமன் வெங்கையி னுதரே. (௫௫)

ஊசல். எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

நானக் குழலளிக ளெழுந்து பாட
நாதித் தணியசைய வாடி ரூசல்
பானற் கமலவயல் வெங்கை வாணர்
பதமுற் றிலர்பவமொத் தாடி ரூசல்
மானக் குமரருள மறுகி யாட
வாட்கட் புடைபுரள வாடி ரூசல்
கூனற் பிறைவெயர்ப்ப வாடி ரூசல்
கோவைக் கனியிதழீ ராடி ரூசல். (௫௬)

கட்டளைக்கலித்துறை

ஊனாகி யைம்புலக் கூட்டங்க ளாகி யுழல்கரணந்
தானாகி வெவ்வுயி ராய்க்குண மாகித் தனியிருளாய்

குற்றம்; மாவடு என்னும் ஒரு பொருளுந் தொனிக்கின்றது. ௫௪. பொருவில் - ஒப்பில்லாத. கல் - மேருமலை. முருக்குதல் - அழித்தல். வளை - சங்கு. தெண்புனல் - தெள்ளிய நீர். பழனம் - வயல். போர் பயில - போர் செய்ய. எல்வளை - ஒளிதங்கிய வளையல். ௫௫. இந்து - திங்கள். வெதிர்ப்ப - வருத்த. தமிழ் வந்து வந்து - தமிழ்நாடு பிறந்த தென்றற்காற்று வந்து. மலைப்பதை - வருத்துவதை. இன்தொடை தந்து - இனிய மாலையைக் கொடுத்து. செய்க்கரை - வயற்கரை. நந்து - சங்கு. மன்-பொருந்தும். ௫௬. நானக்குழல் - கத்தூரிச் சாந்து தடவப் பெற்ற கூந்தல். நாதித்து - ஒலித்து. அணி - அணிகலன். பானல் - கருங்குவளை. ௫௭. ஊன் - உடம்பு. கரணம்-

நாணாகி நல்லருட் சத்தியு மாகி நலத்தவெங்கைக்
கோனாகி மற்றொன்று மாகா திருப்பக்கை கூடியதே. (௫௭)

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கூடற் பதியிற் சமணிருளைக் குலைத்துத்
திருவெண் ணீற்றொளி
கொடுத்துக் கருத்திற் குடிபுகுந்தென் குலத்தைத்
தொழும்பு கொளுங்கோவும்
ஆடற் பரியிற் சேரமா னணையக்
கயிலைக் கிரிமீதி
லானைக் கழுத்தி லிவர்ந்தணையு மரசுந்
திருநா வுக்கரசும்
நாடப் பசும்பொன் னிடைப்பதித்த நாக
மணியிற் றமதுதமிழ்
நாட்டப் படுநின் றனதுதிரு நாமத்
தினைப்புன் மதியாலென்
பாடற் பதிப்ப திரும்பிலதைப் பதிக்குந்
தகைமை போலுங்காண்
பதியாய் வெங்கைப் பதியாளும் பகராக்
கருணைப் பெருமானே. (௫௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

மாறு மலமொன் பதுவாயும் வழியு முடலை யுடலமிக
நாறு வகைநன் மணந்திமிரு நடலைக் கபட மாதர்தமைப்
பேறு நினைந்து கடலமுதே பிணையே மயிலே யெனப்பிதற்றித்
தேறு வெனையுந் தனைத்துதிக்கச் செயுமோ வெங்கைச் சிவன்றுனே. ()

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

சிவனாலு மறையாலு முணர்வி னாலுந்
தெரியாத பரன்வெங்கை யரசன் றன்மா
தவனாலு மயனாலு மலரி யாலுஞ்
சசியாலுங் குருவாலு மமரர் கோவாம்
அவனாலுங் குகனாலு முனிவ ராலு
மரவாலுஞ் சுரராலும் புலவ ராலும்
எவராலும் வெலற்கருமைம் புலன்கள் வென்ற
வெழிலடியார் பெருமைதனை யியம்பொ ணாதே. (௬௰)

---

அந்தக் கரணம். ௫௮. தொழும்பு கொளுங்கோ - அடிமை கொள்ளுந் தெய்வமாகிய திருஞான சம்பந்தர். ஆனைக் கழுத்தில் இவர்ந்தணையும் அரசு - சுந்தரர். தகைமை - தன்மை. ௫௯. பேறு - பெறற்கரிய பேறாக. பிணை - பெண்மான். தேறு - அறிவு தெளிவடையாத. ௬௰. சிவகாலுமறை - மங்கலம் பொருந்திய நான்மறைகள். அலரி - கதிரவன். சசி - திங்கள். குரு - பிரகற்பதி. குகன் - முருகன்,

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தேக்குறு கருணைப் பெரியநா யகிதன்
    றிருமுலை சுரந்தபான் மதுர
வாக்குறு மழகன் ஞானசம் பந்த
    வள்ளலுண் டிடவவன் கடைவாய்ப்
போக்குற வொழுகுந் திவலையோன் றடியேன்
    புண்ணிய வசத்தினுற் கிடைப்பில்
தாக்குறு புலன்வென் றுன்னடி யவருட்
    டங்குவன் வெங்கைகா வலனே. (கக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வருமதன் கொடிய னென்பாள் வரிக்குயிற் காற்றே னென்பாள்
குருமதி முனியே லுன்னைக் கும்பிடு கின்றே னென்பாள்
ஒருவரும் வெங்கை யீசற் குரைப்பவ ரிலையோ வென்பாள்
முருகல ரணைதீ தென்பாண் மொய்குழன் மையல் கொண்டே. (கஉ)

கலி. எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கொண்டறவழ் மணிமாட மலிந்த வெங்கைக்
    கோவிடங்கொள் பெரியநா யகியெம் மன்னை
தண்டரள நகையுமையாள் கருணை தன்னாற்
    றாலத்து வந்தகுருக் கனியுட் கொண்டு
கண்டவர்க ளதிசயிப்பப் பரமா னந்தக்
    களிப்படைந்து கரணமுடல் புலன்க ளெல்லாம்
உண்டெனவு மிலையெனவு முணர்ந்தி டாம
    லுணர்வுகடந் திருக்கின்ற களியர் யாமே. (கங)

நேரிசை வெண்பா

யாமேபோய் வெங்கை யிறைவன்பான் மெல்லியலீர்
மாமேவுந் தண்மாலை வாங்குவோம்—பூமேவும்
அன்னத்தாற் காண்டற் கரியவனைத் தூதுவிடும்
அன்னத்தாற் காண்டற் கரிது. (கச)

---

கூக. தேக்குறு - நிறைந்த. மதுர வாக்கு - இனிய வாக்கு. போக்குற - போக. திவலை - துளி. தாக்குறு - தாக்கி வருத்துதலைச் செய்கின்ற. கூஉ. குருமதி - நிறம் பொருந்திய திங்கள். முருகலர் அணை - மணம் பொருந்திய மலரணை. மொய் குழல் - நெருங்கிய கூந்தலையுடைய தலைவி; அன்மொழித் தொகை. கூங. கொண்டல் தவழ் - முகில்கள் தவழுகின்ற. கோ - தலைவனாகிய கடவுளது. தாலத்து - உலகத்தில்; பனைமரத்தில். குருக்கனி - குருவை; நிறமுள்ள கனி. கூச. மாமேவு - வண்டுகள் பொருந்தும். பூமேவும் அன்னம் - நான்முகன்.

கட்டளைக் கலித்துறை

அரியானை வேதன் றலையரி வானை யரியமறைப்
பரியானை யெங்க ளிடைப்பரி வானைப் பழுதில்வெங்கைப்
புரியானை யெவ்வுல கும்புரி வானைப் பொதுநடனந்
திரியானை யையங் கொளத்திரி வானைச் செறிகுவனே. (௯௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

செறியிதழ் வனசப் பொன்னிற் சிறந்தமா தினையு நீங்கிப்
பொறிவழி மறுத்து வெங்கை புரத்தனைப் பொருந்த நோக்கும்
அறிஞரு மிவளைக் கண்டோ மருந்தவப் பயனு மென்னும்
மறிவிழி யணங்கைக் கண்டு மறியுமோ மன்னர் கோவே. (௯௬)

நேரிசையாசிரியப்பா

கோதை தாழ்ந்த கொடிநிமிர் நெடுந்தேர்ப்
பரிதி வானவன் பரவையிற் படியக்
கடனிறக் கமலக் கட்பெருந் திருமால்
மார்பிடைக் குங்கும மட்டித் தாங்கு
குரைகடற் றுகிர்ப்பூங் கொடிபடர்ந் தென்னச்
செக்கர்வந் தெய்தத் தன்மனந் திரிந்து
மணந்தவர்த் தணந்த மாதர்வீழ்ந் திறப்ப
அமைத்த வழல்கொலோ வறைதி ரென்னுஞ்
சேண்விசும் பெழுந்த திங்க ணோக்கிக்
கருங்கடு வுமிழ்ந்த கடன்ம றித்தொரு
வெண்கடு வுமிழ்ந்த தெனவுளம் வெதும்பும்
மந்த மாருதம் வந்தழல் வீசுற
ஆற்ரு ளாகியவ் வளக்கரி னின்றெழும்
ஊழித் தீகொலென் றுன்னியே யயரும்
வேய்ங்குழல் காம வெவ்வழல் கொளுவ
ஊதுங் குழலென் றுரைத்தக நெகிழும்

---

௯௫. மறைப்பரியான் - மறைகளாகிய குதிரைகளையுடையவன். பரிவானை - அன்புடையவனை. புரியான்-ஊரையுடையவன். புரிவான் - படைப்பவன். திரியானை - மாறுபடாதவனை. திரிவானை - தெருவில் திரிந்தவனை. ௯௬. செறி - நெருங்கிய. வனசப்பொன் - தாமரை மலரில் எழுந்தருளிய திருமகள். மறுத்து - தடைசெய்து. மறிவிழி - மான்போன்ற கண். மறியுமோ-திரும்புவார்களோ? ௯௭. கோதை- மாலைகள். பரிதி வானவன்-கதிரவன். பரவை - கடல். மட்டித்தாங்கு - பூசினாற்போல. குரைகடல்-ஒலிக்கின்ற கடல். துகிர்-பவழம். செக்கர்- செவ்வானம். மணந்தவர் - கலந்தவர். தணந்த - பிரிந்த. அமைத்த - மூட்டிய. சேண்விசும்பு - தொலைவான விண். அழல் - தீ. கருங்கடு - கரியநஞ்சு. மறித்து - திரும்பவும். வெண்கடு - வெண்நஞ்சு. வெதும்பும் - வருந்துவாள். மந்தமாருதம் - இளந்தென்றல். அளக்கர் - கடல். உன்னி - எண்ணி. அயரும்-சோர்வாள். வேய்ங்குழல்-புல்லாங்குழல். கொளுவ-கொளுத்த. ஊதுங்குழல் - நெருப்பூதுங்குழல். நெகிழும் -

மென்மல ரமளி மேல்விழும் புரளும்
அசைந்தெழு முயிர்க்கு மந்தோ வென்னும்
ஒள்ளிதழ் குவித்துயிர்ப் புமிழ்ந்திடு மவிழ்ந்த
கருங்குழல் வாமக் கரங்கொடு செருகித்
தனிப்பொற் றூணிற் சாய்ந்திடும் பனிநீர்
சந்தனக் கலவை தண்ணறுங் கோதை
தரள வடங்க டரிப்பவந் திறைஞ்சும்
பாங்கியர்ச் சுளிந்து பறித்தவை யெறியும்
மழவிடை மீதில் வந்துநீ யுலாவக்
கண்டுநின் னழகுணுங் கருங்கட் பூங்கொடி
விரைமலர்ப் பொழில்சூழ் வெங்கை காவல
பொன்னவிர் புரிசடைப் புனித
மன்னவ வவணோய் மருந்துநின் புயமே. (௧௭)

### எண்சீர்க்கழிநெடிலடி வண்ணவிருத்தம்

புரளுந்திரை யெறியுங்குரை கடலும்பகை தமிழோன்
பொதியம்பகை மதியம்பகை மதனன்பகை முலைசேர்
தரளம்பகை பனையன்றில்கள் பகையங்குயில் பகையே
தமரும்பகை யனையும்பகை சகியும்பகை நகர்வாழ்
திரளும்பகை மலர்சிந்திய வணையும்பகை பனிநீர்
திமிருங்குளிர் களபம்பகை யெனிலென்செய வடியேன்
அருளுஞ்சுக மருள்கின்றிலர் பெயர்சங்கர ரெனவே
யணிவெங்கையி லமர்கின்றவ ரதுமென்குறை யனமே. (௧அ)

### நேரிசை வெண்பா

அந்துவா வென்று மறையே னினைத்தவர்க்கு
வந்துவா வென்று மருவல்போல்—இந்துவாழ்
என்றைக் கடுக்கு மிருஞ்சடைசேர் வெங்கையோய்
என்றைக் கடுக்கு மிதம். (௧௯)

---

குழைவாள். அமளி - படுக்கை. உயிர்க்கும்-பெருமூச்சுவிடும். வாமக் கரம் - இடதுகை. தரளவடம் - முத்துமாலை. சுளிந்து-சினந்து. மழ விடை-இளங்காளை. விரை மலர் - மணம் பொருந்திய மலர். பொன் அவிர் - பொன் போல் விளங்கும். அவள் நோய் - அம்மங்கையின் காம நோய். ௧அ. தமிழோன்—அகத்தியன். பனையன்றில்கள்—பனையில் வாழும் அன்றிற் பறவைகள். தமர் - உறவினர். அனை - அன்னை. சகி - தோழி. திரள் - மக்கள் கூட்டம். திமிரும் - பூசும். சங்கரர் - இன்பத்தைச் செய்பவர். இன்பஞ் செய்பவரென்னும் பெயர் தாங்கியவரா யிருந்தும் செய்கின்றாரில்லை யென்பது கருத்து. ௧௯. அம் - அழகிய. துவா-இரண்டு(சிவா). உவந்து-மகிழ்ந்து. இந்து - திங்கள். அடுக்கும்- உண்டாகும். இதம் - நன்மை.

வண்ணத்தாழிசை

இதயங்கலங்க வினையம்புகன்ற வொருவஞ்சகன்ற னுடனே
யெனையுந்துறந்து மனையுங்கடந்து தனியங்ககன்ற மகளே
மதியங்கிடந்த முடியன்றயங்கு திருவெங்கைவந்து நெடுநாள்
வரமுன்கிடந்து நினைமுன்பயந்த பயனின்றுகண்ட திருவோ
புதிதங்கிலங்கு மணியன்றிநைந்த சுடரொன்றிருந்த மனையே
புகவெம்புகின்ற வடிவம்பரந்த தழல்வெஞ் சுரஞ்செல் வுறுமோ
வதனம்பொலிந்த குமுதம்புலர்ந்து விடிலங்கிருந்த முவளோ
மகள்சென்று முய்ந்திவ் வளவும்புலம்பு மனம்வல்லிரும்பின் வலிதே.

ஆசிரியத்தாழிசை

வலிய வடியேன் மனத்துவந் தெய்தினன்
மலியு மமுதுணும் வானவர் தேடியே
மெலிய வணுகலா வெங்கையி லீசனே. (எக)

பன்னிருசீர்க்கழிநெடிலடி வண்ணவிருத்தம்

ஈதற மன்று தனித்தே யானுறு கின்ற தலத்தே
ஏகினை என்கை பிடித்தே யேதமி தெங்கள் குடிக்கே
மீதுறு கொன்றை மணத்தால் வேணியி லிந்து வுருப்போல்
வீறுகிர் கொங்கை யுறுத்தால் வேல்விழி முந்து சிவத்தால்
கோதித ழின்று வெளுத்தாற் கோளனை கண்டு கறுப்பாள்
கோதையர் வம்பு தொடுப்பார் கோடுர மஞ்ச ணிறத்தால்
மாதுமை கண்டு கொதிப்பாண் மாபுகழ் வெங்கை புரத்தோய்
மாறுவை யன்பு பினைத்தான் மாழ்குவ னென்று மிளைத்தே. ( )

கட்டளைக் கலித்துறை

இளையா திடைமென் முலைசுமந் தேயம் முலையுமின்னங்
கிளையா வுயிருண் டிடவறி யாவிரு கெண்டைகளும்
முளையா நகையிவண் மேல்வெங்கை வாணநின் மொய்ம்பிலன்றி
அளையா நறும்பொடி பட்டதன் றேமிகு மற்புதமே. (எ௨)

---

எ0. வினையம்புகன்ற-பணிமொழி கூறிய. மதியங்கிடந்த-திங்கள் தங்கிய. தயங்கு - விளங்குகிற. பயந்த-பெற்ற. தழல் வெஞ்சுரம் - தழலைப் போன்ற பாலைநிலம். வதனம் - முகம். உய்ந்து - உயிரோடிருந்து. எக. வலிய - தானாகவே. மலியும் - சுவை நிறைந்த. அணுகலா - நெருங்க முடியாத. எ௨. அறமன்று - அறமல்ல. ஏதம்-குற்றம். வேணியில் - சடையில். வீறுகிர் - பெருமை பொருந்திய நகம். உறுத்தால் - உறுத்தியிருப்பதால். இதழ்-அதரம். கோளனை-கொடிய தாய். கறுப்பாள் - சினப்பாள். வம்பு தொடுப்பார் - அலர்கூறுவார்கள். மாழ்குவன் - வருந்துவேன். எ௩. கிளையா-கிளைக்கவில்லை. கெண்டைகள்-கெண்டைகளைப் போன்ற விழிகள். மொய்ம்பு-தோள்.

*எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்*

அரவு முரிகளு மென்புமா லயனே
டமரர் தலைகளு முண்கபா லமுநீ
ஒருவி யறுவைபு னைந்துமா லிகைவா
ளுமிழு மணியணி சந்துமான் மதமே
மருவ வுருவில ணிந்துமா லையிலே
வருதி மலைதர வந்தநா யகிபோல்
வெருவி யிவளவை நிந்தியா ளல்ள்காண்
விமல வெழின்மிகு வெங்கைவாழ் பவனே. (எச)

*நேரிசை வெண்பா*

வாட்டுபவங் கொல்புகலி வண்புலவன் பேரின்ப
வீட்டுபவங் கொள்ளைகொள விட்ட நாள்—கேட்டுவரா
தெப்பிறப்பி லெங்ஙனிருந் தேதுபுரிந் தெய்த்தேனோ
ஒப்பிறப்பில் வெங்கையுடை யோய். (எரு)

*வண்ணக் கலித்துறை*

உடைய வினைகளை முடுகி யெனதுள மொன்றினேன்
அடைய வறிவெனு மறிவை யருளிடு மண்டர்கோன்
விடைய னரவணை துயிலு மரிதொழும் வெங்கையோன்
சடைய னுமையுறு புடைய னவனடி தஞ்சமே. (எசா)

*வண்ணத் தாழிசை*

தழுவி யணையினு றங்குதாய் தனையு மருகுநெ ருங்கியா
தரவி னொடுதுயில் கின்றமா தரையு மரிதின கன்றுபோய்
வழுவை யனையம றங்கொள்கா வலர்கள் பதறியெ ழுந்திடா
வகைபல் கடைகடி றந்துரு மறுகு தொறுமிக வந்துசூழ்
ஒழிவின் ஞமலியி ரைந்திடா துணவு சிதறிய ணங்குபோ
யுலவு மிருணிறை கங்குல்வா யுனது மருமமு யங்கவே
விழைவி னணையவ ணைந்திலாய் வெருவ விடுவத றங்கொலோ
விழும மகறிரு வெங்கைவாழ் விமல விதனைவி ளம்பிடே. (எஎ)

---

எச. உரிகள் - தோல்கள். கபாலம் - மண்டையோடு. ஒருவி - நீக்கி. அறுவை - ஆடை. சந்து - சந்தனம். மான்மதம் - கத்தூரி. வெருவி - அஞ்சி. எரு. வாட்டு - வருத்துகிற. பவம் - பிறவி. புகலி வண் புலவன் - திருஞானசம்பந்தர். வீட்டுபவம் - வீடு பேறு. எய்த்தேனோ-இளைத்தேனோ. ஒப்பு இறப்பு-ஒப்பும் இறப்பும். எசா. முடுகி-துரத்தி. அறிவெனும் அறிவை - அறிவே சிவமென்னும் அறிவை. விடையன் - காளையை உடையவன். அரவணை - பாம்புப் படுக்கை. புடையன் - இடப்பக்கத்தை யுடையவன். எஎ. ஆதரவினொடு - அன்போடு. அரிதில் - அருமையாக. வழுவையனைய மறங்கொள் - புலியைப்போன்ற வீரத்தைக்கொண்ட. கடைகள் திறந்து-கதவுகள் திறந்து. ஞமலி - நாய்கள். அணங்கு - பேய். மருமம் - மார்பு. விழைவின் - அவாவினால். அணைய-வர, வெருவ-அஞ்சுமாறு. விழுமம்-துன்பம்,

குறள்வெண் செந்துறை

விண்ட பூமுடி வெங்கை புரத்தனைக்
கண்ட மாதர் பெறுவது காமமே. (எஅ)

மதங்கு. எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

காவி கொண்ட களத்தர் வெங்கை புரத்தர் தங்கழல் பாடியே
வாவி கொண்ட மலர்ப்ப தங்கள் சிவப்ப வாடு மதங்கிதான்
நீவி கொண்டு முலைத்த டங்கண் மறைத்தி லாளெனி னிற்குமோ
ஆவி கொண்டிடு மிங்கி தற்குமு னென்று காளைய ரயர்வரே. (எகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அயன்கொளுங் கவின்கூர் வெங்கை
யமலன்றன் வரத்தா லன்றி
வியன்கொளுங் கவிஞன் மற்றோர்
மெல்லியல் சேர்வோ னன்றே
நயன்கொளுந் தவமென் செய்தா
ணகமக ளெனத்தன் காதல்
பயன்கொளும் படிப கர்ந்து
பரிகுவண் மாதர் மாதே. (அ0)

நேரிசை வெண்பா

மாதா வயிராமன் மற்றோர் பொருள்குறித்து
வேதா வறியாத வெங்கைபுரத்—தாதாவை
அப்பாவா வீட்டிற் கடியேன்சொற் கம்பெறவென்
றிப்பாவை கூறு மிரந்து. (அக)

கட்டளைக் கலித்துறை

இரவாம லொன்று மயலோ ரிடைச்சென் றிரப்பவர்க்குக்
கரவாம லென்று மிடரே புரியுங் கடும்புலனிற்
பரவாமல் வெங்கை புரிவாணற் கன்பறும் பாதகரை
விரவாம னின்றவர் தாமே பரகதி வேண்டினரே. (அஉ)

---

எஅ. விண்ட - மலர்ந்த. பூமுடி - பூவை முடிக்கும். எகூ. காவி கொண்ட - கருங்குவளை மலரையொத்த. களத்தர் - கழுத்தை யுடையவர். நீவி கொண்டு - ஆடையைக் கொண்டு. ஆவி - உயிர். அயர்வர் - சோர்வர். அ0. அயன்கொளும் - நான்முகன் மற்றைய நகரங்களைப் படைப்பதற்கு மாதிரியாகக் கொள்ளும். கவின் கூர் - அழகு பொருந்திய. நயன் - விருப்பம். நகமகள் - மலைமகள். அக. அயிராமல் - ஐயப்படாமல். வேதா - நான்முகன். சொர்க்கம் - வீடு பேறு; தனம். பாவை - பாவை போல்வாள். அஉ. கரவாமல் - ஒளிக்காமல். பரவாமல் - பொருந்தியிராமல். விரவாமல் - கலவாமல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வேண்டுவார் வேண்டியதே யீவா னென்னும்
வியன்றிருநா வுக்கரசின் மாற்றம் பொய்யோ
ஈண்டுவா வென்னைவலப் பாகந் தன்னி
லிருத்துகென நினைவேண்டி யொழியா மையல்
பூண்டுவார் விழிததும்பு புனலோ டொன்றும்
பொற்றொடிக்குந் திருவருள்செய் கின்றா யல்லை
நீண்டுவா னுலகளக்கும் பொழில்சூழ் வெங்கை
நிமலனே யெமையாளு மமரர் கோவே. (அக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கோபந் தோன்ற வதிர்ந்தெழுந்து கோக்க டொறுமின் வாள்வீசிச்
சாபந் தோன்ற வளைத்தொழியாச் சரமே பொழிந்து காரகிலின்
தூபந் தோன்று குழற்பகைதான் றோன்றிற் றிறைவன் றிருவெங்கைத்
தீபந் தோன்றும் புயனினைவைத் தீரா ரின்னும் வாராரே. (அ௨)

மேற்படி வேறு

வார்கொண்ட களப முலை யுமைகணவன்
திருவெங்கை மகிழ்ந்த தேவே
ஏர்கொண்ட வுனதுமா ணிக்கமலைக்
கருங்கொடியை யெரிப்ப தென்சொல்
கார்கொண்ட பசுங்காவின் மாவினிருந்
தெங்கணமர் கடிய வந்தப்
போர்கொண்ட மதவேள்வந் துறக்கூவுங்
கருங்குயிலைப் பொடித்தி டாதே. (அ௩)

கொச்சகக்கலிப்பா

பொடித்தமத னுயிர்படைத்துப் பொருவதுவும் வெவ்வரவங்
கடித்தமதி பிழைத்தனலங் கால்வதுவு மாமுனிவன்

---

அ௧. வியன் - வியக்கத்தக்க. "தூண்டு சுடரனைய சோதி கண்டாய்" என்னுந் திருத்தாண்டகம். மாற்றம்-மொழி. புனல்-கண்ணீர். அ௨. கோபம் - சினம்; பட்டுப்பூச்சி. கோக்கள் - திக்குகள்; பசுக்கள். மின் வாள் வீசு - மின்னலாகிய வாளை வீசி. சாபம் - அயலார் அலர் தூற்று; இந்திரவில். சரம் - அம்பு; நீர். தூபம் - புகை. குழற்பகை - முகில். புயல்நினைவு - கார்கால எண்ணம். அ௩. வார் - கச்சு. மாணிக்கமலை - இரத்தினகிரி யென்னும் வாட்போக்கி; இதில் பாலைக் கவிழ்த்த காகத்தை ஓர் இடையன் பொருட்டு இறைவன் எரித்தருளினார் என்பது தலபுராண வரலாறு. கொடி - காக்கை. அமர்கடிய - போரில் வருத்த. வந்துற - வருமாறு. பொடித்திடாது - எரிக்காமல். அ௪. வெவ்வரவம் - கொடிய இராகு கேது. அனலம் கால்வதுவும் - தீயைக் கக்குவதும். மாமுனிவன்-

குடித்தகடன் மறித்தெழுந்து குமுறுவது முன்னமுன்னைப்
பிடித்தவினைச் செயலன்றோ பிரிவில்வெங்கைப் பெருமானே. (அசு)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

மான்கொண்ட கரத்தர்திரு வெங்கைபுரத்
தவர்பலகை வழங்கப் பெற்ற
தேன்கொண்ட விசைப்பாண ரெனநினைப்ப
லுனைப்பாண சிறப்பு நீத்த
கான்கொண்ட தொடைப்புயத்தர் பெயர்மொழியா
யெனிலவர்பேர் கழற லாற்றல்
ஊன்கொண்ட மழுவலத்தோ ரிசைக்குடைந்த
பாணனென வுள்கின் றேனே. (அஎ)

கலிநிலைத்துறை

உள்ளே னன்பர் தங்களொ டன்போ டுறும்வண்ணம்
விள்ளேன் வஞ்சம் பொய்கொலை காமம் விடுகில்லேன்
எள்ளே னங்கம் வெங்கைபு ரேசா வெனநேயங்
கொள்ளே னெவ்வா றுய்குவ னந்தோ கொடியேனே. (அஅ)

தவம் எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கொடியவரை வனத்திருந்து நோற்கி னுந்தோட்
கொற்றவரை யொத்தவரைத் துறந்து போகிப்
படியவரை மருட்டுதவ வேடந் தாங்கிப்
படிமுழுது முலாவுகினு மறைக ளெல்லாம்
முடியவரை யறுத்துணர்ந்து புகலி னுந்தீ
முளரிமலர்க் கரத்தெடுத்த வெங்கை வாணர்
அடியவரை வழுத்தியவ ரடிகள் சூடா
வவலரையோர் பொருளாக வறிகி லோமே. (அகூ)

மேற்படி வேறு

அறிவினிலி லுங்குதிரு வெங்கைநக ராள
ரடியினின்மு யங்கியுறு மென்றனக வன்மை
எறியயிலை வென்றவிழி யின்கடையி னாலே
யிமைவிழுமு னுங்கிமய றந்தமட மாதைப்

---

அகத்தியர். அஎ. தேன் கொண்ட - தேனின் இனிமையைக் கொண்ட. கான்கொண்ட தொடை - மணத்தைக் கொண்ட மாலை. இசைக்குடைந்த பாணன் - ஏமநாதன். உள்குதல் - எண்ணுதல். அஅ. உள்ளேன் - நினையேன். விள்ளேன் - நீக்கேன். எள்ளேன் - இகழேன். அகூ. கொடியவரை - கொடியமலை. நோற்கினும் - தவஞ்செய்தாலும். படியவரை - உலகத்தார்களை. மருட்டு - மருளச் செய்கிற. வழுத்தி - போற்றி. அறிகிலோம் - மதிக்கமாட்டோம். கூ௦. அகவன்மை - உள்ளத்தின் வலிமை. அயில் - வேல்.

பொறியரவ ணைந்துதுயி லுங்கடவுள் கண்டாற்
பொறியவனு ரந்தனிலி ருந்திடுவ ளோதான்
வெறிமலர்நெ டுஞ்சிலைய னங்கனெதிர் கண்டான்
மிகுமிரதி கொங்கையவ னம்புயமு ருதே. (க0)

கட்டளைக் கலித்துறை

உருதே சிறிய ரினம்பே ரருட்பய னுற்றவர்சொல்
மருதே புலனிற் புகாதே திருவெங்கை வாணற்கன்பு
வெருதே யுனக்கிடர் செய்கின்று ளோர்க்கிடர் மீண்டியற்றிக்
கருதே யிருமன மேபிற வாநெறி காண்பதற்கே. (கக)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

காணும லயன்றேடு நின்மு டிக்கட்
கண்ணப்பன் ஞெடுகழற்கால் வைத்தே போதில்
கோணுக முரிந்ததுவோ குளிர்வெண் டிங்கட்
கொழுந்துபொரு தொதுங்கிற்றே நீர்ப்பெ ணன்பு
பூணும லருவருத்து நோக்கி னுள்கொல்
பொன்னிதழித் தொடையல்சூழ்ந் திழுத்த தோசொல்
வீணுள்பட் டழியாத வன்பர்க் கன்பாம்
விமலனே வெங்கைவரு மமர ரேறே. (கஉ)

கொற்றியார். நேரிசை வெண்பா

ஏறுவக்கும் வெங்கை யிறைவற் றெழுதுதவப்
பேறுவக்கு மின்னே பிடிக்கவோ—கோறுவக்குங்
கூடு குறைத்த கொடுமதனை மொய்த்தகுழற்
காடு குறைத்த கருத்து. (கங)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கரியவன் கமலக் கோயிற் கண்ணவன் கற்ப கக்கா
உரியவன் சுரர்குற் றேவ லுவந்துநா டொறும்ப யின்றும்
அரியவ னென்னத் தன்ரு ளன்பிலா வெனக்கு வெங்கைப்
புரியவ னளித்தா னென்னுற் புரிதருங் கைம்மா றென்னே. (கச)

---

இமைவிழுமுன் - இமைக்குமுன். நுங்கி - கெடுத்து. பொறியரவு - புள்ளிகளையுடைய பாம்பு. பொறி - திருமகள். அம்புயம் உருது - தோளைச் சேராது. கக. உருது - பொருந்தாமல். கருதே - சின வாதே. இரு - இவ்வாறிருப்பாயாக. கஉ. கோள்நாகம் - தீமையைச் செய்கின்ற பாம்பு. நீர்ப்பெண் - கங்கை. உரிந்ததுவோ - தோல் உரிபட்டதோ? அருவருத்து - வெறுத்து. கங. ஏறு - காளை. தவப்பேறு - தவப்பெருமை. கோல் - அம்பு. துவக்கும் - தொகுத் திருக்கும். கூடு - அம்புக்கூடு. கச. கரியவன் - திருமால். கமலக் கோயிற் கண்ணவன் - நான்முகன். கற்பகக்கா உரியவன் - இந்திரன்.

கட்டளைக் கலித்துறை

எந்தீ வரமதி மாழ்கிச்செவ் வான மெனுங்கொடிய
செந்தீ வரமதி யாகும்வெண் டிவரத் தேம்புமெம்மேல்
இந்தீ வரமதி ரேகவில் வேள்விடி னேதுசெய்வோம்
நந்தீ வரமதி ஞடாளும் வெங்கை நயந்தவனே. (௧௫)

பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

நயன மிருண்டு போகாமுன் னடனப் பெருமான் றனைப்பாரார்
நடக்கும் பதங்க டளராமுன் னடவா ரமலன் றிருக்கோயில்
பயனின் மொழிகள் குளறுமுன் பரம னடித்தா மரைதுதியார்
பழுதில் செவிகள் செவிடாமுன் பரிந்து சிவன்மெய்ப் புகழ்கேளார்
செயலி னெடுங்கை நடுங்காமுன் றிருமா மகளுங் கலைமகளுஞ்
செறியுந் திருவெங் கைக்கரசைச் செழுமென் மலர்கொண் டருச்சியார்
மயலி லழுந்தி யயராமுன் மனத்தி லவனை யிருத்திடார்
மனித ருழன்று வாளாபோய் மறியா நரகின் மறிவாரே. (௧௬)

பதினன்கு சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

மருக லம்பர்களர் நின்றி யூர்மிழலை வல்லம் வேதிகுடி சேய்ஞலூர்
மறைசை காசிதிரு நாவ லூர்கயிலை மயிலை கற்குடிநல் லூர்நணு
அருணை பஞ்சநதி திங்க ளூர்பனசை யதிகை யொற்றிதிரு நாரையூ
ரால வாய்திருநெல் வேலி வஞ்சிபழை யாறை கச்சிதிரு வாதவூர்
சிரபு ரங்கமலை முல்லை வாய்சுழிய றிருவ ரத்துறையு மேபுகார்
திருவ லஞ்சுழிந ளாறு வேதகிரி தில்லை மாணிகுழி யாதியாய்
விரவு கின்றபதி பலவி னுங்குடிகொள் விமலன் வந்துதன தருளினல்
விமல சங்கரியொ டுறையும் வெங்கைநகர் மேவு வாரமர ராவரே. ()

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

ஆவியி னிடத்துற் றெம்முகப் பகையென்
றம்புயத் தினைப்பிடித் திழுப்ப
மேவுவெண் பற்சொற் பகையெனு மணிகள்
வெருவிவந் தடியின்மேல் வீழக்

---

௧௫. எந்தீவர மதி - எமது சுறுசுறுப்பான அறிவு. மதி - திங்கள். தேம்பும் - வருந்தும். இந்திவரம் - கருங்குவளை. அதிரேக வில் - புதுமையுள்ள வில். நந்தீ - சிவபெருமானே! வரமதில் - உயர்ந்தமதில். ௧௬. நயனம்-கண். பதங்கள்-கால்கள். உழன்று- வருந்தி. மறியா - திரும்பாத. மறிவார்-சுழலுவார். ௧௭. மருகல்- திருமருகல். பஞ்சநதி - திருவையாறு. புகார் - காவிரிப்பூம்பட்டினம். விமலசங்கரி-தூய்மை மிக்க இறைவி. ௧௮. ஆவி-தடாகம். அம்புயம்- தாமரை. வெருவி - அஞ்சி. காவி - கருங்குவளை. இரிய -

காவியங் கருங்கட் பகையெனு மளிகள்
கலங்கியெண் டிசைதொறு மிரியப்
பூவையர் மகிழ்வுற் றுலாவுறும் வெங்கை
புரத்தனெங் கருத்தன்வே றிலையே. (௬௮)

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்*

இரையும் புனற்செஞ் சடைமுடியுங் கடுவார் மிடறு மிளமதியம்
புரையுங் கனலி மருப்பொளிருந் திருமார் பகமும் புலியதள்சூழ்
அரையுங் கரியின் றலைமிதித்த வழகார் வெங்கை யரன்றாளும்
நிரையுஞ் சுரர்கண் டுருவனைத்து மருளே யென்ன நினைவாரே. ()

*நேரிசை வெண்பா*

நினைகுவதுன் கோலமே நெஞ்சத் தடியேன்
புனைகுவதுன் செங்கமலப் பொற்றாள்—வினவுவது
கோவே யெனவிண் குழாம்புகழும் வெங்கைநகர்த்
தேவே யுனதொழிவில் சீர். (௧௦௦)

## தனிச்செய்யுட்கள்

*பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்*

விற்ற தார்கலை பாதி யோடுவ
னத்தி லேயழ விட்டதார்
வெஞ்சி றைப்புக விட்ட தார்துகி
லுரிய விட்டுவி ழித்ததார்
உற்ற தாரமும் வேண்டு மென்றினி
மன்னர் பெண்கொள லொண்ணுமோ
வுமிய டாமண மென்ற வாய்கிழித்
தோலை காற்றிலு ருட்டடா
வெற்றி யாகிய முத்தி தந்தருள்
வெங்கை மாநகர் வேடர்யாம்
விமல ரானவ ரெமைய டுத்தினி
தெங்கண் மிச்சின்மி சைந்தபின்
பெற்றவேலர்த மக்கு யாமொரு பெண்வ
ளர்ப்பினி லீந்தனம்
பெற்ற பிள்ளைகொ டுப்ப ரோவிதென் பேய்பி
டித்திடு தூதரே.

---

அஞ்சியோட. ௬௯. இரையும் - ஒலிக்கும். கடு - நஞ்சு. புரையும் - ஒக்கும். கனலி - பன்றி. அதள் - தோல். நிரையும் - கூட்டமாகிய. ௧௦௦. கோலம் - திருக்கோலம். புனைகுவது-சூடுவது. விண்குழாம் - தேவர்கூட்டம். ஒழிவில்சீர் - என்றும் விட்டு நீங்காத சிறப்பு. (தனிச்செய்யுட்கள்) கலை - ஆடை. துகில் உரிய - ஆடையைக் கழற்ற. தாரம் - மனைவி. மிச்சில் — எச்சில். மிசைந்தபின் - உண்டபின்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

துளங்குமொளித் திங்கடனை யம்புலியென்
றுலகமெலாஞ் சொல்லக் கேட்டும்
பளிங்கனைய வயிற்றினது விழுங்கியமான்
புறந்தோன்றப் பார்த்துங் கெட்டேன்
இளங்கொடிய புலியிதென வறிந்திலே
னறிந்தேனே லென்பட் டாலுங்
களங்கனிமா மிடற்றிறையைத் திருவெங்கைக்
காவலனைக் கைவி டேனே.

(இவ் விருசெய்யுட்களும் பிரதிகடோறும் இருக்கின்றன)

திருவேங்கைக் கலம்பகம் முற்றிற்று.

---

*துளங்கும் - விளங்கும். அம்புலியென்றதற் கேற்ப மானை விழுங்கிய தென்றபடி. களங்கனி - களாக்கனியைப் போன்ற. மா - கரிய. மிடறு - கண்டம்.*

# ௧௧. திருவெங்கையுலா

[உலா என்பது, பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் எழுவகைப்பருவ மாதர்களும் கண்டு காதல்கூரும் வண்ணம் தலைவன் ஒருவன் தெருவில் உலாவந்தான் என்று கலிவெண்பாவாற் பாடப் படுவதாகும். உலாவின் தொடக்கத்தில் பாட்டுடைத் தலைவனுடைய சிறப்பு, நீராடல், அழகு செய்துகொள்ளல், உறுதிச் சுற்றம் புடைசூழத் தன் ஊர்தியில் ஏறித்தெருவில் வருதல் என்னுமிவை கூறப்படும். இவ்வுலாநூல் உலாப் புறம் எனவும் பெயர் பெறும். பாட்டுடைத் தலைவனுடைய இயற்பெயர் கூறப்படுகிறபடியாலும், அவனைக் கண்டு மாதர்கள் காமுற்றதாகக் கூறுவதல்லாமல் அம்மாதர்களைப் பார்த்துப் பாட்டுடைத் தலைவன் காமுற்றதாக எங்குங் கூறப் படாமை யானும் இது புறப்பொருளைச் சார்ந்த பெண் பாற் கைக்கிளையாய்ப் பாடாண் திணையுள் அடங்கும். இதனால் இதற்கு உலாப்புறம் என்னும் பெயரும் வழங்கலாயிற்று. இவ்வுலாநூலைப் புலவர்கள் தம்மைப் பேணிய அரசர்கள் மீதும் கடவுளர் மீதும் அறிவாசிரியர்கள் மீதும் பாடுவது வழக்கமாக இருக்கிறது. நமது தமிழ் மொழியில் திருக் கைலாயஞானவுலா முதலிய பல உலாநூல்கள் உள்ளன. இவ்வுலாநூல் திருவெங்கையில் எழுந்தருளிய சிவபிரான் மீது பாடப் பெற்றது.]

## காப்பு

### நேரிசை வெண்பா

நாவலர்தம் வாய்வீதி நாளு முலாவருமே
தாவருநம் வெங்கையிறை தன்னுலாப்—பாவெனுமோர்
அம்பொற் றளைபூண வாழத் தகப்பட்ட
கும்பக் கடாக்களிற்றைக் கொண்டு.

### தலவிசேடம்

௧ பூமேவு செம்மற் புகழ்வடிவங் கொண்டன்ன
பாமேவு மங்கைபுகழ் பண்பினன் - ஏமேவு

(காப்பு) தா அரும் - கெடுதலற்ற. ஆழத்தகப்பட்ட பிள்ளையார் என்பது தலப்பிள்ளையார் பெயர். ௧ - ௰. பூமேவு செம்மல் - நான்

வில்லிற் கருந்தடங்கண் மேவுஞ் சிறியநுதல்
வல்லிக் கிடங்கொடுத்த வண்மையினன் - அல்லிமலர்
யாணர்த் தவிசி னெகினவர சின்றளவுங்
காணக் கிடையாத கங்கையான் - மாணப்
பொருவரிய பூங்கட் பொறியரியாற் சென்று
மருவரிய நற்றாண் மலரான் - விரவுசடைக்
கானிருக்க விவ்வீரங் கதிர்க்கியைபென் னென்றுமறி
மானிருக்குங் கைத்தா மரையினன் - யானிருக்குங்
காயத் திருப்பதுபுன் காரேனக் கொம்போவென்
றேயப் பிறையிருக்கு மீர்ஞ்சடையான் - தூயமுக்
கண்ணுமெழின் மூக்கொடுவார் காம்புபுணர் கூவிளமென்
வண்ணவிலை காட்டும் வதனத்தான் - அண்ணல்
வழுவை யடர்த்து வயங்கொளெறி பத்தர்
மழுவை யுவக்கு மழுவான் - பழவடிமைக்
கண்ணனையுஞ் சில்லோர் கடவுளெனத் தன்னெடும்வைத்
தெண்ணவழ னஞ்சயின்ற வெம்பிரான் - பெண்ணுருவம்
பெற்ற வருளொடும்போய்ப் பெண்வலைப்பட் டுற்றதுயர்
அற்ற வறிஞ ரகம்புகுவோன் - முற்றவிரி
தத்துவமென் றாறுந் தாங்கடந்து போயறத்தில்
எய்த்தவர்க்குக் காட்டு மியல்பினன் - முத்தமணி
ஆற்றிற் பொருடிருவா ரூர்க்குளத்தி லன்றுசென்று
தோற்றப் புரியுந் தொழிற்சித்தன் - ஏற்றுங்
கணையைமல ரென்று கருதா மதனைத்
துணையை விடுத்தெரித்த தோன்றல் - அணையும்
பிறப்புக் கிறப்புப் பெருமருந்து செய்யுங்
குறிப்புக் கரிய முதுகுன்றோன் - சிறப்பப்
பெரியவரைச் சங்கம் பெறப்பந்தி சேர்த்து
விரிய விலைமுன் விரித்து - வரிசைபட
அன்னம் படைத்துமிசை யாங்கிடுவ விட்டருத்தி
மன்னும் பழுக்காய் வரவளித்துந் - தன்னந்
துறைபடுநர் சென்னியிற்றன் றேழமைவான் கங்கை
பொறைபடநன் றேறல் புரிந்து - முறைபடுமிம்
மண்ணின்மேல் வெற்பு வளமுடையே மிம்மடவார்

---

முகன். பாமேவு மங்கை - கலைமகள். ஏ - அம்பு. யாணர்த் தவிசு - அழகிய இருக்கை. எகின் அரசு - நான்முகன். பொறி அரி - திருமகளை யுடைய திருமால். மருவரிய - சேர்தற்கரிய. ஏய் - பொருந்தி. அ - அந்த. வழுவை-யானை. அடர்த்து - கொன்று. கக - கரு. ஆறுறும்- முப்பத்தாறும். முத்தமணியாறு - மணிமுத்த ஆறு. மதனை - காமனை. துணையை - இரதியை. கரு - உ௦. வரை - நிற்றமைந்த. சங்கம் - சங்குகளை. பெற - கூட்டமாக. பந்தி - வரிசை. அன்னம் - அன்னம்

விண்ணின்மேல் வெற்பதுநா மேவுவமென் - றெண்ணிமேல்
கொங்கைக் கலைவைக் குளிர்சந் தழித்தலைத்துக்
கங்கைப் புளலைக் கடுத்தெழுந்துங் - கங்கைக்குத்
தாரு யகமென்று தானதனு லெஞ்ஞான்றும்
ஆரு வினைக ளழித்திட்டும் - மாருகக்
கோடுங் கழையுங் குடவளையும் விண்முகடும்
நாடுங் கழையு நளினமலர்க் - காடுங்
கொடுத்த மணிபலவுங் கொண்டு தனக்கிங்
கடுத்த பெயரை யளித்தும் - படைத்த
பழகு புகழிப் படிமுழுதும் போர்ப்ப
ஒழுகுமணி முத்தா றுடையான் - முழுகுபவஞ்
சிந்தும் விவசித்துச் செய்பணிக்குக் காரணமாய்
வந்துமுத னின்றெழுங்காய் வன்னியான் - எந்தை
அருந்தவர்க ளென்று மமரரென்றும் பேரிட்
டிருந்தவர்க ளெல்லா மிரப்பப் - பொருந்தி
முனியா தவர்க்குவர முற்றுங் கொடுத்திங்
கினியார் வரவென் றிருப்பான் - நினையாமல்
வேத வுணவு வெறுத்துப் புகழ்மூவர்
ஓதுதமி ழூணுக் குழல்செவியான் - தாதையிகழ்
காலிற்குத் தக்க கணிச்சிகைச் சண்டிசொரி
பாலிற்குத் தக்க பழமலையான் - சாலிக்குக்
கைக்கரகத் துற்றிழியுங் காவிரிபோற் சென்றுநறுஞ்
செக்கரிதழ்த் தாமரையின் றேன்பாய - வக்கமல
ஏடு கனலா யிடுபசும்பொ னெண்பொகுட்டாய்

---

பறவை. வெற்பு - மலை. கடுத்து - ஒத்து. உ0 - உ௫. நாயகம் - தலைமை. ஆரு - நீங்காத. கழை - கருப்பு. முகடு - மூகட்டை. கழை - மூங்கில். காடு-தொகுதி. பழகு புகழ் - நீங்காத புகழ். படி-பூமி. விவசித்து - இவன் கோசலை நாட்டிலே மணிபிங்கலை நகரத்தில் அந்தண குலத்தில் தோன்றியவன். வறுமை மேலீட்டால் எங்குந் திரிந்தான். ஒரு காலத்தில் ஒரு தெய்வீகச் சுனையில் மூழ்கினான். அங்கே குபேரனுடைய தங்கையாற் கிடைத்த அணிகலன்களைக்கொண்டு கணநாதர் ஒருவர் உணர்த்தியவாறு, முதுகுன்றை யடைந்து உருவிலி வாக்கின்படி உரோமச முனிவருடைய அருளைப்பெற்றான். அருந்தவம் புரிந்து பழமலைநாதருடைய கட்டளையின்படி அணிகலன்கள் வைக்கப் பட்டிருந்த வன்னி மரம் வேண்டிய பொருளைக் கொடுக்க அரிய திருப் பணிகள் பலவும் செய்து வீடுபேற்றை யடைந்தான் என்பது விருத்தாசல புராணம். உ௫ - ௩0. அமரர் - தேவர்கள். முனியாது - சினவாமல். இனையாமல் - வருந்தாமல். தமிழ்ஊண் - தேவாரப் பாடல்கள். உழல் செவியான் - ஏங்குகிற காதுகளையுடையவன். கணிச்சி - மழு. சண்டி - சண்டேசுரர். சாலி - நெற்பயிர். செக்கர் இதழ் - சிவந்த இதழ். கமலம் - தாமரை.

மூடு கரியரியாய் மொய்த்ததடம் - பீடுபெற
ஞாலங் கருதுஞ்செஞ் ஞாயிற் றிரும்பகன்மால்
கோலங் கருதுங் குளிர்பொழில்வாய்க் - காலங்
கருதி யிருளிருப்பக் கட்செவிமா ணிக்கம்
பரிதியென நின்று பருகக் - குருதிபுரை
சேயொளிய பூண்மணிசூழ் திண்சுவர்முற் றுங்கவரின்
வாயி றெரிபளிக்கு மாடமுறத் - தூயசுதை
மாடநம் பிக்கு வழிவிடுவான் விண்ணெழுந்து
நீடு புனல்போல நின்றிலங்கப் - பாடநகர்
இந்திரனுக் கன்றிங் கெனக்கென்று வேளைசைத்த
பைந்தழைய தோரணம்விண் பாலசைய – வந்தணையில்
நாயகனு னீக்குதுயி னங்கை விளக்கவிப்ப
மேய மணிப்பூண் விளக்கேற்றச் - சேயிழையார்
முன்றிற் றுகண்மாற்ற மொய்குழலிற் பூந்தொடைகள்
அன்றித் துகளா லதுநிரப்ப - மன்றில்
கொழுநன்சொன் மாதுகிளி கூறு தடக்கப்
பழகுமயற் பூவை பகர - வெழிலி
மறைத்திருந்து செல்லமணி மாளிகையை வேத
முறைத்திருந்து தீப்புகைபோய் மூட - நறைத்திருந்து
செந்தா மரைநாதன் றேரிற் பதாகையொடு
நந்தா மதிற்கொடிக ணட்பாடப் - பந்தாடும்
மங்கையர்கள் செங்கை வளையொலிப்ப வேர்மலியும்
வெங்கை நகரிருப்பு வேண்டியே - பங்குபடு
பெண்ணுசை நம்பிபசும் பொன்னுசை பெற்றவுளம்
மண்ணுசை தானு மருவுதலால் - விண்ணுசை
கொள்ளுஞ் சிறப்புக் கொடுப்பத் திருவுளங்கொண்
டெள்ளுங் குறியவுரு வின்றுபொய்த் - தெள்ளுங்
கனவு நனவுபோற் காட்டி யிரந்து
மனைவியுமை யோடு மணந்து - வினவினர்க்குப்
பண்டை யறத்தின் படிவமிது வென்னவுருக்
கொண்டவிலிங் கையன் குலமைந்தன் - உண்ட
படிதாங்கி மாயன்றேர்ப் பார்தாங்கி யாங்கெம்
குடிதாங்கி நல்லிசைமென் கோதை – முடிதாங்கு

---

௩0 - ௩௫. பொகுட்டு - தாமரை மொட்டு. அரி - வண்டு. பீடுபெற - பெருமையை அடைய. கருதும் - எண்ணும். பரிதி - கதிரவன். குருதிபுரை - உதிரத்தைப்போன்ற. சேயொளி - செந்நிற வொளி. ௩௫ - ௪0. பைந்தழைய - பசிய தழைகளாலாகிய. பூண் விளக்கு - அணிகலன்களின் ஒளியே விளக்காக. அன்றுதல் - பகைத்தல். ௪0 - ௪௫. செந்தாமரைநாதன் - கதிரவன். நந்தா - கெடாத. ஏர் மலியும் - அழகு மிகும். பங்குபடு - பழுது பொருந்திய. படிவம் - வடிவம். ௪௫ - ௫0. நீலகண்டன்-கரிய கழுத்தையுடைய சிவபிரான்.

கல்வி யுறுநீல கண்டன் றுணைவனலர்ச்
செல்வி யுறையுந் திருமார்பன் - வல்விரகம்
பூண்ட மடந்தையரே பொல்லா னெனுநல்லான்
தூண்டு திகிரிச் சுமைதுறந்தான் - யாண்டும்
இலையென்றல் கேட்பவுமின் றுதென் றிரப்போர்
நிலைகண்டாங் கெப்பொருளு நேர்வோன் - அலையுண்டு
பாலாழிக் கின்றுநிலை பான்மதிக்கென் றெப்பிகந்து
தோலா துலகனைத்துஞ் சூழ்புகழான் - மேலாய
செங்கமல வாணற்கே செந்நாவின் மேவுதல்வெண்
மங்கையெனு மவ்வுரையை மாற்றியே - சங்கையற
மூவுலகு ளோர்க்குமுதுசீர்த்தி வெண்மங்கை
நாவுறைய வைத்த நலத்தினன் - தேவிகலி
வந்துதன்சீர் பாடுநரை மண்மீதி லந்நிலையே
இந்திரன்ரு ளுக்கு மியல்பினன் - நிந்தையற
உண்டு பணையலரென் றெண்காவைக் கீழ்ப்படுத்திக்
கொண்டு புரைதீர் கொடையினன் - கண்டுபுகழ்
பண்பு மலாது பயனும் புணர்ந்துநிதித்
தண்பதுமம் வென்ற தடக்கையான் - வண்புலவர்
தம்மைவிழி காக்குந் தகவி னிமைபோலச்
செம்மை பெறக்காக்குஞ் சீருடையான் - மெய்ம்மைபெற
நல்லா ரொருவ ருளரே லவர்பொருட்டால்
எல்லார்க்கும் பெய்யுமழை யென்றுமுனஞ் - சொல்லாலும்
ஐய மகல வகிலமெலாந் தற்சுட்டிப்
பெய்யுமழை யென்னும் பெயராளன் - துய்ய
மறையோர் மிடிப்பகைஞன் வாய்மைநா மென்றும்
அறையோ மெனப்பொய் யறைவான் - முறையோதி
வேலிபுறஞ் செய்ய விளைத்துக் கரும்பயிலக்
கூலி கொடுக்குங் குலத்தோன்றல் - மாலிரவும்
ஆர்த்தி விருந்தா லடையாக் கதவழகு
மாத்திரையாய் நின்றெளிரும் வாய்தலான் - பூத்தபொருள்
ஏதப் படாம லிருந்துதவ நல்லறமென்
பூதப் படியுட் புதைக்கின்றோன் - வேதன்
நிலம்பெயர்த்து வைத்த நெடுவேரிற் சென்னி
குலம்பெயர்த்து வைத்த குணத்தான் - தலம்படைத்தோன்
கண்ட குலத்திற் கருதி னிரட்டியாம்

---

*விரகம் - காதல். ௬0 - ௬௫. பாலாழி - பாற்கடல். தோலாது - தோற்காமல். செங்கமலவாணன் - நான்முகன். பணை - கிளை. புரைதீர் - குற்றம் போக்கிய. ௬௫ - ௭0. நிதித்தண்பதுமம் - பதுமநிதி. தடக்கை - பெரிய கை. மிடிப்பகைஞன் - வறுமைக்குப் பகையாக இருப்பவன். ௭0 - ௭௫. அயில - தின்ன. ஆர்த்திவிருந்து - மகிழ்ச்சியை உண்டாக்கும் விருந்து. சென்னி - சோழன். வாய்தல் - வாசல்.*

பண்ட குலத்தின் பயனுனன் - மண்டலிகர்
நல்லோ ரின்று நலைக்கோ லெனச்செயுங்கோல்
வல்லோ லண்ண மலைவள்ளல் - மல்லலுறச்
சந்தி பொருத்தித் தருஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழற் புதவணித்தா - முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயி லுள்ளிருந்தெம்
பையுள்போக் கிற்கும் பரஞ்சோதி - மையுள்
இருந்தபுன் மாக்கடமை யென்றுந் துதியா
வரந்தரவென் முன்னின்ற வள்ளல் - வரைந்தவிடை

## பவனி

தன்மதியி லென்றூழ் தனதுமதி காட்டியறப்
பொன்மலியுங் கப்பம் புகவேற்றிச் - சொன்மலியும்
இந்திரனு மேனேரு மேத்தத் திருவுலா
வந்தருளு நல்விழவுண் மற்றொருநாள் - சந்தமறை
முன்னூல் வடிவுகொடு முந்நூல் புனைந்தன்ன
பொய்ந்நூ றருமறையோர் போந்தெள்ளின் - நெய்ந்நூறு
மாமஞ்ச ணெல்லி வருமானைந் தையமுதம்
ஏமந் தருநெய் யிளவெந்நீர் - தேமுந்து
வில்வநீர் கர்ப்புரம்பால் வெண்டயிர்செந் தேன்கரும்பின்
செல்வநீர் பல்கனியின் றீஞ்சாறு - நல்லிளநீர்
சந்தன மென்பனிநீர் சங்கப் புனன் முதலா
வந்தன கொண்டுதிரு மஞ்சனத்தோ - டுந்துதிரைக்
கங்கை நிறந்திரியக் கன்னிப் பிறைதிகைப்பப்
பொங்கி யலைத்துப் புறம்போந்து - செங்கயல்கள்
பாயுந் தடமாப் படர்சடைமீ தாட்டியபின்
ஏயுங்கற் பான்மலைமா னெள்ளாத - மாயும்
புலியுரி மாற்றிப் புனைமணிய பாம்பின்
மெலியுரி யன்னதுகில் தேய்ந்து - வலிகெழுநற்
பஞ்சவ னென்ன முடிசூட்டிப் பார்வைக்கீழ்ச்
செஞ்சுடர்ப்பொற் றட்டிற் றிலகமுமிட் - டுஞ்சனிகர்
காதிற்குந் தோளிற்குங் கண்டமணிப் பூணென்னச்
சோதிக் குழைகள் சுமப்பித்து - வாதிப்பில்
உண்ட வழனஞ் சொழுகிப் பரந்ததெனக்
கண்ட முழுதுங் கருஞ்சாந்து - கொண்டணிந்து

---

ஏதம்-குற்றம்; ௬௫ - ௭௦. பையுள் - துன்பம். மையுள்-மயலுக்குள். ௭௦ - ௭௫. சந்தமறை-இசைவடிவான மறை. முந்நூல்-முப்புரிநூல். ஆனைந்து - ஆக்களின் ஐந்து பொருள். ஐயமுதம் - பஞ்சாமிர்தம். சங்கப்புனல் - சங்குநீர். ௭௫ - ௮௦. வேய்ந்து - உடுத்து, குழைகள் - குண்டலங்கள். ௮௦ - ௮௫. அழல்நஞ்சு - தீயைப்போன்ற நஞ்சு.

பொன்னனையார் நெஞ்சியங்கப் பூங்கலவைச் சேற்றிவிடுங்
கன்னிரைபோன் முத்தவடங் கைபுனைந்து - தந்நிகர்மைந்
நாக நினைவுவர நாறு மலர்த்தாமம்
ஆக முழுது மணிந்திட்டுப் - பாக
மதிய மணியிழைத்து வைத்தன்ன செம்பொற்
புதிய மதாணி புனைந்து - நிதியவணி
மாத்திரைதா னன்றி வளைவடுவுங் காக்குமெனச்
சேர்த்தினர்கே யூரந் திகழ்வித்துச் - சாத்தியபூண்
அ௫ என்ன மழுமா னியைந்த விரலல்ல
மன்னமணி யாழி மலிவித்துத் - தன்னெழியக்
கைசெய்த வீரக்குக் கட்டியதாய் முற்றுமல்
மொய்செய்த காலன் முரண்முருக்கி - மைசெய்த
மேனி யரக்கன் விறலோர் கணத்தழித்து
வானி னடுத்த மதிதேய்த்துத் - தானுடைய
வென்றிக் கணிந்ததென வீரக் கழனோன்றுள்
ஒன்றிக் கிடப்ப வொளிர்வித்து - மன்றற்
புகைமுதனின் றேந்திநறும் பூங்குவளைத் தீப
வகைமுதல் கொண்டுபணி மாறித் - தகைமை
கூ0 வலக்க ணிடட்பா லிடக்கண் வலப்பாற்
கலக்க நிழலாடி காட்டி - நிலக்கலமும்
பொற்கலமு மன்ன மறையும் புகழ்மூவர்
சொற்களையு மொத்துத் துதிப்பவிருந் - தற்கதிர்தன்
அங்கந் திரண்டமுத தாரையொழுக் கானதெனத்
தங்கு மணிப்பிடிய சாமரைகள் - அங்கசையச்
சாந்தாற்றி பேர்முரணித் தாமரைமுத் தன்னவெயர்
போந்தாற்றி ஞாங்கர்ப் பொலிவெய்த - வேந்தாற்றற்
பிள்ளை மதியினைமுன் பெற்றெடுத்த தாய்மதிபோல்
வெள்ளை மணிக்கவிகை மேனிழற்றத் - தொள்ளைவளை
கூ௫ ஒன்று யிரம்வா யொலிக்கு மவைபோன்று
சென்று யிரமெண் டிசைவிழுங்கக் - குன்றாத்
திரண்டா யிரங்கை தெழிக்குமது போற்கை

---

முத்தவடம் - முத்துமாலை. கைபுனைந்து - அழகு செய்து. பைந்நாகம் - படத்தையுடைய பாம்பு. மலர்த்தாமம் - மலர்மாலை. ஆகம் - உடல். மதாணி - மார்புப்பதக்கம். கேயூரம்-தோளணி. அ௫ - கூ0. மன்ன - பொருந்த. முரண் முருக்கி - வலிமையை அழித்து. மதி - திங்கள். நோன்றாள் - வலிமை பொருந்திய திருவடி. கூ0 - கூ௫. நிழலாடி - கண்ணாடி; நிலக்கலம் - மண்ணாற் செய்தகலம். பொற்கலம் - பொன்னாற் செய்த கலம். மறை மண்பாத்திரமும் தேவாரம் பொன் பாத்திரமும் போன்றதென்க. "பூசுரர் நான்மறை மட்கலங்கிகர்க்கும்" என்பது நால்வர் நான்மணிமாலை. கவிகை - குடை. நிழற்ற - நிழலைச் செய்ய. கூ௫ - க00. முழவு - மத்தளம். தண்ணுமை - ஒலிக் கருவிகளில்

இரண்டான் முழவொன் றிரங்க - மருண்டார்தல்
நந்திகரங் கொண்டதென நற்றண் ணுமைமுழங்கச்
சந்தமறை யோன்விழையுந் தாளங்கள் - முந்ததிரக்
கண்ணன் மலர்வாய்க் கழையெறிந்து பின்றொடர
வண்ண விசைக்குழல்கள் வாய்த்தொலிப்ப - மண்ணியங்கள்
ஏனையபா தாளத் திறையரவும் விண்ணரவும்
வானுருமே றென்ன மலிந்தார்ப்ப - மீன
அலைப்புதல்வி போற்றுபெரி யம்மைப் பெயர்கொள்
மலைப்புதல்வி தன்கொழுநன் வந்தான் - தொலைப்பில்
முதுகுன்றம் வெங்கையென முன்னுங் கருணை
மதகென்ற கண்ணுடையான் வந்தான் - இதுகுன்றம்
என்னு மழவிடையான் வந்தா னெனக்கோடி
சின்ன மமுதஞ் செவிக்குதுப்ப - மன்னுசிவ
செந்துவர்வாய் மங்கைபங்க தேவாதி தேவவென
வந்திகர்நின் றூர்க்குமொலி வானளப்பப் - பந்திமணி
மாடக் கரைசேர் மறுகிலஞ்சி மன்பதையா
நீடப் புதுநீர் நிறைந்தொலிப்ப - ஆடச்
சிலர்செந் தழற்கொழுந்து சேட்போய் விழல்போற்
பலர்செந் துகிலெறிந்து பற்ற - மலர்சிந்தி
உம்பர்மே னிற்ப வுலகநெருக் காலுயர்த்த
தம்பதுமக் கையெளிதிற் றூங்குவிப்பச் - செம்பொனெடுந்
தண்டுமிசை கொண்டு சகமீன்ற டன்னையுடன்
கொண்டுமணி வீதி குறுகியே - பண்டு
சிலையாகி நொய்துபட்ட தீதகல மேரு
மலையாகி நின்றவா வந்த - நிலையாகி
நாரணனாய் விண்ணுயர்வா னன்னிறத்தாற் செங்கமல
ஆரணனாய் மிக்க வணியினால் - வாரணனாய்
நின்ற பசும்பொ னெடுந்திருத்தேர்க் கண்டுவந்து
மன்ற விளங்கதிர்போல் வந்தேறி - வென்றிதரு
தந்தி முகன்முருகன் சங்கரிநற் சண்டியிவர்
தந்த மரபிரதந் தாங்கடவி - வந்தணையக்
கட்டளைக்கற் பொன்னுரைபோற் காற்பொன் மறுகுரிஞ்ச
முட்டிமுடிப் பொன்விண் முகடுரிஞ்சப் - பட்டுடைத்தேர்
கண்டோர் விழிகள் களிப்ப நிலைபெயர்த்துத்
திண்டோ ளிறைவன் செலுத்துதலும் - பண்டோர்

---

ஒன்று. கழை-வேய்ங்குழல். உருமேறு-பேரிடி. ௪0௫ - ௪௧0. சேண்போய் - தொலைவிற்போய். உம்பர்-தேவர்கள். சிலை-வில். நாரணன் - திருமால். செங்கமல ஆரணன் - நான்முகன். வாரணன் - இந்திரன். ௪௧0 - ௪௧௫. கட்டளைக்கல் - பொன்னுரைகல். காற்பொன் - தேர் உருளையின் பொன். மறுகு - தெரு. முடிப்பொன் - தேர்முடியின்

## குழாங்கள்

சிரந்துணித்தா னோடமர்ப்பச் சென்மதற்கு வேதன்
இருந்து படைத்தபடை யென்னத் - திருந்திழையார்
முற்றினர்முற் றூத முலையிற் பெருவாழ்வுஞ்
சிற்றிடையி னல்குரவுஞ் சேர்ந்துளார் - முற்றும்
அமைக்கு நிகர்தோ ளணங்கா தலைத்தம்
பிமைக்கும் விழியா லிறுப்பார் - சுமைக்கு
வருந்து நுசுப்பென்று வாணுதலிற் றீட்டுந்
திருந்து திலகஞ் சிதைப்பார் - பரந்தஞிமி
றூதித் திரியும் பலமலரி னொண்மணம்போல்
பேதித் தமையுமிகு பேரழகார் - மோதிக்
கிழியா முகில்சிதைக்குங் கேதனப்பொற் றேரோன்
அழியா வெரிதீ யழகை - விழியால்
விழுங்கினா ரேது விளையா தினிமெய்
புழுங்கினார் மாலை பொரிந்தார் - செழுந்தரள
மாலை பொடிந்துவிழி வார்நீர் கலந்தொழுகிப்
பாலைபொழி யார்பா ரதிபோன்றார் - மேலைநாட்
கூற்றை முனிந்த குரைகழலு முப்புரத்தின்
ஆற்றல் களைந்த வணிநகையும் - போற்றிலராய்த்
தம்மைநோய் செய்த தறுகட் சிலைமதற்காய்
வெம்மை விழியே வியந்திடுவார் - செம்மைத்
தவங்கொண்டோ மாதுமையா டன்னழகு கொண்டோ
எவன்கொண் டிடமளித்த தென்பார் - தவங்கொண்டேல்
ஆக வழகா லளித்த திடமாகில்
போகவிடே மென்றெதிர்தாம் போகுவார் - ஆகம்
மருவு மதினெண் மடங்கு பிறைப்பேர்
இரவி தனைமறைப்பி னென்பார் - பரவுறுபீர்
கன்றுபயிர் மேயக் கடாவின் செவியரிந்தாங்
கின்றுதலை வற்கா ணிணைவிழிகள் - நன்றிருப்பக்
கொங்கை யழகழியக் கொண்டதென்பார் கொல்பவர்க்குச்
சங்கரனென் னும்பேர் தகாதென்பார் - மங்கையுமை
கொங்கைவடுக் கண்டுங் குழியவுரம் பாயாத

---

பொன். முகடு - விண்முகடு. சிரந்துணித்தான் - நான்முகனுடைய தலையைக் கிள்ளியவன். அமர்ப்ப - போர் செய்ய. இருந்து - எண்ணி. கக௫ - கஉ0. முற்றினர் - வந்து திரண்டனர். அமை - மூங்கில். அம்பு இமைக்கும் - அம்பைப்போல் விளங்கும். இறுப்பார் - ஆடவரை வருத்துவார்கள். நுசுப்பு-இடை. ஞிமிறு-வண்டு. கஉ0-கஉ௫ பொரிந்தார் - தீயப்பெற்றார். பாரதி - கலைமகள். மெய்புழுங்கினார் - உடல் வருந்தினர். அணிநகை - அழகிய பல். கஉ௫ - கங0. ஆகம் - மார்பு. இரவி - கதிரவன். குழிய - குழி விழுமாறு. உரம் - மார்பு.

எங்கண் முலேக்குவலி யில்லென்பார் - செங்குதலேப்
பிள்ளேப் பழியாளர் பெண்பழியை யஞ்சுவரோ
எள்ளத் தனேயேனு மின்றென்பார் - உள்ளுக்
குருகுவார் நெற்றிபுடைத் தோவிதியே யென்பார்
பருகுவார் போலிறையைப் பார்ப்பார் - முருகுவாய்
தங்கமுத மும்பெருர் தாழ்குழலிற் பூப்புனேயார்
எங்கள் விழிக்கிவர்தாம் யாரென்பார் - பங்குவரும்
ஆர மணிமார் பணேயக் கிடைத்தாலும்
பார முலேக்ககலம் பற்றுமோ - நேருகினுங்
கங்கையறி யாமற் கலக்கு மிமையமலே
மங்கையறி யாமல் வருவரோ - மங்கை
அறியாமற் கங்கை யணேயு மவரென்
நெறியால் வாரென்று நிற்பார் - குறியா
இணேவிழியா னேக்கா ரெனினு நுதன்மேல்
அணேவிழியா னேக்கினுமா மென்பார் - கணேவிழியார்
ஏந்திளங் கொங்கை யிடைவருத்தன் மாத்திரையாய்ப்
போந்தன வென்று பொருமுவார் - நாந்தவஞ்செய்
தில்லோ மதனு லினேயாம லென்செய்ய
வல்லோ மெனத்திகைத்தார் மற்றொருத்தி - நல்லோர்

பேதை

பொதும்பர் வனம்யாம் புகுவோ மிவடான்
பெதும்பையா முன்ன மெனும் பேதை - குதம்பை
விழிமேவுங் காதுதோண் மேவப் புனேவாள்
மொழிமேவும் வீணே முனிவாள் - பழிமேவுங்
கல்லார் பரன்முற் கரத்தல்போற் றன்கண்மூய்
எல்லார் முனுங்கரந்தே னென்றிருப்பாள் - பொல்லாத
வெம்பு பகையாகி மேல்விளேவ தோராமல்
அம்புலியை வாவா வெனவழைப்பாள் - செம்பொனுயர்
தெற்றிமிசை மென்னடைய தென்றல் வரவேற்றுச்
சற்றுமுள மஞ்சாது தங்குவாள் - பற்றுதவு
தன்பெருமை பொன்னறியாத் தன்மைபோற் பெண்ணரசாந்
தன்பெருமை தானறியாத் தன்மையாள் - பொன்பரிவின்

---

கக௦-கக௫. பிள்ளேப்பழியாளர்-சிறாளனேக் கொன்று பழி தேடியவர். பருகுவார் - எடுத்து விழுங்குபவர். ஆரம் மணிமார்பர் - மாலேகளேயணிந்த அழகிய மார்பையுடையவர். அகலம் - இறைவருடைய மார்பகலம். கக௫ - கஉ௦. கணேவிழியார் - அம்பைப்போன்ற விழியை உடையவர்கள். பொருமுவார் - மனங்குமுறுவார்கள். இனேயாமல் - வருந்தாமல். பொதும்பர் - மரச்செறிவு; மரப்பொந்து. குதம்பை - காதணி. கஉ௦ - கஉ௫. பரன் - கடவுள். கரத்தல் - மறைத்தல். மூய் - மூடிக் கொண்டு. தெற்றி - திண்ணே.

ஒக்கலையிற் கொள்ளி னொளிர்பொன் மணியிருப்பிற்
றக்கவளல் லாரெடுக்கத் தக்கிலாள் - மிக்க
வடிவழகுக் கேற்ற மணவாளன் றானெப்
படியுளனென் றாராயும் பண்பாள் - முடிவில்
உருவழிந்த வேளை யுரியனெனக் கூறும்
பொருவழிந்த வோர்குறையும் பூண்பாள் - திருவழங்கு
பொன்னே யெழின்முளையே பூங்கொடியே பெண்ணரசே
மின்னே மயிலே விழிமணியே - அன்னே
வருக வருகவென வாராது தாய்நெஞ்
சுருக வுருக வுழல்வாள் - பெருகறிஞர்
நெஞ்சம் புரைய நிகழ்வுற் றொருசிறிதும்
வஞ்சம் புகாத மதர்விழியாள் - துஞ்சி
விழுந்த கதிரே யெழல்போல் விழுந்த
தெழுந்ததென வொக்கு மெயிற்றாள் - அழுங்கவுரம்
மீக்கா ணளவும் வெளிப்படா வுட்பகையை
நோக்காது வாழு நுசுப்பினாள் - சீர்க்காமன்
மாதராக் காற்றல் வடிவிழிவு காணாமல்
பேதை யெனவிகழும் பெண்பெருமாள் - காதலுளந்
தள்ளத் தமர்போற் றமரலா ரும்மகண்மை
கொள்ளக் கருதுங் குறியினாள் - பிள்ளைப்
பருவத்தா லொத்துப் பகல்விளக்குப் பட்டாங்
குருவத்தா லொவ்வா ரொடுதான் - தெருவிற்போய்ச்
செங்கணெடு மாலுந் திசைமுகனு மீசனெனப்
பங்கமொழி கூறும் படியென்னச் - சங்கம்
பழிக்கும் வழுச்சொற் பதர்சேர்த்து வைத்த
இழுக்குங் கலியென்ப தென்னக் - கொழிக்கும்
புழுதியளைந் தில்லமெனப் போற்றிவிரற் கோலம்
எழுதிவிளை யாடி யிருக்கும் - பொழுதிலிசை
வேதச் சிலம்பு மிளிர்பதத்தான் மூவெயிலும்
காதச் சிலம்பு கரங்கொண்டான் - நாதப்
பணையா னறிய பசுந்துழாய் நாக
அணையா னறிய வரியான் - துணையாய்

---

௧௪௫ - ௧௫0. ஒக்கலை - மருங்கு. தக்கிலாள் - தகுதியற்றவள். பொருவு - ஒப்பு. விழிமணி - கண்மணி. ௧௫0 - ௧௫௫. புரைய - ஒப்ப. துஞ்சி - மறைந்து. எயிற்றாள் - பற்களையுடையவள். உரம் மீக்காண் அளவும் - மார்பின் மேலே காணும் வரையிலும். நுசுப்பு - இடை. காமன்மாதர் - இரதி. தமரலார் - உறவினரல்லாதவர். மகண்மை-மகளாந்தன்மை. ௧௫௫ - ௧௬0. புழுதியளைந் தில்லமென- மணலாற் சிற்றில் இழைத்து. மூவெயிலுங்காத - முப்புரங்களையும் அழிக்க. சிலம்பு - மலைவில். ௧௬0 - ௧௬௫. நாதப்பணையான்-இசை

அடியவரைக் காக்கு மருளான் பனைக்கைக்
கொடியவரைக் காக்குங் கொலையான் - கடிகொள்
பனியிதழி மாலைப் படர்சடையான் வெற்பின்
கனியிதழி மாலைக் கழியான் - இனியநறுங்
காவிக் கரிய களத்தினை னெம்முடைய
ஆவிக் கரிய வமுதானன் - பாவித்
துருகு மகத்தை யுவப்பா னிகழ்வால்
அருகு மகத்தை யழிப்பான் - பெருகும்
உருப்பவள மாய வொருவ னிரதி
விருப்பவள மாய விழித்தான் - பொருப்புவனர்
மங்கைக் குழையாய் மழுத்தனக்கென் றேந்துவோன்
சங்கைக் குழையாச் சமைத்தபிரான் - வெங்கைப்
பழமலையா னும் பதியிலான் சீற்றம்
எழமலையா னு மிறைவன் - தொழமலையான்
வாழி யரம்பையர்தார் வண்டலயர் பேதையராப்
பூழி யெழுந்தளகம் போய்ப்படிய - ஆழிநெடுஞ்
செம்பொற் கொடித்தேர் திருமறுகி னூர்ந்துவர
அம்பொற் கொடிகுறுகு மன்னையரோ - டும்பர்க்
கரியா னெதிர்சென் றவர்தாழத் தாழ்ந்து
பெரியா னிலைசிறிதும் பேதை - தெரியாமல்
அன்னைமீ ரித்தே ரமர்பவன்யார் மைந்தனிது
பன்னுகவென் றூடைமுதல் பற்றுதலும் - மின்னனையார்
வற்புறுத்த வோர்பொருளை வள்ளுவனர் பத்துமுறை
சொற்பொருத்தி யோதுந் துணிவுபோல் - தற்பதத்தால்
ஓதும் பிரமமொரு தானென்ப தொன்றனைமால்
காதுபவம் பத்தெடுத்துக் காட்டினேன் - சாதம்
இவட்குநா மேதென் றியம்புவமென் றெண்ணித்
துவக்கும் வினைவழியாற் றேன்றும் - எவர்க்குமிவன்
தந்தையே யன்றித் தனையனு காதவன்காண்
அந்தமில்சீர்க் காரைக்கா லம்மைதனை - முந்தொருநாள்
தப்பா வருளாற் றனக்கம்மை யென்றவன்காண்

---

பாடும் வேய்ங்குழலையுடைய திருமால். துழாய் - துளசி. பனைக்கை - பனை போன்ற கைகளையுடையானை. கடிகொள் - மணங்கொண்ட. காவி - கருங்குவளை. பாவித்து - உள்ளத்தில் எண்ணி. உவப்பான் - மகிழ்வான். மகம் - தக்கனது வேள்வி. கசுரு - கஎ0. விருப்ப - விருப்பத்தையுடைய. வளம் - காமன். குழையா - காதணியா. பதியிலான் - தனக்கொரு தலைவனில்லாதவன். மலையான் - போர் புரியாதவன். தொழ மலையான் - தன்னை வணங்குவோரிடம் மாறுபடாமலிருப்பவன். பூழி - புழுதி. கஎ0 - கஎரு. பெரியான் - பெரியவனாகிய கடவுள். பன்னுக - கூறுக. காதுபவம் - வருத்துகிற பிறவி. சாதம் - உண்மை. துவக்கும் - வலிக்கின்ற. கஎரு - கஅ0. துப்பார் - வலிமை பொருந்திய.

அப்பா வெனுமொழியு மன்பினால் - துப்பார்
அயிலேர் மகன்மாட் டறிந்தவன்கா ணெங்கள்
மயிலே யெனவுரைப்ப மற்றும் - வெயிலேர்
இழையா ளிவனூ ரெவணுரையு மென்ன
உழையா ரிவனூர்நம் மூர்தான் - அழையாய்
விளையாட வென்று நகைத்து விளம்ப
முளையா முலையிளையாண் மோகங் - கிளையாள்
படிவ நனிநன்கு பார்த்தா டவழும்
முடியி லிளம்பிறையு முன்னாள் - வடிவழகன்
கையி லிளமானுங் காதலியா ளெம்பெருமான்
மொய்யகலம் வேய்ந்து முருகுயிர்க்குஞ் - செய்ய
கடுக்கையினைப் போதே கருத்தூழ் நடாத்த
மடக்கொடியிவ் வீசர்தோண் மாலை - அடுத்தெனக்கு
வாங்கி யுதவுமென மைக்கண் கலுழ்ந்துருகத்
தீங்கிலுமை பங்கன் றிருவிழவுள் - யாங்களிளம்
பேதையென வைப்பப் பெதும்பைச் செயலுமலால்
மாதிவளோர் மங்கைசெயன் மன்னினாள் - யாதினியாஞ்
செய்யுஞ் செயலென்று சிந்தித் துளங்கலங்கிப்
பெய்யுஞ் சிறுவளைக்கைப் பெண்ணமுதே - ஐயன்
திருத்தார் நினக்கிரத்தல் செய்தும் புனைதற்
குரித்தா முலைவந் துரத்திற் - பருத்தாலென்
றோதிக் கலுழ்கை யொழித்தா ரிவளன்று
பேதைப் பருவம் பெறுகையால் - ஆதிப்
பெருமான் விடுத்தகன்றான் பேரருளால் பாகத்
தொருமா னிவட்பார்த் துவந்தாள் - பொருமாரன்
நூறடுத்த கோடி நுனைப்பகழி கொண்டாலும்
மாறிவட்கென் செய்வான் வறிதகன்றான் - வேறொருத்தி

## பெதும்பை

சீர்க்கு மிளைஞராந் தேன்முரலும் போதாகப்
பார்க்கும் பெதும்பைப் பருவத்தாள் - யார்க்குந்

வெயில்ஏர் இழையாள் - ஒளிதங்கிய அழகிய அணிகலன்களை அணிந்த பேதை. எவண் - எவ்விடத்தது. உழையார் - பக்கத்திலுள்ளவர்கள். முளையா - தோன்றாத. கிளையாள் - தோன்றாதவளாகி. படிவம் - வடிவம். ௧௮௦ - ௧௮௫. மொய் அகலம் - வலிய மார்பு. வேய்ந்து - அணிந்து. முருகுயிர்க்கும் - மணத்தை வெளிப்படுத்தும். கடுக்கையில் - கொன்றை மாலையில். கருத்து - கருத்தை. ஊழ் - ஊழ்வலி. மடக்கொடி - பேதை. கலுழ்ந்து - அழுது. மன்னினாள் - பொருந்தினாள். ௧௮௫ - ௧௯௦. செய்தும் - செய்கிறோம். உரத்தில் - மார்பில். கலுழ்கை - அழுகை. ஒருமான் - மானைப்போன்ற பெரிய நாயகி. நுனைப்பகழி - கூரையுடைய கணை. மாறு - மாறுபாடு. வறிது - வீண். ௧௯௦ - ௧௯௫. முரலும் - ஒலிக்கும். கொள்ளுந்தகவை - எல்லோரையும்

தனைக்காணில் வாய்நீர் தரும்புளியி னுண்மால்
தனைக்காணி னல்குமொரு தையல் - நனைக்காமம்
உள்ள மரும்ப வுணர்வுடைய யோகிகட்குங்
கள்ள மரும்புகயற் கண்ணினாள் - கொள்ளுந்
தகைவையிரு பங்காக்கித் தாமிருப்பக் கண்கள்
முகவினடு விட்டசுவர் மூக்காள் - மிகவும்
புரிந்தநெடுங் கூந்தற் பொறைவருமுன் றுணல்
வருந்துநறுஞ் சந்த வளையாள் - திருந்த
மனங்குழைக்கும் பெண்வளர்த்தான் மானக் குதம்பை
கனங்குழைக்கு நல்கும்வார் காதாள் - முனங்குழைக்கும்
மண்விடுத்துப் பூசு மணங்குழைப்பாண் முன்பிறழ்ந்த
எண்விடுத்துச் செவ்வ னியம்புவாள் - பெண்விடுத்துப்
பூமங்கை யாணவாம் பொற்பினாள் கல்விகொடு
பாமங்கை தாளிற் பணிகுவாள் - காமன்றன்
வல்லியிவள் போலுமவள் வாட்போலுங் கண்ணினள
வில்லைபுகுந் தாயி னெனப்படுவாள் - மெல்ல
இடையயிரா தாழி யெழுங்கதிர்முன் றேன்றும்
முடி நுனிபோற் றேன்று முலையாள் - அடியழகு
பூழி யழிப்பப் புறந்திரியா டற்போற்றுந்
தோழியர்நூ றுயிரவர் சூழ்ந்துவரக் - கேழின்
நிலைய வுறுப்பு நிகரா தவற்றின்
வலைய மலைப்ப மனங்கொண் - டிலகிலஞ்சி
சென்று புகுந்துவளர் சில்லோதி தன்பகையாம்
என்றுநெடும் பாசி யிடையொதுங்க - மன்றனறுங்
காவிவிழி கண்டுகுப்பக் கண்ணீர் குழைபகைத்த
ஆவிபடர் வள்ளை யடிதுடக்கத் - தூவிதழ
ஆம்பன் மலர்வா யதுகண்டு வாய்திறப்ப
மேம்பல் வளைகழுத்தால் வீழ்ந்தொளிப்பக் - கூம்பல்
முகைகண்டு தாழ முலையை முழந்தாட்
பகைகண்டு ஞெண்டளைகள் பார்ப்பத் - தகைகொண்டு
வாய்ந்தகணைக் காற்கு வராலிரியத் தாட்புறக்குப்
போந்த கமடம் புறங்காட்டக் - காந்தளுடை
தன்னெதிர்கஞ் சஞ்சிவந்து சாயாது நிற்பக்கை

---

வருத்துதல் முதலிய பெருமையை. வளையாள் - கழுத்துடையவள். ககூரு - உ00. முனம் - பேதைப் பருவத்தில். பூமங்கை - திருமகள். ஆணவாம் - ஆண் தன்மையை விரும்பும். பாமங்கை - கலைமகள். அயிராது - ஐயப்படாமல். உ00 - உ0ரு. கேழில் - உவமையில்லாத. இலஞ்சி - தடாகம். சில்லோதி - சிலவாகிய கூந்தல். காவி - கருங் குவளை. உகுப்ப - சிந்த. வள்ளை - வள்ளைக்கொடி. ஆம்பல் - செவ் வல்லி. உ0ரு - உக0. ஞெண்டு - நண்டுகள். அளைகள் - வளைகள்.

அந்நிலையிற் கொய்தாங் கதுபற்ற - மின்னனையாள்
ஆடவரோ டாடினா ளாகப் புனலாடி
மாட மணிமறுகில் வந்துறலும் - நீடு
கரும்பு மலருங் கலந்துவிழை வாக்க
விரும்புமதன் போன்முலை வீதி - திரும்பிப்
பரிதிநெடுந் தேர்வருதல் பார்த்தவக லல்குல்
இரதியெனத் தானுமெதி ரேற்றாள் - கருதின்
அரிய நுதற்க ணரசையருள் காட்டுங்
கரிய மிடற்றமுதைக் கண்டாள் - உரிய
இறைவற்குத் தக்காங் கிறைஞ்சினா ளாலின்
முறைமுற் றிரத முதல - குறைவற்ற
மல்கு விழிவார வாரத் தகப்படா
தொல்கு மருங்கி லுமைமங்கை புல்குந்
திருத்தோளிற் கண்வழிதன் சிந்தைபோய்க் காம
எரித்தோற்ற மெய்துறுமவ் வெல்லை - உருத்தோர்
பெருநாண் டடுத்துப் பிணைவிழியு ணீருங்
குருநாண் மலர்க்கைக் குருகும் - அரநாண்
அகல்கின்ற வல்குலிற்பட் டாடையுநிற் பிக்கப்
புகல்கின்றா ளிம்முளரிப் பூவைப் - பகல்குன்றச்
சோதி தருமிவற்குச் சூட்டியக்கா னற்றிவன்றான்
ஏதுதரு நல்கு மெனக்கென்ன - ஓதி
பெருகொருத்தி சென்றருகு பெண்ணணங்கே யின்பம்
பருகற் கிரண்டாம் பதமாம் - அருகிருத்தல்
ஈந்தருளு மென்ன விறைவி யருகிருப்பு
வாய்ந்த முதற்பதமா வைத்தெண்ணிப் - போந்த
மனக்களிப்பு மல்கிமலை மாதையஞ்சி யீசன்
தனக்களிப்ப வெண்ணுமலர் தன்னை - நினக்களிப்பன்
என்ன வவடா னிவண்மனம்பே தித்ததெனக்
கன்ன லனையமொழிக் காரிகையே - பொன்னிரதம்
மங்கை முலைகளோ வள்ளறடந் தோள்களோ

---

வராலிரிய - வரால் மீன்கள் அஞ்சியோட. தாட்புறக்கு - புறவடிக்கு. கமடம் - ஆமை. புறங்காட்ட - தோற்றோட. காந்தள் - காந்தள் மலரும். உடை - தோல்வியடைய. கஞ்சம் - தாமரை. சாயாது - தோல்வியடையாமல். ஆடினாளாக - கலந்தவளைப்போல. மணிமறுகு - அழகிய தெரு. உ௧௦-உ௧௫. எதிரேற்றாள்-எதிரே சென்றாள். விழவு - திருவிழாவின். ஆரவாரத்து-ஆரவாரத்தில். ஒல்கும்-அசையும். புல்கும் - தழுவும். காமஎரி-காமத்தீ. உருத்து-சினந்து. உ௧௫ - உ௨௦. குரு-செந்நிறமமைந்த. குருகு - வளையல். அர - பாம்பும். நாண் - நாணு இன்ற. முளரிப்பூவை - தாமரை மலரை. ஓதி - அறிவு. உ௨௦ - உ௨௫. மல்கி - மிகுந்து. பேதித்தது - மாறுபாட்டையடைந்தது. கன்னல் - கரும்பு. உறுப்ப - தாக்க. கொலைமாலை வேற்கணாள் ஈ

இங்கிவையி னல்ல வியம்பென்ன - அங்கவளுங்
கூருது தன்கடைக்கண் கோமான் புயத்துய்ப்ப
வேருன துள்ளமெனன் மெய்யென்று - தேருக்
கொலேமாலே வேற்கணுட் கொண்டுமட மாதர்
தலேமாட வீதியய னீங்கச் - சிலேமாரன்
கிட்டிக்கொண் டெந்தைமுன்செல் கின்ற விநாயகற்குக்
குட்டிக்கொண் டெய்யநாட் கொண்டகன்ருன் - சுடடிக்கொண்
டொப்பாக வோதற் கொருபொருளு மில்லான்றேர்
அப்பான் மறுகி னடைந்ததால் - இப்பால்

## மங்கை

இலர்போ லவாவி யிசையளிக ளுண்ணுண்
மலர்போன் மலர்செவ்வி மங்கை - அலர்போ
தலேமங்கை செய்யா ளறவுங் கரியாள்
மலேமங்கை சாலவுமென் மங்கை - கலேமங்கை
வெள்ளே யவட்கருத வேண்டா வெனுமங்கை
கள்ளே விடுத்துமதங் காண்மங்கை - கிள்ளேமொழிச்
செந்திருமென் கொங்கை திருமா றிளேக்குங்கால்
புந்திதனிற் கொள்ளும் பொலிவினள் - இந்திரன்றன்
ஆக்கத் தினேவிழையா வாற்று மருந்தவங்கள்
நீக்கித் தனேநினேயு நீர்மையாள் - சீர்க்கமல
ஆதியயன் மீக்கூ ரரம்பையரை யாக்குங்கால்
மாதிரிகை யாகவுனும் வாய்ப்பினுள் - சோதிமணி
அன்று சுடரொன றமைந்த மனேபுகினுங்
கன்று தளிர்மெய்க் கவினுடையாள் - இன்று
திருத்தேர் விழாவென்று சேடியர்க ளீண்டி
மருத்தே ரளிசூழ் மலருந் - திருத்தேர்
இழையுந் துகிலு மெனேத்துங் கொணர்ந்து
விழையும் படியணிய வேண்டக் - குழையும்
மனத்தொடுமென் றூசு மணிமே கலேயாம்
இனத்தொடு சேரவுடுத் திட்டுச் - சனித்தவிடம்

---

கொலே செய்யுந் தன்மையையுடைய மாலேயணிந்த வேற்படை போலுங் கண்ணேயுடையவள். எய்ப - கணே செலுத்த. உஉரு - உகூ0. இலர் - வறுமையுடையவர். நாள் மலர் - அன்றலர்ந்த மலர். அலேமங்கை - திருமகள். அறவுங்கரியாள் - மிகவுங் கருமையானவள். உகூ0 - உகூரு. ஆக்கம்-செல்வம் ஆற்றும்-செய்யும். நீர்மையாள்-தன்மையுடையவள். ஆதி - எண்ணிக்கையில் முதலாகிய. மீக்கூர் - தெய்வலோகத்துள்ள அழகுமிகுந்த. மாதிரிகை - மாதிரி. உனும் - எண்ணுகின்ற. வாய்ப்பினுள்-மாட்சிமையுடையவள். கன்று-கைகின்ற மருத்தேர் - நறுமணத்தை ஆராய்கின்ற உகூரு-உசா0. இழை- அணிகலம். துகில் - ஆடை. விழையும்படி - விரும்புமாறு. குழையும்

முற்றுங் கவரா முகின்முலைமுன் றானையால்
முற்றுங் கருணைகொடு மூடினாள் - முற்றும்
புருவவணி மாறுப் பொருவிழிக்கு மையிட்டு
உருவ மதியை யுவந்து - மருவுமொரு
பைத்த நெடியகரும் பாம்பென்னப் பின்னுபுமுன்
வைத்த குழலின் மலர்புனைந்தாள் - மொய்த்தபுகழ்
ஈசற்குத் திங்களொன்றே யென்றுகதி ரும்பிறையும்
வாசக் குழன்முன் வகுத்தணிந்தாள் - நேசத்
திலக மதிக்கிழிந்த சிற்றரவ மென்ன
இலகமணிச் சுட்டிபுனைந் திட்டாள் - கலகமிடக்
கண்ணிற்கு வேள்விடுத்த வோலையெனக் காதிற்கு
வண்ணப்பொன் னோலை வதிவித்தாள் - நண்ணி
முயங்கு முலையாணி முழுமதியோ டென்ன
வயங்குகொடி மூக்கார மாட்டி - உயங்கியயல்
ஏனை மதிமாத ரெல்லா மிருப்பதென
ஆனமணி மாலைகழுத் தார்வித்தாள் - மானவனை
காக்க மணிபொற் கடகங் கரஞ்செறித்துச்
சேக்க வடியிற் சிலம்பணிந்தாள் - நோக்கமுதம்
அன்னா ளொழிந்த வணிபலவுந் தாங்கினாள்
பொன்னா லியன்றவுருப் போன்றமைந்தாள் - பின்னால்
உருப்பசி யன்ன வொருத்தி யளிப்பக்
கருப்புரமென் பாகு கவுட்கொண் - டிருப்பவொரு
மாது குறுகி மயிலேபொற் றேரொடுநம்
வீதிதனில் வந்தான் விமலனென - யாதும்
வருவதுண ராமன் மகிழ்ந்தெழுந்து நங்கை
பொருவதரும் வீதி புறப்பட் - டுருவதிவி
உற்றபெருந் தானையென வுண்கண்ணு மொண்கவுளும்
பற்றுபுகர் வாளும் பரிசையுமாம் - முற்றிழையார்
எண்ணிலா ரீண்டி யிருமருங்கும் போற்றிவரத்
தண்ணிலா வேணியரன் றன்னெதிர்போய் - அண்ணல்மேல்
வண்டு மலரென்னும் வார்சிலையி னேர்தொடுத்துப்
பண்டுமத னெய்த பரிசென்னக் - கொண்டு
விலங்க விழிப்பகழி விற்புருவ மேற்றி
இலங்க வருமிறைதோ ளெய்தாள் - கலங்கலரும்

---

மனம் - கனிந்த உள்ளம். முகிள் - முகிழையொத்த. பொருவிழி - காதோடு போர் செய்கின்ற விழி. பைத்த - படத்தையுடைய. உ௪0 - உ௪௫. கதிரும் பிறையும்-சூரியப் பிறையையும் சந்திரப் பிறையையும். வேள் - காமன். மூக்காரம் - மூக்குத் தளுக்கு, மூக்குத்தியென்பர். ஆர்வித்தாள் - சேரச் செய்தாள். உ௪௫ - உ௫0. சேக்க - சிவக்கு மாறு. நோக்கமுதம் - பார்த்தற்குரிய அமுதம். அன்னாள் - ஒத்தவள்.

அண்ணருன் யோகநிலை யன்மையாற் றன்பரிதிக்
கண்ணினு னோக்கவெரி காமத்தீ - ஒண்ணுதலான்
ஆகநீ ருகா வளவுபோய்ப் பற்றுதலும்
போகமார் மாலை பொடிந்தொழியப் - பாகவாஞ்
சொல்லாள் பணியுட் டொலைந்தன வன்றியுள
எல்லா முருகி யிலையாக - நல்லார்
இதுவந்த தெம்மா லெனவுள்ள மாழ்கி
மதுவந்த கொன்றையந்தார் வள்ளல் - எதிர்வந்து
நின்று தொழுவா னினையிங் கியாங்கொணர
என்று மறியா விடும்பையெலாம் - அன்றிவட்குத்
தந்தா யுலகியல்பு தானுமலாற் புன்மாலை
வந்தால் வருத்தும் வளர்பிறையை - அந்தோ
சுமந்துவந்திப் போதே சுடுவித்தா யீதுன்
அமைந்த திருவருளுக் காமோ - சமைந்தவொரு
கோதை யனையாள் குழலிசைய வண்டுறலால்
மேதைதரு கல்யாணர் வேண்டுதலால் - போதுபல
பூத்த வவயவமாம் பொற்பினு லூறினிமை
வாய்த்தமையான் மாரு மணத்தினுல் - சீர்த்திபுனை
நின்றிருத்தோட் கேற்ற நிலையா ளணைந்தருளாய்
என்றுரைத்து வேண்டுதலு மெம்பிரா - னன்றடுத்த
பங்குமையை யஞ்சிப் படர்சடையில் வைத்தொளித்தாம்
கங்கையினை யிவ்விருவர் காணுமல் - எங்கிவளை
நாமொளிப்ப மென்று நடாத்தினன் பொற்றிருத்தேர்
காம னடுத்துக் கணைமாரி - கோமளப்பொன்
வஞ்சிமிசை தூர்த்து வருந்திக்கை விட்டகன்ருன்
அஞ்சனவேற் கண்ணு ளவட்கப்பால் - கஞ்சம்

மடந்தை

அடங்கு பொகுட்டி னமர்திருவிற் கோடி
மடங்கு கவின்கூர் மடந்தை - நுடங்கு
கொடிமின் னொழுக்காக் குளிர்புயன்மே னின்ற

---

கருப்புரமென்பாகு - பச்சைக் கற்பூரங்கலந்த பாகடை. உருவிலி - காமன். உ௫0 - உ௫௫. உண்கண் - மையுண்டகண். ஒண்கவுளும் - ஒள்ளிய கன்னமும். முற்றிழையார் - வேலைப்பாடு முற்றிய அணிகலன் களை அணிந்தவர்கள். விழிப்பகழி - விழிக்கணை. விற்புருவம் - புருவ மாகிய வில். பரிதிக்கண் - கதிரவனாகிய கண். உ௫௫ - உ௬0. ஆகம் - உடல். பொடிந்தொழிய - தூளாக. பாகு அவாம் - இனிமை பொருந் திய பாகும் விரும்புகின்ற. இலையாக - இல்லையாக. மாழ்கி - வருந்தி. இடும்பை - துன்பம். புன்மாலை - இழிந்த மாலைக்காலம். உ௬0 - உ௬௫. கோதை அனையாள் - மாலையைப் போன்றவள். மேதை தரு - மேன்மைபெற்ற. ஊறினிமை - பரிசவின்பம். உ௬௫ - உ௭0. கோமளம் - இளமை. வஞ்சி - வஞ்சிக் கொடி. அந்

படிமன்னு கூந்தலுடைப் பாவை - தொடிமன்னு
செங்கைக் குமாரவேள் செவ்வேலை யொப்பாக்கச்
சங்கப் புலவர்க்குத் தானுரைப்ப - அங்கடுத்து
உஎ௦ மாரவே ளம்பாக்கின் வார்புருவக் கென்சிலையும்
நேருமே யென்னு நெடுங்கண்ணாள் - சீருலாங்
காரளகம் வின்னுதல்வேற் கண்குமிழ்மூக் கூசல்கா
தாரமெயி றூம்பலித ழாடிகவுள் - வேரரூள்
காந்தளங்கை யோதிகொங்கை காயமிடை வாழைதொடை
மாந்தளிர்செந் தாளென்று மாதரெனப் - போந்தவர்கள்
எல்லார்க்கு மொப்ப விசைப்பவற்றை யொப்பாக்கல்
பொல்லா தெனவுயர்ந்த புத்தமுதம் - நில்லாமல்
மாதவர்கண் மால்கொள்ள மால்கொண்ட பெண்ணுருவும்
யாதுமழ கில்லை யெனவந்தாள் - கோதில்
உஎரு துறவறமொன் றுண்டென்று சொல்லுமுறை தற்கண்
ணுறுமளவு மென்னு முருவாள் - பொறியரவும்
மந்தர வெற்பு மறிகடலு மின்றமுதந்
தந்தருளுஞ் செவ்வாய்த் தளிரியலாள் - செந்திருவோ
டொத்தக லாத வுயிர்ப்பாங் கியைவிளித்து
முத்த மணல்பரந்த முன்றில்வாய் - இத்தலையில்
வென்று ளுடைந்தாள் விரிபசும்பொற் பூண்கொள்க
என்றாள் பொருந்தி யிளந்தளிர்க்கைக் - கன்றுடக்
காமர் மணிமே கலைகலிப்பப் பூணொலிப்பச்
சேமவிடை யின்றென்று தேராத - தாம
உஅ௦ முலைமேற் றுகினுடங்க முண்டகச்செம் போதில்
சிலைமேற் சிறுவியர்வு சேரத் - தலைமேல்
சுரும்பரெழுந் தார்ப்பத் துகண்மாலை தூர்ப்பக்
கருங்குவளைக் கண்பிறழ்வு காட்டப் - பெரும்புவியில்
முந்தடித்துச் செல்வ முறையாற் றொடர்வதென
அந்தரத்து மங்கை யடுத்தெழுவான் - பந்தடித்துப்
பூவை விளையாடும் போதி லொருமூவர்
பாவை விழையும் பழமலையான் - கோவை
எழுதுந் திருக்கரத்தா னெய்யாமல் வேதம்

---

சணம் - மை. மொட்டு - தாமரைக் கொட்டை. நுடங்கு - அசைகிற. தொடி - கடகம். உஎ௦ - உஎரு. நேரும் - ஒப்பாகும். கார் அளகம் - கூந்தல் முகில். வில் நுதல் - நெற்றிவில். வேல் கண் - கண்வேல். ஓதி - மலை. காயம் - ஆகாயம். மால்கொண்ட - திருமால்கொண்ட. கோதில் - குற்றமற்ற. உஎரு - உஅ௦. இத்தலையில் - இவ்விடத்தில். உடைந்தாள் - தோற்றாள். கன்று - வளையல். கலிப்ப - ஒலிக்க. சேமம் - காவல். உஅ௦ - உஅரு. முண்டகச் செம்போது - செந்தாமரை மலரைப்போன்ற முகம். சிலை - நெற்றி. தூர்ப்ப - சிந்த. பிறழ்வு - பிறழ்தல். முந்து - முன்னர். முறையால் - ஊழின் முறையால்.

முழுதும் புகழு முதல்வன் - தொழுதுந்
துதித்து முழுநாட் டொலைப்போ ருளத்தான்
விதித்து வருமோர் வினையுந் - திதித்தொழிலும்
கொள்ளுமவ ரோடுலகங் கோறற் றெழில்புரிந்துந்
தெள்ளுமரு ளாண்மை சிதையாதான் - உள்ளுமறை
கற்றும் பிறரைக் கடவுளென்பார்க் காண்கைமுதற்
குற்றம் பொறுத்தெனையாட் கொள்ளுவான் - முற்றுந்
தனக்கடிமை யென்னுமாற் றம்பிரான் பூட்கைச்
சினக்கடிய வேழவுரிச் செல்வன் - மனக்கினிய
துங்க மணிநெடுந்தேர் தோன்றுதலும் வல்விரைந்து
நங்கைவரிப் பந்தொடும்போய் நண்ணினாள் - எங்கள்
கருத்தனைமுன் கண்டாள் கருநெடுங்கண் ணீரோ
பருத்த முலையின் பசப்போ - தெரித்தமலர்ப்
பைந்தெரிய லின்புலர்வோ பல்வளைக ளுஞ்செலவோ
வந்துவளர் நாற்குணத்தின் மாய்தலோ - முந்தியதிங்
கேதோ வறியோ மிவையெலா மெய்தினாள்
காதோ டமர்செய் கயற்கண்ணாள் - மாதோர்
புறத்திருப்பக் கண்டுதான் புல்லியமேற் சேறல்
மறுத்தடுத்தோர் சூழ்ச்சி மனத்துள் - குறித்து
நினக்குவென்றி யாயி னினக்கே யிவர்தோள்
எனக்குவென்றி யாயி னெனக்கே - இனக்கரியுங்
கோடாத நின்பாற் கொழுநனே யென்றெடுபந்
தாடா யெனவுரைப்ப வப்பாங்கி - ஓடா
அணங்கே யெனப்போ லவளைமதித் தாய்கொல்
இணங்கே ருனக்கொவ்வா ளேனும் - குணங்கூர்
இறைவி யலளோ விதுதகுமோ வென்ன
மறைவி யலனிவ் வழக்குப் - பெறவிவ்
விருவர்க்கு மோது மியற்கைத்தன் றென்று
உருவக் கொடிநெடுந்தே ரூர்ந்து - விரைவில்

---

பூவை - பெண். மூவர்பா - தேவாரம். கோவை - திருக்கோவையார். ௨௱௫ - ௨௱௰. முழுநாள் தொலைப்போர் - முழுநாளையும் போக்குபவர். திதித்தொழில் - காத்தற்றொழில். கோறல் - கொல்லுதல். தெள்ளும் - தெளிந்த. அருளாண்மை-திருவருளையாட்சி செய்யுந்தன்மை. வல்விரைந்து - மிகவிரைந்து. நங்கை-மடந்தை. ௨௱௰-௨௱௰௫. கருத்தன் - தலைவன். பசப்பு - பசலை. புலர்வு - வாடுதல். செலவோ - கழலுதலோ. வளைகள் - வளையல்கள். மாய்தலோ - அழிதலோ. இவையெலாம் - இச் செயலெலாம். அமர் - போர். புல்லிய - தழுவ. மறுத்து - நீக்கி. இனக்கரி - ஒத்தசாட்சி. ௨௱௰௫ - ௨௱௨௰. கோடாத - மாறுபடாத. அவளை - அவளையும். ஏர் - அழகு. மறவி - மறதி. இயற்கைத் தன்று - இயல்புடைய தன்று. மதன் - காமன் —

திருத்து மிவள்பொற் றெருக்கடந்து சென்றான்
வருத்துமத னண்டொழிய மற்றும் - ஒருத்தி

அரிவை

தருமுத்தி வேறென்போர் தாமுந்தற் சேரல்
அருமுத்தி யென்னு மரிவை - ஒரு முத்தி
வேண்டியுகங் கோடி விளைத்த தவங்கொடுத்துக்
காண்டலுந் தற் கொள்ளக் கருதுவான் - ஈண்டிமதி
நன்னிருள்சென் றுச்சி நணுகிற் குழலொடொவ்வா
ஒன்னெழில் வாண்முகத்தோ டொப்பாவாள் - விள்ளலறு
நேர்ந்த விளைநறு நெஞ்சியங்கு மாறென்ன
வார்ந்தநெடுங் கூந்தல் வகிரினாள் - சேர்ந்த
கயிரண் டொத்துக் கடைசிவந்து நாப்பண்
அயலிருண்டு வெண்ணிறத்த வாகி - மயல்புரிந்து
நீண்ட வடிவகன்று நேர்வள்ளை மீதோடிக்
காண்டகைய வாயினிகர் கண்ணினாள் - தூண்டுசுடர்
அன்ன மணிக்குழைக ளஞ்சனவேற் கண்டள்ள
மன்னவிருந் தாடுசல் வார்செவியாள் - தன்னுள்
திலவை விரித்தொடுக்கி நிற்குங் குமுத
மலருளதே லொக்குநகை வாயாள் - இலகவரி
மூன்றெய்தி யொள்வளைவெண் முத்து வடமாகக்
கான்றெய்தி னொக்குங் களத்தினாள் - ஈன்றெய்து
மாந்தளிர் முன்னாள் வரையன்றி யொவ்வாத
வேய்ந்தொளிர் பல்வளைய மென்கையாள் - ஏந்திடைமேல்
ஏயு மிருவா ரெழிலொருவா மிக்கவலி
வீயு மெனவெழுந்த வெம்முலையாள் - காயமெனப்
பொய்கூ றியவறியேம் புண்டரிகத் தாளிமையின்
செய்கூறென் றெண்ணவுள சிற்றிடையாள் - மைகூர
நேர்ந்த வெறும்புகுழி நின்றெழல்போ லுந்திமிசை
வார்ந்த வுரோமமெனும் வல்லியினாள் - கூர்ந்தமணி
நேமி வளைகொ ணெடியோன் றிருவுந்தித்
தாமரையை வென்றிகழுந் தாளினாள் - சோமமுடி
காண நடக்குங் கருத்தாற் பறந்தவன்னம்

---

அண்டொழிய-அவ்விடமே நிற்க. ௧௦௦-௧௦௫. ஒரு முத்தி-ஒப்பற்ற வீடுபேறு. ஒவ்வா - ஒப்பாகாத. ஒள் - ஒள்ளிய. வார்ந்த - ஒழுகிய. வகிர்தல் - பங்குசெய்தல். ௧௦௫ - ௧௧௦. வள்ளை - காது. மன்ன - நிலைபெற. கான்று-கக்கி. வேய்ந்து-பொன்னாலு மணியாலும் அழகு செய்யப்பட்டு. வளைய - வளையல்களையுடைய. ௧௧௦ - ௧௧௫. இரு - பெரிய. வார் - கச்சு. எழில் - அழகு. ஒருவா - நீங்காத. வீயும் - அழியும். கூறிய - கூற. மைகூர - கருமை பொருந்த. உந்தி - கொப்

நாண நடக்கு நடையினள் - வீணை
கரங்கொண்டு செம்பவளக் கான்மணிமா டத்து
வரங்கொண்ட பொற்றவிசின் வைகி - மரங்கொண்ட
கோடு குழைந்து குழைப்பச் சிலைவன்மைப்
பாடு குழைந்து பழமாகப் - பாடும்
இசையால் விளர்ப்பெஞ்சா தெய்துகலை மான்கை
அசையா வியவா வயர - நசையால்
நரம்புமொழி கற்க நவிற்றுங் குருவின்
இரங்கு மிசைபாடி யேற்றி விரும்பமுதம்
அன்ன ளிருப்ப வவள்பாங்கி சென்றுமலை
முன்னா ளுருக்கு முனிநிகர்வை - இந்நாள்
அசையா தடுத்த பழமலையை யன்ன
இசையா லுருக்குவா யென்ன - இசையா
எளிய திதுவென் றிசைவீணை யோடும்
அளிய னெதிர்சென் றடைந்தாள் - ஒளிகொள்
மதியூர் முடியு மரைமே வடியுங்
கதிர்வேல் விழிகளிப்பக் கண்டாள் - கொதியா
வெருவுறுப்பச் சென்று வெருவுற்றுங் கென்னே
மருவுறுக்குங் கொன்றை மலையை - உருகுவிப்பச்
சார்ந்தாள் பழமலையாற் றானே யுருகுற்றாள்
சோர்ந்தாள் விழியருவி தூங்கினள் - தேர்ந்தாள்
மொழிகற்ற வீணை முறையென்ன வீழ்ந்து
பழியற்ற தாளிற் பணிய - ஒழிவற்ற
கோல்வளைக டோற்றாள் குவிமுலைகள் பீர்பூத்தாள்
நால்வகைய பண்பு நழுவினள் - சூல்வளையின்
நொந்தா ளதுபாங்கி நோக்கி யருண்மலைமுன்

---

பூம். நேமி - உருளை. வளை - சங்கு. சோமமுடி - திங்களையணிந்த முடி. ௧௧௫ - ௧௨௦. வரம் கொண்ட - மேன்மையைக் கொண்ட. கோடு - கிளை. சிலைவன்மை - மலையாற்றல். பாடு - பெருமை. குழைந்து - கெட்டு. விளர்ப்பு-மேனி வெளுத்தல். கலைமான் - நாமகள். வியவா-வியந்து. அயர - சோர. நரம்பு - வீணை நரம்பு. நவிற்றும் - கற்பிக்கும். குருவின் - குருவைப்போல. மலை முன்னாள் உருக்கு - இராவணன் பொருட்டு முன் காலத்தில் அகத்தியர் இசைபாடி மலையை உருகச் செய்த செய்தி கூறப்படுகிறது. ௧௨௦ - ௧௨௫ இசையா - இசைந்து. அளியன்-அருளையுடையவன். மதியூர்முடி-திங்கள் தவழும் முடி. மரைமேவு அடி - தாமரை மலரைப்போலப் பொருந்திய திருவடி. வெருவுறுப்ப - அஞ்சுதலைச் செய்ய. மருவுறுக்கும் - வாசனை பொருந்தும். கொன்றைமலை-சிவபெருமான். உருகுவிப்பச் சார்ந்தாள்-உருக்குவிக்குமாறு சென்றாள். உருகுற்றாள் - அம்மலையால் தானே உருகினாள். தேர்ந்தாள் - இசையில் தேர்ச்சி பெற்றாள். ௧௨௫ - ௧௩௦. கோல் வளைகள் தோற்றாள் - வளைந்த வளையல்களை இழந்தாள். பீர் - பசலை. நால்வகைய பண்பு - நாற்குணங்கள். சூல்வளை - சூல் கொண்ட சங்கு.

வந்தாடன் யாழான் மகிழ்வித்து - நந்தா
இசைபெறுவா னெண்ணி யிழந்தாண் முதலுந்
திசைபெறுவான் வந்தெழுந்து தீரா - வசைபெறுவான்
நின்றா ளெனக்கொண்டு நில்லாது போயினாள்
குன்றாத வன்பினொடு கூடவே - நன்றாளும்
ஆறாய னார்த மரியவிசைக் கல்லாமல்
கானார் மலர்க்குழலாள் காமமொடு - தானாளும்
இன்னிசைகேட் டுள்ளுருகற் கிம்மலைதா னம்மலையோ
என்னிசையச் சொல்கென் றெடுத்தியம்பிப் - பொன்னவிர்செம்
பூண்டயங்கு மென்முலையா ரேனையர்பின் போயினார்
காண்டகுநம் வெங்கைநகர்க் காவலான் - நீண்ட
கருமா லுலகங் கடந்தான்றன் கண்கள்
திருமா மலரென்ற றேற்றம் - வருமாறு
தொள்ளா யிரத்துத்தொண் ணூற்றொன்ப தொண்மலரும்
எள்ளா விழியொன்று மிட்டவடி - உள்ளான்
மதனன் மலர்ப்பகழி மாறா மறுகில்
புதுநன் மணித்தேரிற் போனான் - அதனில்

## தெரிவை

இருந்த பதினா யிரவரம்பை மாருள்
தெரிந்துமதன் வைத்த தெரிவை - திருந்த
நடந்தா லரசவன்ன நச்சப் படாத
தடந்தா மரைவென்ற தாட்கும் - அடைந்தார்க்கும்
வண்டமை யாது வரியாழ் பயிலாது
தண்டளிர் தோல்வி தருகைக்கும் - கொண்டமணிக்
கண்ணின் றிருக்குங் கனக மலைவணங்க
எண்ணின் றிருக்கு மிளமுலைக்கும் - புண்ணின்
றணங்குறுவ தன்றி யருள்புரியா வேலின்
இணங்கெறியு முண்க ணிணைக்கும் - வணங்கி
ஒடியும் வரிசிலைநா ணுந்திருப்ப தென்று
கடியு முரிபுருவங் கட்கும் - நெடியமணி
வள்ளைக் கொடிபான் மருவிலகண் ணோட்டமெனக்
கொள்ளைக் கவின்கூர் குழைகட்கும் - தெள்ளுற்
றுவமைகூ றக்கருதி னொன்றற்கொன் றல்லா

---

அருள்மலை - மலைபோன்ற அருளையுடைய சிவபிரான். நந்தா - கெடாத. முதலும் - யாமையும். நன்றாளும் - நன்கு அடிமைகொண்ட. ௧௩௦ - ௧௩௫. நச்சப்படாத - விரும்பப்படாத. வண்டு-வளையல். வரியாழ்- இசை பொருந்திய யாழ். கண் - முலைக்கண்; சூசுகம். கனகமலை - மேருமலை. ௧௪௦ - ௧௪௫. அணங்குறுவதன்றி - துன்பத்தையடைவ தல்லாமல். வேலின் இணங்கு - வேலின் இணங்குதலை. உண்கண் -

துவமைவே றில்லா வுருவாள் - உவமை
கரியகுழ லாகக் கமஞ்சூன் முகிருன்
உரியபொரு ளாக வுரைப்பாள் - அரியமலர்
கொள்ளைகொள வெண்ணிக் குயில்கூவ நல்லாய
வெள்ளமொடு சென்றுபொழின் மேவினள் - கள்ளழியப்
பூத்தகொடி தான்வருமுன் பூம்பணைகண் மீதேற
வார்த்தைகொடு கிள்ளை மருங்கிரியக் - கூத்தரென
ஓதி முகில்கண் டுவந்து பயிலாடத்
தீதில் விழிகண்டு தேனினங்கள் - தாதில்
விழுந்து படிந்துவரும் வேருகப் பல்வண்
டெழுந்துமலர் வாய்கண் டெதிரச் - செழுந்தாள
வெண்ணகையாள் கண்டு விடுத்துத்தன் மூக்கையெதிர்
ஒண்ணகைய சண்பகங்க ளுள்ளவெலாம் - பெண்ணரசு
சென்று கவர்ந்துநனி சிக்கயாத் திட்டுமுலை
என்று பெயரியவெற் பேற்றினள் - மன்றறங்
குறுகியிளந் தென்றலெதிர் கொண்டிருப்பச் சேணில்
உறுகொடிய தேர்தோன் றுதலும் - மறுகில்
நிரம்பு கதிர்நேர் நெருஞ்சியெனத் தன்பால்
திரும்புவிழி யாயமொடு சென்ருள் - குரும்பைநிகர்
கொங்கைநீ லுண்கட் கொடிமென் றளிர்போன்ற
அங்கைநீள் கூந்தலின்மே லஞ்சலித்தாள் - கங்கைநீர்
பாய்ந்துதளி ராது பவள நிறக்கொழுந்தில்
சாய்ந்துபடர் வஞ்சிச் சடையழகும் - வாய்ந்தசிலை
ஆக்கந் தருமதவே ளஞ்சத் திலகமென
நோக்கங் கிடந்த நுதலழகும் - பார்க்கும்
விழியாய்க் கிடந்தசுடர் மேல்வா சிகைபோன்
றழியாப் புருவத் தழகும் - பழியாப்
பரசு வருங்கை பழித்தருள்வந் தெய்தி
அரசு செயுங்கண் ணழகும் - வரிசைபடு
தொண்ட ரகத்தமருஞ் சூளா மணிவதன
முண்டகத்துக் கேற்றகொடி மூக்கழகும் - மண்டுகருத்
தோடிமலை வேந்த னுலாவமுதுண் டென்கவிப்புன்

---

மையுண்டகண். வரிசிலை - வரிந்து கட்டப்பெற்ற வில். நாண் - நாணம். கடியும் - வெறுக்கும். மூரி - வளைந்த. கமஞ்சூல் - நிறைந்த சூல். ௧௪௫ - ௧௫௦ மருங்கிரிய - பக்கத்திலே ஓட. ஓதிமுகில்-கூந்தலாகிய முகில். தரளவெண்ணகையாள் முத்தைப் போன்ற வெள்ளிய பற்களையுடையவள். ௧௫௦ - ௧௫௫. சிக்கயாத் திட்டு - நன்கு அகப்படுமாறு கட்டி. சேணில் - தொலைவில். அங்கை- அழகிய கையை. ௧௫௫ - ௧௬௦. பரசுவருங்கை - மழுப்படை பொருந்திய கை. வரிசைபடு - முறைமை பொருந்திய. வதனமுண்டகம்-

காடிமுனி யாதருழைக் காதழகும் - பீடிசைய
ஆத்தமொழி யாகவனைத்தும் பயில்வேத
வார்த்தை மொழியுமலர் வாயழகும் - ஏத்துறுதன்
ஏவ லிருக்கு மிமையவர்மேற் சென்றவிடங்
காவ லிருக்குங் கழுத்தழகும் - நாவல்
விலங்கலுன் றிண்மை விடுத்து வணங்கும்
அலங்கலுழ் திண்டோ ளழகும் - இலங்க
எடுத்தமழு மானபய மேனை வரதம்
அடுத்தமல ரங்கை யழகும் - வடித்தகதிர்
வேலு மெனுங்கண் விளங்கிழைகொங் கைத்தழும்பு
மாறு வணியினுறு மார்பழகும் - நூறுய
எண்ணிற் சிறந்த விதழ்மலரா டாழுநெடுங்
கண்ணிக் கனையாங் கவானழகும் - நண்ணிக்
குடித்தாவி கூற்றெங் குடிமுழுது மாட்கொள்
அடித்தா மரையி னழகுங் - கடித்தாம
மென்முலைகண் ணிற்கு விருந்திட் டமையாது
நன்மணிமுத் தும்புனைய நல்கினள் - பொன்மலையை
வாரொழுகுங் கொங்கைபெறும் வண்ணத்தா னுங்கடந்தாள்
போரொழுகும் வேளாற் பொலிவழிந்தாள் - சீரொழுகும்
வைத்தமணி கண்டன் வதனத் தொடுவதனம்
வைத்துமுலை வேழமலை மார்புபொர - நெய்த்தகுழல்
மாது தழுவ மனங்கொண்டு பித்தளையச்
சூதுபொரு சந்தமுலைத் தோழிமார் - மூதுலகில்
ஆடவர்க டம்மி லழகனு மாயோனும்
பீடமையு மைத்தடங்கட் பெண்ணுருவாய்க் - கூட
இருந்த பெருந்தகையை யெங்குலப்பெண் வேட்டு
வருந்தறகு மென்று மதித்து - விரைந்து
மனையிற் கொடுபோய் மலரணையிற் சேர்த்த
வினைவுற் றுயிருண் டிலையென் - றனைவர்க்கும்
ஐயம் விளைய வவள்சோர்ந்து பின்றெளிவுற்
றுய்யும் வகையே துரைமினென்றாள் - ஐயன்
உருவெளியைக் கண்டா ளுழையரைச்செல் கென்றாள்
அருவெளியைப் புல்கி யுயர்ந்தாள் - பொருவெளியர்

---

முகத்தாமரை. மலைவேந்தன்உலா - சேரமான் பாடிய திருக்கைலாய உலா. பீடிசைய - பெருமை பொருந்த. ௧௬௦ - ௧௬௫. ஆத்த மொழி - உறுதி மொழி. இமையவர் - தேவர். நாவல் - நாவலந் தீவு. விலங்கல் - மலை. அலங்கல் - மாலை. மடுத்த - பொருந்திய. வடித்த கதிர்வேல் - கூராக்கப்பட்ட ஒளி தங்கிய வேல். மாறு - நீங்காமல். ௧௬௫-௧௭௦. கவான் - தொடை. வார் ஒழுகும்-கச்சுப் பொருந்தும். மைத்தமணி - நீலமணி. ௧௭௦ - ௧௭௫. சூது - சொக்கட்டான் காய். வேட்டு - விரும்பி. ௧௭௫ ௧௮௦. உருவெளி - பொய்யான தோற்றம்.

அல்லரா மாத ரறிஞர்க்குத் தாமல்ல
தில்லரா யாண்டு மெதிர்நிற்க - வல்லராம்
ஈச ரிவட்கு மெதிர்நின்று ரென்றிருப்பப்
பாசமில ஞதி பகவன்றேர் - வாசவன்றன்
முன்னிறுத்த வஞ்சிறகர் மூரிவரை யூர்வதெனத்
தன்னிலைப்பொன் வீதிதனிற் சார்ந்ததால் - பின்னெருத்தி

## பேரிளம்பெண்

கண்ணிற் சிறந்த கருமணிபோல் வானவர்தம்
பெண்ணிற் சிறந்தவொரு பேரிளம்பெண் - விண்ணிற்
குருமதிதா னெக்குமெழில் கூர்முகத்தை யொக்குந்
திருமலரி ஞண்மலர்வு தீர்த்துப் - பொருமதர்வாட்
கண்ணெக்கு நீலக் கடிமலரை வாழ்விக்கப்
பண்ணெக்கு மின்சொற் படியிலாள் - விண்ணிற்
கிருசுடரின் மற்றென் றெழின்முகமொவ் வாமல்
ஒருசுடர் மன்பொற் பழிப்பவுள்ளாள் - பொருசுடர்வேல்
மாவடியை நோக்கி வரலொத்துக் காதளவுந்
தாவடிபோய் மீளுந் தடங்கண்ணாள் - காவடிபோல்
கண்ணுங் குழைதூங்கு காதுமுறத் தங்குநரின்
தண்ணுங் குமிழ்வென்ற நாசியாள் - எண்ணும்
முகைமுதல வெல்லா முறையொத் துவமைத்
தகைதவிர முற்றுந் தனத்தாள் - பகைமலரின்
உற்றமட வாரு ளொருவரே கல்விகவின்
பெற்றிடினன் றெவ்வாப் பெருமையாள் - பொற்றகடு
வேய்ந்தபவ ளக்கால் வியன்மா ளிகையொன்றில்
ஆய்ந்த புராண நூ லந்தணனை - வாய்ந்த
மடங்கலணை யுய்த்து வணங்கி மருங்குற்
றடங்கலருர் தீமூட்டு மண்ணல் - தொடங்குகதை
ஒன்றேது கவென் றுரைப்பவவ னேதுவான்
அன்றோர் பகன்முக்க ணண்டகைதான் - குன்றே
டிணங்குமுலைப் பெண்ணுத லேலாமை யின்மால்
அணங்குருவப் பெண்வடிவ மாகிக் - கணங்கொள்
முனைவர் தவமிழந்து மோகிப்பான் செல்ல

---

உழையரை - அண்மையில் உள்ள தோழியரை. வாசவன் - இந்திரன் பெண்ணில் - பெண்களுக்குள். கூஅ0 - கூஅரு. திருமலரின் நாண் மலர்வு தீர்த்து-செந்தாமரை மலரின் அன்றலர்தலை யொழித்து. பொற் பழிப்ப - அழகைக் கெடுக்க. தாவடிபோய் - போருக்குச் சென்று. தடம் - பெரிய. கூஅரு - கூகூ0. வியன் மாளிகை - சிறந்த மாளிகை. மடங்கலணை - அரிபீடம். அடங்கலர் - அடங்காதவர்களாகிய பகைவர்கள். கூகூ0 - கூகூரு. ஏலாமையின் - முடியாதபடியினால்.

அனையர் மகளி ரமர்ந்த - மனையில்
பலிமுகத்தா னாகிப் பலிக்கெய்த வானம்
புலிமுகத்தா ரெம்மான்முன் போந்தார் - கலிமுகத்துப்
புன்றுரும்பு போன்றலைந்தார் போற்றுமவி காரிமுனஞ்
சென்று வருசொற் றிரிதல்போல் - மென்றளிராம்
மேனி திரிந்தார்கை வெள்வளைகள் போக்கினார்
வேனின் மதன்கணையால் வெய்துயிர்த்தார் - பானுவைபோல்
ஆடை குலைந்தா ரணைந்தாவி தாரிரென்
றேடவிழ்பூந் தாண்முன் னிறைஞ்சினார் - நீடழலில்
காட்டு மரக்கிற் கருத்துக்கா ரென்னவுயிர்
கூட்டுண் மலர்க்கட் கொடியிடையாள் - கேட்டு
மடவார்கட் கெல்லாம் வசைவிளைத்தா ரென்றச்
சடைவா னவன்றானென் றன்பால் - அடைவானேல்
நாவனகர் நம்பிபெரு நன்மணப்பூம் பந்தரிடைப்
பாவலர்முற் கூறும் பழிமொழியை - யாவர்களும்
கூற வெருக்கணிந்த கோல முதவியா
ஏறமடன் மாவையெளி தேற்றுவலென் - றாறமுதம்
அன்ன மொழியா லறைதலுமுக் கட்கனிமுன்
சின்ன முனிமகளிர் சிந்தைகவர் - தன்னனையான்
வந்தா னெனமுழங்க மாதெண்ண முற்றியதென்
றந்தா மரைத்தா ளணிசிலம்ப - முந்தா
இறைவனெதி ரேற்றா ளெழிற்பெருக்கங் கண்ணால்
குறைவ தறமுகந்து கொண்டாள் - கறைமிடற்றுப்
பண்ண வனைமொழிந்த பாவ முடன்பலித்து
வண்ண நறுந் தூசு வளையொழியக் - கண்ணிணையுள்
நீர்பெருக நெஞ்ச நிறையழிய மென்முலைகள்
பீர்பெருகச் செவ்வாய் பிழைபிதற்ற - ஏர்பெருகு
மாதவர்த மாதருற்ற வாறுமின்றிக் கையாற்றில்
சாதலுறு வார்போற் றனைமறந்தாள் - கோதையாள்
தானோ பழமலையைச் சார்ந்தசைப்பா ளென்றுமொழித்
தேனோ வெனுஞ்சொற் றிருமுகத்தில் - வானோர்
தனிநா யகன்முடியிற் றண்புனலீ தென்று

---

முனைவர் - முனிவர். போற்றும் - யாவரும் புகழும். வெள் வளைகள் - வெள்ளிய வளையல்கள். வெய்துயிர்த்தார் - பெருமூச்சு விட்டார். ௧௯௫ - ௨௦௦. குலைந்தார் - கலையப் பெற்றார்கள். அணைந்து-சேர்ந்து. ஆவி - உயிர். நாவல்நகர் - திருநாவலூர். நம்பி - சுந்தரர். மடன்மா- பனங்கருக்காற் செய்த குதிரை. ௨௦௦ - ௨௦௫. கறைமிடற்றுப் பண்ணவன் - சிவபிரான். வண்ண நறுந்தூசு - அழகிய நல்ல ஆடை. பிழை பிதற்ற - பிழையான சொற்களைப் பேச. ௨௦௫ - ௨௧௦. மாதவர்தம் மாதர் - தாருகாவன முனிவர்களின் மனைவிமார். அவசம் - மயக்கம்.

பனிநீர் தெளித்தளிப்பப் பாவை - முனியாள்
உணர்ந்தவச நீங்கி யொழிந்தாள் வளைகள்
புணர்ந்த முலைபசலை பூத்தாள் - கொணர்ந்த
தொடைபொடிப்ப வெண்டரளஞ் சுண்ணம் படமெய்
யிடையடுத்தார் நீங்குவெதுப் பேற்றாள் - சடையடக்கக்
கங்கைநீ ரன்றேபிக் கண்ணீ ரெனவழுதாள்
பொங்கெரியின் வீழ்பறவை போன்றினைந்தாள் - மங்கையர்கள்
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயலென்று - மெல்லியலைக்
கொண்டு மனையிற் குறுக மலருண்டு
வண்டுபடுங் கூந்தன் மலர்விழியாள் - பண்டு
திருமாலு நான்முகனுந் தேடும் பொருளைக்
கருமா மிடற்றெங் கரும்பைப் - பெருமானைத்
தெள்ளமுதைத் தெய்வ சிகாமணியைத் தன்னடியார்
உள்ளுயிரைத் தோன்று வுறுதுணையைக் - கள்ளவிழுங்
கொன்றைப் பவளநெடுங் குன்றைப் பழமலையை
மன்றிற் குனிக்குமொரு மாமணியைச் - சென்றுற்
றுளத்துப் புணர்ந்துவிடா தோங்கின்ப முற்றாள்
கிளத்தற் கரியபெருங் கீர்த்தி - வளத்தொடுறும்
நாடு நிலைநிற்ப நம்பன் செலுத்தப்போய்
நீடுதிருத் தேர்நிலையி னின்றதால் - ஆடு
படைக்கண் மகளிர் பலரிவ்வா றுகக்
கடைக்க ணருள்சிறிது காட்டிச் - சடைக்கண்
நிலாவினன் வெங்கை நிலையின னாதி
யுலாவினன் போந்தா னுலா.

## நேரிசைவெண்பா

பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீறாக
ஓதை யெழுகடல்போ லோங்கினோர் - காதலுறச்
சிந்தா மணிநெடும்பொற் றேரிற் றிருவுலாத்
தந்தான் பழமலைநா தன்.

---

புணர்ந்த - நெருங்கிய. வெதுப்பு - வெப்பம். சக௦ - சக௫. இனைந்தாள் - வருந்தினாள். கருமா மிடறு - மிகக்கரிய கழுத்து. மன்றில் குனிக்கும் - பொன்னம்பலத்தில் ஆடும். கிளத்தற்கு - கூறுதற்கு. நிலாவினன் - திங்களை யணிந்தவன். ஆதியுலாவினன் - சேரமான் பெருமானால் பாடப்பெற்ற ஆதியுலாவை யுடைய சிவபெருமான்.

## சிறப்புப்பாயிரம்

*நேரிசைவெண்பா*

வெங்கைப் பதிப்பழய வெற்புக் கணிமுழுதுந்
தங்கத் திருவுலாச் சாற்றினான் - சங்கத்துப்
போற்றுந் தமிழ்நூல் பொதுக்கடிந்தா னென்றுலகஞ்
சாற்றுஞ் சிவப்பிரகா சன்.

திருவெங்கையுலா முற்றிற்று.

———

# கஉ. இட்டலிங்க அபிடேக மாலை

[இட்டலிங்கமாவது தாம் எப்பொழுதும் உடனிருத்தி வழிபட்டுவரும் இலிங்கமாகும். இத்தகைய இலிங்கத்தை வீர சைவர்கள் மார்பில் அணிந்திருப்பர். அத்தகைய இலிங்கத் திற்குத் திருமுழுக்குச் செய்தபோது அடிகளார் இம்மாலையைப் பாடியருளினார். இம்மாலை பத்துச் செய்யுட்களால் அமைந்தது. சிறந்த தத்துவப் பொருளைத் தன்னகத்தே கொண்டது.]

பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பந்தமறு மார்மிருடர் பவருருத் திரர்களொரு
பதினொருவர் மிளிர்பீடமேற்
படியிலை யைவகைப் படுமீசர் தாநிதம்
பத்திலெண் வித்தையிறைவர்
சந்தமுறு கோமுகத் தைங்கலைகள் சத்திசா
தாக்கியம் மூர்த்திவதனந்
தட்டற்ற வட்டத்தி லொட்டற்ற சிற்சத்தி
தாளுற்ற நாளத்திலே
நந்தலற வருகோள கந்திகழ் சிதம்பர
நற்சிகையி னிற்சூனிய
நட்டமற வமைகின்ற விட்டவடி வொடுநின்ற
ஞானமய மோனநடுவோ
டந்தமற முந்துபர மானந்த நீநந்த
வபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (க)

நாடரிய சத்தியோ சாதத்தும் வாமத்து
நன்று மகோரத்தினு
நவையற்ற புருடத்து மாகமமொ ரைவ்வைந்து
நல்கியீ சானத்திலே
பீடுதரு மெட்டுமுறை தந்தவற் றிடைநீசொல்
பெருமைபெறு மருமைவிதியிற்
பேசரிய பூசைசிவ கோசரியெ னப்புரிதல்
பெற்றிலேன் மற்றடியனேன்

க. சிவலிங்கமே எவ்வகை மூர்த்திகளுக்கும் மூலமென்கிறது இச் செய்யுள். உ. ஆகமோற்பவ வகைகளும் அவற்றில் விதிக்கப்படும் விதிமார்க்கம் பத்திமார்க்கம் இரண்டானும் முத்தியுண்டாமென்பதையும்

வேடுவர்கு லத்தலைவன் மெய்யன்பு பூண்டிலேன்
வேட்டொருவர் மாட்டருளினன்
மீக்கொளொரு புடையொப்பு நோக்கிவைத் தனைசாத்தின்
வேண்டல்வேண் டாமையிலையால்
ஆடுநின் பால்வேறு பாடொன்றி லாமையா
லபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (உ)

நவிற்றல ந மிதயமிளிர் கண்டநா வடிபுருவ
நடுவுபிர மப்புழையெனு
நல்லிடத் தகராதி கிரியாதி மனமுதல
நண்ணியு மைம்மூவகை
இவற்றிலொவ் வொன்றகல நின்றவிட யங்களெதிர்
வின்றிச்சி வாகாரமா
எதிருநன வுஞ்சோக மென்றுபா வித்தலுறு
மென்கனவு ஞா துருவொடே
உவப்பறிவு ஞேயமென வுற்றனுப வித்திடு
மொண்சுழுத் தியுஞானமே
ஒளிர்துரிய முந்திலைத் துயர்சிவா னந்தநுகர்
வுறுமதீ தமுமாகுநல்
அவத்தைகள் கடந்தவற் றப்புறப் படுமமல
னபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (௩)

ஒருவனோர் பொருளிலாற் குற்றுதவி னுளம்வியந்
தோகைபெறு மன்றியுடைமை
உதவுரு வமையத்தி லுதவினுந் தன்னிடத்
துள்ளதிற் பெரிதளிக்கும்
பொருளதா யினுமதனி னினியதா யினுமவன்
புந்திமகிழ் வுற்றிடுவனல்
புனல்விடுத் திடுமுடியி னிற்புணரி யிற்பெருகு
புண்ணியத் தெய்வநதிதான்

இச்செய்யுள் விளக்குகிறது. சிவகோசரியார் - திருக்காளத்தியில் கண்ணப்ப நாயனார் காலத்தில் வாழ்ந்திருந்தவர். வேடுவர் குலத் தலைவன் - கண்ணப்ப நாயனார். ௩. நின்மல பஞ்சாவத்தை யினியல்பையும், சிவம் அவற்றிற்கும் அதீதப்பட்டதென்பதையும் இச்செய்யுள் கூறுகிறது. ௪. பெருமானுக்கு ஒன்றினும் விழைவில்லையாகவும் ஆன்மாக்கள்

மருவலா னீர்விருப் பிலைநினக் கொருதிவலை
மற்றென்முடி யிற்றெறிப்பின்
வைப்பன்வா னத்தினென வெத்திறத் தானுநினை
மக்கணினை வுற்றுய்ந்திட
அருளினுன் முனம்விதித் தவனுத லான்மகிழ்ந்
தபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (ச)

கருகிச்சி வந்தகடு வருகிப்பொ ருந்தமிளிர்
களம்வாழ்வு மேவவணிவாய்
கடலிற்சி றந்தநிற வுடலிற்றி ருந்துமணி
கதிர்போல வேயுநெடுமால்
ஒருகட்கி சைந்தவடி யிருகட்கி ணங்கவற
முடையார்மு னேடிவருவாய்
உலகத்தை வென்றமன மிலகுற்ற மன்றினிடை
யுமைகாண வாடல்புரிவாய்
மருகற்பெ ரும்பதியி லொருகற்ப ணங்குதொழ
மணவாள னுவியுதவா
மயிலைக்க ணென்பினுயிர் பயில்வுற்றெ ழுந்துவர
வருவாயெ னுமுனழையா
அருகர்க்க ணங்குதரு முருகர்க்கு கந்தவர
னபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (ரு)

ஒகைமலி குருவாணை யுறுவிக்கு மாணையு
முயர்புரா தனசரிதமோ
டொக்குநடை வருவிக்கு முவமையுந் தன்மகனை
யொண்சுவத் திகமேற்றுபு
சோகமறு மனுமயஞ் செய்தமைத் திடுமொரு
சுவத்திகா ரோகணமுநூல்
சொல்லிய விடங்களிற் றூயநீ றணிதருந்
தொல்விபூ திப்பட்டமும்

உய்யும்பொருட்டு ஆகமங்களில் ஆராதனை விதித்ததை இச்செய்யுள் கூறுகிறது. ஒகை - உவகை. ரு. சிவபிரானின் அநுக்கிரக நிக்கிரகத் தன்மை இச்செய்யுளிற் கூறப்படுகிறது. கடு-நஞ்சு. களம் - கழுத்து. வேயும் - அணியும். மன்றினிடை-அம்பலத்தில். மருகல் - திருமருகல். மயிலைக்கண் - திருமயிலாப்பூரில். என்பினுயிர் - பூம்பாவையினுடைய உயிர். அணங்கு-வருத்தம். முருகர்க்கு-முருகன் கூறுன திருஞானசம்பந் தருக்கு. சு. வீரசாமானியர்க்குத் தூலதனுவிற் செய்யப்படும் இட்டலிங்க

மாகலச நீராட்டு கலசாபி டேகமு
மருவுசிவ நோக்குவிக்கும்
வயங்குலிங் காய தமு மன்னுசிவ லிங்கமுரு
வனைசுவா யதமுமெனு மேழ்
ஆகுநெறி தான்மருவி யாகமிசை யிலகுமர
னபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (எ)

போயகுல மொடுசரண ரொடுமேவு சமயமும்
பொன்றுலகம் விட்டமலனுர்
பூசனைகொ ளரியநிர்ச் சஞ்சார முங்கொடிய
பொன்பெண்மண் ணுசைநெறியில்
பாயமன மோடாத நிட்பிரா ணமுமெய்ம்முப்
பத்தாறு தத்துவமறப்
பகுதியொடு ணர்த்துதத் துவமுமிறை யஞ்சனீ
பாரென்னு மான்மிகமுமே
மேயசடு லிங்கமுட னுறங்க மாகுமொரு
மெய்யனுக் கிரகநிலையும்
விமலமுறு சச்சிதா னந்தசிவ மயமென்னு
மிக்கசத் தியசுத்தமும்
ஆயவெழு வகைநெறியி னுவியிடை யிலகுமர
னபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (அ)

கிடைத்தசிவ லிங்கமன் றுணராத வேகாக்
கிரசித்த மென்னும்விரதங்
கெடாததிட விரதம்விட யங்கள்சிவ னுக்குதவு
கின்றவிந் திரியார்ப்பிதம்
உடற்றியுயிர் கொன்றிடா நின்றிடு மகிஞ்சைசிவ
னுண்மைகொ ளிலிங்கநிசமே
உயர்சிவத் துளமடங் குறுமனே லயமதனி
லொன்ருகி நின்றுபேதம்

---

எழுவகைத் தீக்கைகளைக் கூறுவதிப்பாட்டு. ஓகை-உவகை. புராதன சரிதம்-பழைய வரலாறு. எ. வீர விசேடருக்குச் சூக்கும தனுவிற் செய்யப்படும் பிராணலிங்க எழுவகைத் தீக்கை இச்செய்யுளில் கூறப்படுகிறது. பாயமனம் - பல பொருள்களிலும் பாய்ந்து செல்லும் மனம். அஞ்சல் - அஞ்சாதே. அ. வீரநிராபரருக்குக் காரணதனுவிற் செய்யப்படும் பாவலிங்க எழுவகைத் தீக்கை. ஏகாக்கிரசித்தம் – ஒருவழிப்

விடுத்தலுறு சத்தியோன் முத்தியெனு மிவையேழு
மிக்ககுரு வருள்புரியவே
மேவலரு மெய்ஞ்ஞான பாவநிலை மேவியிடும்
வேதமுடி யாவுமுணரா
தடுத்தமன மொழியுடற் கப்புறப் படுமமல
னபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (அ)

நல்லதில நெய்யாடி யானிடத் தைந்தாடி
நவையிலை யமுதமாடி
நல்குகா ரணகாரி யம்முறைமி னன்றியே
நறுநெய்பா றயிராடியே
மெல்லமலர் மதுவாடி யின்கழைச் சாறாடி
மென்பழச் சாறாடியே
விழையுமிள நீராடி யாரக்கு ழம்பாடி
விதியினமை நபனமாடி
ஒல்லைநகு வெண்டலைப் புழையினிடை யோடிநல்
லுத்திகொடு பைத்ததலைய
வுரகநுழை வுறவிளங் குழவிமதி யொருபுடை
யொதுங்கவிட மின்றியசைய
அல்லலற நிறைகங்கை யசையாது நிற்பைநீ
யபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (கூ)

நரர்கடமி னரசரவர் தமினினிய திவவியாழ்
நண்ணுநர கந்தருவர்தா
நவிலுமவர் தமினமர கந்தருவ ரவர்தம்மி
னுடரிய தேவரவரில்
சுரரதிப னவனினுயர் சுரர்குரவ னவனினயன்
சொன்முறையி னூறுமடிமேற்
றுன்னுசுக மொருதிவலை யளவுமின் றுகமிகு
சுகவேலை புகலீகுவாய்

---

பட்ட மனம். உடற்றி - செய்து. அகிம்சை - பிறவுயிரை வருத்தாமை. க. இச்செய்யுளில் அபிடேகங்கொள்ளு முறைமை கூறப்படு கிறது. திலநெய் - நல்லெண்ணெய். ஆன் - பசு. நவை - குற்றம். இல் - இல்லாத. ஐபமுதம் - பஞ்சாமிர்தம். மலர்மது - தேன். கழைச் சாறு - கரும்புச் சாறு. ஆரக்குழம்பு - சந்தனக் குழம்பு. நபனமாடி - நீராடி. உரகம் - பாம்பு. கO. சிவானந்தத்தின் உயர்வும் சைவ ஆ

தரைமுதற் பூதங்கள் புத்திகுண தத்துவந்
தகுதிபெறு பகுதிபுருட
தத்துவம் வித்தைமுத லனவெனுமி வற்றிலறு
சமயரென வெமைவிடாமல்
அருளினினை யடைதலுறு மரியபவ மருளுமவ
னபிடேக மாடியருளே
அறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடியருளே. (௧௦)

## இட்டலிங்க வபிடேகமாலை முற்றிற்று.

---

-ணெறிச் சிறப்பும் இச்செய்யுளிற் கூறப்படுகிறது. நரர்கள் - மனிதர்கள். திவலை - துளி. வேலை - கடல்.

## கரு. நெடுங்கழிநெடில்

[நெடுங்கழி நெடில் என்பது பாவின் பெயர். கழிநெடிலடியினும் நீண்டதாகையால் நெடுங்கழி நெடில் என்று பெயர் உண்டாயிற்று. திருக்கையில் எழுந்தருளிய இட்டலிங்கத்தின் மீதே இவ்விருத்தப்பாடல்களும் இயற்றப்பெற்றுள்ளன. சிவானந்தத்தின் உயர்வு சைவஅருள்நெறிச் சிறப்பு முதலியன இப்பாடல்களிற் கூறப்படுகின்றன.]

பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பெருகுறு மன்பாற் பூசனை புரிந்த
பிணங்குநூற் சிலம்பிவெவ் வரவம்
பிறைமருப் புரற்கால் யானையென் றிவற்றின்
பிறவியோ விதழ் முறுக் கவிழ்ந்து
முருகுமிழ் நறுமென் மலர்புனைந் துன்னை
முற்றும்வந் தனைபுரி யாமன்
முகிழ்முலை மகளிர் மயலிடை யழுந்து
மூடர்தம் பிறவியோ நல்ல
திரைபொருங் கங்கை யுவட்டெடுத் தொழுகுஞ்
செஞ்சடை மிசையொரு துளிநீர்
தெறித்தவர் தமையு நறவுகொப் பளிக்குஞ்
செழுமலர்க் கற்பக வேந்தும்
எரிபுரை யிதழ்ச்செங் கமலநான் முகனு
மெய்தரும் பதத்தில்வைத் தருள்வோய்
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (க)

கட்டழ கமைந்து காளையம் பருவங்
கடந்திடா துள்வலி யுடைத்துக்
கலங்கல்செய் பிணியின் றியன்றயாக் கையராய்க்
கல்வியங் கடல்கடந் தவராய்
நட்டவர் விரும்பு மாறுநீ செய்ய
நடக்குநா ளுடல்வெறுத் துனையே
நம்பியா ரூரன் முதலியோர் நண்ண
நானுடல் விடுமென வழிவேன்

---

க. எப்பிறவி நல்லனவென வினைதற்கணின்ற ஓகாரமிரண்டனுள் முன்னையது அர்ச்சனை புரிந்த சிலம்பி முதலியவைகளினுயர்வும், பின்னையது அது புரியாத மூடரினிழிவும் தோன்ற நின்றன. தெறித்தவர் தமையும் வைத்தருள்வோயென இயையும். முருகு - மணம். முகிழ் முலை - மொட்டுப் போன்ற தனம். திரைபொரும் - திரைகள் மோதும். நறவு - தேன். உ. அமைந்து கடந்திடாது இயன்ற யாக்கைபெனக் கூட்டுக. இத்தகைய யாக்கை முதலிய உடையராய்த் தோழமை பூண்ட

பட்டிருள் விழுங்க வலர்கதி ரவனும்
பனிமதி யோடுயிர்த் தொகையும்
பார்புனல் சுடுதீ வளிவிசும் பென்னப்
பட்டவைம் பூதமு மாகும்
எட்டுரு வடைந்து முருவமொன் றின்றி
யிற்றென வுணர்வரும் பொருளே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௨)

மனமெனும் வயமா வென்வயப் படாமன்
மயங்குறு மைம்புல வீதி
மறிபடா தோடு கின்றது முறையோ
மறித்ததை நிறுத்தியென் றனக்கு
நினையல துதவு வாரிலை யதனு
னினைப்பர வுற்றன னதனை
நிறுத்திநீ யிவர்ந்து பின்னர்நீ வேண்டு
நெறிகளிற் சென்றிட விடுவாய்
கனலுறு மெழுகி னெஞ்சநெக் குடைந்து
கரையில்பே ரன்பெனும் வெள்ளங்
கண்வழி புறப்பட் டென்னநீர் வாரக்
காலங்க டொறும்வழு வாமல்
இனமலர் தூவு மடியவ ருள்ளத்
திருள்கெட வெழுந்தபே ரொளியே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௩)

நிலங்கடந் தவன்முன் னறுமலர் சாத்த
நிகரிலம் மூர்த்திமுன் சந்து
நினக்கணி வுறவாட் டாயர்முன் னிருந்து
நிவேதனம் புரிந்திட வன்று
நலங்கிளர் கலையர் கலியர்முன் றூப
நல்விளக் களிப்பநின் றன்னை
ஞானசம் பந்தப் பிள்ளைமுன் பாட
நாணிலேன் பூசனை புரிவேன்

---

ஷம்பியாரூரர் முதலியோர் விரும்பியவாறு செய்யத் தேவரீரே வலிந்து செல்லுங் காலத்தும் அவர் அவ்வரிய யாக்கையையும் வெறுத்துத் தேவரீரையே கண்ணு; யான் இவ்விழிவுடல் நீக்கத்திற்கு அழிவேன். இங்ஙனமாயின் எங்ஙனமுய்வேன் என்பது. இற்றென - இத்தன்மைத் தென. ௩. வயமா - வலிமை பொருந்திய குதிரை. மறித்து - தடுத்து. பரவுற்றனன் - போற்றலானேன். இவர்ந்து - ஏறிச் செலுத்தி. கனல் - தீ. ௪. உலகையளந்த திருமால் முதலானவர்கள் நறுமலர் சாத்தல் முதலிய ஒவ்வொரு தொண்டையேமேற்கொண்டொழுகா நிற்க,

விலங்கினுங் கடையர் வளர்த்தசெந் தீயின்
விரைந்தெழும் வாள்வரி வேங்கை
விடுப்பவங் கதுவந் தெதிர்ந்திட விகழ்ந்து
விடாததன் றேலுரித் திருள்கொண்
டிலங்கொளி யிரவி யனையமெய்ப் படுத்த
விறைவனே யநிட்டநின் றகற்றி
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (ச)

மூக்கிடை யிரண்டு விழிகளே றுதன்முன்
முடங்குகைக் கோலொரு காலா
முன்னநின் றிருவாய் மலர்ந்தருள் செய்த
முதிர்கலைப் பொருள்படித் தவராய்க்
கார்க்கடன் முகட்டி னிரவிவந் தெழுமுன்
கடிதுசென் றணிமலர் கொய்துன்
கழற்கிடார் பிறப்பி னுய்ப்பிறப் பினிது
கற்றவ ரிகழ்ந்திடா மையினால்
நோக்கற நோக்கு முருவமே நாவா
னுகர்ந்திடா வினியபே ரமுதே
நுதல்விழிக் கனியே கறைமிடற் றரசே
நுவலரு மாயையிற் பிறவா
யாக்கைய துடைய வருட்பெருங் கடலே
யெழுந்தொடுங் காதவான் சுடரே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (ரு)

திருக்குறு மழுக்கா றவாவொடு வெகுளி
செற்றமா கியமன வழுக்கைத்
தியானமென் புனலாற் றொய்புறங் கூற
றீச்சொலென் கின்றவா யழுக்கை
அருட்கிளர் நினது துதியெனும் புனலா
லவத்தொழி லென்னுமெய் யழுக்கை
யருச்சனை யென்னும் புனலினாற் கழுவா
வசுத்தனே னுய்யுநா ளுளதோ

---

அவர்முன் நாணமில்லாமல் அத்தொண்டனைத்தும் ஒருங்குடையதாகிய உமது பூசையைச் செய்கிறேன் என்பது. இறைவரையழிப்பான் வேள்வி செய்து புலி முதலியவைகளை விடுத்தமைபற்றித் தாருகாவன முனிவரை விலங்கினுங்கடையரென்றார். மூர்த்தி - மூர்த்தி நாயனார். வாட்டாயர்- அரிவாட்டாயர். அநிட்டம்-இட்டமின்மை. ரு. மூக்கிடை விழிகளேறல்- காட்சி மழுங்கக்கண் சுருங்கல். கார்க்கடல்-கரியகடல். கழல்-திருவடி. சு. திருக்குறும்-மாறுபாட்டைக் கொண்ட. தியானம்-இறைவனை வே

விருப்பொடு வெறுப்பிங் கிலாதவ னென்ன
வெண்மதி யோடுவெண் டலையும்
விரைவழி புகுந்த வண்டினம் பசுந்தேன்
விருந்துணுங் கொன்றைமென் மலரோ
டெருக்கையு மணிந்து மின்னொளி கடந்த
விர்ஞ்சடைப் பாந்தணு ணுடையாய்
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௬)

சிவமுட னமூர்த்தி மூர்த்திகர்த் திருவஞ்
செயன்மலி கருமமென் றருநூல்
செப்புதத் துவமுஞ் சதாசிவ னீசன்
றிகழ்தரு பிரமனீ சுரனோ
டுவமையி லீசா னப்பெய ரவனென்
றுரைத்திடு மூர்த்திக டாமும்
உற்றவீ சான முதற்பிர பாவ
முடையநின் றன்னையென் றுணர்வேன்
புவிமுத லனைத்து மாக்குத லளித்தல்
போக்குத லுயிர்வினை யருத்தல்
புதிதுறச் செம்பிற் களிம்பென வறிவைப்
புணர்மல மகற்றுத லென்னும்
இவைபல வியைந்தும் விகாரமொன் றின்றி
யிரவிபோ னின்றகா ரணனே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௭)

தான்பெறு மழலை மொழிமகன் றன்னைத்
தன்கையா லுளங்களித் தரிந்து
சமைத்துல கறிய விடுபெருந் தொண்டன்
றனைச்சிறுத் தொண்டனென் றவன்சேய்
ஊன்பெறு நீயே யுரைத்தனை யென்று
லுரிமையோர் சற்றுமி லாதேன்
உன்றிருத் தொண்ட னென்றிருப் பதனுக்
குன்னுதல் பெரும்பிழை யன்றோ

---

டிருத்தல். பாந்தன் - பாம்பு. நாண் - கயிறு. ௭. சிவசாதாக்கிய முதலிய ஐந்து சாதாக்கிய தத்துவங்களையும் சதாசிவமூர்த்தி முதலிய ஐந்து தத்துவமூர்த்திகளையும் முறையே உற்றன. ஈசானம், சத்தியோ சாதம், வாமதேவம், அகோரம் தற்புருடம் என்னும் முகங்களாகிய பெருமைகள் எனக் கொள்க. இரவி - கதிரவன். ௮. உன்னுதல் -

தேன்பெறு நளின மலர்களா யிரத்தோர்
செழுமலர் குறைபட விரைந்து
செங்கணொன் றிடந்து குறையற நிரப்பித்
திருமறைச் சிலம்படிக் கணியா
யான்பெறு நிதியே யென்றுல களந்தோ
னேத்திநின் றிறைஞ்சுறு மமுதே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௮)

நின்புகழ் பாடும் பாணனூர் தமக்கு
நிதிதரச் சேரலன் றனக்கு
நீமுன முடங்க லொன்றளித் ததுபோ
னிகரிலா வசவநா யகன்றன்
அன்பினி லொருநூ றுயிரங் கூறிட்
டடுத்தகூற் றினிலொரு கூறிங்
களிப்பதற் குனது திருமுக மருளா
லடியனேற் களிக்குநா ளுளதோ
பொன்புரை கடுக்கை மலர்ந்தசெம் பவளப்
புரிசடைப் பேரருட் குன்றே
புணர்முலைக் கயற்கட் பிறைநுதற் கனிவாய்ப்
பொற்றொடி யிடத்துவா ழமுதே
என்பும்வெண் டலையு மணிந்துநான் புனித
னென்றுமென் றிருந்திடு பவனே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௯)

வங்கையர் முத்த சங்கையர் சென்ன
வசவண ரசகணர் வீர
மாச்சையர் பிப்ப பாச்சையர் வள்ள
மல்லையர் கல்லைய ரெங்கள்
சங்கண வசவ ராசையர் சேட
தாசையர் சங்கர தாசர்
சவுண்டைய ரென்றிங் கிவரடிக் கேவ
றலையினாற் செய்யுநா ளுளதோ

---

என்னுதல். நளினமலர் - தாமரைப்பூ. இடந்து - தோண்டி. ௯. சேரலன் - சேரமான் பெருமாள். பாணபத்திரருக்குப் பொன் னளிக்குமாறு சேரமான் பெருமாளுக்கு, "மதிமலிபுரிசை மாடக் கூடல்" என்று தொடங்கும் திருமுகமளித்த செய்தி இங்குக் குறிப்பிடப்படுகிறது. பொன்புரை-பொன்னைப் போன்ற. கடுக்கை-கொன்றைமலர். ௧௦. இதில் கூறப்பட்ட வங்கையர் முத்த சங்கையர்

பங்கய மலரோ டரிவிழி பரித்த
பதமலர் சிவப்பவே னெடுங்கட்
பரவைதன் மனைக்கட் சுந்தர னேவும்
பணியெலா முனிவற வியற்றி
எங்கணும் விளங்க நம்பியா ரூர
னேவல னெனப்படு மிறையே
இட்டநன் குதவி யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௫0)

நெடுங்கழிநெடில் முற்றிற்று

முதலியோருடைய வரலாறுகள் வசவ புராணத்தில் உள்ளன.

## கச. குறுங்கழிநெடில்

[குறுங்கழிநெடில் இதில் அமைந்துள்ள பாடல்கள் பத்தும் நெடுங்கழிநெடிலினுங் குறுகியதாகலின் குறுங்கழி நெடில் என்று பெயர் பெற்றது. இப்பாடல்களும் திருக்கையில் எழுந்தருளிய இட்டலிங்கத்தின்மீது பாடப்பட்டனவேயாம்.]

எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பொன்செய்வா ணிகர்போ லெவ்வழி யானும்
புண்ணிய மீட்டினு மறிஞர்
கொன்செய்பா தகமே புரிந்தன னின்ருள்
குறுகுவ தென்றென விரங்க
முன்செய்தீ வினையோ கனவிலு மறமே
மொழிகிலேன் களித்திருக் கின்றேன்
என்செய்கோ மறலிக் கென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (க)

மென்னிழற் றருவை யடைபவர் தம்மை
விடாநிழல் விட்டிடு மாபோல்
நின்னடிக் கமல மடைந்திடிற் றொடர்ந்து
நீங்கலா வினையுநீங் குறுமே
கன்னலிற் கனியிற் சுவைதரு மமுதே
கண்மணி யேயருட் கடலே
என்னுயிர்த் துணையே யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (உ)

முந்திரு வினையுந் தமவென விருப்பின்
முற்றவற் றின்பயன் றருவாய்
வந்தவை நினவென் றிருப்பினங் கவற்றை
மாற்றிவீ டுறவருள் குவையே
நிந்தையி லென்னெஞ் சுனதுநெஞ் சென்மெய்
நினதுமெய் யென்றனிந் தியநின்
இந்திய மெனக்கொண் டென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (ங)

---

க. பொன் செய் வாணிகர் - பொருள்தேடும் வணிகர்கள். கொன் செய் - தீமையைச் செய்கின்ற. என் செய்கோ - யாது செய்வேனோ. மறலிக்கு - நமனுக்கு. உ. விடாநிழல் - ஒருவரை எப்பொழுதும் விடாத அவர்களுடைய நிழல். நீங்கலா - நீங்காத. கன்னல் - கரும்பு. ங. தமவென - தம்முடையவென. நின - நின்னுடையன. இந்தியம்- பொறி.

கண்ணுடைக் குறையாற் சுடர்பல வாகிக்
காட்டல்போற் காரண முதலாப்
பண்ணுடற் றிறஞ்சே ரென்றிருக் கதனாற்
பலவுரு வாயினை யொருநீ
பெண்ணுருப் படைத்த பேரரு ளிடப்பால்
பெற்றிட வுகந்தளித் தவனே
எண்ணிடைப் படாம லென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௪)

பிறவிமா மிடியன் றனெதிர் கண்ட
பெறற்கரி தாயவைப் பென்ன
அறிவிலே னயன்மாற் கரியநின் றன்னை
யம்மவோ வெளிதுகண் ணுற்றேன்
துறவினோ ருள்ளத் தெழுந்தொளி பரப்பித்
தொல்லிருள் கடியுமெய்ச் சுடரே
இறைவிகூ றுடையா யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௫)

நினக்குறு கூறு மென்மன மதனை
நிரைவளைத் தளிர்க்கைநெட் டிலைவேற்
சினக்குறு மலர்க்கட் பேதையர் கொளாமற்
செறிந்துநீ யேகவர்ந் தருள்வாய்
புனக்குற மகட்கு மயல்கொடு திரிந்த
பொறிமயிற் குமரனைப் பயந்தோய்
எனக்குறு துணையா யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௬)

அன்பினுக் கன்றி நான்புனை மலருக்
கருளுவை யலைமலர்க் கருளின்
முன்பெடுத் தெறிந்த சாக்கியன் கல்லின்
முருகலர் மிகவுமின் றதோ

---

௪. திருக்கு - அறிவு. பெண்ணுருப்படைத்த பேரருள் - உமா தேவியார் வடிவம் அருளே என்றபடி; அருட்டிருமேனி என்பதும் காண்க. ௫. பிறவிமா மிடியன் - பிறந்தது முதலே பெரிய வறிஞனாக இருப்பவன். வைப்பு-புதைபொருள். தொல்லிருள்-பழமைபொருந்திய ஆணவ இருள். ௬. குரு பணிக்கு உடலும், சங்கம பூசைக்குப் பொருளும், சிவத்தியானத்திற்கு மனமும் உரியனவாகப் புரிதல் வேண்டுமென்னும் நூற்றுணிபுபற்றி நினக்குறு கூறும் மனமென்றார். ௭. அலை - அல்லை. முருகலர் - மணம் பொருந்திய மலர்.

துன்பமுற் றிடுசிற் றின்பவெவ் விடயந்
துறந்துளோர் மனத்தெழு தருபேர்
இன்பநற் கடலே யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (எ)

ஆடுற வடியேன் புதுக்குடந் தருநீ
ரன்பன்வாய்ப் புனலுனக் காமோ
கூடையின் மலர்பித் தையிற்றரு மலரோ
கூறுமென் கவியவன் மொழியோ
நாடரு மொருநீ யிறையெனும் வழக்கை
ஞானசம் பந்தனுற் றிட்ட
ஏடுரை செய்ய வென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (அ)

மெய்யுறு பிணிக்கு விலக்குவ வொழித்து
விதித்தன கொள்ளுவன் பிறவி
மையுறு பிணிக்கு மவ்வகை செயாமல்
வருத்துமந் நோயிடைப் படுவேன்
பெய்யுறு வளைக்கைத் திருநுத லுமையாள்
பெருவிழிக் கணைகொடு விடாமல்
எய்யுறு முரத்தோ யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (கூ)

சரிப்பினு மொருபா லிருப்பினு முறக்கச்
சார்வினும் விழிப்பினு மொருசொல்
உரைப்பினும் போக நுகர்வினு மாவி
யொழிவினு நின்னையான் மறவேன்
விருப்புறு மலரும் விரையுமே போல
விமலயெங் கணுமுறு பொருளாய்
இருப்பினு மரியோ யென்கரத் திருக்கு
மீசனே மாசிலா மணியே. (௰)

குறுங்கழிநெடில் முற்றிற்று.

---

அ. ஆடுற - நீராட. அன்பன் - கண்ணப்பன். பித்தை-கூந்தல். கூ. மெய் - உடல். மையுறு - மயக்கம் பொருந்திய. பெய்யுறு - இடப்பட்ட. உரத்தோய் - மார்பையுடையவனே. ௰. சரிப்பினும் - சுற்றித் திரிந்தாலும். ஆவி யொழிவு - சாக்காடு.

# கரு. நிரஞ்சனமாலை

[நிரஞ்சனம் என்னும் வடசொல் நிறைவு இருளின்மை ஆகிய பொருள்களைக் குறிக்கும். ஈண்டு மெய்யறிவு நிறைவை உணர்த்தி நின்றது. கட்டளைக்கலித்துறையால் முப்பத்தொரு பாடல்களில் அமைந்த இம்மாலை அறிவின்மையைப் போக்கி மெய்யறிவைத்தர வேண்டுமென்று வேண்டுவது.]

**கட்டளைக்கலித்துறை**

நிரஞ்சன சூனிய நிட்கள மாகியந் நிட்களத்தின்
வருஞ்சிவ சித்துச்சின் னுதவிந் துக்களை மன்னியொன்ருய்
அருஞ்சுட ராயக ராதிப் பிரணவ மாகிநின்று
தருஞ்சகம் யாவுமென் கையா லயத்திற் றனிமுதலே. (க)

குருவாகி முத்தனு விற்கிரி யாதிகள் கொண்டொருமூன்
றுருவாய் மலமொழித் தாவிகண் மூவங்க மாவருளி
ஒருவாறு தான்முதன் முப்பொரு ளாகி யுவந்துநிற்குந்
திருவாரு மென்கைத் தவிசிடை மேவுஞ் சிவலிங்கமே. (உ)

என்னை யறித னினையறி கின்ற வியல்பதென்னு
துன்னை யெனைவிட் டறிவான் றெடர்த லொருவனிழல்
தன்னை யடியின் மிதிப்பான் றெடருந் தகைமைத்தன்றே
பொன்னை நிகர்செஞ் சடைக்கற்றை யென்கைப் புராந்தகனே. (௩)

தன்பொரு ளென்ப நினைப்பிறர் தம்பொரு டாவரமாம்
என்ப னறிந்து முயிர்க்கே ளிருப்பவு மேதிலர்மெய்ப்
புன்புணர் வெஃகு மடமாதி னின்னிற் புறந்திரியும்
அன்பறு மென்பவம் போமேயென் னங்கை யமர்ந்தவனே. (௪)

அங்கையி னெல்லி யெனவந்தெ னங்கை யமர்ந்தவிளந்
திங்களங் கண்ணி நினையன்றிப் போய்ப்பிற தெய்வந்தொழல்
கொங்கவிழ் பூந்துணர்க் கற்பக நீழற் குடிமுனிந்து
பொங்கெரி வெந்நிர யத்தா டிருப்பப் பொருந்துவதே. (௫)

---

க. சூனியம் - வெறும் பாழ். மன்னி-பொருந்தி. உ. முத்தனு-மூவுடல். மலம் - மும்மலம். ௩. என்னையறிதல் - தன்னைத்தான் அறிதல். எனைவிட்டு - என்னை அறிவதை விட்டுவிட்டு. புராந்தகன் - புரங்களையழித்தவன். ௪. புன்புணர்வு-இழிந்த சேர்க்கை. ௫. கண்ணி-மாலை. முனிந்து-வெறுத்து. வெந்நிரயம் - கொடிய நரகம்.

சித்து நிரஞ்சனத் துச்சூனி யத்துச் செயலுரைதீர்
நித்த வநாதி சரணன் சரணனந் நிட்களத்தே
அத்தனி மாலிங்க மாதியி னுனயிக் காதிகளாய்
மெய்த்த வுனையென்று நீங்கேனெ னங்கை விடாதவனே. (௬)

கண்ணி லிரவி செவியிற் றிசைநின் கருத்தின்மதி
ஒண்ணுத லிற்கனல் வானுத ரத்தி லுயிர்ப்பில்வளி
வண்ண வடியிற் புவியிந் திரனயன் மால்புயத்தில்
அண்ணல் வதனத் தரன்றேன்று மென்கை யமர்ந்தவனே. (௭)

காயங் கரண நற் பாவ மறிபவன் காணறிவு
ஞேயங்க ளாதி முதனடு வீறி னினக்கயலே
ஆயிங் கொருபொரு ளர்ப்பிப்ப லென்ப தவிச்சையன்றோ
பாயுஞ் சினவிடை யொன்றூரு மென்கைப் பரஞ்சுடரே. (௮)

சத்தங்க லிங்கங்க ளாயே நிகழ்ந்தது சத்திபத்தி
சித்திங் கடைந்தது கைமுக வர்ப்பித சேடங்களாய்
மெத்தென் றிலங்குநின் னுனந்த மேயென் விழிகளிப்பக்
கைத்தங்கு செம்பொரு ளேயருள் காட்டுங் கறைக்கண்டனே. (௯)

வான்குறித் தெய்யுங் கணை நுதிக் கேநிற்கும் வானெனவே
யான்குறித் தெய்தப் புகுமறி வின்க ணிருத்திகண்டாய்
கூன்குறித் திங்கட் சடையாய் மகரக் குழைதடவும்
மான்குறிக் குங்க ணுமைபங்க னேயென்கைம் மாணிக்கமே. (௧௦)

பிரமமுந் தானு மயலென் றுருச்சிக்கும் பேதநிலை
தருமம் மயலற நாஞகி நின்றனை தான்சிவமென்
றருமை வினையி லபேதம் புகாம லருச்சிக்குமா
றிருமை வடிவுகொண் டுற்றுயெ னங்கை யிறையவனே. (௧௧)

கோலந் தருமடி நாப்பண் விருத்தநற் கோமுகமா
ஞாலங் கருதருங் கோளகந் தம்மி னயந்தடியேன்
சீலங் கொளுமரு ளாசார மாதி திகழ்ந்துநிற்கும்
மூலங் கரணங் கலந்தங்கை மேவிய முக்கண்ணனே. (௧௨)

---

௬. மெய்த்த - மெய்ப்பொருளாகவுள்ள. ௭. கண்ணில் இரவி - கண்ணில் கதிரவன். உயிர்ப்பு - மூச்சுக்காற்று. வளி - காற்று. ௮. காயம் - உடல். கரணம் - அந்தக்கரணம். அர்ப்பிப்பல்-படைப் பேன். அவிச்சை - பொய். ௯. கறைக்கண்டன் - கறை பொருந்திய கழுத்தையுடையவன். ௧0. வான்குறித் தெய்யுங்கணை - விண்ணைக் குறித்துச் செலுத்தப்படும் அம்பு. மகரக்குழை - மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட காதணி. மான் குறிக்கும் - மானைப்போன்று விளங்கும். ௧௧. அயல் - வேறு. நாஞகி நின்றனை - நீ நாஞகி நின்றாய். ௧௨. நாப்பண் - நடு.

மண்ணும் புனலுஞ் சுடுசெழுந் தீயும் வளியுமகல்
விண்ணும் படைத்து விளையாடிக் காக விழியிரண்டு
நண்ணுங் கருமணி யொன்றென வேபவ நாசமுறக்
கண்ணுங் கருத்துங் கலந்துநின் றாயென்கைக் கண்ணுதலே. (கங)

நாக மெனவும்பின் கோக மெனவுமெய்ஞ் ஞானத்தினால்
சோக மெனவுஞ் சொலுமறி யாமை தொலைத்தொருநீ
ஆக முழுது நிறைந்துநின் றாய்நல் லருட்கடலே
பாக மொருபெண் குடியாகு மென்கைப் பரஞ்சுடரே. (கச)

ஒன்றிரண் டாயவை பற்பல வாகி யுதித்தமுறை
சென்றிரண் டாகிப்பின் னொன்றாகி நிற்குஞ் சிவமொடங்கம்
என்றிரண் டாக வுரைப்பார் நினதிய லெய்திலர்காண்
மின்றிரண் டாலன்ன மேனிய னேயென்கை வித்தகனே. (கரு)

உறங்குது மென்றுறங் காநிற் பவரிலை யோங்கொளியாய்ப்
பிறங்கு முனையடைந் தோமென் றிருப்பது பேதைமைகாண்
நிறங்குணி போல வெனைக்கொண்டு நின்ற நிலையினின்று
புறம்பக மொன்று மிலாதென்கை மேவும் புராந்தகனே. (கசு)

குருவிற் குதவு முடல்சரத் திற்குக் கொடுத்தலுறு
திருவிற் றிகழு நினக்கே தருமனஞ் சேயரிக்கண்
பொருவிற் புருவ மடமாதர் தம்மிடைப் போக்குறுமென்
கருவிற் கொழிவுள தோகர பீடத்தெங் கண்ணுதலே. (கஎ)

துயிலினும் போகினு நிற்கினும் வீழினுஞ் சொல்லினுமொன்
றயிலினுங் காணினுங் கேட்பினும் வாழினு மல்லலொடு
பயிலினுஞ் சோரினுந் தேறினு நீக்கினும் பற்றினும்பொய்
குயிலினுஞ் சோம்பினு நிற்கட வேனென்கைக் கொற்றவனே. (கஅ)

ஓடுந் தனமும் புகழும் பழியு முயர்விழிவுங்
கேடுந் திருவு மமுதமும் புற்கையுங் கேள்பகையும்
வீடுங் குடிலு மகளிரு மன்னையும் வேறறவே
நாடுங் கருத்து வருமோ வெனக்கென்கைந் நாயகமே. (க௯)

---

கங. பவநாசம் - பிறப்பு அழிந்தொழிய. காகத்தின் இரு கண்கட்கும் கருமணி ஒன்றே என்பர். கச. ஆகம் - உடல். கரு. மின் திரண்டால் அன்ன - மின்னல்கள் ஒன்று சேர்ந்தாற் போன்ற. கசு. பிறங்கும் - விளங்கும். கஎ கருவிற்கு - பிறவிக்காரணப் பொருளுக்கு. கஅ. அயிலினும் - உண்டாலும். அல்லல் - துன்பம். சோரினும் - சோர்ந்தாலும். குயிலினும்-சொன்னாலும். க௯. இதில் கூறப்பட்டுள்ள நிலைகள் கைவரப்பெற்றவர்கள் மெய்யறிவாளர்களாவர்.

பாடு மவனுமொன் பாட்டுமப் பாடப் படுபவனும்
நாடு மளவிலி னியன்றி வேறிலை நான்முகன்மால்
தேடு மருமருந் தேயமு தேயிளந் திங்கண்முகிழ்
சூடு மணிவிளக் கேகர பீடத்திற் றூயவனே. (௨0)

இல்லாள் புதல்வ ரனைதந்தை பொன்மண் ணிடைவிழைவு
செல்லா மருளு மயறீர்ந்து நின்கழல் சேர்ந்துனக்கே
எல்லா முதவுநற் சித்தத் துறைகுவை யென்கையுள்ளாய்
நல்லார் புகழ்தரு மாசார லிங்கமென் றுமமுற்றே. (௨௧)

பழியாம் பிறர்தம் பொருண்மனை வேட்கை பரதெய்வமோ
டொழியா வரு -ரு மட்டா வரண முவந்துகொண்டே
அழியா துயருநற் புத்தி யெனுங்கை யமர்வைகண்டாய்
மொழியா வருங்குரு லிங்கமென் றேயென்கை முன்னவனே. (௨௨)

விடயங் களினண்ணி யானென தென்னு மிகையொருவி
அடையும் புலனினக் காக்குந் தவிரகங் காரப்பெயர்
உடையங் கரமிசை நற்சிவ லிங்கமென் றுற்றனைகாண்
புடையம் பிகையொ டமர்வாயெ னங்கைப் புராந்தகனே. (௨௩)

நில்லா தியங்கும் வளியொடு கூடி நிலையழிந்தே
புல்லா விடயத் தலமர னீங்குபு பொய்யினெறி
செல்லா தொளிர்நன் மனத்தே யிருத்தியென் செங்கையுள்ளாய்
கல்லா ரறிவருஞ் சங்கம நாமங் கடைப்பிடித்தே. (௨௪)

உடம்பு சதிபதி தானாய் விடயங்க ளுண்டுழலா
தடங்கு சதியொரு தானாகி நீபதி யாகவுனைத்
தொடர்ந்து நுகருநன் ஞானக் கரத்திடை தோன்றுவைமால்
கடந்து வருபிர சாதமென் றேயென்கைக் கண்ணுதலே. (௨௫)

யானா ரடிமை சிவனே யிறையென் றிருப்பதுபோய்
நீநா னெனப்படும் பேத மிலாமை நெறியுதவும்
ஆனா துயர்ந்தசற் பாவத்து மாலிங்க மாகிநின்றாய்
வானா டரியவ னேகர பீடத்து மாணிக்கமே. (௨௬)

---

௨0. எல்லாம் நீயே என்பது இப்பாடலின் கருத்து. ௨௧. மாளும் மயல் - மருளச் செய்யும் மயக்கம். ௨௨. பனைவேட்கை - பிறர் மனைவியை விழைதல். பரதெய்வம் - பிற தெய்வங்களைப் போற்றல். ௨௩. விடயங்களில் - உலகப் பொருள்களில். மிகை ஒருவி - குற்றத்தில் நீங்கி. ௨௪. பொய்யினெறி செல்லாது - பொய்யான நெறிகளிலே செல்லாமல். ௨௫. விடயங்கள் உண்டு உழலாது - விடயங்களை நுகர்ந்து சுழலாமல். ௨௬. ஆனாதுயர்ந்த - அளவுபடாமல் மேலோங்கிய

உலகிய றன்னை யொருவாது பற்று முளத்தொளியாய்
இலகிய நின்னைத் தெரிப்ப தொருவற் கெளிதுகொலோ
சிலைகவர் கையில் விளங்காய் பிடித்தல் செயுமவர்யார்
விலகுதிண் டோளணி கொண்டவ னேயென்கை வித்தகனே. (௨௭)

ஆனந்த வாரிதி யாகிய நீகை யமர்ந்திருப்ப
நானந்து தீவிட யந்தேடிச் சென்றுண்டு நைந்தழிதல்
வானந் தமுதங் கரத்தே யிருப்பதை மாற்றியருந்
தீநஞ் சருந்துத லன்றோ நிரஞ்சன சின்மயனே. (௨௮)

உருவஞ் சுவைநிறை வாகிய மூன்று முவந்துகொண்டு
மருவங்க முள்ள முருவக லாதுள்ள வாறுநின்றாய்
அருவன் றுருவன் றருவுரு வன்றி யறிவுருவாய்க்
கருவன் றுலகம் படைத்தாடு மென்கைக் கறைக்கண்டனே. (௨௯)

விள்ளேன் சிறிய ரினம்பெரி யோரை விரும்பியென்றும்
நள்ளேன் பிறர்மனைப் போக்கொழி யேன்மெய்ந் நடுநடுங்க
உள்ளேன் றிருவடி நீழலி லென்னெஞ் சுருகிநையேன்
துள்ளேன் றெழும்புசெ யேனென்செய் கேனென்கைத் தூயவனே.

அழியும் பொருள்கொடுத் தேசங் கமத்திற் கழிவில்பொருள்
பழியும் பவமு மிலாதெய்த லாயும் பயனிலவாய்க்
கழியும படிநெடு நாணீத் தமுதங் கமருகுத்தேற்
கொழியும் பவமுள தோகர பீடத் துறைபவனே. (௩௧)

நிரஞ்சனமாலை முற்றிற்று.

---

௨௭. ஒருவாது - நீங்காமல். தெரிப்பது - தெரியப்படுத்துவது. ௨௮. ஆனந்தவாரிதி - இன்பக் கடல். நந்து - அழிந்துபோகிற. ௨௯. மருவு அங்கம் - பொருந்திய உடல். உள்ளம்-மனம். ௩௦. விள்ளேன் - விட்டு நீங்கேன் நள்ளேன் - பொருந்தேன். உள்ளேன் - நினையேன். ௩௧. சங்கமம் - அடியார். கமர் உகுத்தேன் - நிலவெடிப்பிற் சிந்தினேன்.

## கசு. கைத்தலமாலை

[கைத்தலம் என்பது கையாகிய இடம். சிவபிரானுடைய திருவுருவத்தைத் தாங்கப் பெற்ற கை மிகச் சிறப்புடையதாகலின் அக்கையைக் குறித்துப் பாடப்பெற்றது இக்கைத் தலமாலை. இம்மாலை கலிநிலைத்துறை என்னும் பாவால் பத்துப் பாடல்களால் அமைந்துள்ளது.]

**ஒருவிகற்பவெதுகைக் கலிநிலைத்துறை**

முன்ன மாலய னிந்திர னமரர்கண் முனிவர்
பன்னு மாரணம் போற்றுதற் கரியநம் பரமன்
மின்னு லாவிய சடாடவிக் கடவுள்வீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (க)

அன்ன மாயும்வெண் பிறைமருப் பேனமென் றாயும்
முன்ன நான்முக னாரணன் றேடரு முதல்வன்
பின்னு வார்சடைப் பெருந்தகை பீடமாக் கோடற்
கென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (உ)

தன்னை மேவிவந் தனைபுரி பவன்செய றடுப்பான்
உன்னி மேல்வரும் வெந்திறற் கூற்றினை யுதைத்த
மன்னு மாலயற் கரியவன் வந்துவீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (ங)

தன்னை நேர்வட காசிதென் கயிலைகே தாரம்
அன்ன மார்வய லம்பல நமன்றமர் வராமல்
கன்னன் மாமதற் றெறும்விழிக் கடவுள்வீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (ச)

கன்ன லாரமு தினுஞ்சுவை தருவதாய்க் காண்பான்
உன்னு மாலயற் கரியதா மொருமலை யுச்சி
மன்னு மோர்பவப் பிணிமருந் தெளிதுவந் திருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (ரு)

---

க. பன்னும் - கூறும். மின் - மின்னல் போன்ற ஒளி. சடாடவி- சடைக்காடு. உ. ஏனம் - பன்றி. பீடம் - இருக்கை. கோடற்கு - கொள்ளுதலுக்கு. ங. வந்தனை புரிபவன் - மார்க்கண்டேயன். உன்னி - உயிர்கவர எண்ணி. மன்னும் - நிலைபெற்ற. ச. அம்பலம் - திருத்தில்லை. கன்னன்மாமதன் - கரும்பு வில்லையுடைய காமன். ரு. பவப்பிணி மருந்து - பிறவி நோய்க்கு மருந்தாயிருக்குங்கடவுள்.

அன்னை யாகியின் னுயிர்க்குயி ராமரு ளாளன்
பொன்னு மாரமு மணியுமா ரமுதமும் போல்வான்
தன்னை நாடொறுங் கண்டுகண் களிப்பதாச் சார்தற்
கென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௬)

அன்ன மூர்பவன் முதலியோ ரபயமென் றடைய
முன்ன மாலமுண் டவர்துயர் களைந்தருண் முதல்வன்
மின்னு மாமழு வலமுடை வீரன்வீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௭)

பன்னு மாமறை தமிழினுற் பாடுநம் பிக்குப்
பொன்னு மாடையு மணிகளு மூர்தியும் பொருளும்
இன்னு மீபவ னருளினன் மேவிவீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௮)

பின்னும் வார்திரைக் கடலின்வீழ்ந் தமிழ்கையிற் பிடிப்ப
முன்ன மோர்புணை யகப்படு முறைமைபோற் பிறப்பின்
இன்னல் கூர்பொழு தெம்பிரான் வந்துவீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௯)

தன்னை யோர்பொழு திறைஞ்சுவான் கருதியித் தரைமேல்
மன்னு மாலயம் யாண்டுள தெனவல மராமல்
பொன்ன வாமலர்ச் சடையுடைப் புனிதன்வீற் றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௧௦)

கைத்தலமாலை முற்றிற்று.

---

௬. அருளாளன் - அருளை ஆள்பவன். ஆர் அமுதம்-மிகுந்த சுவை பொருந்திய அமுதம். ௭. அன்னம் ஊர்பவன்-நான்முகன். ஆலம்-நஞ்சு. மழு-மழுப்படை. ௮. நம்பி-சுந்தரர். ஈபவன்-கொடுப்பவன். ௯. ஓர் புணை - ஒரு தெப்பம். இன்னல்கூர்பொழுது - துன்பத்தையடையுஞ் சமயத்தில். ௧௦. மன்னுமாலயம் - நிலைபெற்ற திருக்கோயில்.

## கஎ. சிவநாம மகிமை

[சிவநாமம் என்பது சிவபெருமானுடைய திருப்பெயர். அப்பெயர்களுளெல்லாஞ் சிறந்து விளங்குவது சிவம் என்பது. இப்பெயரை இரட்டித்துச் 'சிவசிவ' என்பர். இவ்வாறு "சிவசிவ" என்பதன் பெருமை செப்புதற்கரியது. இப்பெயரின் பெருமையிற் சிறிது கூறுவதால் இது சிவநாமமகிமை என்று பெயர் பெற்றது. இது பத்துக் கலிவிருத்தப் பாடலையும் இறுதியில் ஓர் அறுசீர் விருத்தப் பாடலையுங் கொண்டது.]

கலிவிருத்தம்

வேத மாகமம் வேறும் பலப்பல
ஓதி நாளு முளந்தடு மாறன்மின்
சோதி காணிருள் போலத் தொலைந்திடுந்
தீதெ லாமுஞ் சிவசிவ வென்மினே. (க)

புல்ல ராயினும் போதக ராயினுஞ்
சொல்வ ராயிற் சுருதி விதித்திடும்
நல்ல வாகு நவையென் றகற்றிய
செல்ல றீருஞ் சிவசிவ வென்மினே. (உ)

நாக்கி னானு நயனங்க ளானுமிவ்
வாக்கை யானு மருஞ்செவி யானுநம்
மூக்கி னானு முயங்கிய தீவினை
தீர்க்க லாகுஞ் சிவசிவ வென்மினே. (ங)

சாந்தி ராயண மாதி தவத்தினன்
வாய்ந்த மேனி வருத்த விறந்திடாப்
போந்த பாதக மேனும் பொருக்கெனத்
தீந்து போகுஞ் சிவசிவ வென்மினே. (ச)

வில்லி தென்ன விளங்குந் திருநுதல்
வல்லி பங்கன் மலரடி காணிய
கல்வி நல்குங் கருத்து மகிழ்வுறுஞ்
செல்வ நல்குஞ் சிவசிவ வென்மினே. (ரு)

தீய நாளொடு கோளின் செயிர்தபும்
நோய கன்றிடு நூலெனக் கூறிய

---

க. ஓதி - உரைத்து. தடுமாறன்மின் - தடுமாற்றத்தையடையா தீர்கள். சோதி - ஒளி. தீது - தீமை. உ. புல்லர் - இழிந்தவர்கள். போதகர் - அறிவுடையவர். நவை - குற்றம். செல்லல் - துன்பம். ங. நயனங்கள் - கண்கள். முயங்கிய - தேடியடைந்த. ச. சாந்திராயணம் - முதலிய நோன்புகளால் தீராத தீவினையும் விரைவில் அழிந்து போகுமென்பது. ரு. வல்லி - உமாதேவி. காணிய - காணும் பொருட்டு. சு. தீயநாள் - தீய கோள்கள் பொருந்திய

ஆயுள் பல்கு மறம்வளர்ந் தோங்குறுந்
தீய தீருஞ் சிவசிவ வென்மினே. (சு)

வருந்தி யாற்றி வளர்த்த கதிர்த்தலை
பொருந்து வான்பயிர் போற்றுநர் போலவே
விரிந்த வேணியில் வெண்மதி சூடிபின்
திரிந்து காப்பன் சிவசிவ வென்மினே. (எ)

முந்தை யோர்சொன் மொழிந்து சிவனென
நிந்தை தானச் சிவனை நிகழ்த்தினும்
வந்த தீவினை மாற்றுவ னுதலால்
சிந்தை யோடு சிவசிவ வென்மினே. (அ)

நீச ரேனும்வா னீசர் நிகழ்த்தில்வான்
ஈச ரேனுஞ் சிவசிவ வென்கிலார்
நீச ரேயென் றியம்புறு நின்றுப
தேச நூல்கள் சிவசிவ வென்மினே. (க)

எண்ணி நெஞ்சிற் சிவசிவ வென்பவர்
வண்ண மென்பதங் கிட்டி வணங்கவும்
உண்ண டுங்குவ னெண்டிறற் கூற்றுவன்
திண்ண மீது சிவசிவ வென்மினே. (கo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இழிவுறுபுன் கருமநெறி யினனெனினுங்
கொலைவேட னெனினும் பொல்லாப்
பழிமருவு பதகனெனி னும்பதிக
னெனினுமிகப் பகரா நின்ற
மொழிகளுண்முற் றவசனுய்ச் சிவசிவவென்
றொருமுறைதான் மொழியி லன்னோன்
செழியநறு மலரடியின் றுகளன்றே
வெங்கள்குல தெய்வ மென்ப. (கக)

சிவநாம மகிமை முற்றிற்று.

---

தான். செயிர்தபும் - குற்றம் நீங்கும். பல்கும் - மிகுதிப்படும். எ. பின்திரிந்து-சிவ சிவ என்பவர்கட்குப்பின்னே திரிந்து. அ. முந்தை-முன்பு. முன்பு சிவ சிவ என்று ஒருமுறை கூறியவர் பிறகு அப்பெருமானை இகழ்ந்தாலும் தீவினையை மாற்றியருளுவர் என்றபடி. க. நீசர் - இழிந்தவர். வானீசர் - தேவர்கள். இயம்புறும் - கூறும். கo. வண்ணமென்பதம் - அழகிய மெல்லிய கால்கள். கிட்டி-நெருங்கி. ஒண்டிறல் கூற்றுவன் - மிகுந்த ஆற்றலமைந்த நமன். கக புன்கருமநெறியினன்-இழிந்த செய்கைகளை மேற்கொண்டிருப்பவன். பழிமருவு-பழ்பொருந்திய. பதகன் - பாதகன். பதிதன் - இழிந்தவன். துகள் - தூள்.

## ௧௮. சிவஞானபாலைய சுவாமிகள்
# தாலாட்டு

[தாலாட்டு என்பது குழந்தையைத் தொட்டிலிற் கிடத்தி அஃது உறங்குமாறு இனிய பாடல்களைப் பாடுவதாகும். தால் என்பது நா. நாவினை யசைத்துப் பாடுதலின் ‘தாலாட்டு’ என்று காரணப் பெயராயிற் றென்பர். பிற பாடல்களும் நாவினை யசைத்துப் பாடப்படுவனவேயாயினும் இப்பெயர் சிறப்பாகக் குழந்தைகளின் பாடல்களிலேயே பயன்படுத்தப் படுகிறது. தமிழில் கீதாசாரத் தாலாட்டு, தத்துவராய சுவாமிகள் திருத்தாலாட்டு முதலிய தாலாட்டு நூல்கள் உள்ளன. இத்தாலாட்டில் அடிகளார் சிவஞானபாலைய சுவாமிகளைக் குழந்தையாகப் பாவித்துத் தத்துவ ஞானப் பொருள்களை அமைத்துப் பாடியுள்ளார்.]

### காப்பு

**நேரிசைவெண்பா**

அவஞானம் போக்கி யருண்ஞான மாக்கும்
சிவஞான தேவன் றிருமுன்—தவஞானத்
தாலாட் டெனுந்தமிழைச் சாற்றுதற்கு நற்றுணையாம்
மாலாட்டு மாமுகத்தன் வந்து.

---

திருவருளா லென்னைத் தெரிவிக்க விளங்குந்
திருவுருவாய் வந்த சிவஞான தேசிகனே. (௧)

என்றுநித்த பூரணமா யின்பவறி வுண்மையாய்
நின்றபடி நிற்கு நிகழ்பிரம மென்றானே. (௨)

தன்சத்தி யாலாந் தலமங்க லிங்கமென
என்சத்தி பாதத் தெழுந்தருளிச் சொன்னானே. (௩)

நண்பாகு மிட்டலிங்க நன்றும் பிராணலிங்கம்
ஒண்பாவ லிங்கமா மோர்பொருளிங் கென்றானே. (௪)

---

(காப்பு) அவஞானம் - வீணறிவு. அருள்ஞானம் - மெய்யறிவு. மாலாட்டும் - மயக்கங்களையெல்லாம் ஆட்டுவிக்கின்ற. ௧. என்னைத் தெரிவிக்க - நான்யார் என்பதை எனக்குப் புலப்படுத்த. ௨. நித்த பூரணம் - என்றும் நிறைபொருளாக விளங்குவது. ௩. தன்சத்தி - தன்னுடைய மெய்யறிவுத் திறம். ௪. இஃது இலிங்கங்களெல்லாம் ஒன்றென்றது.

ஆசார லிங்கமுட னாருங் குருலிங்கந்
தேசாரு மிட்டலிங்கஞ் சேர்ந்தாகு மென்றானே. (௬)

அந்தப் பிராணலிங்கத் தாகுஞ் சிவலிங்கம்
இந்தச் சரலிங்க மென்றசிவ ஞானியோ. (௭)

பாவலிங்கந் தன்னிற் பரமப் பிரசாதந்
தாவகன்ற மாலிங்கஞ் சார்ந்துவரு மென்றானே. (௮)

ஏகாங்க மேயாகு மின்பத் தியாகாங்கம்
போகாங்கம் யோகாங்கம் போற்றியறி யென்றானே. (௯)

பத்தனுமா கேசனுமாம் பன்னுந் தியாகாங்கம்
உய்த்துணரி னென்ன வுணர்த்தும் பெருமானே. (௧)

பிரசாதி யோடு பிராணலிங்கி யாகும்
உரைசாரு போகாங்க மொன்றென்று சொன்னானே. (௧0)

சாற்றுமியோ காங்கஞ் சரண னயிக்கியனும்
போற்றிநீ காணென்று போதித்த தேசிகனே. (௧௧)

அங்க நவவிதமு மந்தநவ லிங்கமொடு
தங்கு மெனவெனக்குச் சாற்றும் பெருமானே. (௧௨)

விழுங்கல் பருகலொடு மெல்லலா சாரம்
ஒழுங்கிற் குருசிவமு முற்றிடுமிங் கென்றானே. (௧௩)

சோகிய லேகியமுஞ் சொன்ன விவற்றறிவும்
ஏகியுறும் பின்மூன் றிலிங்கத்து மென்றானே. (௧௪)

இந்தக்கா யார்ப்பணங்க ளிட்டலிங்கத் தென்றெனக்குச்
சந்தப் படவுரைத்துத் தந்தசிவ ஞானியோ. (௧௫)

பீடமிடை வட்டம் பெருங்கோ முகதாளம்
ஆடலுறு கோளகமா சாராதிக் கென்றானே. (௧௬)

நாற்றஞ் சுவையுருவ நல்லூ றொலிநிறைவு
சாற்றுஞ் சடுலிங்கஞ் சாருமெனச் சொன்னானே. (௧௭)

வேர்முதலாங் கந்தம் விளங்கு மரமுதலாங்
கூர்மணமா சாரங் குருவினிலா மென்றானே. (௧௮)

---

௫ - ௬. இவைகளும் சிவலிங்க வகைகளையே கூறுகின்றது. ௮. தாவகன்ற - குற்றமற்ற. ௯. இஃது அங்கங்களைப்பற்றிக் கூறுகிறது. ௧. பத்தன் - அடியவன். மாகேசன் - இறைவன். ௧௫ காயார்ப்பணம் - உடலை அர்ப்பித்தல். ௧௭. நாற்றம் - மணம். ஊறு - பரிசம்.

தளிராதி கந்தமுகை தான்முதலாங் கந்தம்
ஒளிரார் சிவசாத்தி ஞற்றிடுமிங் கென்ருனே. (கக)

காய்முதலாங் கந்தமெலாங் காசில்பிர சாதத்துந்
தூய்மலிமா லிங்கத்துந் துன்னுமெனச் சொன்னனே. (உ0)

மதுரந் துவர்கார்ப்பு வன்புளிகைப் பெல்லாஞ்
சதுரென் றிருத்தியவா சாராதிக் கென்ருனே. (உக)

பொன்மைவெண்மை பச்சைசெம்மை போந்த கருமையெலாம்
நன்மையவா சாராதி நண்ணுமென்ற நாயகனே. (உஉ)

வன்மைமென்மை வெம்மைதண்மை வாய்ந்த மிசிரமெலாஞ்
சின்மையவா சாராதி சேர்ந்துகொளு மென்ருனே. (உங)

கஞ்ச நரம்புதோல் கண்டகுழ லாதியொலி
அஞ்சொலிவை யெல்லாமவ் வாறு முறு மென்ருனே. (உச)

மணமுதலா மைந்து வகைநிறைவெ லாமும்
நணுமுறையா சாராதி நாடிலெனச் சொன்னனே. (உரு)

இம்முறையா ருரு மிலங்குகா ஞர்ப்பிதமென்
றெம்மறிவு கொள்ள வியம்புசிவ ஞானியோ. (உசு)

தொட்டறிந்திங் கொள்ளைத் துணிந்து நுகர்ந்துமகிழ்ந்
திட்டமைந்து நிற்கு மிலிங்கங்க ளென்ருனே. (உஎ)

கூறுமிவை யாவினுமிக் கொள்கை பெறுமிலிங்கம்
ஏறு மிரட்டுநூற் றெட்டாகு மென்ருனே. (உஅ)

உருவஞ் சுவைநிறைவா யோங்கர்ப் பிதங்கள்
மருவுந் திறஞ்சொன் மயிலே மலேவிளக்கோ. (உகூ)

சுத்தசித்த மோடுபிர சித்தமெனத் தோன்றுபுபா
சத்தமுத்த மாக்குபிர சாதமரு ளுயகனே. (௩0)

அங்கலிங்க சத்திபத்தி யத்தமுக வர்ப்பிதசே
டங்களிவை யட்ட சயிலமெனச் சொன்னனே. (௩க)

குசித்த மழிந்து குடும்பநோய் மாற்றுஞ்
சுசித்தமதி லாசாரந் தோன்றுமெனச் சொன்னனே. (௩உ)

---

உ0. தாய்மலி - தூய்மை மிகுந்த. துன்னும் - பொருந்தும். உங. மிசிரம் - கலப்பு. உஅ. இரட்டும் நூற்றெட்டு-இருநூற்றுப் பதினறு. உகூ. மயிலேமலே - மயிலம். ௩உ. குசித்தம் - நல்லதல்லாத மனம். சுசித்தம் - நல்லமனம்.

குபுத்தி யழிந்து குருநெறியி னிற்குஞ்
சுபுத்திதனி னிற்குஞ் சுடர்குருவிங் கென்றனே. (௩௩)

ஆங்கார மில்லா நிராங்கார வத்தமதில்
நீங்கா திலகு நிகழ்த்துசிவ மென்றனே. (௩௪)

கமன மழிந்து கறையற்று நிற்குஞ்
சுமனமதி னின்றிலகுந் தூயசர மென்றனே. (௩௫)

மெய்ஞ்ஞான மாகி மிளிரும் பிரசாதஞ்
சுஞ்ஞான வத்தமதிற் றேன்றுமெனச் சொன்னனே. (௩௬)

துற்பாவ நீங்கித் துணிவுபடு மத்துவித
சற்பாவ மாலிங்கஞ் சாருமெனச் சொன்னனே. (௩௭)

ஆதார பீடங்க ளாறினுமவ் வாறிலிங்கம்
மீதாக வைத்து விளங்கச்செய் வித்தகனே. (௩௮)

ஆறு முகங்களுமவ் வாறுசா தாக்கியமும்
ஆறு வருணமுமா மாறிலிங்க மென்றனே. (௩௯)

பத்தனொடு மாயேசன் பாரம்பரிய வாசாரம்
மெய்த்தகுரு நான்கும் விளங்குகுரு வென்றனே. (௪0)

பிரசா தியுமப் பிராணலிங்கி தானும்
உரைசால் சிவசரமு மோங்கிலிங்க மென்றனே. (௪௧)

ஒழிந்தவங்க லிங்க மொருநான்கு நம்பால்
எழுந்தருளுஞ் சங்கமமென் றின்பந் தருவானே. (௪௨)

உருவ முருவருவ முற்றறிதற் கெட்டா
அருவமென நின்றிடுமவ் வாறுமெனச் சொன்னனே. (௪௩)

மாசுதரு தூலாதி மானவிசு வாதியே
ஆசி றியாகாங்க மாதியா மென்றனே. (௪௪)

விரிந்தன வெலாமும் விரிந்தமுறை சென்றே
ஒருங்கியங்க லிங்க வுபயமா மென்றனே. (௪௫)

---

௩௩. குபுத்தி-தீயஅறிவு. சுபுத்தி-நல்லறிவு. ௩௪. ஆங்காரம்-அகங்காரம்: நான் என்னும் ஆணவம். நிராங்காரம் - அகங்கார மற்ற தன்மை. ௩௫. கறையற்று - குற்றமற்று. ௩௬. சுஞ்ஞானம் - நல்லஞானம். ௩௭. துற்பாவம் - தீயமன வியற்கை. சற்பாவம் - நல்ல மனவியற்கை. ௩௮. மீதாக - மேலாக. ௪0. மெய்த்தகுரு - உண்மையான சற்குரு. ௪௧. உரைசால் புகழமைந்த. ௪௨. எட்டா - கண்டுணர முடியாத. ௪௩. உற்றறிதற்கு-பொருந்தியறிதற்கு. ௪௪. மாசு தரு - குற்றத்தைக் கொடுக்கிற. ஆசில் - குற்றமில்லாத. ௪௫. ஒருங்கி - ஒடுங்கி.

கடத்தி னுபாதியா காயமுற்ற வாபோல்
அடுத்த வுபாதியா லங்கலிங்க மென்றானே. (சசு)

தங்கு மிலிங்கமாந் தற்பதமத் தொம்பதமே
அங்க மயிக்கிய மசிபதமென் றுண்டானே. (சஎ)

ஆக முயிர்துரிய னாய்நின்ற போதெமைத்தான்
சோகமனத் தானைத் தோன்றும் பெருமானே. (சஅ)

அமைத்தபரஞ் சுத்தத் தசுத்தமதிற் சீவன்
தமப்பகுதி யிற்றேன்றுந் தத்துவங்க ளென்றானே. (சகூ)

நிரஞ்சன சூனியமா நிட்களத்திற் சித்து
வருஞ்சுடர்சின் னாதாதி வாய்ப்பவெனச் சொன்னானே. (ருO)

மூலசித்து நாதாதி மூன்றும் புணர்ந்தாகு
மாலகற்றுஞ் சோதிமய மாலிங்க மென்றானே. (ருக)

அகராதி மாலிங்கத் தாகியவை கூடித்
தகவாமோங் கார சதாசிவமா மென்றானே. (ருஉ)

அந்தச் சதாசிவத்தி னைம்முகத்து மைம்பூதம்
வந்துற் றிதயத்தான் மாவருமிங் கென்றானே. (ருங)

அப்பூதம் பஞ்சீ கரித்திருபத் தைந்தாகி
மைப்பூனு மான்மாவை மன்னியிடு மென்றானே. (ருச)

ஆணவத்தான் மூடனு மாருயிர்க்கு முன்வினையால்
மாண வளிக்குமிறை மாயைவடி வென்றானே. (ருரு)

மேலைவினை யாலுழலு மெய்யுயிர்க்குப் பாகமலக்
காலமுறச் சுத்தக் கரணமா மென்றானே. (ருசு)

கூறுமனச் சுத்தமுறக் கொண்டுபிண்ட நாமத்தை
நூறு தலநெறியு நோக்குமெனச் சொன்னானே. (ருஎ)

---

சசு. கடம்-குடம். அடுத்த-பொருந்திய. சஎ. அசிபதம்-நீயாக விருக்கிறாய் என்னும் பதம். சஅ. ஆகம்-உடல். சகூ. பரஞ்சுத்தத்து-மேலான தூய்மையில். தமப்பகுதி - தமோகுணப்பகுதி. ருO. நிரஞ் சனம் - தூளியுடைமை. ருக. மாலகற்றும் — மயக்கத்தைப் போக்கும். ருஉ. அகராதி - அகரமுதலான. தகவாம் - தகுதிவாய்ந்ததான. ருங. வந்துற்று - வந்து பொருந்தி. இதயத்து ஆன்மா - உள்ளத்தில் உள்ள ஆன்மா. ருச. பஞ்சீகரித்து - பஞ்சீகரணமாகி; அஃதாவது ஒன்றொன்று ஐவ்வைந்தாகி. ருரு. ஆணவம் - அகங்காரம். மாண - பெருமை பொருந்த. ருசு. மேலைவினை - முன்பிறப்புக்களின்வினை. ருஎ. மனச்சுத்தமுற - மனந் தூய்மையை அடைய.

கிரியைமன பாவங் கிடைப்பரிய ஞானம்
மருவிவிடா தங்கம் வயங்குமெனச் சொன்னானே. (௫௮)

ஞாதிருவு நின்றறியு ஞானனே யங்களுமற்
றேதமற வென்று மிருந்தபடி வைப்பானே. (௫௯)

வானேத்த வென்று மருவற் கரியபதம்
தானேத்த நல்குசிவ ஞானகுரு தேசிகனே. (௬0)

மிடியற் கெளிது விழியுற்ற பொன்போல்
அடியற்கு வந்திங் ககப்பட்ட வாரமுதோ. (௬௧)

கயிலைமலை மேவுங் கடைப்பிடியாற் சீர்சால்
மயிலைமலை மீதிங்கு வந்தமர்ந்த மாமணியோ. (௬௨)

எல்லாக் கலையுணர்ந்து மெய்தாப் பொருளையொரு
சொல்லாற் றிகழ்த்துதற்குத் தோன்றும் பெருமானே. (௬௩)

சீலந் திகழ்ந்துமதிற் சின்னமின்றி யும்படியோர்
கோலஞ் சிவமெனவுட் கொள்ளுமருட் குன்றமோ. (௬௪)

மண்களிக்க நாயேன் மனங்களிக்கக் கண்டுகொண்டு
கண்களிக்க வந்த கருணைப் பெருங்கடலோ. (௬௫)

சம்பந்த னன்றொருநாட் டானுண்ட பாலும்
எம்பந்த நீங்க வினிதமுது செய்தானே (௬௬)

வேண்டுவவெல் லாமுமாம் வெண்ணீ றளிப்பதற்குத்
தீண்டு மலர்க்கைச் சிவஞான தேசிகனே. (௬௭)

இம்மை மறுமை யிரண்டும் பெறவெமக்குச்
செம்மைதர வந்த சிவஞான தேசிகனே. (௬௮)

அரசமய மன்றி யகங்களித்தெஞ் ஞான்றும்
பரசமய மும்பணியும் பங்கயப்பொற் றாளானே. (௬௯)

தானபங்க னென்னுமதன் றன்றுணை யைக்கடந்து
மானபங்கம் பண்ணும் வலியொன் றுடையானே. (௭0)

---

௫௮. மருவி-பொருந்தி. வயங்கும்-விளங்கும். ௫௯. ஞாதிரு-அறிவு; காண்போன். ஏதமற - குற்றம் நீங்க. ௬0. வான்ஏத்த - விண்ணுலகத்தவர் போற்ற. ௬௧. மிடியன் - வறுமையுடையவன். ஆரமுது-சிறந்த அமுதம். ௬௨. மாமணி-சிறந்தமணி. ௬௩. திகழ்த்துதற்கு - சுட்டிக்காட்டி உணர்த்துதற்கு. ௬௪. சின்னம் - அறிகுறி. படியோர் - உலகத்தோர். ௬௫. மண்களிக்க - மண்ணுலகத்திலே உள்ளவர்கள் களிப்படைய. ௬௬. எம்பந்தம்-எமது பாசத் தொடர்பு. ௬௭. வேண்டுவ எல்லாமும்ஆம் - வேண்டியவைகள் எல்லாவற்றையும் அடைய. ௬௮. செம்மை - சிறப்பு. ௬௯. பரசமயம் - சைவ சமய மல்லாத பிறசமயம். ௭0. மானபங்கம் பண்ணும் - பெருமைக்கிழி வுண்டாக்கும்.

அறியா தொருநா ளறைபினும்வன் பாசஞ்
செறியா தருளுந் திருப்பே ருடையானே. (எக)

பூதமுத லெல்லாமும் போக்கியவற் றுண்மறைந்து
ஞாதிருவா மென்னை நயந்தறிவித் திட்டானே. (எஉ)

எந்தைசிவ சாதனங்கட் கெல்லாந் திருநீறு
முந்தியதென் றுண்மை மொழியும் பெருமானே. (எங)

உருத்திரனை யையமிலை யோருருத்தி ராக்கந்
தரித்தவ னென்றெமக்குச் சாற்றும் பெருமானே. (எச)

ஒண்மறையின் கண்ணா முருத்திரமவ் வஞ்செழுத்துங்
கண்மணியென் றையமறக் காட்டு மருட்கடலோ. (எரு)

அருவாகி நின்றசச்சி தானந்த வீசன்
குருவாகித் தன்னைக் கொடுக்குமெனச் சொன்னானே. (எசு)

பரம சிவமெனவும் பண்டைமறை போற்றும்
பிரமமென வும்பேர் பெறுமிலிங்க மென்றானே. (எஎ)

திரஞ்சரமென் றீசன் றிருவுருவி ரண்டுள்
பரஞ்சரமென் றோதும் பவளவா யண்ணலோ. (எஅ)

அங்கம் புனைவோ னடிப்புனலல் லாதுபவப்
பங்கங் கழுவப் படாதென்று சொன்னானே. (எகூ)

அந்தக் கரணத் தழுக்கறுப்ப தெங்கள்பரன்
சந்தப் பிரசாதந் தானென்று சொன்னானே. (அ0)

தருணமதிற் சீறுந் தனிவிழிகாட் டாமல்
கருணை குடியிருக்குங் கண்களொடு வந்தானே. (அக)

ஏருருந் தான்வா ழிடமேநற் காசியுந்தென்
ஆரூரு மம்பலமு மாக்குசிவ ஞானியோ. (அஉ)

---

எக. அறியாது - பலனுண்டாகுமென்று உணராமல். செறியாது- பொருந்தாமல். எஉ. நயந்து - விரும்பி. அறிவித்திட்டானே - உண்மைப் பொருளை உணரச் செய்தவனே? எங. எந்தை - எம் தந்தையாகிய சிவபிரானுடைய. முந்தியது - முதன்மையானது. எச. ஓர் உருத்திராக்கம் - ஒரு சிவயணி. எரு. ஒண்மறை - பெருமை பொருந்திய மறை. எசு. அருவாகி - வடிவமற்றதாகி. தன்னைக் கொடுக்கும் - மெய்யறிவைத் தரும். எஎ. பரமசிவம் பிரமம் எல்லாம் ஒன்றென்றபடி. எஅ. திரம் - நிலைபேறு. சரம் - போக்குவரவு. எகூ. அடிப்புனல் - திருவடிநீர். பவப்பங்கம் - பிறவியாகிய அழுக்கு. அ0. அந்தக்கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். அக தருணம் - சமயம். அஉ. ஏர் ஆரும் - சிறப்புப் பொருந்தியிருக்கும். தென் ஆரூர் - அழகிய திருவாரூர்; தெற்குத் திக்கில் உள்ள திருவாரூருமாம். அம்பலம் - தில்லைமூதூர்.

தன்பாத தாமரைதோய் தண்புனலே கங்கையாய்
வன்பாச நீக்க வழங்குசிவ ஞானியோ. (அங)

மண்படைத்த நான்முகனுர் மானுடர்த மொண்முகத்தில்
கண்படைத்த பேறுபெறக் காட்டு முருவானே. (அச)

ஆர்க்குங் கொடுநோ யனைத்துங் கடைக்கண்ணால்
தீர்க்குங் கருணைச் சிவஞான தேசிகனே. (அரு)

செப்ப முறவெனது சிந்தைவீட் டாசையெனுங்
குப்பை துகைத்துக் குடியிருக்க வல்லானே. (அசு)

தன்னையரு ளாளனெனுந் தன்மை யுலகறிய
என்னையடி யாரோ டெழுந்தருளிக் காத்தானே. (அஎ)

மெய்த்த வறிவாம் விளங்குகதை யொன்றெடுத்துத்
தத்துவமா மட்கலத்தைத் தாக்கும் பெருமானே. (அஅ)

வழுவின்றித் தன்மா வலியுலக மேத்த
மழுவின்றிப் பாவ மரமெறிய வந்தானே. (அகூ)

இணையாது மில்லா விடர்ப்பவ வேலைக்குப்
புணையாக வந்தருளும் புண்டரிகத் தாளானே. (கூ0)

ஊனே வுயிரோ வுயிர்க்குயிரோ வானந்தத்
தேனே வமுதோ சிவஞான தேசிகனே. (கூக)

அண்ட முழுது மணுவிற் சிறியவாக்
கொண்ட பெருமைக் குணக்குன் றனையானே (கூஉ)

எங்கண் மலவிருளுக் கீண்டு மயிலைமிசைச்
செங்கதிர்போற் றோன்றுஞ் சிவஞான தேசிகனே. (கூங)

அற்பகலு மாறு தரனடியார்க் கீதலுறுங்
கற்பகமாய் வந்துதிருக் காஞ்சிநக ருற்றானே. (கூச)

---

அங. வன்பாசம் - வலியபந்தம். அச. கண் பெற்றகன்பலன் அடிகளாரைப்போற்றி வழிபடல் என்க. மண் - உலகம். அரு. ஆர்க்கும் - பிணித்து வருத்தும். அசு. ஆசையெனுங் குப்பை - அவா வென்னுங் குப்பை. துகைத்து - அழித்து. அஎ. அருளாளன் - திருவாளை ஆட்சிசெய்து அடியவாகட்கு நன்மை விளைவிப்பவன். அஅ. மெய்த்த - உண்மைத் தன்மை பொருந்திய. கதை - கதாயுதமென் னும் ஒரு படைக்கலம். அகூ. மழு-கோடரி. பாவமரம்-தீவினையாகிய மரம். கூ0. இடர் - துன்பம். பவவேலை - பிறவிச்கடல். புணை - தெப்பம். புண்டரிகம் - தாமரை கூக உயிர்க்கு உயிர் - உயிர்களை வாழச் செய்பவன். கூஉ. அண்டம் - உலகம். கூங. மல இருள் - ஆணவமல இருள். கூச. அல் - இரவு. ஈதலுறும் - கொடுக்கும்.

பூணு மருள்வசவன் பூண்டசர பூசையன்று
காணு வெமக்கின்று காட்டுசிவ ஞானியையா. (௯௫)

விருப்புவெறுப் பின்மை விளக்கவென்புன் சொல்லைத்
திருப்பதங்கொள் கின்ற சிவஞான தேசிகனே. (௯௬)

பொறியூடு செல்லுமனப் போர்க்களிற்றைத் தன்றாள்
தறியூற் நிற்பத் தளைந்தசிவ ஞானியையோ. (௯௭)

பாடியுந்தன் சீர்த்தி பரவியுந்தன் பாதமலர்
சூடியுமிக் காலந் தொலைக்கவருள் செய்தானே. (௯௮)

பொய்ம்மாயை யென்னும் புலியின்வாய்ப் பட்டேனைக்
கைம்மாறி லாமற் கருணைகொடு மீட்டானே. (௯௯)

பத்தியுந்தன் பங்கயப்பொற் பாதமே பாடுகின்ற
சித்தியுந்தந் தாளுஞ் சிவஞான தேசிகனே. (௧௦௦)

சிவஞானபாலையசுவாமிகள் தாலாட்டு முற்றிற்று.

— —

௯௫. அன்று காணு-வசவர் பூசை செய்த அஞ்ஞான்று பார்க்காத. ௯௬. விருப்பு வெறுப்பு இன்மை விளக்க - மெய்யறிவாளர்கள் விருப்பு வெறுப்பு அற்றவர்கள் என்னுந்தன்மையை விளக்கிக்காட்ட. ௯௭. பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்புலன். தறி - கட்டுத்தறி. தளைந்த - கட்டிய. ௯௮ சீர்த்தி பரவியும் - புகழைப் பாடியும். ௯௯. பொய்ம்மாயை - உண்மையில் இல்லாத மாயை. ௧௦௦. பத்தி - திருவடியில் அன்பு. சித்தி - காரியசித்தி.

## கக. சிவஞானபாலையசுவாமிகள்

# நெஞ்சுவிடுதூது

[தூது என்பது தமிழ் மொழியில் உள்ள தொண்ணூற்றாறு வகை நூல்களில் ஒன்றாம். ஒருவர் தம்முடைய எண்ணத்தைத் தம்முடைய பகைவர், நண்பர், காதலர் முதலானவர்களில் யாரேனும் ஒருவருக்கு மற்றொருவர் வாயிலாகத் தூது விடுவதாகும். அன்னம், மயில், கிளி, முகில், நாகணவாய்ப் பறவை, தோழி, குயில், நெஞ்சு, தென்றல், வண்டு என்பன தூது விடுதற்குரியனவாகத் தமிழ் நூல்களிலே கூறப்பட்டுள்ளன. ஆனால் இந்நாளில் இவ்வெல்லையையுங் கடந்து பணவிடு தூது, நெல்விடு தூது, துகில்விடு தூது, புகையிலை விடுதூது, மான்விடு தூது, காக்கைவிடு தூது முதலிய பலதூதுகள் தோன்றியுள்ளன. இத்தூது அடிகளார் சிவஞான பாலைய சுவாமிகள் என்னும் பெரியாரிடம் நெஞ்சத்தைத் தூதாக அனுப்பியதாகப் பாடியதாகும்.]

### காப்பு

*நேரிசைவெண்பா*

கைக்களிற்றை யன்றுரித்த கண்ணுதலோ னீன்றதனி
மெய்க்களிற்றை நெஞ்சமே மேல்கொண்டு புக்குருக்கி
மேவன்பாற் றூதாகு மேனிச் சிவஞான
தேவன்பாற் றூதாகச் செல்.

நீர்கொண்டு தாளாலந் நீரைத்தீஞ் சாறென்று
பேர்கொண்டு வந்தாரப் பெய்கரும்பின் - ஏர்கொண்ட
பூமுடியா னீர்கொண்டு பொங்கு மருளென்று
நாமுடியால் வீழ்ந்திறைஞ்ச நல்குதரு - காமருதன்
தேசுணர்த்த வேண்டித் திருமுடிமேன் மேவிவாழ்
மாசுணத்தைத் தானொளித்த மாணிக்கம் - நேசித்துக்
கொள்ளு மடியார் குழாத்தினைத் தான் வஞ்சித்திங்
கென்ளும் விடங்கலவா வின்னமுதந் - துள்ளும்
ஒருமான் மழுவோ டொளித்தெமை முன் பற்றும்

---

(காப்பு) மேல் கொண்டு - மேன்மையாகப் புகழ்ந்து போற்றிக் கொண்டு. புக்குருக்கி - புகுந்துருக்கி. க - ரு. ஆர - மிகுதியாக. காமரு-அழகிய. மாசுணம்-பாம்பு. என்ளும்-இகழும். ரு-க0. ஒளித்து

இருமா னொளிக்கவரு மெம்மான் - பெருமான்
உடுத்திருந்த வாசனையா லோங்குபுலித் தோன்மேல்
அடுத்திருந்து வாழு மரசு - தடுத்திருந்த
தொன்றென் றவித்தை யொழித்திட் டுடம்பினைநீ
அன்றென் றொழித்தெனைத்தா னாக்குவான் - நன்றென்று
பொன்னை நரர்க்குக் கொடுத்துநீர் போமென்று
தன்னை யெனக்கருளுந் தம்பிரான் - அன்னையென
உற்றா னமுதமே யொப்பா னருண்மேனி
பெற்றா னடியேன் பிழைபொறுப்பான் - கற்றார்
தொடுத்த தொடைக்கிசைந்த தோற்றத்தான் றன்னைக்
கொடுத்த கொடைக்குவந்த கோமான் - நடத்தலுறச்
செலுமணித் தேர்மீது செய்தமைத்த பாகன்போல்
இல்லு ளெமைவைத் தியக்குவான் - நல்ல
சுரர்மேன்மை யெங்கீழ்மை தோன்றா தொழிய
நரர்மேனி சாத்திவரு நம்பன் - தரைமேல்
மழுவேறு கையான் வரினுநீ றென்னுங்
கழுவே றிகளுந்தாழ் காலான் - புழுவேறும்
மென்பயிர்போல் வெய்ய விடயத் தரிப்புண்டு
துன்புறுவேற் குற்ற துணையானான் - என்பிலுயிர்
ஆக்கினான் போல வடியே னுளத்தன்புண்
டாக்கினான் பாருத வானந்தந் - தேக்கினான்
நாதாந்தன் வீடுதவு ஞானவினோ தன்றெளிந்த
வேதாந்தன் கைம்மாறு வேண்டாதான் - போதாந்தன்
விண்ணோ ரமுதுண்ண வேண்டி விடமுண்ட
தண்ணா ரருள்சிறிது தானாக - எண்ணா
இறப்புக் கடிய விருவினையோ டெங்கள்
பிறப்புக் கடியப் பிறந்தான் - சிறப்பக்
கயிலைமலை மீதிருந்த காட்சிபோல் வந்து
மயிலைமலை மீதிருக்கும் வள்ளல் - பயில
நரனென் றிருந்தாலு ஞானமிலா தாரும்
பரனென் றறியப் படுவான் - ஒருநன்றில்
பாவிக் குதாசனர்க்குப் பத்தர்க்குச் சீடர்க்கு
மேவிக் கருணைபுரி மேன்மையான் - ஆவிக்குத்
தோன்றாத் துணையாகித் தோன்றுந் துணையுமாய்ச்
சான்றோர்க் கருளுந் தகைமையான் - மூன்றால்

---

-மறைத்து. தானாக்குவான்-தன்னைப்போல் செய்வான். நரர்க்கு-மனிதர்களுக்கு. கo-கரு. தொடை-மாலை. கழுவேறிகள்-சமணர்கள். கரு-உo. ஆக்கினான்-திருஞானசம்பந்தர். தேக்கினான்-மிகுதிப்படச் செய்தான். தெளிந்த நன்கு தெளிவுபெற்ற. பிறப்புக்கடிய-பிறவியைச் சினந்தகற்ற. உo - உரு. ஒருநன்றுஇல்-சிறிது நன்மையும் இல்லாத.

பெருக்கு மிருசமயம் பேதித் தறியா
திருக்கு நிலையி னிருப்பான் அரக்கன்
மலையா நிலையாகி மத்தாகி யாழி
அலையாத தாயளப்ப தன்றிச் - சிலையாய்ப்
பொறுப்ப திலதாய்ப் பொறையருவி தூங்கி
வறப்பினு நல்கும் வளத்தாய்ச் - சிறப்ப
அணியார் கொடையாகு மைந்தருநற் சிந்தா
மணியார் கருணை மலையாள் - கணியா
அறிவாங் குறிஞ்சியினின் றுங்கெழுந்து காமச்
செறிவாங் கொடும்பாலை தீர்த்து மறியாத
மாயையெ னு முல்லை வளர்பசுக்கொண் டைவரெனும்
ஆய ருறுதொழிலை யாங்ககற்றிப் - பாய
விடய மெனுங்குளங்கள் வேறுவே றுகா
துடைய வுடைத்திட் டுளமென் - றடையு
மருத நிலநிறைந்து வாள்விழியா நெய்தல்
பெரிதுபெற வந்து பெருகிக் - கருதிலொரு
தானந்த லின்றித் தலம்விசும்பு போர்த்துவரும்
ஆனந்த மெனுமலி யாற்றினன் - ஞானம்
பயனாக வோர்முப் பகுதியுயி ராமும்
தயனாகு மும்மாயை நாடன் - வியனாக
வின்ளல ரமன்பர் விடயக் கரவருறு
உள்ளமெனு நன்கமைந்த வூருடையான் - தெள்ளுதமிழ்ச்
சொல்லர் மலரைச் சுவைபா மதுவொழுகப்
புல்லா வழுச்சொலெனும் புன்மையெலாம் - இல்லாமல்
புன்புலவ ராங்குரங்கு போற்றுப் பெருமையுற
இனபுலவ ராஞ்சுரும்பார்த் தீண்டிவர - அன்பெனுமோர்
வீடாத நார்கொண்டு மென்ன வெனுங்கரத்தால்
வாடா வகைபுனைபா மாலையான் - பீடார்
மலரா வயனார் மனச்சாலை நின்று
நலநா மணிவாய்த னண்ணி - நிலகை
வானிடையே யோடி வரையா வழகுடைத்தாய்த்
தானனுமா னிப்பினுயர் தன்மைததாய் - ஞான
நிறையா மரபு நிலைவழா தோங்கும்
மறையா மரியபரி மாவான் - குறையாத

---

சான்றர் - சிறந்தவர். மூன்றுல் பெருக்கும் இரு சமயம் - அறவகைச் சமயம். உ௫ ௩0. வறடபினும் - வறண்டாலும். வளத்தாய் - வளமுடையதாய். ஐந்தரு - கற்பகதரு முதலியன. ௩0-௩௫ தானந்தலின்றி - தான் கெடுதலில்லாமல். விடயக்கரவர் - சிற்றின்பப் பற்றுவள வஞ்சகர். புல்லா - பொருந்தாத. ௩௫-௪0 வீடாத - கெடாத. மலராஅயனர் - நான்முகன். மரபுநிலை வழாது - மரபுநிலை தவறாமல்.

தத்துவமாஞ் சேனை தனைத்துரந்திட் டாணவமாய்
வைத்த தளையின் வலியறுத்து - மெத்து
வினையாம் பணையொடித்து வீட்டியெழுந் தோடும்
மனமாம் பரிமாவை மாய்த்துத் - தனிமாரன்
கன்னல் முரித்துக் கருந்தோலாற் போர்த்திருந்த
துன்னுநினை மென்புதைசோரிகுடர் - என்ன
அளந்தறிவ வெல்லா மழிந்துபுறந் தோன்ற
விளங்கிழையார் தம்மை மிதித்துந் - துளங்கு
சமயமாம் பொய்க்குழியிற் சார்ந்துவிழா தோடி
அமையபா னந்தநீ ராடிச் - சுமையலா
வேதா கமமாம் விளங்குமணி தாங்கிவரும்
ஆதார மாஞான வானையான் - மாதவன்
சங்கர ஞதிபிறை தானுவெனும் பேருடைய
சங்கரனே யாதி கருத்தாவாம் - அங்கணனை
ஏத்தி யடியி னிடந்து விழிக்கமலஞ்
சாத்தி முடிவணங்கிச் சக்கரமொன் - றீந்தருள்செய்
என்றுபெறு மான்முதலோ ரெல்லாம் பசுவென்று
மன்றமுறக் கட்டுதரு மக்கொடியான் - என்றும்
அடியா ரெழுமொலியா யானந்த மாகி
முடியாத நாத முரசான் - கடியார்மென்
சந்தமல ரோன்முதலோர் தங்களாற் றோற்றமுதல்
ஐந்தொழிலுஞ் செய்விக்கு மாணையான் - முந்து
தவஞான மில்லாதார் சாற்றினும்வீ டெய்துஞ்
சிவஞான தேவெனும்பேர்ச் செல்வன் - பவநாசன்
முன்னொருநாட் சாதனத்துண் முந்துதிரு வெண்ணீறு
மன்னு முயிரினுறு மாசொழிக்குந் - துன்னு
கலவையுடன் மாசாய்க் கழியுமெனக் கூறிப்
புலவரினம் போற்றப் புனைந்து - பலவணிகன்
தாங்குமள வன்றித் தரும்பே றிலையென்றுந்
தீங்கி லிதையொருவன் றீண்டுறினும் - ஓங்கும்
உருத்திரனே யாவனென வோருருத்தி ராக்கம்
பொருத்த முறவுறுப்பிற் பூண்டு வருத்துகழை
விற்றோண் மதவேளை வெல்லுமடை யாளமெனக்

---

பரிமாவான் - தாங்குங் குதிரையை உடையான். ௯௦-௯௫ தத்துவமாஞ் சேனை - தத்துவப்படைகள். தளை - கட்டு. மாரன்கன்னல் - காமனுடைய கரும்பு வில். விளங்கிழையார் - பெண்கள். ௯௫-௱. இடந்து - தோண்டி. விழிக்கமலம் - கண்ணாகிய தாமரை. மால் முதலோர் - திருமால் முதலியவர்கள். மன்றமுற - அவை பொருந்த. கடி - மணம். ௱-௱௫ சந்தமலரோன் - நான்முகன் பவநாசன் - பிறவியைக் கெடுப்பவன். மாசு ஒழிக்கும் - குற்றத்தைப் போக்கும். கலவை - கலவைச் சந்தனம். மாசாய் - குற்றமாக. ௱௫-௱௰. கழை - கரும்பு

கற்றோய் துகின்மருங்கிற் காட்சிதரக் - கற்றோர்
அறியா வறிவாகு மானைமேல் கொண்டு
மறியா மனத்தை மறிப்பார் - உறியாய
தற்று நிலம் வீழ்ந்ததுபோ லாசையற மெய்ச்சிவத்தின்
உற்றுவச மற்றிருக்கு முண்மையார் - முற்றும்
அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கும்
இழுக்கா வறமுடைய ரென்பார் - வழுக்கா
மனைதுறந்தார் மாயை வலிதுறந்தார் பாவ
வினைதுறந்தார் போகம் விளைசித் - தனைதுறந்தார்
வேண்டுதல் வேண்டாமை யில்லாதார் மெய்யன்பு
பூண்டு சிவனடியே பூசிப்பார் - மீண்டுபவம்
வாராவா றோர்வார் மறையுஞ் சிவாகமமும்
ஆராய்வா ரார வனுபூதி சார்வாவார்
பொன்னுஞ் சிலையும் புகழும் பழியுமே
மன்னுங் குடிலுமணி மாளிகையும் - உன்னும்
படிவே றிலாதார் பகைநட் பிலாதார்
முடிவே லரசாய் முயல்வார் - கடிவேதும்
இல்லா திரப்பா ரிறையை நினைந்தொன்றுஞ்
சொல்லா திருப்பார் துதிசெய்வார் - வெல்லாத
ஐம்புலனும் வென்று ரவற்றைத் தடாதுமனஞ்
செம்பொருளின் வைத்துச் செயல்செய்வார் - தம்பெருமான்
மேனியா மஞ்செழுத்தும் வேண்டி யெடுத்துரைப்பார்
மோனிகளாய் வீற்றிருந்து முன்னுவார் - மேனியெலாம்
பூசுவார் வெண்ணீறு புண்டரமே சாத்துவார்
தூசளார் தூசு துறந்துளார் - ஆசையினால்
வேணி முடிப்பார் விரிப்பா ருலகியலை
நாணிநடப் பாருலகை நாணாதார் - பேணித்
தனதுபத மெத்திறத்துஞ் சாரு மடியார்
இனமருவி யெம்மருங்கு மீண்ட - மனுவுரையாத்
தன்பெயர்கொண் டார்வமொடு சாரும் புலவரிற்காய்
புன்புவியில் வையாப் புலவர்தாம் - வன்பவநோய்
மாற்றுமருந் தென்று வடிவிற் படத்துடையா
தேற்று மகிழவடி யின்றுகள்போய்ப் - போற்றுமிசை

---

கல் - காவிக்கல். துகில் - ஆடை. வசமற்றிருக்கும் - தம் வசமில்லாம லிருக்கும். ௪0 - ௪௫. பவம் - பிறப்பு. ஓர்வார் - ஆராய்வார். பொன், கல், புகழ், பழி, குடில், மாளிகை எவற்றிற்கும் வேறுபாடு காணாதவர் என்க. ௪௫ - ௫0 இறையை - இறைவனை வெல்லாத - வெல்ல முடியாத. தடாது - தடுக்காமல். மேனியாம் - உடலாகிய. மோனி - பேசா நிலையினர் முன்னுவார் - எண்ணுவார். ௫0 - ௫௫. எத் திறத்தும் - எவ்வகையிலும். இனம் - கூட்டம். மருவி - பொருந்தி.

விண்ணிற் புகவனைய மேவுதலை மாசகன்று
மண்ணிற் புகுவா மதியென்று - நண்ணிப்
பலவியமும் பொங்கிப் பரவையா யார்ப்ப
மலவலியை மாற்றுவான் வந்தான் - தொலைவில்
எ௫ முழங்கு மறைபின் முடிந்த பொருளை
வழங்கு மருளுடையான் வந்தான் - விழுந்து
பரவு மடியார் பவப்பிணிக்குத் தானே
மருவு மருந்தனையான் வந்தான் - பொருவில்
மணிகண்ட னென்னுமொழி மாற்றியே யக்க
மணிகண்ட னென்னுமவன் வந்தான் - கணிகண்
டெயினர் மணமயர்வுற் றின்ப மருவும்
மயிலை மலையுடையான் வந்தான் - துயர்செய்
பொறிக்குஞ் சரமதனைப் போகாமற் றாளின்
மறிக்குஞ் சிவஞானி வந்தான் - எறிக்கும்
அ0 தினகரனு லாரழலாற் றிங்களாற் போகா
மனவிருளை நீக்குவான் வந்தான் - எனமுன்
பரிச்சின்ன ஞானம் பரியநார் காதில்
திருச்சின்ன வாரமுதந் தேக்க - விரித்துக்
கவிராயர் போற்றக் கவரிபல முத்திப்
புவிராய ரென்றிட்டுப் போதத் - தவிராமல்
ஞாலவட்டந் தாங்குமொரு நாகத்தின் குட்டியென
ஆலவட்டம் பாங்க ரசைந்துவரச் - சாலவட்ட
மாமதியாய் நன்கு வளர்ந்து துறந்தபிறை
காமருதன் வாழிடத்தைக் காண்பதற்குச் - சேர்முறைபோல்
அ௫ வெள்ளை மணிக்கவிகை மேனிழற்ற வான்மழைபோல்
கொள்ளைமல ரன்பர் குழாம்பொழியக் - கிள்ளை
மொழியார் மயறூந்து முத்திபதத் தென்றும்
அழியாத வின்ப மருள்வாய் - பழியா
நடையா யுலகிறந்த ஞானோ தயாவெம்

---

சண்ட - நெருங்க. பலவியமும் - பலவகைப்பட்ட ஒலிக் கருவிகளும். பரவையாய் - கடல் முழக்கத்தைப்போல. ஆர்ப்ப - ஆரவாரிக்க. மல வலி - ஆணவமலத்தின் திறல். எ௫ - அ0. பொருவுஇல் - ஒப்பில்லாத. மணிகண்டன் - நீலமணி போன்ற கரிய கழுத்தையுடையவன். அக்க மணிகண்டன் - சிவ கண்மணியைக் கழுத்தில் அணிந்தவன். எயினர் - வேடர். மணமயர்வுற்று - மணஞ்செய்து. பொறிக் குஞ்சரம் - புலன்க ளாகிய யானைகள். மறிக்கும் - தடுக்கும். எறிக்கும் - கதிர்வீசும். அ0 - அ௫. தினகரன் - கதிரவன் ஆரழல் - மிகுந்த தீ மனவிருள் - அஞ்ஞானம். திருச்சின்னம் - அடையாள ஒலிக் கருவிகள். முத்தி - வீடுபேறு. புவிராயர் - உலக அரசர்கள். ஞாலவட்டம் - உலகவட்டம். வட்டமாமதி - வட்ட வடிவம் பொருந்திய முழுத் திங்கள். அ௫ - ௯0. கவிகை - குடை. கொள்ளைமலர் - மிகுதியான மலர். மயல்

உடையாய் புலன்கொ ளுணர்வாம் - படையாய்
அணியே யமுதமே யாவியே சிந்தா
மணியே கருணை மலையே - பணிவேறு
கோலங் கரந்துவந்த கோதிலாத் தேறலே
ஞாலம் புகுஞான ஞாயிறே - சீலங்கொள்
காவேயென் செல்வமே கண்ணே சிவஞானத்
தேவே யெனவந் தியர்துதிப்பப் - பூவேறு
கோனும் புரந்தரனுங் கொண்ட னிறத்தானும்
வானும் புகழ்பவனி வந்தருள - ஞானம்
பருவ வகையாற் பலபேசப் பட்டார்
தெருவின் மனமகிழ்ந்து சென்றார் - உருவிள்
ஒருதா னணிய வுரியனவா மென்னும்
பெரிதா மழுவும் பிறவுந் - தெரியாமல்
நீத்துப் பொதுவாகு நீறுதிரு மேனிகொடு
சாத்திப் பெருமைபெறுஞ் சங்கரனை - மூத்துத்
திருந்து நதிமுழுதுஞ் சென்றாடி னுலும்
அருந்து முணவுசரு காக்கி வருந்துறினும்
நீங்காத மும்மலமு நீக்கவருண் மேனிகொடு
நாங்காண வந்தருளு நாயகனை - ஓங்கார
நாத முறுபொருளாய் நாதாந்த நாடகனாய்
வேத முடிமணியாம் வித்தகனைச் - சாத
மருளு சகனை மயிலைமலைத் தேனைக்
கருணை லயனை யெதிர் கண்டார் - சரணா
விந்தந் தொழுவார் விழுவா ரிதுநமக்கு
முந்து தவத்தின் முதிர்வென்டார் - உந்தன்பின்
உள்ளந்தா ணின்றுச்சி காறும்புள மாயுருகி
வெள்ளமபாய் கண்ணராய் மெய்விதிர்ப்பார் - கொள்ளுங்
கலமென் றுகிலுதவிக் காவென்பா ரேனைப்
பலவும் பெறுமோர் பரிவிங் - கிலமடியேம்
எம்மை யெமக்கருளா யென்பா ரிறைவனே
இம்மை நினையணையோ மென்றாலும் - அம்மையினில்
யானென்று நீயென் றிரண்டில்லை யென்னுமுறை

---

துரந்து - காமபயத்தைப் போக்கி. மழியா - மழிக்கப்படாத. பணி வேறு - பாம்புகளைப் பெற்ற. கோலம் - வடிவம். கரந்துவந்த - மறைத்து வந்த. தேறல் - தேன். ௯0 - ௯௫. கா - பொழில். வந்தியர் - புகழ்பாடுவோர். பூவேறுகோன் - நான்முகன். புரந்தரன் - இந்திரன். கொண்டல் நிறத்தான் - திருமால். வானும் - தேவர்களும். ௯௫ - ௧00. திருந்துநதி - புண்ணியநதிகள். சாதமருள் - பிறவிக்குக் காரணமான வடரீதவணைவு. உந்து அன்பின் - மேற்செலுத்துகிற அன்பினாலே. உள்ளந்தாள் - காலின் அடிப்பாகம். உச்சி - தலை. ௧00-௧0௫. அம்மை - மறுபிறப்பு. மெய்விதிர்ப்பார் - உடல் நடுங்கு.

தானின் றனையணைவோஞ் சார்ந்தென்பார் - ஊனின்று
வாழ்ந்த தமையுமினி மாய்ந்தாலு நன்றென்பார்
வீழ்ந்துமொழி யொன்றுபெற வேண்டுவார் - சூழ்ந்த
திசையெலா நின்மெய்த் திகழ்வென்பா ரென்சொற்
கிசையலா மோவரசே யென்பார் - நசையினால்
யாம்புணர்ந் தின்ப மிவராற் பெறுவதலால்
தாம்புணர்ந் தின்புறுர் தாமென்பார் - நாம்புணர்ந்தால்
நீங்குவது முண்டோ நினையா திருந்தபடி
ஆங்குறுவ தேதல் லறிவென்பார் - நாங்கள்
கரவி லிவர்வடிவங் கண்டநாள் தொட்டிங்
கிரவு பகலில்லை யென்பார் - அரிதில்
பிறந்தபயன் மன்மதனாற் பேதுற்று வாளா
இறந்து படுவதோ வென்பார் - சிறந்த
சிலையோநின் னுள்ளஞ் சிவஞான தேவே
இலையோ கருணைதா னென்பார் - மலையோடு
மற்பொருதல் போல வலிந்துவரு கென்பார்நீ
எற்புணர்வ தென்னென் றிரங்குவார் - பொற்ப
அறவனே நின்னை யலதெண்ணேம் வானத்
திறைவனே வந்தாலு மென்பார் - துறவனே
மேவிலமை நின்னை விகாரி யெனவுரைப்பார்
யாவருல கெங்கு மிலையென்பார் - பூவில்
இவரெலும்புந் தோலுமா யெய்தினு ராயின்
எவர்விரும்பி வேண்டுவா ரென்பார் - அவர் நெருங்கி
எய்த வுடன்வணங்கி யிவ்வா றடியேனுஞ்
செய்த தவங்கள் செலுத்தப்போய் - ஐயன்
தொழும்பு மறந்தொழியாத் தொல்விசயன் வில்லின்
தழும்பு மறைந்த தலையும் - எழுந்துமதன்
வின்னியா சஞ்செய்முன் வென்றுபகை யின்மையால்
சன்னியா சஞ்செய்படைத் தண்ணுதலும் - மன்னிவாழ்
கேவலமென் கங்குல் கெடுக்குந் தொழிலொன்றில்
மேவலுற வொத்த விழியிரண்டும் - ஆவலொடு
நல்லவியல் கேளா நணுகுமிசை பாடுநரைச்
செல்ல விடுத்த திருச்செவியும் - வல்ல
இயற்பகையை முன்ன மிரந்த மொழியை
அயர்தத மலர்வா யழகும - வியப்புறவவ்

வார்கள். ௧0௫ - ௧௧0. நசை - விருப்பம். பேதுற்று - மயக்கத்தை யடைந்து. சிலை - கல். ௧௧0 - ௧௧௫. மற்பொருதல் - மற்போர் செய்தல். அறவன் - அறவடிவானவன். துறவன் - துறவையுடையவன். ௧௧௫ - ௧௨0. தொழும்பு - தொண்டு. தொல்விசயன் - பழமையான அருச்சுனன். வில்வியாசம் - வில்லைத்தொடுத்தல். ௧௨0 - ௧௨௫. ஏன

வாலமுண்ட தென்ப தறையாம லிவ்வுலகம்
பாலருந்து மென்னப் படுமிடறும் - மேலுவந்து
நாமங்கை போற்றவுள் நாணுந் தலைமாலை
போமங் கலமாம் புயமலையுஞ் - சேமங்கொள்
ஏனமருப் பில்லா திருப்பதுவு மோரழகென்
றூன மறத்திகழு மொண்மார்பும் - வானம்
வழுத்தும் புயமா மனையான் றலைக்குக்
கழுத்தென்ப தில்லாக் கரமும் - எழுத்தென்று
கஉ௫ கொள்ளுங் கொடுவரித்தோல் கொள்ளாது நூல்வலியைக்
கொள்ளுந் துகிலுடுத்துக் கொண்மருங்கும் - உள்ளும்பர்
மன்னு முடிவெருவி வந்துழியும் மன்பதைதஞ்
சென்னி படச்சிவக்குஞ் சித்தடியும் - என்னுடைய
கண்களிப்பக் கண்டுமிகக் காதலானேனிந்த
மண்களிக்க வந்தசுவை வானமுதம் - பெண்களுக்கு
மாலா ரணனமரர் மாதவரிம் மானுடர்போல்
தோலாத வீர புடைத் தோற்றத்தான் - மேலாய
செங்கையமு தன்னுன் சிவஞான தேசிகனெம்
பங்கமல மாயைப் பகையானுன் - தங்கணல
கங0 ஊண்துறந்து சீர்சா லுடைதுறந்து செம்மணிப்பொன்
பூண்துறந்து கண்கள் புனல்சொரிய - ஆண்டடைந்து
நையு மவாநிற்க நாயேன்பாற் பொங்குமருள்
செய்து திருக்கடைக்கண் சேர்த்தினுன் - ஐயனைநான்
அன்று தொடங்கி யணைவான் விருப்புற்றேன்
என்றுணை நீ யன்றி யிலை நெஞ்சே - நன்றிபுரி
வேதா கமங்கள் விதிக்கும் விதியனைத்தும்
நீதான் புனிதமுற நேர்ந்தன்றோ - ஆதார
யோக மிருநான்கு முன்னைவய மாக்குவதற்
காக முயலுவன வல்லவோ - போகமுறு
கங௫ தன்மைக்குஞ் செய்யுந் தவத்திற்குங் கற்றறியும்
தன்மைக்கும் கொள்ளுமொரு நட்பிற்கும் - வன்மைக்கும்
ஈகைக்குந் தன்னை யிருந்தாங் குணர்ந்தடையும்
ஓகைக்கும் நீயே யுறுதுணைகாண் - போகத்தின்
நின்றாரை மெய்த்துறவி னிற்பிப்பா யத்துறவில்
சென்றாரை யில்லிற் செறிப்பிப்பாய் - குன்றா
அறத்தை மறமாக்க வம்புவியின் மிக்க
மறத்தை யறமாக்க வல்லாய் - நிறுத்தி

மருப்பு-பன்றிக் கொம்பு. வழுத்து-போற்றுகிற. கஉ௫-கங0. கொடுவரித்தோல் - புலித்தோல். மருங்கு - பக்கம். மால் - திருமால். ஆரணன் - நான்முகன். அமரர் - தேவர். பங்கம் - பழுதுடைய. கங0 - கங௫. புனல்-நீர். பூண்-அணிகலம். கங௫-கச0. ஓகை -

ஒடுக்குதலே முத்தி யுனைவிடயத் தோட
விடுக்குதலே பந்தமென மிக்காய் - அடக்குதலால்
நின்றாயே யாகிலொரு நீதான் புலன்பரந்து
சென்றாலு மெய்துவதோர் தீதுண்டோ - பொன்றாத
முத்தி யொருகணத்தின் முன்வரு நீ வேண்டுவையேல்
இத்தனையும் நின்னா லிசைந்தனகாண் - சத்தியமாய்
ஏதேனு மேனி யெனக்கொண்டு வந்தருள
மாதேவனை நீ வருவிப்பாய் - தூதேவும்
நம்பிகர வுண்டவொரு நற்பனவப் பிள்ளைதனை
அம்புவியின் மீள வழைத்ததூஉம் - எம்பெரிய
நாவிற் கரசு நடுக்கடலுட் கற்பெருந்தூண்
மேவிப் புணையா மிதந்ததூஉம் - பாவிற்கு
வல்ல வொருபுலவர் வல்லென்பு பெண்ணாகச்
செல்ல மயிலையிடைச் செய்ததூஉம் - தில்லையினில்
வாளா நெடுங்கண் மடவரலை நீலகண்டர்
சூளால் மனையுட் டுறந்ததூஉம் - தோளாத
முத்தனைய நன்மாதை முன்ன மியற்பகையார்
வித்தகனை நல்கி விடுத்ததூஉம் - புத்திரனைத்
தொண்ட ரறுத்தமலன் றொண்டர்போல் வந்திரப்பப்
பண்டு சமைத்துப் படைத்ததூஉம் - மண்டிருளில்
முக்கணனார் செல்ல முளைவாரு மாறனார்
அக்கணமே செய்க்க ணடைந்ததூஉம் - புக்கானார்
வேண்ட வரிந்துமகள் மென்கூந்தல் கஞ்சாறர்
ஆண்டு வணங்கி யளித்ததூஉம் - மூண்டமரின்
ஏற்றானை யீசனென வேனாதி நாதனார்
நீற்றா னினைந்துருகி நின்றதூஉம் - மாற்றானைக்
குத்தினா னென்று குறியாமல் மெய்ப்பொருளார்
தத்தனே காக்கவெனச் சாற்றியதூஉம் - மத்தவிபஞ்
சிந்த மலரைச் சிவகாமி யாண்டார்க்காய்
முந்தியெறி பத்தர் முனிந்ததூஉம் - சுந்தரரைத்

---

மகிழ்ச்சி போகத்தில் - உலக வாழ்வில். மிக்காய் - மிகுதியாக. கசo - கசரு. புலன்களிற் பரவி. பொன்றாத-கெடாத இசைந்தன- பொருந்துவன. நம்பி - சுந்தரர். கர - முதலை. பனவப்பிள்ளை - பார்ப்பனச் சிறுவன். அம்புவி - உலகம். கசரு-கருo. வல்லவொரு புலவர் - திருஞான சம்பந்தர். மயிலை - மயிலாப்பூர். வாளாம் - வாளைப்போன்ற. மடவரல் - இளம் பெண். மனையுள் துறந்ததும் - இல்லத்துக்குள் இருந்து கொண்டே துறந்தொழுகியதும். தோளாத- துளைக்கப் பெறாத. வித்தகனை - வித்தகனாகிய சிவபெருமானுக்கு. அமலன் - சிவபிரான். மாறனார் - இளையான்குடிமாற நாயனார் செய்க்கண் - வயலிடத்து. புக்கு - புகுந்து. கருo - கருரு. கஞ்சாறர் - மானக்கஞ்சாறர். மாற்றான் - பகைவன். மத்த இயம் - மத்தகத்தை

தொண்டத் தொகைபெறூஉத் தொல்லுலக முய்யவிறன்
மிண்டத் தொழும்பர் வெகுண்டதூஉம் - மண்டபத்து
௧௫௫ நீலநக்கர் பாணருக்கு நேசித்து நல்யாக
சாலை யிடத்தைமுனந் தந்ததூஉம் - மாலயற்கும்
எட்டாற்கு வேண்டி யிருங்கலயர் குங்குலியம்
முட்டாமற் கொள்ள முயன்றதூஉம் - வட்டாடி
ஆக்கு பொருளை யரனடியார்க் கன்பினால்
மூர்க்க ருதவி முடித்ததூஉந் - தூக்குதலை
மீது பரனொளித்த வெண்கோ வணத்திற்காப்
போதவமர் நீதியார் புக்கதூஉம் - ஆதியுமை
பாக னடியவரைப் பண்டைநிலை யுன்னியதம்
தோகைகரங் கம்பர் துணித்ததூஉம் - சோகமறக்
௧௬௦ கண்ணப்பர் மென்றசையைக் காளத்தி யார்தம்மை
உண்ணப்ப வென்றுமுன மூட்டியதூஉம் - வண்ணப்பொன்
மீனை யளக்கரிடை மிக்க வதிபத்தர்
மேனைம நகற்கென்று விட்டதூஉம் - யானைமிசை
வந்தமலை நாட்டரசர் வண்ணானைத் தொண்டரெனப்
பந்தமறு மன்பாற் பணிந்ததூஉம் - கந்தைபரற்
கன்பி னுதவிலனொள றக்குறிப்புத் தொண்டர்தாம்
முன்புசிலை யோடுதலை மோதியதூஉம் - அன்புறுமோர்
தாட்புலியார் போற்றுதிருத் தாண்டவனெற் கொள்கிளையைக்
கோட்புலியார் நேசமறக் கொன்றதூஉம் - கேட்பிலிவை
௧௬௫ எல்லாமு நின்ற னிசைவாற் புரிந்தனநீ
அல்லா தியற்றலற மன்றுகாண் - சொல்லாட
நின்பெருமை யாரறிவார் நீயென் னுடுகூடில்
என்பெருமை சொல்வாரு மில்லைகாண் - வன்புவியில்
நின்னைத் துணையல்லை நீயென்று நீங்கினால்
பின்னைத துணையாகும் பேரில்லை - உன்னைத்
துணையாக் கொளற்குத் துணைநீ நினக்கிங்
கிணையாய்ப் பிறிதொன் றிலைகாண் - புணையாய்ப்
பிறப்புக் கடற்குப் பிடிக்கப் படுவாய்
மறப்புற் றதினழுத்த வல்லாய் - சிறப்பு

---

யுடைய யானை. தொழும்பர் - அடியார். ௧௫௫ - ௧௬௦. பாணர் - யாழ்ப்பாணர். முட்டாமல் - தட்டுப்படாமல். வட்டாடி - சூதாடி. தூக்குதலை - தொங்கவிடப்பட்ட நிறைகோல். பண்டைநிலை - பழைய இல்லற நிலை. கம்பர் - கலிக்கம்ப நாயனார். தோகை - மயிலைப் போன்ற மனைவி. ௧௬௦ - ௧௬௫. அளக்கர் - கடல். மேனைமருகன் - இமாசல மன்னன் மனைவியாகிய மேனைக்கு மருமகன். மலைநாட்டரசர் - சேரமான் பெருமாள். கந்தை-கிழிந்த ஆடை. பரற்கு-சிவபிரானுக்கு. ஓர் - ஒப்பற்ற. தாட்புலியார் - புலிக்கால் முனிவர். தாண்டவன் - கூத்தப்பிரான். கிளை - சுற்றம். ௧௬௫ - ௧௭௦. இசைவு - உடன்பாடு. புணை - தெப்பம்.

விலங்கி னார்தமக்கு மேவியது நின்னால்
இலங்கு முனிவரர்கட் கெல்லாம் - நலங்கொள்
பெருமை நினைத்துனைக்கொள் பெற்றியா லன்றோ
உரிமைநீ யன்றிவே றுண்டோ - அருமையென்ப
தில்லையுனக் கெவ்விடத்து மென்மனமே யாதலினால்
நல்ல பெரியசிவ ஞானிபால் - செல்லவுனை
வேண்டுவேன் தூதாக வேதக் கிளிகையவிடில்
காண்ட லரிததனாற் கண்டாலு - மாண்டதுதான்
ஒன்றாக வோதா துரைக்கும் பலமயங்கச்
சென்றாலு நீயேதான் செல்லாமல் - நின்றாலும்
நீயே பிறிதில்லை நெஞ்சமே யெற்பயந்த
தாயே யவனிடங்கள் சாற்றக்கேள் - பேயேன்
எழுநகரி னுட்சிறந்த தென்பதலாற் சீர்மை
முழுது மியம்ப முடியா - தழகுறுவேல்
கந்தனையர் கச்சிவளங் காற்கூ றளவுரைப்பன்
ஐந்துகரன் சொல்வ னரைக்கூறு - நந்தமரன்
கூறுடையா ளோர்முக்காற் கூறுரைப்பள் முற்றுமிள
ஏறுடையான் சொல்வ னெனவனந்தன் - வீறுடைய
நாவா யிரங்கொண்டு நானுரைத்தல் காற்கீழென்
றோவாத நாணுகி யோடியே - தாவாத
வேலையிடை வீழவவன் மேல்வீழ்ந்து துஞ்சினான்
போல வரிகிடப்பப் பொங்குபுகழ் - ஞாலமெலாம்
நண்ணவொரு காசி நடுமெய்ஞ் ஞானமுறும்
எண்ண வரிய வெழினகரும் - மண்ணுலகில்
முன்னோர் தொடைப்பொருளை முற்றுங் கரந்துரைத்துப்
பின்னோ ரெமதென்னும் பெற்றிபோல் - அன்னோபின்
வந்திளைய காசி மரிப்பார்க்கு முத்திபதந்
தந்திடுவ னென்றுமிகு தன்செயலை - முந்துகொடு
சென்றுபர தேயத்திற் சேர்ந்திருப்பச் சீர்மலிந்து
மன்றன் மலரு மணிய ணியுந் - துன்றுநறும்
குங்குமமுஞ் சந்தனமுங் கோலம் பெறப்புனையா
ஆர்குருகு மேகலையு மாங்கொலிப்பத் - துங்கமுறு
நன்பதியைச் சேரவரு நங்கைபோற் சென்றுமலி

---

௧௭௦ - ௧௭௫ பெற்றி - பெருமை. ௧௭௫ - ௧௮௦. பயந்த - பெற்ற. அரன்கூறுடையாள் - உமாதேவி. அனந்தன் - ஆதிசேடன். வீறு - பெருமை ஓவாத - ஒழியாத. வேலை - கடல். துஞ்சினான் - செத்தான். ௧௮௦ - ௧௮௫. அரி - திருமால். முன்னோர் தொடைப்பொருள் - சான்றோர்களுடைய பாட்டின் பொருள். கரந்துரைத்து - ஒளித்துக்கூறி மரிப்பார் - இறப்பவர். மன்றல் மலர் - மணந்தங்கிய மலர். ௧௮௫ - ௧௯௦. கோலம்பெற - அழகுண்டாக. புனையா -

தன்பதியைச் சார்ந்தணைந்த தன்கங்கை - என்பதுதான்
புத்தா றெனத்தான் புராதனவா றென்னுமணி
முத்தா றுடுத்த முதுகிரியுஞ் - செய்ந்தாமம்
அன்னமாய் முற்றும் விளைய வளங்களெலாம்
துன்னுநாட் டிற்குச் சுவைவிளைய - மன்னுவேள்
மீதண்ட ரோடமர்பப வெங்கணையும் வின்னுணும்
கோதண்ட மும்பொருந்திக் கொண்டேக - வேதண்டம்
க௯0 ஒப்ப வுயர்த்தவுய ருப்புக் குவான்மீது
வெப்ப மறுமதிய மெய்யுரிஞ்சத் - துப்புறுபுள்
உண்ணிலா வுண்ணு தொழிந்துமட வார் முறுவல்
வெண்ணிலா வுண்டு மிகவளரக் - கண்ணெலாம்
பூப்பட் டிருந்தாலும் பூம்பொய்கை நன்காய்ந்து
பாப்பட்ட சேடன் பணங்காட்ட - வாய்ப்புற்ற
கங்கையுடன் வந்தாரூர் கண்டுவரு வீரென்று
தங்குறுதன் மக்க டமைவிடுபபத் - துங்கமுறும்
முத்தீ வளர்ப்பமறை முன்னோர் விருந்தினுக
ரத்தீ யவிப்ப வவர்மாதர் - கொத்தின்
க௯ரு கொடியனையார் கொம்மைமுலைக் குன்றே வருத்தத்
துடியிடையே நின்று துவள - நெடிய
கலவ மயிலிவருங் கந்தவேள் தேரே
உலவ நிலைபெயர்வுற் றோடப் - புலவர்
இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்றென் - றுரைப்பாவில்
வைதலை யஞ்சி வளத்தா ரிரப்பவர்தாம்
எய்தலை நோக்கி யிருந்தவப் - பொய்தவிர
இல்லென் பதுமொருவ ரீயென் பதும்வினையாம்
சொல்லென்ப தின்றுபெயர்ச் சொல்லாக - நல்லவனம்
உ00 மிக்கெலா நாளும் விழவரு வீதியணி
திக்கெலா மேத்தமலி சேயூரும் - முக்கணனுர்
மந்திர மொன்ரு யிரமாய் வளர்ந்துபயன்
தந்திடு மொண்மயிலைத் தண்மலையும் - பந்தமறு
தன்னை மருவினரைத் தானுக்குந் தன்மையுடை

---

அணிந்து. குருகு - வளையல். நன்பதி - நல்ல கணவன். புத்தாறு - புதிய ஆறு. புராதனம் - பழமை. முதுகிரி - பழமலை. துன்னும் - பொருந்தும். அமர்ப்ப-போர் செய்ய. கோதண்டம்-வில். வேதண்டம்-மலை. குவால் - குவியல். க௯0 - க௯ரு. துப்புறுபுள் - சகோரப் பறவை. பணம் - படம். உதரத்தீ - வயிற்றுப்பசி. க௯ரு - உ00. கொம்மை-பருத்த. துடியிடை-உடுக்கையைப்போன்ற இடை துவள - அசைய. இரப்பாரை யென்பது முதல் அற்று என்பது வரை திருக்குறள். வளத்தார் - செல்வத்தையுடையவர். உ00-உ0ரு. எலா நாளும்-எல்லா நாளும். சேயூரும்-காளையை நடத்தும். தானுக்குதல்-

மன்னுசிவ ஞானி மருவிவாழ் - நன்னிலையால்
அம்ம பிரமபுர மாகும் பொருள்படவே
பொம்மபுர மென்னும் புகழ்ப்பதியும் - எம்மிறைவன்
வீற்றிருந்து வாழிடங்கண் மேவியிவற் றென்றினுறும்
தேற்ற முணர்ந்துநீ செல்லுங்கால் - ஆற்றலுடன்
இல்லை யிறைவனுற் பூதமலா லிங்கென்று
சொல்லி யுனைமறித்துச் சூழ்ந்துதான் - நல்ல
அலகா யுதமெறித லாயுரைப்ப னந்த
உலகா யதனுரைகேட் டோடேல் - பலகாலும்
நானோது மின்றிக் கருமமலா லிறையைக்
காணே னெனுங்கரும காண்டியொடு - பூணேல்
நினையணு வாக்கு நியாய னுரையைத்
தினையள வாயினுநீ தேறேல் - பினைவருவை
சேடியனை நெஞ்சமே சேரவவன் றம்பியெனை
நாடி யொருசிறிதும் நண்ணுறேல் கூடியொரு
புத்திகண பங்கமெனப் புத்திகெட்ட புத்தனுரை
மெய்த்தததென நின்று விடாதிநீ - முத்திபெறு
தன்னை யணுவாகக்கித் தாழ்பஞ்ச ராத்திரிதான்
என்ன சொலினு மிசைந்துறேல் - நின்னைக்
கெடுப்பதே யெண்ணிக் கெடும்யோ கிகளை
விடுப்பதே நன்றென்று மேவேல் - அடுப்பதெனுக்
கள்ளைக் குடித்துக் களிக்கின்ற வாமிமொழி
கொள்ளத் தகுவதெனக் கொண்டுறேல் - மெள்ளப்
பகுதி விகுதி பகுத்தறியின் முத்தி
தகுதியெனுஞ் சாங்கியனைச் சாரேல் - மிகுதிபெறும்
நஞ்சமார் கண்டனொடு நாரணனை யொப்பாக்கும்
பஞ்சமா பாதகரைப் பாராமல் - அஞ்சிநீ
சென்று திருமடத்தைச் சேர்ந்துகமழ் நீர்த்தடமாய்
நின்று நறியகமழ் நீர்பூப்பத் - துன்று
முகிலா யடைந்துபுகை மூன்றுலகுங் காக்க
நிகமா கமம்வித்த நீதி - இகலாத
கோடிமறை யோர்நிறையக் கொள்ளுமுண வின்பயனை
நாடியிடும் பிச்சையா னல்குமொரு - கோடிசிவ
யோகிகட்குப் போன முவந்து சமைப்பாரைப்
போகிகட்குப் புற்றனைய பொற்சடைமேல் - மோகிகட்குப்

---

பொய்யறிவை யொழித்து மெய்யறிவைக் கொடுத்தல். உ0௫ - உ௧0. உ௧௩ முதலிய அடிகளால் சமயவாதிகள் செய்தி உரைக்கப்படுகிறது. உ௧0 உ௧௫. மெய்த்தத - உண்மையானது. இசைந்துறேல் - ஒத்துக்கொள்ளாதே. உ௧௫ - உ௨0. துன்று - பொருந்து. இகலாத - மாறுபடாத. போனம் - உணவு.

பூசனைக்கு வேண்டும் பொருளுதவு கின்றாரை
வாசமலர் கொய்து வருவாரைப் - பூசனைசெய்
கின்றாரை ஞானநூல் கேட்பாரை நைந்தோதா
நின்றாரை மேனியெலாம் நீறணிந்து - குன்றாத
கண்டி புனைந்து கமலா தனத்திருந்து
கொண்டு சிவனைக் குறிப்பாரைக் - கண்டுருகிப்
போற்றிவணங் காவுட் புகுந்து புரமெரித்த
சீற்ற மறந்ததெய்வ சிங்கத்தை - மாற்றலரும்
சீமாலை யென்றுந் தெவிட்டாத தெள்ளமுதைக்
கோமானை ஞானக் குணக்குன்றைப் - பூமாரன்
வண்டு படாத மலரைநாஞ் செய்தவத்தால்
கண்டுகொளுந் தண்ணறும்பூங் கற்பகத்தை - மண்டலமும்
ஏனைப் புவனங்க ளெல்லாமும் வேண்டுபசுந்
தேனைச் சிவஞான தேசிகனை - நீநெக்
குருகியெதிர் கண்டுகொண்டே யோடிப் பெருமான்
திருவடியில் வீழ்ந்தன்பு தேங்கிப் - பருகமுதே
வேண்டுவார் வேண்டுவன வேண்டியவா றேயுதவும்
ஆண்டகையே யெங்க ளரசனே - நீண்டவொரு
தந்திதரு பச்சைபுனை தன்மையா னீண்டுபச்சைக்
கந்த மரபிலுறுங் காரணனே - பந்தமற
ஆளாய வன்பர்க் கமரா பதம்போல
மீளாத வீடுதவும் வித்தகனே - வேளாணை
தள்ளு மடியார் தமக்குத் துணையாகக்
கொள்ளு மிருமலர்த்தாட் குஞ்சரமே - விள்ளலறப்
பத்திக் கடலுட் படிந்த வடியார்க்குத்
தித்திக்குங் கோதிலாத் தேறலே - முத்திக்குச்
சாதியா லன்றுரிமை சாதனத்தா லென்றுண்மை
போதியா நல்குமொரு பொன்மலையே - நீதியால்
வீடும் பொருளும் வெறுத்துமுத்தி வேண்டுவார்
தேடுஞ் சிவஞான தேசிகனே - பாடும்
பொருளே யெனவணங்கிப் போற்றிநின்று நின்பே
ரருளே துணைவே றறியேன் - தெருளே
நினது திருப்பவனி நேர்ந்தநாள் தொட்டுக்
கனலின் மெழுகாய்க் கரையும் - புனல்பெருகு
கண்ணொடு நின்றேங்குங் கங்குல் பகலின்றி
உண்ண வுடுக்க வுவப்பொழியும் - பண்ணொடு

௨௨௦ - ௨௨௫. கண்டி-சிவகண்மணிமாலை. கமலாதனம்-பதுமாசனம். பூமாரன் - காமன். ௨௨௫ ௨௩௦ நெக்குருகி - நெகிழ்ந்துருகி. பச்சைக்கந்த மரபு - பச்சைக்கந்த தேசிகர் மரபு ௨௩௦ - ௨௩௫. தேறல் - தேன். வீடும் - இல்லமும். ௨௩௫ - ௨௪௦. புனல்-

பாடு நினைமெய் பதைக்கு நினையெங்கும்
தேடு முருகுந் திகைத்தலறும் - வாடுமெனைப்
பாரானோ வென்னும் பரம சிவஞானி
வாரானோ வென்னும் வழிபார்க்கும் - ஓரானோ
என்னோ யெனப்புலம்பு மென்னைநின்பாற் றூதாக
அன்னோ பலசெய் தஞரெய்துந் - தன்னோர்
உடம்பும் பொறையா யொழிப்பக் கருதுங்
குடும்பம் பகையாகக் கொள்ளும் - அடங்க
ஒருபூ தருமில்லா துற்ற விடத்தே
வருபூரணமா மருவி - ஒருபோதும்
வேறிலா தொப்ப விரும்புறுமவ் வென்னுயிரை
மாறிலா ஞான மணிவிளக்கே - ஈறிலாச்
செல்வமே யெங்கள் சிவஞான தேவனே
கல்விகொடு காணாத காட்சியே - புல்லுவாய்
புல்லு மளவு முனைவிட்டுப் போவதுநான்
இல்லை யிறைவனே யென்ற நீ - தொல்லை
விடய நினைந்தகன்று மீளாம லில்லா
துடைய மலவிருளை யோட்டுஞ் - சுடரை
மரமும் நிழலும்போன் மாழையும் பூணும்போல்
இருமை யபேதமென் றென்றும் - பரமுயிர்கள்
வேறென்றும் வேறல்ல வென்றும் விளம்புதலால்
வீறென்றுந் தாதான் மியமென்றும் - மாறின்று
சாமி யடிமையெனுஞ் சம்பந்த மென்றுமுளம்
வேமிகலை யோர்மொழியில் வீப்பானைத் - தோமில்
உலகிற் கிறைவ னுபாதான மென்றும்
இலகுற்ற நன்னிமித்த மென்றும் - நிலவுற்ற
ஆவி யணுவென்று மன்று நிறைவென்றும்
மேவிய மாயைதான் மித்தையென்றும் - ஒவிலது
நித்திய மென்றும் நிகழ்த்தி மயங்குமோர்
அத்தனையுந் தீர்த்த வருளானைப் பத்தரிடை
உள்ள படிதோற்று முண்மை யுடையானைத்
தென்னுஞ் சிவஞான தேசிகனை - விள்ளலறப்
பற்றி யடியேன் படுமிப் பெருந்துயரம்

---

நீர். கங்குல் - இரவு. உவட்டு - மகிழ்ச்சி. ஓரானோ - உணரானோ. உ௪0 - உ௪௫. அஞர் - துன்பம். புல்லுவாய் - தழுவுவாய் உ௪௫- உ௫0. வீறு - பெருமை. வேம் - வேகும். வீப்பான் - அழிப்பவன். தோமில் - குற்றமற்ற. உ௫0 - உ௫௫. பத்தர் - அன்பர். எற்று

முற்று மறிந்துசெல முன்னுநீ - எற்றுதிரை
உ௱௦ வேலையுல கெல்லாம் வியக்குஞ் சிவஞானி
மாலைமன மேவாங்கி வா.

நேரிசை வெண்பா

என்னே டிருக்கு மெனினுஞ் சிவஞானி
அன்னே நினைவிடுத்தா லன்றிமைய - தன்னேனை
வஞ்சமே செய்குவனென் மற்றவன்பாற் றூதாக
நெஞ்சமே செல்விரைந்து நீ.

நெஞ்சுவிடுதூது முற்றிற்று.

---

திரை - எடுத்தெறியும் அலை.

## ௨௦. சிவஞானபாலையசுவாமிகள்

# திருப்பள்ளியெழுச்சி

[திருப்பள்ளியெழுச்சியாவது கடவுளரையும் பெரியோர்களையும் படுக்கையில் இருந்து கண் விழித்தெழுமாறு பாடப் பெறுவதாகும். கடவுளர்மீது பத்துப் பாடல்கள் பாடுவது வழக்கம். இதற்கு இவ்வளவுதான் பாடல்கள் என்று எல்லையில்லை. இங்கு அடிகளார் நான்கு பாடல்கள் பாடுகின்றார்.]

**எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்**

நிறைந்தவொரு சச்சிதா னந்தபர சிவத்தி
    னிகழுமுயி ரிப்பியிடை வெள்ளிபோற் றேன்றி
அறிந்துமய லகன்றிடிலொன் றன்றிவே றிலையென்
    றறைவர்சிலர் பதியினைப்போ லாருயிர்நித் தியமே
இறந்துமல சத்திவிடிற் சிவசமா னதையா
    யிருக்குமென வறைவர்சில ரெதுவழக்கென் றடியேஞ்
செறிந்தனநின் றனைவினவ வெங்கள்சிவ ஞான
    தேசிகனே யருண்மலையே பள்ளியெழுந் தருளே. (௧)

சகலரெனும் பசுக்களைமூ லாதார மென்னுந்
    தக்கதொழு விடைமலமாந் தாம்பினு லார்த்துப்
புகலுமொரு நுகர்வுமிலா துறைநிறுத்திப் பின்னர்ப்
    பொருந்துகலை யாங்கரத்தாற் கட்டவிழ்த்து விட்டே
அகலுதன வெனும்புரத்தி லோட்டியே விடய
    மாகியபுல் மேய்த்தெமக்கிங் கமுதமருள் பவனே
திகழுமலை மகள்நகரின் மருவுசிவ ஞான
    தேசிகனே யருண்மலையே பள்ளியெழுந் தருளே. (௨)

காற்றுமறைப் பாயபடப் பாயலிடை மடங்கற்
    கனலருகி னரிசனப்பொற் றூசுமிசை போர்த்துக்
கோற்றொடிமென் முலைமடந்தை தனைமார்போ டணைத்துக்
    குளிர்க்குடையா னுததியிடைக் கண்டுயில்வோ னெழுந்து

---

௧. நிறைந்த - எங்கும் நிறைந்த. இப்பி - கிளிஞ்சில். மயல் - மருளறிவு. சமானதை - ஒப்பு. ௨. தொழு - கட்டுத்தறி. தாம்பு - கயிறு. ஆர்த்து - கட்டி. கரம் - கை. ௩. படப்பாயலிடை - ஆதிசேடப் படுக்கையிடத்தில். அரிசனப் பொன் தூசு - பீதாம்பரம். மிசை-மேலே. கோல்தொடி - வளைந்த வளையல். மடந்தை-திருமகள்.

போற்றிநின தெதிர்குறிப்பச் சங்கொடுர்வந் துற்றான்
புண்டரிகன் கரகநீர் கொண்டுதவ நின்றான்
சீற்றமறு தவக்களிறே யெங்கள்சிவ ஞான
தேசிகனே யருண்மலையே பள்ளியெழுந் தருளே. (௯)

தூதுவிடு நம்பிவரு கிலன்சிலையா லெறிந்த
தொண்டனிலை விசயனும்வில் லோடும்வந்தா னில்லை
ஏதமறு மியற்பகையார் கிளைஞர்கள்வந் தடைந்தா
ரிலலைநினை மண்சுமவென் றெருபிரம்பா லடித்தோன்
போதிலனின் றிருவடியிற் போதுகள்தூய்ப் பரவிப்
போற்றலுறு மடியவரே பொருந்தினரெம் மருங்குஞ்
சீதமதி துறந்தமுடி மருவுசிவ ஞான
தேசிகனே யருண்மலையே பள்ளியெழுந் தருளே. (௧0)

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

---

உததி - கடல். குறிப்ப - ஊத. புண்டரிகன் - நான்முகன். தவக்களிறு - தவயானை. ௧0. தூதுவிடுநம்பி - சுந்தரர். சிலையால் எறிந்த தொண்டன் - சாக்கிய நாயனார். போதுகள் தூய் - மலர்களைத் தூவி. சீதமதி - குளிர்ந்த திங்கள்.

## ௨௧. சிவஞானபாலையசுவாமிகள் பிள்ளைத்தமிழ்

[பிள்ளைத்தமிழ் என்பது தமிழில் உள்ள ௯௬ வகை நூல்களில் ஒன்று. அது குழந்தையாகப் பிறவாத சிவபிரானையொழித்து ஏனைய கடவுளர்கள்மீதும் பெரியோர்கள் மீதும் பாடப் பெறுவது. காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வாரானைப் பருவம், அம்புலிப் பருவம், சிற்றிற் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவம் என்னும் பத்துப் பருவங்கள் கொண்டது. பெண்பால் பிள்ளைத் தமிழுக்கு இறுதிப் பருவங்கள் மூன்றுக்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல் என்னும் பருவங்கள் அமைத்துப் பாடப்பெறும். இப்பிள்ளைத் தமிழ் துறவியின்மீது துறவியால் பாடப் பெற்றதாகலின் தத்துவப் பொருள்கள் அமையப் பெற்றது.]

### காப்பு

அத்திமுகத் துத்தமனை
நித்தம்நினை சித்தமே.

### ௧. காப்புப் பருவம்

[குழந்தையைக் காக்க வேண்டுமென்று தெய்வத்தை வேண்டுவது இப்பருவம்.]

**திருமால்**

திருமா மறையு மாகமமுந் தெருட்டு பொருளோர் முடிவாகத்
தெளிவில் சமயர் தமின்முரணித் தியங்கி யபேதம் பேதமென
வருமால் வாத மயலொழிய மலர்வாய் மலர்ப் பெருங்கருணை
வடிவாய் வந்த சிவஞான வள்ள லிணைத்தாண் மலர்க்காக்க
கருமா முடக்கொம் பொழுகமழக் கதிர்வெண் டிங்கட் கண்ணிபுனை
காலத் தவன்சே வடியிற்செங் கமல விழியொன் றிடந்தணிந்தும்
பொருமா மழவெள் விடையாகிப் பொறுத்துந் தொழும்பு தலைநின்ற
பொன்னந் திருமார் புடைக்கமஞ்சூற் புயல்வண் ணத்தெம் பெருமானே.

---

௧. தெருட்டு பொருள் - தெளிவிக்கும் பொருள். சமயர் - பல சமயத்தவர். முரணி - மாறுபட்டு. தியங்கி - மயங்கி. மால்வாதம் - மயக்கம் பொருந்திய சொற்போர். திங்கட்கண்ணி - திங்களாகிய மாலை. இடந்தணிந்து - தோண்டிச் சார்த்தி. பொரும் - போர் செய்கிற. மழவெள்விடை - இளமை தங்கிய வெள்ளிய காளை. தொழும்பு - தொண்டு. பொன் - திருமகள். கமஞ்சூல் - நிறைகருப்பம். புயல் வண்ணம் - முகில்நிறம்.

### மல்லிகார்ச்சுனேசுரர்

உடற்கு வினையஞ் சூர்தாக்கு மொழித்தற் கரிய பலபிணியு
முடற்று பசிநோய் முதலனவு முணர்வைப் பிணித்துப் பிறப்பெனுமாழ்
கடற்கு எழுந்த் யுயிர்சிவத்திற் கலப்பைப் பிரித்து விடுமலமுங்
கழலக் கருணை புரிந்தெய்மைக் காக்குஞ் சிவஞா னியைக்காக்க
முடக்கு மடிக ணிமிர்த்தெழுந்து முள்காந் திருந்து களஞ்சுருக்கி
முழைவாய் பிளந்து செவிநிமிர்த்து முறுக்கி வெடிவால் சிறிதடித்து
விடக்கு விரும்பு புலிபாய விரையு முண்மா னுடைமதியம்
வெருவுற் றகலும் பருப்பதமாம் விலங்கன் முக்கட் பெருமானே. (உ)

### உமாதேவியார்

இளைக்கு மருங்கு லொருமடந்தைக் செய்து தவள முகிற்கூந்த
லிருஞ்சூன் முகிலி னிருள்படைப்ப விருண்ட வடியே னுளம்விளர்ப்பத்
திளைக்கு மலர்க்கட் கருணைமடை திறக்குங் குணப்பொற் குன்றையுயர்
சிகா மயிலைச் சிவஞான தேவன் றனைநா டொறுங்காக்க
விளைக்குந் தவத்தாற் பால்தனக்கு விரும்பிக் கொடுத்த கொழுநன்மணி
மிடறே போல வெனதுபுன்சொல் விடமுண் கின்ற திருச்செவியை
முளைக்குந் தரள நகைவாயான் முதிர்தீஞ் செய்யு ளமுதூட்ட
முன்னம் பின்னைப் பெருமானை முலைப்பா லூட்டு மொருதாயே. (௩)

### விநாயகக்கடவுள்

நீர்வாழ் வரிச்செங் கயல்கவர நிற்குஞ் சிரல்வா ரிதிகலங்க
நிலைபேர்ந் துலவுந் திமிங்கிலப்பேர் நெடுமீன் கவர்வா னிற்பதெனப்
பார்வாழ் மக்கட் பரப்பெல்லாம் பணிவேந் தாயின் மொழிப்படுசீர்
பாடத் தொடங்கு மெனதிடத்தும் பழிப்பில் சிவஞா னியைக்காக்க
தார்வாழ் திருப்பொற் சோயிற்குத் தடமா மதிலிற் பொலிமார்பத்
தனிவான் முகிலுஞ் சரோருகப்பொற் றவிசிற் பசும்பொற் குவடும்வான்
ஊர்வா ழரசு முனிவருமொ ருசஞ் செயற்குக் காப்பாக
வுவந்து முதற்கட் பரவுபுக ழொருத்தன் முகத்தெம் பெருமானே. (௪)

---

உ. உடற்று - வருத்தும். பிணித்து - மயக்கிக் கட்டி. கழல - அகன்று நீங்க. முள்காந்திருந்து - மௌனமாக இருந்து. களஞ்சுருக்கி - கழுத்தைச் சுருக்கி. முழைவாய் - குகையைப் போன்ற வாய். விடக்கு - ஊன். உண் மானுடை மதியம் - உள்ளே மானையுடைய திங்கள். வெருவுற்று - அஞ்சி. ௩. தவளமுகிற் கூந்தல் - வெண் முகிலைப் போன்ற கூந்தல். சூன்முகில் - நீருண்ட கரிய முகில். விளர்ப்ப - வெளுக்க. உயர் சிகரம் - உயர்ந்த முடி. மணிமிடறே போல - நீலமணி போன்ற கரிய கழுத்தைப் போல். தரளநகை - முத்தைப்போன்ற பற்கள். ௪. பார்வாழ் - உலகத்திலே வாழுகிற. மொழிப்படு - சொல்லில் அமைந்த. சரோருகம் - தாமரை. கயல் கவர - மீனைப்பற்ற. சிரல்-மீன் கொத்திப் பறவை. தவிசு-இருக்கை. இருத்தல் - யானை.

சுப்பிரமணியக்கடவுள்

பாயுங் கவனக் கடியமனப் பரிகா வாமற் கொடுவிடயப்
பகைகா வாமற் பிறருரைக்கும் பழிகா வாம லிருதாளுந்
தேயும் படிசென் றிடையின்றிச் செல்வச் செருக்கர் கடைகாக்குஞ்
சிறியேற் காக்குஞ் சிவஞான தேவன் றிருமே னியைக்காக்க
வாயும் மனமுந் தொடர்வரிதாய் வருதல் போத லிரவுபகல்
வளர்தல் குறைதல் வெறுப்புவப்பு வறுமை செல்வ மிலாததனை
ஆயுந் தமிழக் குறு முனிவற் கறித லறித லிலாமைபோ
யறிவே யாகி யுலகொழிய வருள்செய் சுடர்வேற் பெருமானே. (௬)

அல்லமதேவர்

வேறு

அகரவுயி ரனையபரி பூரணத் தீர்த்தனை
யடிநிழலி லடையுமெம தாருயிர்க் காப்பனை
நிகரிலல மயனையழி யாதமெய்க் கூத்தனை
நிகழுமனு பவனையரு ளாளனைப் போற்றுதும்
நகரவர சிடையமரும் வாசனைக் காற்றெனும்
நடையிரத மதனன்வலி வீயுமெய்க் காட்டனை
மகரமனை சுவறவெறி வேலுடைச் சூர்ப்பகை
மயிலைமலை மருவுசிவ ஞானியைக் காக்கவே. (௬)

வசவதேவர்

வேறு

விழுப்பநிலை குறிகுணங்க ளுடிடா தென்றும்
வேண்டுவன வேண்டியாங் களித்தரவே டத்தர்
குழுக்கடமக் கன்புசெய்நந் தலைச்சுமைவாங் குபுதான்
கொண்டவனென் றரியசிவ ஞானியைக்கா த் தளிக்க
விழிப்பினம தொருநாமம் புகல்பவரைப் பிறபபி
லெடுக்குநமக் கிஃதரிதன் றெனச்சென்று கடிது
வழுக்கிவிழு பவனையெடுத் தஞ்சலோம் பென்ற
வசவதே சிகனெனுமெங் குடி முழுதாள் பவனே. (எ)

௫. பாயும் - பாய்ந்து செல்லும். கவனம் - போக்குவரவு. கடிய - விரைந்து செல்லுந் தன்மையுள்ள. மனப்பரி - மனமாகிய குதிரை. செருக்கர்-செருக்கையுடையவர்கள். கடை-கடைவாசல். ௬. காப்பனை - காக்கின்றவனை. மதனன்வலி வீயும் - காமன் வலியழியும். மகரமனை - மகர மீன்கட்கு வீடாக விளங்குங்கடல். சூர்ப்பகை - முருகக் கடவுள். எ. விழுப்பநிலை - மேலாகிய நிலை. அரவேடத்தர் - சிவக் கோலம் பூண்டவர்கள். குழுக்கள் - கூட்டம். வாங்குபு - வாங்கும் பொருட்டு. அஞ்சல் ஓம்பு - அஞ்சுதலை விடு.

**தேவாரமருளிய மூவர்**

கிளக்கிலா நாமணியி னுவே யாகக்
கேட்கிலாக் காதூசி யின்கா தாக
வளர்க்குமா புகழுலகிற் பரப்பா நின்ற
மயிலைவரைச் சிவஞான தேவற் காக்க
அளக்கிலாத் தமதுரைபூந் தொடைபு னைந்த
வரசுபோன் றல்லனபுன் குறும்பு போலக்
கொளக்குறையாப் பெருஞ்செல்வ மெமக்கா ஞானக்
கூத்தனுறு பதிகள்பல பாடியமூ வருமே. (அ)

**மாணிக்கவாசக சுவாமிகள்**

அருந்தமிழ்நா டொருகோடி தவஞ்செயவந் ததிர்வெள்
ளருவிதூங் குயர்மயிலை வரையினமர் விளக்கைப்
பரந்துபடு மிகுபாச ஞானமொடு மற்றைப்
பசுஞானங் கடந்தசிவ ஞானியைக்காத் தளிக்க
விரிந்தமறை யொருநான்கு மெழுதுகில மெனவோர்
வீறுடைப்பொற் கொன்றைபுனை விரிசடையோ னெழுதத்
திருந்துதமிழ்க் கோவையொரு நானூறு புரைத்த
திருவாத வூரனெனுஞ் செழுமலர்க்கற் பகமே. (கூ)

**சென்னவசவ தேவர்**

## வேறு

அறிவுயிர் கரண முடலொடு பொறிகள்
சிவமென வுதவு தானியைக் காத்தெமர்
வழிவழி யடிமை யெனவருள் புரியு
மொருவனை யெமது பாவனைக் கேற்றிடு
மமுதினை மணியை யடியவ ருயிரை
யுயர்சிவ சமய நாதனைப் பார்த்துறு
குறிகுண நிலைகள் குருசிவ சரணர்
தமையிகழ் பவரை வேறெனத் தாக்கியை
வளர்தரு தனது குணவருள் கனலி
னழல்புனன் மருவு மாறெனத் தாட்டுணை
குறுகிடு பவரை யடைவுற வுலகின்
வருசென வசவ தேவனைப் போற்றுதும்

---

அ. கிளக்கிலா நா - பேசாதநா. கேட்கிலாக்காது - ஊசியின் காது. அளக்கிலா - அளக்க முடியாத. ஞானக்கூத்தன் - இறைவன். கூ. தூங்கு - இழிகின்ற. பரந்துபடு - பரவியுள்ள. எழுதுகிலம் - எழுதவல்லேம். வீறுடை - பெருமையுடைய. கோவை - திருக்கோவையார். க0. கரணம் - அந்தக் கரணம். பொறிகள் - ஐம்பொறிகள்.

பொறியொரு புடையில் வளையொரு புடையி
லிரவியி னிருளை நாமறத் தீர்த்தெரி
மணிமிளிர் த்திரி யொடுபல வணிகண்
முடியொரு புடையி லாருயிர்க் காப்புறு
புயனிற வடிவ வரியொரு புடையில்
விழவர வணையை வானுறத் தூக்குபு
மறிதிரை கதறு கடலிடை யுதறு
பொறிமயில் கடவு வீரன்மெய்ச் சீர்த்தியன்
மலைமுனி முருக குருபர குமர
சரவண பவவெ ஞமிகப் போற்றிட
மறைமொழி யருள்செ யறுமுகன் மருவு
மயிலைவ ருசிவ ஞானியைக் காக்கவே. (௧௦)

காப்புப்பருவம் முற்றிற்று.

---

## உ. செங்கீரைப் பருவம்

[இப் பருவம் ஐந்தாந் திங்களில் நிகழ்வது. செங்கீரை யாடுதலாவது குழந்தை ஒருகால் மடக்கி ஒருகால் நிமிர்த்து இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலையை நிமிர்த்து ஆடுதலாம். செங்கீரைத்தண்டு ஆடினாற் போல ஆடுதல் என்று கூறினாரும் உளர்.]

துங்கவெம் புகர்முகக் களிநல்யா னையினதட்
சுமையும் பெரும்புலிதருந்
துகிற்சுமையும் வெண்மருப் புச்சுமையு மிளையாது
துள்ளியெழு சிறுகன்றுமான்
வெங்கனன் மழுச்சுமையும் வெண்முளரி மலர்வென்ற
வெண்டலைச் சுமையுமணிகள்
வெயிலெறித் திருள்விழுங் கோரா யிரம்படம்
விரிக்குமர வச்சுமையும்நீள்

---

தாக்கியை - தாக்குபவனை. அரியொரு புடையில் விழ - திருமால் ஒரு பக்கத்திலே விழ. அரவணை-பாம்புப் படுக்கை. தூக்குபு-தூக்கி.

க. துங்கம் - உயர்ச்சி. புகர் முகம் - புள்ளிகளையுடைய முகம். அதட்சுமை - தோற்சுமை. புலிதரும் துகில் - புலித்தோல். அரவச்

அங்கம் புரண்டுவல மாலயம் புரியுமவ
ரணியெனத் திரைகள்புரளு
மாயிரந் திருமுகக் கங்கையஞ் சுமையுமொழு
கமுதகிர ணக்குழவிவெண்
திங்களஞ் சுமையினொடு போகட் டுலாவுமிறை
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு சிவஞான மாமுனிவ
செங்கீரை யாடியருளே. (க)

வென்றிவிடை யினர்திருக் காமநா யகர்திரு
விழா முற்ற வருண்மாதவர்
வேறுவே ருயதிரு வேடத்தர் நீறுதிமிர்
மேனியினர் வேணிமுடியர்
துன்றிழை மலிந்தகந் தைச்சுவலர் பட்டுமென்
றூசுமணி யாரமணிவார்
சூலப் படைக்கலத் தினர்தனித் தவருருகு
தோகையர்க ளோடுவருவார்
குன்றுறழ் பனைக்கைவெங் கரிசிவிகை யாதிமிசை
கொள்பவ ரியந்தழங்கக்
கோடிநா றுயிரவர் மகரா லயத்தொடிகல்
கொண்டதோர் செயல தென்னச்
சென்றெதிர் முழங்குபொம் மையபட் டினச்செல்வ
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு சிவஞான மாமுனிவ
செங்கீரை யாடியருளே. (உ)

ஒருவாறு மின்றியிது வென்றுணர வரியபர
மொன்றிரண் டாகியவைமூ
வுருவாகி மூவிரண் டாருறு வகையிரட்
டுற்றநூற் றெட்டுவிரிவாய்
இருவாறு நின்றிலகி யிருநூறு தலையிட்ட
வீரெட்டு மாருறினவ்
வெண்பெற்ற வாறினவ் வாறுமூன் றினிலவை
யிரண்டினி லிரண்டுமொன்றில்

---

சுமை - பாம்புச் சுமை. அங்கம் புரண்டு - உடலாற் புரளுதலைச் செய்து. அணி - வரிசை. திரைகள் - அலைகள். போகட்டு - போட்டு விட்டு. திமிரமலம் - மலவிருள். உ. நீறுதிமிர் - திருநீற்றை மிகுதியாக அணிந்துள்ள. இயந்தழங்க - வாத்தியங்கள் ஒலிக்க. மகராலயம் - கடல். ங. இருவாறு - இரண்டுவகை. அகறல் -

மருவா வடங்கிநீ நானென்னு மயலின்றி
மனவா சகங்கடந்து
வந்துகூ டுதலகற லின்றிநின் றிடுநிலையை
மலரடி முடிக்களித்துத்
திருவாய் மலர்ந்தெனக் கொருமொழியி லருள்பவா
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு சிவஞான மாமுனிவ
செங்கீரை யாடியருளே. (௩)

பாவகப் படுபெரும் புகழிமய மலைபெறு
பவானிவளர் திருமுலைத்தண்
பாலுண்டு தண்டையந் தாள்சிவந் திடவாதி
பகவன்வியன் மார்பினுலவிப்
பூவகப் பள்ளியமர் தருபுங் கவன்றலை
புண்படக் குட்டிநீடு
பொன்னங் குவட்டுமா யிருஞால முடிவைத்த
புழையெயிற் றரவசைத்து
மாவலர்ச் செங்கைகொடு சிறுதே ருருட்டியுயர்
வானவர்க் கிடர்விளைத்து
வலிகொண் டிருந்தவன் றிறலசுரர் தலைவெட்டி
வட்டாடு மொருவெற்றிவேல்
சேவகப் பிள்ளைதுணை யாகவிளை யாடுவாய்
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு சிவஞான மாமுனிவ
செங்கீரை யாடியருளே. (௪)

பெருமுடக் கானிமிர்ந் ததுகூ னிமிர்ந்தது
பிணிகள்பல பலபோயின
பிடித்திருந் தெவரானு மகலாது துயர்செய்த
பேயகன் றிட்டதம்மா
அருமகப் பெற்றுவந் தனமிடி யகன்றன
மகிலம் புரக்கவருமோ
ரரசெய்தி னஞ்சென்று வென்றெய்து தற்குமிக
வரியபகை வென்றெய்தினம்

---

ரிங்குதல். ௪. பாவகப்படும் - பாட்டின் பொருளாய்ப்படும். பவானி- இறைவி. வியன் மார்பு-அகன்ற மார்பு. பூவகப்பள்ளியமர் தருபுங்கவன்- நான்முகன். பொன்னங்குவடு - மேருமலை. அரவசைத்து - ஆதி சேடனாகிய பாம்பை அசையச் செய்து. தலைவெட்டி வட்டாடும் வேல்—என்றது அசுரர் தலைகளை வட்டாடு காய்கள்போல் உருண்டோட வெட்டும் வேலென்றவாறு. ௫. முடக்கால்-வளைந்த கால். மலமாயை

வருமடக் கொடிமாதர் கண்வலைப் பட்டதுயர்
மாற்றவற நெறிகண்டனம்
மலமாயை கருமங்க ணிலைகண்டி லோமென்று
மக்களொலி விண்ணளப்பத்
திருமடத் தரசிருந் தருள்செயருள் விழியான
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு சிவஞான மாமுனிவ
செங்கீரை யாடியருளே. (௫)

மெய்தயங் கரிசனம் பூசிவெந் நீராட்டி
விழியூதி மெய்துடைத்து
விரனியத் தைவந் திடும்பொட்டின் மீதுலையின்
வெண்ணீ றணிந்துவிழியில்
மைதயங் குறவெழுதி யியல்பாகு மக்கமணி
வடமணிந் தம்பொனரைஞாண்
மணியரிக் கிண்கிணி சதங்கைபொற் றண்டைகள்
வனைந்துபொற் றொட்டிலுய்த்தே
எய்தவந் துறுபெருஞ் செல்வமே யமையாத
வின்சுவைத் தெள்ளமுதமே
யென்னுயிர்த் துணையாய மாணிக்க மதலையே
யென்றுசீ ராட்டியன்பால்
செய்தவம் பெருகுமம் மவைவளர்க் குங்குழவி
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு சிவஞான மாமுனிவ
செங்கீரை யாடியருளே. (௬)

வேறு

முந்துதவு வார்களிடை யொன்றூர்வங் கூர
முந்தையினு மோர்பொருளை நின்றீகின் றூரில்
வந்துநிகழ் காருதவு றுங்காறங் காறு
மண்டுதிரை யானிறைய வொண்காவின் றேறல்
கந்தமலர் வேனிலுமி ழுஞ்சீர்பொன் றூத
கம்பரொரு மாவினுமை யந்தாமுஞ் சார
நந்துநக ராளுமிறை செங்கோசெங் கீரை
நங்கள்சிவ ஞான முனி செங்கோசெங் கீரை. (௭)

---

கருமங்கள் நிலை கண்டிலோம் - மாயையை நீக்கி வீடுபெற்றினை யடைதற் குரிய செயல் வழிகளைக் கண்டோம் இல்லை. ௬. அரிசனம் - மஞ்சள்; சந்தனமுமாம். தயங்குற - விளங்க. அக்கமணிவடம் - சிவ கண்மணி மாலை. ௭. ஒன்று ஆர்வம் கூர - பொருந்திய அன்பு மிகுதிப்பட. தேறல் - தேன். பொன்றூத - கெடாத.

வஞ்சமல மாயைகரு மஞ்சார்வின் ரோட
மண்டுவிழி நீர்சொரிய நின்றேயன் பாகி
நெஞ்சுருகு வார்துணைவ செங்கோசெங் கீரை
நின்றநிலை பேர்தலிலி செங்கோசெங் கீரை
விஞ்சுருவ மோடருவி ரண்டோடொன் பானும்
வெம்புபரை யாதியும கன்றுகும் போதம்
நஞ்சொருப மாவருளி செங்கோசெங் கீரை
நங்கள்சிவ ஞான முனி செங்கோசெங் கீரை. (அ)

பங்கயம தேறிநற வுண்டேசங் கீத
பண்கள்பல பாடியொழு குந்தாளொண் காவி
அங்குமுத மூசுபிண ரந்தாள்கொம் பூதி
யம்பணில வாவியினும் வெஞ்சூல்கொண் டேகி
மங்குல்துயில் சோலையினு மங்கோடிங் கோடு
வண்டுதிரி கீழ்நதியு ளின்கேளின் பூசை
நங்கைநகர் வாழிறைவ செங்கோசெங் கீரை
நங்கள்சிவ ஞானமுனி செங்கோசெங் கீரை. (கூ)

கம்பநகர் வாழிறைவ செங்கோசெங் கீரை
கங்கைசும வாதபர செங்கோசெங் கீரை
செம்பொன்முடி தாழ்சரண செங்கோசெங் கீரை
செங்கைமணி நேர்தலைவ செங்கோசெங் கீரை
இம்பர்வரு மாரமுத செங்கோசெங் கீரை
யெங்கண்மல நாசவொளி செங்கோசெங் கீரை
நம்புமடி யார்துணைவ செங்கோசெங் கீரை
நங்கள்சிவ ஞானமுனி செங்கோசெங் கீரை. (கo)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

## ௩. தாலப் பருவம்

[இஃது எட்டாந் திங்களில் நிகழ்வது. தாலம் என்பது நா. நாவினை அசைத்தருளாய் என்னும் பொருள் மேல் நின்றது.]

---

அ. சார்வின்ரோட - சார்தல் இல்லாமல் ஓட. நஞ்சொருபம் - நமது வடிவம். கூ. பங்கயம் - தாமரை. மங்குல் - துகில். கo. கங்கை சுமவாத - கங்கையைத் தாங்காத. இம்பர்-இவ்வுலகம்.

ஆற்றற் பெரியோ ராற்றுவார்க்
காற்றல் பசியை யாற்றுதலென்
றறைந்த மொழியைக் கடந்துசிவ
னடியா ரெனுநல் விருந்தழைத்துச்
சோற்றுக் குவடு தொலைத்தசிறு
தொல்லைப் பூத மொருகோடி
தொலைத்தற் கரிய செஞ்சாலிச்
சோறுங் கறியுங் கைகவிப்ப
ஊற்றற் கமைத்த பாறயிர்நெய்
யுதிர்தீங் கனியு முறை முறையே
யொழுகு பந்தி பலவிருத்தி
யுவந்து படைத்துத் தீப்பசியை
மாற்றிப் பெருஞ்சீர் பெறுதற்கு
வல்லாய் தாலோ தாலேலோ
மயிலை வரையிற் சிவஞான
மணியே தாலோ தாலேலோ. (௧)

அருவா யுருவா யவையன்றி
யறிவாய் நிற்கு மவிர்சடிலத்
தண்ணல் பெருஞ்சீ ரிசைப்புலவ
ரறைதல் பட்டாங் காதல்போல்
மருவார் மலர்த்தண் பொழின்மணிநீர்
வாவி பசும்பொன் மதின்மாட
மணிமா ளிகைகோ புரநெடுந்தேர்
மறுகு முதலா யினவற்றின்
பொருவா வளங்க ளிறும்பூது
புகல்வார் புகலும் படியெல்லாம்
பொருளே யாகி யேனையபோற்
புராண மலது மறைகூறுந்
திருவார் கச்சி நகரிடங்கொள்
செல்வா தாலோ தாலேலோ
தேடற் கரிய சிவஞான
தேவே தாலோ தாலேலோ. (௨)

---

௧. "ஆற்றுவா ராற்றல்" என்னுங் குறள். குவடு - மலை. செஞ்சாலி - செந்நெல். சோற்றுக்குவடு - சோற்றாலாகிய பெருங்குவை. பந்தி - வரிசை. ௨. அருவாய் உருவாய் - அருவமாயும், உருவமாயும். பட்டாங்கு - உள்ளவாறு; புராணமலது மறைகூறும் - புராணங் கூறுதலேயன்றி மறைகளுங் கூறும். அவிர்சடிலம் - விளங்குகிற சடை. மரு - மணம். பொருவாவளங்கள் - ஒப்பில்லாத சிறப்புக்கள். ஏனைய போல் - பிறவற்றைப்போல். திருவார்கச்சி - சண்டுப் புகழாகிய திருவிறை கச்சி என்பது பொருள்.

ஆர்க்கு மதுரச் சங்கமளித்
தரவ மடுத்த பெருங்கங்கை
யாறு மடுத்துப் பிறைத்தோணி
யமர்ந்து சடைச்செந் துகிர்படர்ந்து
பார்க்கு முமைகட் கயலுலவும்
பழைய கருணைக் கடலகத்துப்
படிந்து பரக்கும் புறச்சமயப்
பாம்பு பதைப்ப விடித்துமயல்
போக்கு மயிலை வரையிவர்ந்து
பொருண்மா மாரி மிடிக்கோடை
பொன்றப் பொழிந்து புகழ்வெள்ளம்
பொருப்பு வாளக் கரைவாவி
தேக்கு முகிலே யமுதேசெந்
தேனே தாலோ தாலேலோ
தேடற் கரிய சிவஞான
தேவே தாலோ தாலேலோ. (௯)

முதையா மெமது மனப்புலத்தை
மூடுங் காம வெகுளிவன
முற்றுங் கருணைத் தீக்கொளுவி
முருக்கித் திருத்திச் செருக்கெனுமா
மதயா னையைவந் தழியாது
மறிப்பப் பொறைவே லியுமமைத்து
வலிய சிவமந் திரப்படையால்
வாய்ப்ப வுழுது சிவவிதையை
விதையா முளைப்பப் பிறதெய்வ
விரவு களைகட் டறவளர்த்து
வீடாங் கனிகொள் பருவத்து
விடயக் கரவர் புகுந்த தனைச்
சிதையா வண்ணங் காத்தளிக்குந்
திறத்தாய் தாலோ தாலேலோ
தேடற் கரிய சிவஞான
தேவே தாலோ தாலேலோ. (௰)

---

௯. ஆர்க்கும் - ஒலிக்கும். அரவம் - ஒலி. உமைகட் கயல் - உமையம்மையின் கண்ணாகிய மீன். மயல்போக்கும் - மயக்கத்தை நீக்கும். பொன்ற - கெட. ௰. முதை - பழைய நிலம். வனம்-காடு. முருக்கி - அழித்து. பொறை - பொறுமை. கட்டு - களைந்து. வீடு - மோட்ச வீடு. விடயக்கரவர் - புலவஞ்சகர். சிதையா வண்ணம் - அழித்தொழிக்காதபடி.

வாங்கு சிறுவெண் மதிக்குழவி
வயங்கு முடியு மதன்மான
மலர்ந்த விழிசேர் திருநுதலு
மதிநேர் சங்கக் குழைப்பணியே
தாங்கு செவியுங் கடற்காளந்
தரித்த மிடறுங் கனன்மழுமான்
றயங்கு கரமுந் தனிக்கேழற்
றடங்கோ டிமைக்குந் திருமார்பும்
ஓங்கு சிவவெம் புலியதளொன்
றுடுத்த வரையு மான்மலர்க்க
ணுற்ற வடியு நினதுண்மை
யுணரா வஞ்சஞ் செயக்கருணை
தேங்கும் விழிக ளேயதனைச்
செய்யா தாலோ தாலேலோ
தேடற் கரிய சிவஞான
தேவே தாலோ தாலேலோ. (௯)

வேறு

மீனெ னப்பிறழ் மதர்நெடுங் கட்சிறு
வின்னு தற் றுவர்வாயார்
வேட்கை நோய்தவிர்ப் பவர்க்குமட் புனலிடை
வேறுசெய் தேறேபோல்
ஊனு யிர்க்கொரு பிரிவுதந் துதவுறு
முத்தமா தாலேலோ
வுருவ மாகிவந் தென்கருங் கன்மன
முருக்குவாய் தாலேலோ
வான ளக்குறுங் காலென வெய்திடும்
வைந்நுதிக் கணையென்ன
வாரி யுட்புகுங் குடமென வுட்புற
மருவிநின் றகலாமல்
ஞானி னைப்பரும் பரசிவத் துறவரு
ணற்றவா தாலேலோ
நகரி நாயகக் காஞ்சிமா நகர்ச்சிவ
ஞானியே தாலேலோ. (௧௦)

---

௯. மதிக்குழவி - பிறைத் திங்கள். வயங்கும் - விளங்கும். மதன் - காமன். கடற்காளம் - கடலில் தோன்றிய நஞ்சு. மிடறு - கண்டம். கேழல் - பன்றி. தடங்கோடு - பெரிய கொம்பு. மான்மலர்க்கண் - திருமாலின் கண்ணாகிய தாமரை மலர். ௧௦. பிறழ் - புரளுகின்ற. மதர்நெடுங்கண் - களிப்புப் பொருந்திய நீண்ட விழிகள். துவர் - பவழம். தவிர்ப்பவர்க்கு - நீக்குபவர்கட்கு. உத்தமா - உத்தமனே! எய்திடும் - எய்யும். வைநுதி - கூரிய முனை. நகரி நாயக - நகர்கட்கெல்லாந் தலைமையாகிய.

பாரி னிற்பெருஞ் செல்வமுண் பவர்க்கெனப்
பற்றிநின் றுண்ணமற்
பனைப ழுத்ததற் கொக்குமூர் நடுநயப்
பண்பினேன் றிருவென்னுஞ்
சீரி யற்படு மொழியெமக் கல்லது
திருவுடை யோர்தம்மிற்
சிலர்க்கு ரைப்பது முகமனென் றுணர்த்துறு
செய்கையொன் றுடையோனே
கூரி சைப்படா விவறன்மா லையனிடைக்
குறுகுரு தீவோர்கட்
குறுகு வாரிற்சண் பகம்விடுத் தொள்வழைக்
கொததில்வேள் சிலைவாங்கும்
நாரி மொய்த்தெழு மயிலைமால் வரைக்கொரு
நாயகா தாலேலோ
நகரி நாயகக் காஞ்சிமா நகர்ச்சிவ
ஞானியே தாலேலோ. (௭)

கல்லெ னத்திர டோட்புனை மீர்ந்தொடைக்
காமவே ளுலகெல்லாங்
கவன்று தன்வலிக் குடைந்துதம் புறந்தரக்
கண்டதோர் மிகுவீரன்
வில்லி யற்சுவைக் கரும்பும்வெம் பகழிகள்
வீயும்விற் குழைநாரி
விளரி யங்குரற் சுரும்புமாய் முடிந்துற
விளைத்தவோர் விறலாளா
சொல்லி சைப்படு சங்கவண் புலவர்தந்
தூக்கொடு நிறைநிற்பச்
சொக்கர் கூடலிற் பொற்பல கையினிடாத்
தூக்கினும் படியொக்கும்
நல்லி சைத்தமிழ் மாலைசூ டியபுகழ்
நல்லவா தாலேலோ
நகரி நாயகக் காஞ்சிமா நகர்ச்சிவ
ஞானியே தாலேலோ. (௮)

---

௭. பனைபழுத்ததற்கொக்கும் : "நடுவூருள் நச்சுமரம் பழுத்தற்று" என வாந்திருக்குறளுக்கு மறுதலையாக, நயப்பண்பினேன் றிரு, பலரும் பயன்கொள ஊர்நடுவே பனை பழுத்தாற் போல்வதென நயம்பட உரைத்தவாறும். சீரியற்படுமொழி - சிறப்புப் பொருந்திய அருளுரை. முகமன் - உபசாரம். இவறன்மாலையன்-உலோபத் தனமுடையவன் வேள்சிலை வாங்கும் நாரி - மன்மதன் கருப்பு வில்லிற்பூட்டிய நாணியாகிய வண்டுகள். ௮. கவன்று-வருந்தி. புறம் - முதுகு. விறல் - வெற்றி. சங்கவண் புலவர் - பெருமை பொருந்திய சங்கப் புலவர்கள். தூக்கு - செய்யுள்.

### வேறு

ஒருமா யையினுயிர் மாபரம் வேறு மாபோலு
    முதுபோ மெனினிலை பேதமெ னாவோ தாவீயா
வருமா மறையுரை யாடலும் வேறு மான்மாவோ
    டருளார் பதியியல் பாயென வோதா மாறுவாய்
வருமா கமமுரை யாடலு மாரா யாராயே
    மலைவா துசெய்மய லாலுள மோவா நோவாவார்
செருமாய் வுறுமொரு வாசக தாலோ தாலேலோ
    சிவஞா னியெனுயிர் நாயக தாலோ தாலேலோ. (௯)

நனவா வொருசிவ மோதிறை தாலோ தாலேலோ
    நவிலு வலர்புகழ் மாலைய தாலோ தாலேலோ
கனவா வுலகறு தேசிக தாலோ தாலேலோ
    கதிர்வே லவன்மயி லாசல தாலோ தாலேலோ
மனவா சகவினை மேவிலி தாலோ தாலேலோ
    மதனு டல்கொலடன் மாதவ தாலோ தாலேலோ
சினவா வருளித யாலய தாலோ தாலேலோ
    சிவஞா னியெனுயிர் நாயக தாலோ தாலேலோ. (௧௦)

தாலப்பருவம் முற்றிற்று.

---

## ௪. சப்பாணிப் பருவம்

[சப்பாணி -ச, பாணி எனப் பிரித்துக் கை சேர்த்துக் கொட்டுதல் என்னும் பொருள்மேல் நிற்றலால் கையோடு கையைச் சேர்த்துக் கொட்டும் பருவம் எனக் கொள்க. இஃது ஒன்பதாந் திங்களில் நிகழ்வது.]

---

௯. உதுபோம் எனில் - இது நீங்குமென்றால். ஓதா வீயா - கூறியருள் செய்து. ஓவா - ஒழியாமல். ௧௦. நவில் - கூறப்பெறுகிற. மனவாசக வினை - மன வாக்குச் செயல்கள். மேவிலி - அடையாதவன்.

காளம் புரைந்தநெட் டுடலழற் கட்கொடிய
காலன்வந் தான்வந்தனன்
கண்டவா றிஃதுரைத் தனமுரைத் தனமென்று
கைதட்டி விடுவதென்ன
வேளம்பு தைத்தலறும் வன்னெஞ்ச ரிவ்வுலக
மெய்யென்ப தில்லையென்பவர்
விரிசடைக் கடவுளடி யவர்வரவு கண்டுள்ள
மிக்கெழு மகிழ்ச்சியென்ன
வாளம்பு யத்துணர்ப் பதமுக்க ணிறைபுக
ழழித்தபுன் சமயமென்புள்
ளணிகடிவ தென்னமழ விடையொன் றுகைப்பவ
னரியபுகழ் பாடியாடத்
தாளம் புடைப்பதற் கடியிட்ட தென்னநீ
சப்பாணி கொட்டியருளே
தனையறியு மறிவையறி வென்றசிவ ஞானியே
சப்பாணி கொட்டியருளே. (௧)

மொண்டுபொய்ப் பொருளென்று பொருளையிர வலர்வரின்
முத்திரைசெ யாமலுதவி
முழுமறைப் பொருளைமெய்ப் பொருளென்று தொண்டர்க்கு
முத்திரைசெய் தீங்கருள்வது
விண்டுமது மடைதிறந் தொழுகுபைங் கொன்றைபுனை
விரிசடைக் கற்றைநெற்றி
விழியுடை யவர்க்கலது குவியாத தில்லையென்று
விரியாத தேதிலார்முன்
கொண்டவெம் பவநீறு படநீறு தன்னைக்
கொடுப்பது நடுங்கவாவி
கொள்ளைகொண் டுண்ணவெம் பால்வருங் கொடியவெங்
கூற்றைத் தடுப்பதாய
தண்டளிர் கவற்றுநின் கையினை யலையநீ
சப்பாணி கொட்டியருளே.
தனையறியு மறிவையறி வென்றசிவ ஞானியே
சப்பாணி கொட்டியருளே. (௨)

---

௧. காளம் - நஞ்சு. புரைந்த - ஒப்பான. வேளம்பு - காமன் கணை. புள் அணி கடிவது என்ன - பறவைக் கூட்டத்தைத் துரத்துவது போல. விடையொன் றுகைப்பவன் - காளை யொன்றைச் செலுத்து பவன். அடியிட்டது - அடிப்படை செய்து வைத்தது. ௨. மொண்டு- அள்ளி. முத்திரை செயாமல் - பாதுகாப்புச் செய்யாமல். பவம் நீறு பட - பிறவி அழிந்தொழிய. ஆவி - உயிர். கவற்றும் - வருத்தும்.

உருக்கிளரும் வடிவென்று நிலையாத விடயத்தி
லுழலும் புலன்களென்று
மொழிகின்ற புத்தியது தானென்றும் விரிவாகி
யொன்றாய குணமதென்றும்
பரக்குமிவை யன்றன்று புருடனே யென்றுமுயர்
பகுதியே யென்றுமதன்மேற்
பரவிந்து வென்றுமவை யன்றியே மனமொழி
படாதவொரு பிரமமென்றும்
விரிக்கிலிது நிறைவென்று மணுவென்று மொன்றென்றும்
வேறுபற் பலவென்றுமெய்
வினைவென்று மிலதென்று முயிரியல்பு பலசமயர்
வேறுவே றுகவைத்துத்
தருக்கமிடு கலகமற வந்தகரு ணாகரா
சப்பாணி கொட்டியருளே
தனையறியு மறிவையறி வென்றசிவ ஞானியே
சப்பாணி கொட்டியருளே. (௧)

மும்மைமல மூங்கதிர்க் கற்றைவட் டப்பரிதி
முன்னிருள்செய் தீரமதியின்
முழுநில வெறிக்கும்வெண் டிருநீறு ஞானமெனு
மொய்குழலை மன்றல்புரிவார்
எம்மணிய தென்றுபுனை நன்முகக் கண்டியுட
னிறைவனரு ளஞ்செழுத்து
மிலிங்காங்க சங்கசம ரசநிலைமை யிதுவென்ன
விருளறவுணர்த்து குருவும்
மெய்ம்மையுணர் வொடுகலந் துற்றிருந் தங்கையில்
வெளிப்பட்ட ஞானவடிவும்
விளங்குசர மும்புனித தீர்த்தசிவ சேடமும்
மேலுலக வித்தென்றவை
தம்மையுல கினில்விளக் கியவந்த தேசிகா
சப்பாணி கொட்டியருளே.
தனையறியு மறிவையறி வென்றசிவ ஞானியே
சப்பாணி கொட்டியருளே. (௨)

உரைமன மிறந்தவொரு தனிநிலைமை யிதுவென்ன
உள்ளபடி முனிவர்நால்வ
ருணர்ந்திட வுணர்த்துதற் குற்றதவ யோகத்தி
னெண்ணுதற் கண்டிறந்து

---

௧. உருக்கிளரும் - வடிவம் விளங்கும். பரக்கும் - பரவும். மன மொழி படாத - மனம் வாக்குக் காயங்கட்கு எட்டாத. ௨. ஈரமதி - குளிர்ந்த திங்கள். மொய் குழலை - பெண்ணை. மன்றல் புரிவார் - மணம் புரிவார். கண்டி - சிவகண்மணிமாலை. ௩. பொருமதன் -

பொருமதனை வென்றனன் பரமனென் கின்றசிறு
புகழன்றி யோகநிலைமை
பொன்றியங் கவன்வென்றி கொள்ளலாற் படுதோல்வி
பொன்றலற வெய்தினனெனும்
வரைவில்சிறு மொழிபுகா தெண்ணிலோ ருணரவரு
மறைமுடி வுணர்த்தி வெய்ய
மதனன்வந் தொருகணமு மெதிர்நிலா தொழுகுதவ
மாயாத நிலையினுடனித்
தரையினிடை வந்தருளு மெம்பரம யோகியே
சப்பாணி கொட்டியருளே
தனையறியு மறிவையறி வென்றசிவ ஞானியே
சப்பாணி கொட்டியருளே. (௭)

வேறு

பெருவாழ் வுற்றிடு தீயர்செ ருக்குல கிற்கோரிற்
பிழையாய் முற்றிடு மாறென நத்திட ருற்றுழ
விரைதேர் புட்குலம் வாயிரை யிட்டிரி யக்காவி
யிதழ்சா யத்தடு மாறி வரிக்கயல் கெட்டோட
வெருவா மொய்த்திசை பாடளி மட்டுணல் விட்டேக
விளையா டித்தட வாளை குதித்தெழு பொற்பாய
திருவார் கச்சியர் நாயக கொட்டுக சப்பாணி
சிவஞா னிப்பெய ராண்முனி கொட்டுக சப்பாணி. (௮)

குருநீ பத்தொடை யாளி யெதிர்த்த விறற்சூர
குருமாள் வித்தவன் வாழ்மயி லைக்கிரி பொற்பார
வருநீர் மைக்கரு ணாகர கொட்டுக சப்பாணி
மலமா யைப்பகை யானவ கொட்டுக சப்பாணி
கருநீர் மைத்திரு மாலடி யுய்க்குமெ னப்பூசு
கவர்நா மக்குறி சேர்தரு நெற்றிது டைத்தீசர்
திருநீ றிட்டிடு மாதவ கொட்டுக சப்பாணி
சிவஞா னிப்பெய ராண்முனி கொட்டுக சப்பாணி. (௯)

ஒருமா தர்ப்பிறை வாணுதன் மைக்கண் மலர்க்கோதை
யுமைகா ணக்கம லாலய னெத்துற நற்றுளம்
வருமான் வத்திர னுர்கொளு மத்தள முற்பேச
மகிழ்வீ ணைத்தொழி லாரிசை யொத்திசை யப்பாட

---

போர் செய்த காமனை. வெபானறி அங்கு அவனை வென்றி கொள்ளலால் - பரமனுடைய யோக நிலை முடிவுற்றபடியால் காமன் வென்றனன் என்க. ௬. இரிய - அஞ்சியோட. இசைபாடு அணி - இசைபாடுகிற வண்டுக் கூட்டங்கள். மட்டுணல் - தேனுண்டல். ௭. குரு - நிறம் நீபத் தொடை - கடப்பமாலை மாயைப் பகையானவ - மாயைக்குப் பகை யானவன். ௮. இரு மாதர்க்கு - வள்ளி தெய்வயானை யென்னும் இரு

இருமா தர்க்குயி ராமுரு கற்பெறு நிட்காம
விறையா டப்புல வோர்புனை மெய்க்கவி தைப்பேர்கொள்
திருமா லைப்புய மாதவ கொட்டுக சப்பாணி
சிவஞா னிப்பெய ராண்முனி கொட்டுக சப்பாணி. (௮)

எளியா ரைப்பெறின் மேனிப தைப்ப வலைத்தாவி
யெதிர்வா ரைப்பெறி னோடு மறச்சிறி யர்ப்போல
ஒளியா முற்சிறு மீனெதி ரக்கவர் வுற்றுடி
யுகள்சே லுற்றிட வாயிரை கக்குபு கொக்கோடும்
அளியார் மட்டலர் வாவியு டுத்தற நற்சாலை
யழகார் கச்சிநி வாச கருத்தும ருட்பாடு
தெளியார் கட்கரு ணீர்மைய கொட்டுக சப்பாணி
சிவஞா னிப்பெய ராண்முனி கொட்டுக சப்பாணி. (௯)

புதையா மெய்ப்பொரு ளீகைய கொட்டுக சப்பாணி
பொழில்சூழ் கச்சியின் வாழ்பவ கொட்டுக சப்பாணி
மதயா னைப்பொறி காவல கொட்டுக சப்பாணி
மறைவாய் மைத்திரு வாசக கொட்டுக சப்பாணி
சுதையா மெய்ப்பொடி மேனிய கொட்டுக சப்பாணி
தொழுவார் கட்கரு டேசிக கொட்டுக சப்பாணி
சிதையா நற்குண தாபத கொட்டுக சப்பாணி
சிவஞா னிப்பெய ராண்முனி கொட்டுக சப்பாணி. (௧0)

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

பெண்களுக்கு. நிட்காமவிறை - எத்தகைய அவாவுமற்ற பரமன். ௯. அலைத்து - வருத்தி. அறச் சிறியர் - மிகச் சிறியவர். கக்குபு - கக்கவிட்டு. அளியார்-வண்டுகள் பொருந்திய. மட்டலர்-தேன்மலர். ௧0. மெய்ப்பொருளீகைய - உண்மைப் பொருளைக் கொடுப்பவனே! மெய்ப்பொடி மேனிய - திருநீறு பூசிய உடலையுடையவனே. தாபதர் - முனிவர்.

## ௫. முத்தப் பருவம்

[முத்தந் தருமாறு குழந்தையை வேண்டுவது. இது பதினோராந் திங்களில் நிகழ்வது.]

அருந்து மமுதி னினியதா யன்போ டளைந்து படிறிலதா
யறைந்த மொழிதத் துவமசியி னன்றி மாறு கியல்பினதாய்ப்
பொருந்து மறையா முடம்பிற்குப் புக்க வுயிராய்ப் பவக்கடற்குப்
புணையாய்க் கயிலை வழித்துணையாய்ப் பொலிந்த திருவஞ் செழுத்தென்
பரந்த புகழ்மந் திரவேந்து பவனி போதுந் திருமறுகாய்ப் [னும்
பனிவெண் டிங்கட் சடைமுடியோன் படிவ முணர்த்தும் விளக்காகித்
திருந்து பவளத் திருவாயாற் செல்வா முத்தந் தருகவே
திளைக்குங் கருணைச் சிவஞான தேவா முத்தந் தருகவே. (௧)

எல்லாத் தேவர் தமதுயிரு மிமைப்போ தினிலுண் கரியகடு
வீன்ற வோதைக் கடன்முத்த மெனைத்தும் வேண்டே மெழின்மதவேள்
வில்லாய்க் கொலைசெய் தொழில்படைத்த வேழக் கரும்பின் வெண்முத்தம்
விரும்பே மலர்ப்பூம் பொழிற்றிருநெல் வேலிப் பதியின் வேய்முத்தம்
அல்லாற் கருங்காட் டுயிரனைத்து மலமந் தழியக் கதழெரியை
யாக்கு நெடிய வேய்முத்த மணுகேஞ் சிறிது மருளின்மொழி
செல்லாப் பவளத் திருவாயாற் செல்வா முத்தந் தருகவே
திளைக்குங் கருணைச் சிவஞான தேவாமுத்தந் தருகவே. (௨)

களரின் முளைத்த செங்கரும்பு கண்ணுற் பயந்த விளங்குமரன்
கதிர்கான் றெழுசெம் பரிதியுடல் கறுப்பச் சிவந்த சுடரிலைவேல்
தளிரி னியல்வென் றுலவுசிறு தவளை வாய்ச்சில் லரிக்குரற்பூஞ்
சதங்கைச் செம்பொற் சிறுதண்டைத் தாளென் றலைமேல் வைத்தபிரான்
விளரி வரிவண் டிமிர்குவளை வியன்சீர்த் தணிகைக் கருங்கல்லின்
மிசைப்பூப் பித்தா னெனக்கருதி வினையே னுள்ளக் கல்லிடைத்தாள்
மூளரி மலர்கள் பூப்பித்த முதல்வா முத்தந் தருகவே
முருகன் மயிலைச் சிவஞான முனிவா முத்தந் தருகவே. (௩)

---

௧. படிறிலதாய் - பொய்யற்றதாய். தத்துவமசி - அது நீயேயாக விருக்கிறாய் என்னும் மறைமொழி. திருமறுகு - திருவீதி. ௨. கடு ஈன்ற - நஞ்சைப் பெற்ற. ஓதைக் கடல் - ஒலி பொருந்திய கடல். வேழக்கரும்பு - மிகச் சிறந்த கரும்பு. வேய் முத்தம் - மூங்கில் முத்து. அலமந்தழிய - சுழன்று வருந்தியழிய. கதழ் எரி - விரைந்தெரியுந் தீ. மூங்கில்கள் ஒன்றோடொன்று தேய்படுவதால் காட்டுத்தீ யுண்டாகு மென்பர். ௩. கண்ணுற் பயந்த இளங்குமரன் - முருகக் கடவுள் இறைவனுடைய நுதல் விழியிற்றோன்றினராகலின் இவ்வாறு கூறினார். கதிர்கொன்று - ஒளியைக் கக்கி. பரிதி - கதிரவன். தளிரினியல் - தளிரின் தன்மை. விளரி - விளரிப்பண்பாடும்.

கற்ற புலவர் மிகச்சிறந்து காட்டு மொன்றன் வளமெடுத்துக்
கவியால் விரித்துப் புகன்றியம்பக் கருதி யதுபொற் குன்றநாண்
உற்ற மணிப்பொற் கோபுரமோ வொளிர்பொன் மாட மோமுகில்வந்
துறங்கு மதிலோ மாளிகையோ வுலவு திருத்தேர் மறுகோசீர்
பெற்ற குடிகண் மனைவளமோ பிரச மலர்த்தண் டலையோநீர்
பெருகு தடமோ வெனவிறைவி பிறங்கு கோயிற் றிசைபோல
முற்ற மயங்குஞ் சீர்க்காஞ்சி முதல்வா முத்தந் தருகவே
முருகன் மயிலைச் சிவஞான முனிவா முத்தந் தருகவே. (௪)

இணையி றிருவள் ளுவப்பெயர்கொ ளெம்மான் கரப்பா ரிரவன்மி
னென்ன விரந்து மிரத்தக்கார்க் காணி னிரக்க வென்றுரைத்தும்
உணர்வு தெருள்வித் தமைகொண்டே யொருவர் தமையு மிவ்வளவு
மொன்று மிரந்தா மல்லமியா முன்னே யின்றீங் கிரக்கின்றும்
அணையு மவர்தம் முகக்குறிப்பா னறிந்தங் கவர்த மகம்விழைந்த
வனைத்து மமுத முறழீர மளைந்த வின்சொ லுடனளிக்கும்
முனையில் கொடைச்சிந் தாமணியே முகிலே முத்தந் தருகவே
முருகன் மயிலைச் சிவஞான முனிவா முத்தந் தருகவே. (௫)

வேறு

அதிர்செய் கடலகன் ஞால முடியர விற்கெலா
மரசு நடுமுடி யீனு மெழுசுடர் வட்குமோர்
கதிர்கொள் புதுமணி கோடு கொடுமிடி யுற்றுளார்
கடையு மணிகொடு வீசு மவரென நிற்றநீர்
துதியி லுடல்பொரு ளாவி கொடுதமி யற்குமா
சுருதி முடிவுறு மாசில் பொருளுத வுற்றகூன்
மதியின் முடிமதி யாள பணிமணி முத்தமே
மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. (௬)

கருவி யுடல்பொறி பூத முதலன முற்றுமே
கழல்பு தனியறி வாகி யொருபிர மத்துநாம்
விரவி யதுவடி வாயி னமெனுமோர் சுட்டுமே
விளிய வரவொடு சேற லருகயல் கொட்புரு

---

௪. பொன் குன்றம் நாண் உற்ற - மகா மேருமலை வெட்கத்தை யடைந்த. பிரசமலர் - தேன் பொருந்திய மலர். பிறங்கு கோயில் - விளங்குகின்ற கோயில். ௫. முதலிரண்டடிகளில் இரண்டு திருக்குறள்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. கரப்பார் - ஒளிப்பவர். இரத்தக்கார் - இரக்கத் தகுதியுடையவர்கள். தெருள்வித்தமை - தெளியச் செய்தமை. அகம் - உள்ளம். ஈரம் அளைந்த - அன்பு கலந்த. முனை - வெறுப்பு. ௬. வட்கும் - வெட்கும். கொடு மிடி - கொடிய வறுமை. சுருதி முடிவுறு - வேதாந்தத்தில் பொருந்திய. மாசில் பொருள் - குற்றமற்ற மெய்ப்பொருள். பணிமணி - நாகரத்தினம். ௭. கழல்பு -

அருவ முருவமி லாத நிலையொர்க ணத்துளே
யருளு மொருமொழி யாள திருவளர் கச்சியூர்
மருவு பெருகருள் வாரி பணிமணி முத்தமே
மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. (எ)

நிறையு மருண்மழை மேக மெனவும றுப்புரு
நிதிய வளையொடு தாம ரையெனவும் வற்றுரு
துறையு மலிதயை வாரி யெனவுநி னைப்பரா
யுணர்வு தருகலை யோதி யுணர்வும யக்கிலார்
அறையு மொழிகொடு மேவி நினையிரந் துற்றுதா
மலது பிறர்தமை யாது மருவியி ரக்கிலேம்
மறையி னிலைதவிர் யோகி பணிமணி முத்தமே
மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. (அ)

குதலை மொழிமருள் பேதை பிலநதி மட்டுவார்
குவளை மதர்விழி மாலை மதியைம ருட்டுவாள்
நுதலை வழிபட வேகி மறியும்வி யப்பொடே
நுவலி லளவில வாகும் வளமலி கச்சியாய்
திதலை முலைமட மாதர் கொடுமய லிற்படார்
திகழு மனமுடை வாய்மை நெறியறி ஞர்க்கெலாம்
மதலை யெனவரு தூய பணிமணி முத்தமே
மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. (௯)

இயலு மொருகுட வானை யதனுளி ருக்கவா
னெனவ றிவுறவு பாதி யறவறி வித்தல்போல்
உயலி லுடலிலுண் மேவு முயிர்பிர மத்தின்வே
றுழிய வொருபொரு ளாகு மெனவறி வித்தவா
செயலொ டுரைமனம் யாவு மதியம ருட்டுமோர்
திலக நுதலுமை பாகர் பணிசெய வுய்த்துவாழ்
மயலி லடியவர் நேச பணிமணி முத்தமே
மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. (௧௦)

முத்தப்பருவம் முற்றிற்று.

---

௬ முன்று. விரவி - கலந்து. அது வடிவாயினம் - பிரமவடிவானோம். அ. நிதியவளை-சங்கநிதி. தாமரை - பதுமநிதி. வற்றுருது-வற்றாமல். ௯. பிலநதி - கம்பை. மதியை மருட்டு - திங்களை மருளச் செய்கிற. நுவலில்-கூறினால். திதலை-தேமல். மதலை-குழந்தை. ௧௦. உயலில்-நீண்டு வாழ்தலில்லாத. மதியம் மருட்டும் - திங்களை மருளச் செய்யும். பணிசெய - திருப்பணிகளைச் செய்ய. மயல்இல் - மருட்சியில்லாத.

## ௬. வாரானைப் பருவம்

[நற்றாய் முதலியோர் குழந்தையை 'வருக' என்று அழைத்தலைக்கூறும் பருவமாதலின் இது வாரானைப் பருவம் என்று பேர் பெற்றது. வாரானை எனினும் வருகையெனினும் ஒக்கும். இது பன்னிரண்டாந் திங்களில் நிகழ்வது.]

நேரா வெமக்குக் கொடுத்தவுட னிலையா தழியும் பொருளாவி
நெறியின் மயங்கித் தமவென்னு நினைவி னோரிங் கிவரென்றும்
தீரா வெகுளிக் கனற்கிவர்தஞ் சிந்தை முருட்டு விறகென்றுந்
தீய காமக் கள்ளுண்டு செருக்கு களிய ரென்றுமருள்
கூரா தழுக்கா றெனுமளற்றுக் குழிவீழ் குருட ரிவரென்றுங்
கொலையை யஞ்சா ரென்றுமுளங் கொண்டு தமியே மழைப்பவுநீ
வாரா தொழியல் பெருங்கருணை வடிவே வருக வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௧)

அணங்க வெம்மைப் பிடித்திருந்த வவாப்பே யகன்று குடிபோக
வருள்செ யொருமந் திரவாதி யாகிப் பாச வல்லிருளைப்
பிணங்கு மொருசெஞ் சுடராகிப் பிறவிப் பிணிக்கு மருந்தாகிப்
பிறந்த வன்புக் குழவிக்குப் பெற்ற தாயா யிடும்பைச்சே
றுணங்க வெழுசெங் கதிராகி யுழலுஞ் சமயக் கடாக்களிற்றை
யுடற்று மரிமா னேருகி யுவந்து தமியே நறுமலர்தூய்
வணங்க வொருதே வாய்க்கருணை வடிவே வருக வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௨)

பைந்தா துகுக்கு நறுங்கொன்றைப் பனிமா மலருங் குழவியிளம்
பயில்வெண் மதியுந் துளையெயிற்றுப் பாம்புஞ் சுமக்கு மன்றுநீ
செந்தா மரைச்சே வடிநோவத் திரும்பித் திரும்பி யோரிரவிற்
சேல்வென் றகன்ற வரிமதர்க்கட் சிலைக்கூன் புருவத் தரளநகை
நந்தா விளக்கின் றிருமனைக்கு நாவ னகரின் வன்றொண்டர்
நடத்த வொருதூ தாளாகி நடந்த வுனக்கின் றடியேம்பால்
வந்தால் வருமோர் பழியுண்டோ மதுரக் கனியே வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௩)

---

௧. தமவென்னும் - தம்முடையவென்னும். வெகுளிக் கனல் - சினத்தீ. முருட்டுவிறகு-காய்ந்த விறகு. அளற்றுக்குழி-சேற்றுக்குழி. வாராதொழியல் - வராமற் போகாதே. ௨. அணங்க - வருத்த. அவாப்பேய் - பேராசைப்பேய். இடும்பைச் சேறு உணங்க - துன்பமாகிய சேறு காய. கடாக்களிறு - ஆண் யானை. உடற்றும்-வருத்தும். அரிமான் ஏறு - ஆண் சிங்கம். ௩. உகுக்கும் - சிந்தும். நந்தா விளக்கு - நந்தா விளக்கைப் போன்ற பரவை நாச்சியார். நாவல் நகரின் வன்றொண்டர் - சுந்தரர்.

முருந்தேர் நகையார் மயறுரக்கு முத்தே வருக பிறவிவன
முரிக்குங் கருணைக் கடாக்களிறே முன்செய் தவத்தோர் தமக்குவரு
விருந்தே வருக தூண்டுசுடர் விளக்கே வருக சோதிமணி
விழியே வருக பரமுணர்ந்து விளைக்குந் தவத்தோர் பானிறைய
இருந்தே கமழுந் தீங்கனியே யிறையே வருக புகழ்நிலா
வெறிக்கு மறுவின் மதியமே யெமையா ளுடையாய் வருகவரு
மருந்தே வருக பெருங்கருணை வடிவே வருக வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௪)

இரவின் முயல்வார் மிடியினு லிரங்கா வுளத்த னெனப்படுத
லிருளாற் பகைஞ னெனப்படுத லிறவாக் கொடுந்தீ வினையினல்
பொருவில் கொலைஞ னெனப்படுதல் பொய்யாற் பொய்ய னெனப்படுதல்
பொறாமை யதனு லிவனென்றும் பொறாமை யினன்கா ணெனப்படுதல்
வெருவு முடம்பி னிடும்பையினல் விளங்க வறியா னெனப்படுதல்
வெகுளி யதனுற் றறியாத வெகுளி யினனு மெனப்படுதல்
மருவி யுலகில் வருங்கருணை வடிவே வருக வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௫)

சுருளுங் குடரும் புழுமலமுஞ் சொரியு நீருங் கலந்துபுறந்
தோன்று வயிறும் வேறுருபாற் றேன்றி நரலை யெனுந்தசைதான்
திரளும் புன்மார் புறுமுலையுந் திமிரு நறுநாற் றப்பொருளாற்
றீர்க்கு முடலைப் புலாலுடம்புஞ் செத்தாற் கிடந்து புறங்காட்டில்
புரளுந் தலையுங் கொடுநின்ற புன்மா தரைவா னமுதமே
பொன்னங் கொடியே பசுங்கிளியே பூவாய் மயிலே யென்றென்று
மருளும் பெரும்பித் தொழியவரு மருந்தே வருக வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௬)

போற்ற வருக வடிமையேம் புகழ வருக நறியமலர்
புனைய வருக வருண்மாரி பொழிய வருக வடிகடலை
ஏற்ற வருக மவுனமொழி யிசைப்ப வருக வெமதுளத்தி
னிருப்ப வருக வறங்கடலை யெடுப்ப வருக நீற்றழகு
தோற்ற வருக வெங்கண்மய றுரப்ப வருக கொடுங்காமந்
துடைப்ப வருக கூற்றுவலி தொலைப்ப வருக பிறவிநோய்
மாற்ற வருக வறிவுருவில் வைப்ப வருக வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௭)

---

௪. முருந்து - மயிலிறகின் அடி. மயல் துரக்கும் - மயக்கத்தைப் போக்கும். பரம் உணர்ந்து - பரம் பொருளை உணர்ந்து. அருமருந்து - அரிய அமுதம். ௫. இரவு - இரத்தல். மிடி - வறுமை. வெருவும் - அஞ்சும். இடும்பை - துன்பம். ௬. சுருளுங்குடர் - சுருண்டுள்ள குடர். புறங்காடு - இடுகாடு. புன்மாதர் - இழிந்த மாதர்கள். பொன்னங்கொடி - பொற்கொடி. ௭. அடிகள் தலையேற்ற - அடிகளைத் தலையிற் சூட. அறங்கள் தலையெடுப்ப - தருமங்கள் தலைதூக்க. துரப்ப - துரத்த.

அற்றங் களையு நின்பெருஞ்சீ ரறைந்த செந்நா விவ்வுலகி
லயலோர் மொழியு மறையாம லன்பா னின்பாற் பற்றுமுளம்
பற்றென் றிங்கட் செயாமலுனைப் பார்த்த விழிகள் பிறபொருளைப்
பாரா துன்சொற் கேட்டசெவி பயனில் பிறசொற் கேளாமல்
உற்றுன் றிருத்தாட் குற்றேவ லுஞற்று கரங்கள் பிறிதொன்றை
யுஞற்றா துள்ள படிசுட்டா துன்னை யுணர்ந்த பேருணர்வு
மற்றென் றினையிங் குணராமல் வந்த குரவா வருகவே
மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. (௮)

வேறு

முட்டு மார்புல னாய சேனைகண் முறியமான்
முற்று நானெனும் வேழ மாய்வுற மனமென்மா
பட்டு வீழ்தர வாவி யாமர சுடையவே
பற்றி ஞானநல் வாளி னாலொரு தமியனாய்
வெட்டு பாணிய னான லாலய விலையெனா
வெற்றி யாலறி வாகு மோர்நக ரிமையுளே
கட்டு மாறெதிர் மாறில் சேவகன் வருகவே
கச்சி வாழ்சிவ ஞான தேசிகன் வருகவே. (௯)

பற்றி லாவுணர் வாகி மாமன மருவியே
பற்று வாள்விழி யாறு சேர்புகை தனில்வரா
உற்றி லாதமர் ஞான நாயகன் வருகவே
யொப்பி லாவருண் மூல காரணன் வருகவே
முற்றி லாமுலை மாத ரால்வரு மயலறு
முத்தி சேர்வுறு மாறு தீதறு துணிவுநூல்
கற்றி லாரறி யாத சீரியன் வருகவே
கச்சி வாழ்சிவ ஞான தேசிகன் வருகவே. (௧௦)

வித்து வான்வர வால லாதொரு பிறிதினான்
மிக்க வாழ்வுபெ றாத வாறெனை வடியரேம்
அத்து வாமுடி வான நீவரு வரவுதா
னற்று வேறுள வேது வாலுள மகிழ்வுறேம்

---

௮. அற்றம் - குற்றம். இங்கண் - இவ்வுலகில். உஞற்று கரங்கள் - செய்கிற கைகள். ௯. முட்டும்-நெருக்கும். மால்முற்றும்- மயக்கம் பெருகும். வேழம் - யானை. நான்எனும் வேழம் : உருவகம். மனம் என்மா - மனம் என்ற விலங்கு. பாணியன்-கையை உடையவன். அயல் - வேறு. ௧௦. பற்றிலா உணர்வு - பற்றற்ற அறிவு. முற்றிலா முலை - இளமுலை. ௧௧. வாள் அரவு ஈனும் மாமணி - ஒளி தங்கிய

முத்து வானர வினு மாமணி மிகுகுவான்
　　முற்று மாமதி ஞாயி றுமெனு மயிலைவாழ்
கத்து வாதமி லாத போதகன் வருகவே
　　கச்சி வாழ்சிவ ஞான தேசிகன் வருகவே. (௧௧)

வாரானைப்பருவம் முற்றிற்று.

---

## எ. அம்புலிப் பருவம்

[செவிலித் தாயர் முதலியோர் திங்களைக் குழந்தையோடு விளையாட வருமாறு அழைக்கும் பருவம். இஃது எட்டுதலை யிட்ட பத்தாந்திங்களில் நிகழ்வது. சாம பேத தான தண்டம் என்னும் நால்வகைச் சூழ்ச்சிகளமைத்துப் பாடப்பெறும்.]

இரவடைவை நீயிரவை யடையா னிவன்கலை
　　யெண்ணிரண் டுடையையிவனெண்
ணெண்கலை கடந்தவன் மறுவுண் டுனக்கிவற்
　　கில்லையா லோர்மறுவுநீ
மருவுமறை நாணிலவை யிவனென்று மழியாது
　　வருபெரும் புகழ்நிலவினன்
வளர்குழவி யிற்றெழு வதற்குரியை நீயிவன்
　　வணங்கியிட வென்றுமுரியான்
விரவுபெண் மயலுடைப் போகிநீ யிவன்மயலை
　　மேவாத பரமயோகி
விடையுடைப் பாகன்முடி யிற்பொறையை நீயிவன்
　　விளங்குதளிர் மென்கையில்விடா
தரவவணி யற்பொறுப் பவனுத லால்விரைந்
　　தம்புலீ யாடவாவே
யருள்கசிந் தொழுகுவிழி யுடையசிவ ஞானியுட
　　னம்புலீ யாடவாவே. (௧)

பையரவின் வெவ்விடப் பகுவாயி னிடைசென்று
　　பட்டுனைப் போலநைந்து
பாதியுமை பங்கனை யிகழ்ந்தவவன் வேள்வியிற்
　　பல்லொழிந் துழலுமந்த

---

பாம்பு அளிக்கும் சிறந்த மணி. குவால் - குவியல். கத்துவாதம் - வீணுக்க் கூச்சலிடுகிற சொற்போர்.

௧. எண்ணிரண்டு - பதினாறு. எண்ணெண்கலை - அறுபத்து நான்கு கலை. மறு - குற்றம். மயலை - பெண் மோகத்தை. விடையுடைப்பாகன் - சிவபிரான். பொறையை - பொறுக்கப் பெறுதலை யுடையை. ௨. பை - பாம்பின் படம். பகுவாய் - பிளவுபட்ட வாய்.

வெய்யவன் றனையடைந் தென்பயன் மெய்குன்றி
விரையவிங் கெய்தவரினீ
விரிசிறைய வாரணச் சினையென்ன வேநின்னை
மிசையவரு பைங்கணரவம்
உய்யலற வோர்நிலச் சுமையரவை வாயலகி
னோடிக் கவர்ந்தெடுத்தே
யுதறுமொரு தோகைமயி றனையேவ வேதனுக்
கொருதுணைவ னயமுருகற்
கையனிவ னுரைசெய்வ னுதலா லுளமகிழ்ந்
தம்புலீ யாடவாவே
யருள்கசிந் தொழுகுவிழி யுடையசிவ ஞானியுட
னம்புலீ யாடவாவே. (௨)

கரியவண் டிமிர்குவளை யிகலியங் கயல்வென்று
காதளவு மோடிமீளுங்
கருநெடுங் கண்ணுடைய வொருமாது குழல்வெண்மை
கருமைசெய் திடுமிவற்குத்
திரியநின் மெய்யினிடை வருகருமை யினைவெண்மை
செய்வதரி தன்றுகண்டாய்
சிவமென்று முயிரென்றும் வேறுசெய் தகலாத
திமிரமா மலமகன்றே
இரியவருள் குடியிருக் கின்றவிழி மலர்திறந்
திணைமலர்ப் பதமுடியின்மே
லிருத்திமன மொழிகடந் துடனின்று குறிகுணமு
மின்றியரு மறைதனக்கும்
அரியபொரு டனையளிக் கினுமளிக் குவன்விரைந்
தம்புலீ யாடவாவே
யருள்கசிந் தொழுகுவிழி யுடையசிவ ஞானியுட
னம்புலீ யாடவாவே. (௩)

உந்துமா ரருள்பிறந் தெழுதரு மிவன்றிரு
வுள்ளத்து முனிவில்லையென்
றுன்னல்சிறு விதிமகத் துறுமமரர் தம்மையு
முன்றனையு மமர்குறித்து

---

பட்டு - அகப்பட்டு. இகழ்ந்தவன் - தக்கன். வெய்யவன் - கதிரவன். விரிசிறைய-விரிந்த சிறகுகளையுடைய. வாரணச்சினை-கோழி முட்டை. ௩. இமிர் - ஒலிக்கின்ற. இகலி - மாறுபட்டு. குழல் வெண்மை - கூந்தலின் நரை. கருமை செய்திடு - கருப்பாகச் செய்த. திமிரமா மலம் - மெய்யறிவை மறைக்கும் பெரிய ஆணவமலம். இரிய - ஓட. ௪. உந்தும்- செலுத்தும். உன்னல் - எண்ணாதே. சிறுவிதி மகம் -

வந்தமா மதனையுங் கன்புன றுளிப்பவே
மனமுருகி மெய்யன்பினுன்
மலர்கொண்டு பூசனை தொடங்குமொரு தொண்டன்மேல்
வஞ்சினங் கொண்டுவெம்பிச்
சிந்துமா ரழல்விழிப் பணைமருப் பெருமையிற்
சென்றகொடு மறலிதனையுஞ்
சிரமைந்தொ டைந்துடைய திரள்புயத் தெறுழ்வலித்
தீயனையு முன்வெகுண்ட
அந்தவா சனையிருப் பினுமிருக் குங்கடிதி
னம்புலீ யாடவாவே
யருள்கசிந் தொழுகுவிழி யுடையசிவ ஞானியுட
னம்புலீ யாடவாவே. (ரு)

நெடிமைகொண் டவிர்பவள வார்சடைக் கற்றையு
நெளிதிரைக் கங்கைநதியு
நெட்டுடற் கட்செவிப் பணியுமத னைத்தெறு
நெற்றிமிசை யொற்றைவிழியும்
கடிமைகொண் டிடுகவைக் கானெடும் பகடுந்து
காளமே கம்புரையுமோர்
காலனுயிர் கொண்டசெங் கமலமல ரடியின்மால்
கண்ணுநீ காணுமையால்
மடிமைகொண் டிங்கழைத் திடவுமொரு மனிதனென
வாரா திராதிகண்டாய்
வழங்குமுடல் பொருளாவி கைக்கொண்டு மருளாது
மனிதரைத் தன தருளினுல்
அடிமைகொண் டிடவந்த கள்ளவடி வினன்விரைந்
தம்புலீ யாடவாவே
யருள்கசிந் தொழுகுவிழி யுடையசிவ ஞானியுட
னம்புலீ யாடவாவே. (௬)

நறியமலர் விழிசிவந் துனைவருக வென்றில
னடந்ததங் ஙனமாயின்யா
நணுகவரு வாயென வழைத்தெதிர் விடுக்கில
நான்மலருன் முகமலர்ந்து
சிறியநகை யிளநில வெறிப்பவரு கென்றனன்
செயற்கைவடி விதுவன்றுதன்

---

தக்கன் வேள்வி. தொண்டன் - மார்க்கண்டன். எறுழ் வலித்தியன் - மிகுந்த ஆற்றலையுடைய இராவணன். ௫. நெட்டுடல் - நீண்டவுடல். மதனைத் தெறும் - காமனையழிக்கும். கடிமை - கடினத்தன்மை. காளமேகம்-நீருண்ட கரிய முகில். மடிமை-சோம்பற்றன்மை. ௬. தெருள் விலார் - தெளிவில்லாதவர்கள். தெருள்விக்கவோ - தெளிவடையச்

திருமுடி யணிந்திஃ தியற்கைவடி வெனமனத்
தெருள்விலார்த் தெருள்விக்கவோ
வறியவுரு வாமிரவி யெதிர்மழுக் குறுசிறுமை
மாற்றியொளி பெறவைப்பவோ
மாசுட றுடைப்பவோ குறைதவிர்த் தருளவோ
மனத்திவர் நினைத்தநினைவை
அறியகில மறியாமை யறவருளு குரவனுட
னம்புலீ யாடவாவே
யருள்கசிந் தொழுகுவிழி யுடையசிவ ஞானியுட
னம்புலீ யாடவாவே. (சு)

வேறு

ஏதி லார்களிகழ் காம நோயதுற வேற றங்கடை யுடையநா
மேது போவதென வேயி ராதிமுன மீறில் வெம்பவ மருவுமோர்
தீதி லுனினிற நாம லுமொருவன் ஞானி யங்கழல் செறியவே
தேறி நீவருதி யாலெ லுவினைக டிகொள் பஞ்சென வழியநால்
வேத மாமுடியி லுேது மோர்பொருளை மேனி யிந்திய முதலவாய்
மேவு பாதிகளை மோதி யோர்மொழியில் வேற றும்படி யுதவினுன்
ஆத லாலிவனு மோகை யாலருளு மாட வம்புலி வருகவே
யாசி லாதசிவ ஞான தேவனுட னுட வம்புலி வருகவே (எ)

வெயிலி லங்கிழை மாத ராடவர் விரக மொன்றுறு மவரெலாம்
விரியும் வெண்டிரை வேலை யூடெழ வெளிறும் வெங்கடு வெனவெழா
முயலி றந்தசை யாது தானுடன் முறுக வெந்துற வடலையான்
முழுகும் வெங்கன லாகு மாலென முனிய வுன்றனை யகலெனு
தயர்வு ளந்தரு காம நோய்கன வினும டைந்திட வறிகிலா
வமல நெஞ்சின னுத லாலிவன் வருக வென்றன னருவிதாழ்
மயிலை யங்கிரி யாளி யோடுற வருக வம்புலி வருகவே
மருவ ருஞ்சிவ ஞானி யோடுற வருக வம்புலி வருகவே. (அ)

முடிவ றுஞ்சக சீவ மாபர மெனம யங்குறு மயலெலா
முகைநெ கிழ்ந்தளி பாடு மாலையின் முதிர்சி னங்கொளு மரவுபோல்
நெடிய வன்றறி காணு மோர்மக னெனவ ழிந்தொரு பிரமமா
நிலையி னின்றிடு ஞானி யேவலி னெழுகி நின்றிடு மவர்கடாம்

---

செய்யவோ. மழுக்குறு - மழுங்குதலடையச் செய்கிற. அறியகிலம் - அறியவில்லை. எ. ஏதிலார்கள் - யாதுந் தொடர்பில்லாதவர்கள். தீ கொள் பஞ்சு - தீயினாற் பற்றப்பட்ட பஞ்சு. ஓகை - உவகை. அ. வெயில்இலங்கு இழை - ஒளி விளங்குகிற அணிகலன். விரகம் - காம நோய். வெங்கடு - கொடிய நஞ்சு. அமல நெஞ்சினன் - தூய மனமுடையவன். கூ. சகசீவம் - உலகுயிர். முகை நெகிழ்ந்த

ஒடிவ றும்பர போக மேவின ருணரு மங்கவர் நிலையிலே
யுறுவர் பின்பென வேத மோதிடு முரையு ணர்ந்தனை யலைகொலோ
மடிவு றுஞ்சிவ யோகி யோடுற வருக வம்புலி வருகவே
மருவ ருஞ்சிவ ஞானி யோடுற வருக வம்புலி வருகவே. (௯)

அகல்வி சும்பெழு பாய பேரிருள் பருகு செங்கதிர் வருகெனு
னமர ரென்றுயர் தேவர் தானவர் குரவர் தங்களை வருகெனுன்
முகம லர்ந்துனை யாட நீயிவண் வருக வென்றன னவன்வரு
முகிலு றங்குறு வான ளாவிய மயிலை யந்திரு மலையிலே
பகையெ னுங்கதிர் காலு மாமணி யரவ முண்டென வெருவனீ
பரனொ டொன்றிய நாக மாலிவர் பறவை கண்டுளம் வெருவுமோ
மகிழ்வு கொண்டெமை யாளி யோடுற வருக வம்புலி வருகவே
மருவ ருஞ்சிவ ஞானி யோடுற வருக வம்புலி வருகவே. (௧௦)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## அ. சிற்றிற் பருவம்

*[சிற்றில் என்பது சிறுமியர் மணலால் இழைக்குஞ் சிறு வீடு. சிறுவர்கள் இவ்வீட்டினைக் காலால் அழித்து விட்டு ஓடி விடுவது சிற்றிலழித்தலாகும். அவ்வாறு அழித்தல் வேண்டாம் என்று வேண்டிக் கொள்ளும் பருவம் இது. இது மூன்றும் ஆண்டில் நிகழ்வது.]*

கடியிற் சிலகஞ் சுகமனிதர் கல்வீழ் மணிநீர்க் குவளைமலர்க்
கயத்துப் பாசி யெனவொதுங்கிக் கடிதின் முன்ன ரெனநெருங்கிப்
படியிற் பணியக் கிடையாமற் பாம்பின் றலையிற் பெருஞ்சுமையைப்
பகைதீர்த் தொருசெங் கோலோச்சிப் பாது காக்கு முடிமன்னர்
தொடியிற் பொலிந்த கரங்கொண்டு துடைத்துத் துகடம் முடற் கணிந்து
சுடர்மா மணிப்பொன் மகுடத்திற் சுமப்பச் சிறந்த நினதுதிரு
அடியிற் புழுதி படும்வண்ண மடியேஞ் சிற்றி லழியேலே
யழியாக் கருணைச் சிவஞான வையா சிற்றி லழியேலே. (௧)

---

மொட்டு விரிந்து. ஒடிவறும் - கெடுதலில்லாத. ௧௦ பாய பேரிருள்-பரவிய மிகுந்த இருள். வருகஎனுன் - வருக என்று கூறமாட்டான். அரவம் - பாம்பு. வெருவல் - அஞ்சாதே.

௧. கடியில் - சினந்தால். கஞ்சுக மனிதர் - மெய்ப்பை அணிந்த மக்கள். கயம் - குளம். கடிது - விரைவாக. படி - நிலம். தொடி - வளை; வீரவளை. துகள் - தூள். மகுடம் - முடி.

அழிக்க வுளத்துக் கொண்டனையே லடங்கா தெழும்வெங் கொடுஞ்சினத்தை
யழிக்க கடலிற் பெருகியெழு மவாவை யழிக்க செருக்குளத்தை
அழிக்க விருளி னுய்த்திடுமோ ரழுக்கா றதனை மூலமற
வழிக்க காமப் பெரும்பிணியை யழிக்க கொலையை யஞ்சாமை
அழிக்க வினைகண் மூன்றனையு மழிக்க வழியு முடம்பதனை
யழியா தென்னுங் கருத்ததனை யழிக்க மூல மலவிருளை
அழிக்க புமுதி கொடுசமைத்த வடியேஞ் சிற்றி லழியேலே
யழியாக் கருணைச் சிவஞான வையா சிற்றி லழியேலே. (௨)

பழித்த வுலக முயிராதி பகவ னெனப்பே தித்தென்றும்
பாழ்செய் மூல மலவிருளைப் பதத்தா லழிக்குஞ் செயலன்றிச்
சுழித்த கடலி லரவணையிற் றுயில்வோ னளித்த மலரயனுற்
றேன்று முலக மழித்திடுமத் தொழிலும் புகழ்செய் யாதெனின்
இழித்த புன்சொற் புன்புலவ ரிசைத்துத் தாமே யழித்தலுறும்
யாப்பே போல விழைத்தளவில் யாமே யழித்து விடுமிதனை
அழித்த னினக்குப் புகழ்தருமோ வடியேஞ் சிற்றி லழியேலே
யழியாக் கருணைச் சிவஞான வையா சிற்றி லழியேலே. (௩)

போக்கு வரவு குறிகுணங்கள் புணர்தல் பிரித விரவுபகல்
புறமுள் ளகன்ற நிரஞ்சனமாய்ப் புகறற் கரிய வவாச்சியமாய்
நீக்கு முருவக் கலையாகி நிறைந்த வநாதி யாதியாய்
நிகரி லகர முதலனவாய் நின்று பலமந் திரமுநால்
வாக்கு மறையு மாகமமு மற்றுங் கலைகள் பற்பலவு
மண்ணும் புனலுங் கதழெரியும் வளியும் விசும்பும் பேருலகும்
ஆக்கும் விளையாட் டுடைக்குரிசி லடியேஞ் சிற்றி லழியேலே
யழியாக் கருணைச் சிவஞான வையா சிற்றி லழியேலே. (௪)

செங்கட் கமல மலர்த்தவிசிற் சிறந்து தனிவீற் றிருக்குமொரு
திசைமா முகற்குத் தொழில்படைத்த திகிரிப் படைவால் வளைசுமந்த
அங்கைக் கமல விழிக்கரிய வழகன் றனக்குத் தொழிலளித்த
லழித்த லெமக்குத் தொழிலென்னி லடுபோர்ப் பனைக்கைக் களிற்றுரியும்

௨. அழிக்க - துடைக்க; போக்க; கெடுக்க. இருள் - நிரயம். மூலம் - முதல்; வேர். மலவிருள் - ஆணவ மலவிருள். சமைத்த - செய்த. ௩. பழித்த - பழிக்கப்பட்ட. பேதித்து - மாறுபாட்டைச் செய்து. பதம் - திருவடி. அரவணை - பாம்புப்படுக்கை. யாப்பு - பாட்டு. இழைத்த அளவில் - கட்டியவுடனே. ௪. நிரஞ்சனம் - மறைப்பற்றது. வாச்சியம் - வாசகத்தால் அறியப்பெறும் பொருள். நால்வாக்கு - நால்வகையாகப் பிரித்துக் கூறப்பெறும் வாக்கு. கதழ் எரி - விரைந் தெரியுந் தீ. ௫. திகிரிப்படை - உருளைப்படை. வால்வளை - வெண் சங்கு. அழகன் - திருமால். அடுபோர் - போர் புரிகிற. பனைக்கை - பனைமரத்தைப் போலுந் துதிக்கை.

பைங்கட் பணியும் வேணிநெடும் பவளக் கொடியிற் றிரைதிரைத்துப்
பாயுங் கங்கைப் பெயர்யாறும் பணியத் தகுகூன் முதுகமுத
திங்கட் கொழுந்துங் காட்டென்பேஞ் சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சிகர மயிலைச் சிவஞான தேவா சிற்றில் சிதையேலே. (௬)

கொந்தார் மலரு நறும்புகையுங் கொண்டு நினையாந் தொழத்தக்க
குலதே வதையாய் வழிபட்டுக் குறித்துப் பணிதுஞ் செங்கரும்பே
நந்தா விளக்கே யமுதமே ஞான வடிவே நாயகமே
நாடும் பொருளே யென்றென்று நாளு நினையே பாடுதும்யாம்
வந்தார் தமது பிணிதீர்க்கு மருந் தாய்ப் பணியு மரசர்முடி
மணியா யெமக்கோர் பற்றாய வரிவண் டொழுகு மதுவுண்ணுஞ்
செந்தா மரைச்சே வடிநோவச் சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சிகர மயிலைச் சிவஞான தேவா சிற்றில் சிதையேலே. (௯)

வேறு

இற்றைமணல் கோலியிழி சொற்பொருளை வாளா
வெய்ப்பில்புல வோர்கவியெ னப்புகலு மாபோல்
உற்றொரோர்பெயர் கூறெமது சிற்றில்சிதை யேலே
யுய்த்தமொழி யோவல வெமக்கிறைவ னீயே
மற்றுமொரு தேவுள வெனக்கருதி லேமான்
மக்கள்பிணி யேயலது மற்றநள்செய் யாதே
செற்றறிகி லாவொருவ சிற்றில்சிதை யேலே
சிட்டசிவ ஞானமுனி சிற்றில்சிதை யேலே. (எ)

மெய்ப்படிம மேவியடி மைக்குரிமை யாராய்
மெய்ச்செயலி லாதவரு நற்றவரெ னுவோர்
பொய்ப்பெயர்கொள் வாரெனினு மெய்ப்பெயர ராயே
புக்குதவு நீயெமது சிற்றிலென வோர்பேர்
வைப்பவளி யாதிதையு மக்கடலை மீதே
வைக்குமடி யாலிவண ழித்தலற மாமோ
செப்பரிய வாய்மையிறை சிற்றில்சிதை யேலே
சிட்டசிவ ஞானமுனி சிற்றில்சிதை யேலே. (அ)

---

வேணி - சடை. திரை திரைத்து - அலைவீசி. ௯. கொந்து-கொத்து. பணிதும் - பணிகின்றோம். நந்தாவிளக்கு - ஒளி குறையாத விளக்கு. ஒழுகு - வரிசை. எ. மணல்கோலி - மணலை வளைத்து. பொருள்நய மில்லாத சொற்களைத் தொகுத்துச் சேர்த்து நுண்ணறிவிலார் செய்யுள் என்று கூறுமாறு போல, மணலைக் கூட்டி வரம்பு வகுத்துப் புனைந்த சிறு வீடு சிற்றில் என்று கூறப்படுகிறது. தே-தெய்வம். செற்று அறி கிலா-வருத்தியறியாத. ஒருவ-ஒப்பற்றவனே. அ. படிமம்-வடிவம். நற்றவர் - நல்ல தவத்தையுடையவர். புக்குதவும் - புகுந்து உதவி செய்யும்.

ஒற்கவிர வோர்களிலெ னப்புகல்வ தேநீ
    யுற்றொருவர் பாலுமுளை வுற்றுரைசெய் யாதே
நிற்கநனி யீகைவினை பெற்றிடுகை யாலே
    நித்தமது கோறனினி யற்கைநின தார்சீர்
கற்குமடி யேமிரவ கற்றிலெனு மீதுங்
    கைத்தடியி னுலிவண ழித்தறது மோகாண்
சிற்கனசி வானுபவ சிற்றில்சிதை யேலே
    சிட்டசிவ ஞானமுனி சிற்றில்சிதை யேலே. (௯)

மொய்த்தபுழு வாகமுயிர் புத்திமன மாயா
    முற்றுமற வேமறைமு டிக்குமணி யாமா
தத்தொமசி யாகியப தப்பொருளி னுலே
    தக்கசிவ னீயெனவு ணர்த்தியது தானு
வைத்தநின தாள்படுமி துற்றடிமை யாவே
    மைக்கண்மணி யூடுபடு தற்குநிக ராமே
சித்திகள் வழாவொருவ சிற்றில்சிதை யேலே
    சிட்டசிவ ஞானமுனி சிற்றில்சிதை யேலே. (௧௦)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

## ௯. சிறுபறைப் பருவம்

[சிறிய ஒலிக் கருவியை அடித்து முழக்கி விளையாடும் பருவம். இது நான்காமாண்டில் நிகழ்வது. ஆண்டினைக் குறையக் கூறுவாரும் உளர்.]

குன்றவரி சிலைகொண்ட வெம்முடைய நல்லருட்
    குன்றமே தெய்வ மென்றுங்
  குறுகுமவ னடியவர் குழாத்தினுட் புகுவதே
    கூறரிய வீட தென்றும்
மன்றுளுமை கண்குளிர நின்றுநட நவிலுமொரு
    வள்ளறிரு வஞ்செ ழுத்தே
  மந்திரம தென்றும்விட யப்பகை பொறுப்பதே
    வலியென்று முள்ள படியே

---

௯. ஒற்க இரவோர் - வறுமையை உடைய இரவலர்கள். ஈகை வினை - கொடுக்குஞ் செயல். சிற்கன - எல்லாவற்றையும் அறியும் பெருமை பொருந்திய. ௧௦. தத்தொமசி - அது நீயாகவிருக்கிறாய் என்னும் மகா வாக்கியப் பொருள். கண்மணி - சிவகண்மணி.

௧. குன்றம் - மலை. வரிசிலை-வரிந்து கட்டப்பட்ட வில். குழாம்-கூட்டம். மன்று - அம்பலம். விடயப் பகை - காமப்பகை. ஒறுப்பது-

நின்றுதனை மயலின்றி யுணர்கின்ற வுணர்வதே
நிலையான வுணர்வ தென்று
நெஞ்சினிறை யழியவெரு ளிக்கடுங் கனலெழா
நிலையதே தவம தென்றுஞ்
சென்றுவினை பொடியாக வருள்செயருண் மேகமே
சிறுபறை முழக்கி யருளே
சிவநெறி தழைக்கவரு சிவஞான தேவனே
சிறுபறை முழக்கி யருளே. (௧)

வந்துபிற கடவுளர்க டமையுரைத் துமைகாண
மணிமன்று ணடமாடுமா
மணியையிகழ் பரசமய நிலைகுலைய வென்றறையும்
வன்றிறற் பறைய தென்னச்
சித்தைகவ ருந்துயர் விளைத்துவரு காமமொடு
சினமென்னும் வெம்புலிக்குந்
தீராத வாணவப் பேரிருட் குந்தனி தெழிக்குநெய்
தற்பறை யென
நந்தலரு மறிவென்னு மோரிளங் கன்னியை
ஞானவடி வான பிரம
நன்மணம் புணர்கின்ற மங்கலப் பறையென்ன
நற்றவக் குன்ற மேநீ
செந்தளிரி னெழில்வென்ற நின்றிருக் கையினாற்
சிறுபறை முழக்கி யருளே
சிவநெறி தழைக்கவரு சிவஞான தேவனே
சிறுபறை முழக்கி யருளே. (௨)

கருவிளைக் கின்றசிற் சிலமொழி பகர்ந்துசில
கடவுளரை யிறைவ ரென்று
கண்டியொடு வெளியதிரு நீறிழந் திருள்பருகு
கனலு முயர் வானகத்தின்
இருவிளக் குந்திகழும் விழியான வெம்மிறையை
யிகழ்புறச் சமயர் தங்க
ளிருகவுளி னுங்கடிதி னறைவதென வெற்றிவே
லிறைமயிலை வெற்பின் முடிமேல்

---

அடக்கி யொடுக்குவது. நெஞ்சின் நிறை - உள்ளத்தின் பக்குவத் தன்மை. ௨. நடமாடும் - திருக்கூத்தியற்றும். வன்திறல் - மிகு வலிமை. தெழிக்கும் - ஒலிக்கும். நந்தலருமறிவு - அஞ்ஞானத்தாற் கெடுதலிலாத மெய்யுணர்வு. செந்தளிர் - சிவந்த தளிர். ௩. கரு விளைக்கின்ற - பிறவியை உண்டாக்குகிற. கண்டி - சிவகண் மணிமாலை. வானகத்தின் இருவிளக்கு - பரிதிமதியாகிய இருசுடர். வெளிய - வெண்மையான. கவுள் - கன்னம். திகழ்பவா - விளங்கு

ஒருவிளக் கெனநின்று திகழ்பவா செம்மணிக
ளொளிர்பணு முடியனந்த
வுரகமென் றிடுபெயர்த் தண்டின்மிசை நிலமென்னு
மோரகலின் மெய்த்தபுகழாந்
திருவிளக் கிட்டுவைத் திடவல்ல வித்தகா
சிறுபறை முழக்கியருளே
சிவநெறி தழைக்கவரு சிவஞான தேவனே
சிறுபறை முழக்கியருளே. (௧)

வார்மணி முலைக்கருங் கயனெடுங் கட்பவள
வாய்மலர்க் குழன்மங்கையர்
மலரடிக் கணிசிலம் பரிமணி முழக்கமும்
மதமழை விடாதுசொரியுங்
கார்மணி முழக்கமுங் குணில்பொரு பெரும்பணைக்
கடன்முழக் கமும்வீரர்தங்
கழலொலி முழக்கமுஞ் செங்குதலை வாய்மகார்
கட்டுகிண் கிணிமுழக்குந்
தார்மணி முழக்கமொடு வருபரி முழக்கமுந்
தருமசாலைகண் முழக்குஞ்
சதுர்மறை முழக்கமுஞ் செந்தமிழ் முழக்கமுந்
தமனியத் திருமறுகுலாந்
தேர்மணி முழக்கமுங் கிளர்கச்சி நகராளி
சிறுபறை முழக்கியருளே
சிவநெறி தழைக்கவரு சிவஞான தேவனே
சிறுபறை முழக்கியருளே. (௨)

நரம்புதிர மென்புதோன் மூளைதசை பலகூடி
நரியுமடி செவியசுருள்வா
ளுயுநெட் டலகுவிரி சிறகர்வன் கழுகுமிது
நமதென்ன வந்தவுடலும்
நிரம்புதுயர் செய்தடங் காதுழன் றொழியாத
நிரயத் தழுத்துபுலனு
நெறிமருண் டலமந்து திரிகின்ற புன்மனமு
நில்லா தியங்குமுயிரும்

---

பவனே! அனந்த உரகம் - ஆதிசேடனென்னும் பாம்பு. மெய்த்தபுகழ்- உண்மையாக விளங்கும் புகழ். ௨. வார் - கச்சு. சிலம்பு அரி மணி - சிலம்பினுள் ஒலியுண்டாக இடப்படும் மாணிக்கமணி முதலியன. முழக்கம்-ஒலி. குணில்பொரு-தடியாலடித்து உண்டாக்கப் பெறுகிற. மகார் - சிறுவர்கள். தமனியம் - பொன். ௩. மடிசெவி - மடிந்து தொங்குங்காது. நிரம்பு துயர்-மிகுந்த துன்பம். நெறி மருண்டு - வழி

பரம்புபற் ப்லவாய குணமுமல னென்றுபோய்ப்
பாசநிலை குலையநின்ற
படியிலெனை யறிதலே நினையறித லாகவிரு
பதமுமென் முடியில்வைத்துத்
திரும்புத லிலாதவொரு பதமுதவு கொடையாளி
சிறுபறை முழக்கியருளே
சிவநெறி தழைக்கவரு சிவஞான தேவனே
சிறுபறை முழக்கியருளே. (௫)

## வேறு

அரிமதர் மழைக்கண் வளர்வா ரவிரறன் மருட்டு குழல்வா
ணணிமதி கவற்று நுதல்வே யனவொளிர் மணித்தொ டியதோள்
வரியளி மிடிக்கு மிடியா மதுமடை திறக்கு மலர்வாண்
மதிமுக மலர்க்கு முதம்வீழ் மணியிதழ் வளைத்த சிலைதாழ்
முரிபுருவ முத்து நகைநேர் முகிழ்முலை வளைக்கை மடவார்
முதிர்படை யெழுச்சி மதவேண் முரசதிர் முழக்க மறவே
திரிவறு தவத்த ரசநீ சிறுபறை முழக்கி யருளே
சிவமுனிவ கச்சி நகராய் சிறுபறை முழக்கி யருளே. (௬)

பழுதிறலை மைக்கு மணியே படுபறை முழக்கு மதுநீ
பணியென வெனைத்து நினையேல் பனைபுரை புழைக்கை யுழல்வான்
மழைமத மொழுக்கு கவுளுல் வளைபிறை மருப்பு வரைமேல்
வருமரச னுக்கு நிறையா மதுவுறை பிலிற்று மளிவாய்
உழுமல ரயற்கு மலரா ளுயிரெனு மவற்கு மிறையா
மொருமுத லடிக்கு வதனு லொருகுறை படைத்த துளதோ
செழுமுகில் கவற்று கொடையாய் சிறுபறை முழக்கி யருளே
சிவமுனிவ கச்சி நகராய் சிறுபறை முழக்கி யருளே. (௭)

மறியும்வளி யைச்சு ழலையாம் வழியுற வியக்கி மணியாழ்
வளரிசை மடுக்க நினைவார் மனவிழைவி னெட்டு மடியாய்
எறியுநின் மலர்க்கை யதனு லெழுபறை முழக்க மடியே
மிருசெவி மடுக்க விழைவே மிகல்கரி முறிக்க வளையா

---

தவறி. அலமந்து - சுழன்று. திரும்புதல் இலாத பதம் - வீடுபேறு. ௬. அரிமதர் மழைக்கண்-வரி பொருந்திய களிப்பினையுடைய குளிர்ந்த கண்கள். அறல் மருட்டு குழல் - கருமணலையும் மருளச் செய்கிற கூந்தல். வேய் - மூங்கில். முரி - வளைந்த. திரிவு அறு - மாறுபடுதல் இல்லாத. ௭. பனைபுரை புழைக்கை - பனைமரம் போன்ற துளை யுடைய தும்பிக்கை. பிலிற்றும் - வெளிப்படுத்தும். எனைத்தும் - சிறிதும். உறை - துளி. ௮. வளி - காற்று. மடுக்க - நுகர்ந்து மகிழ.

முறியுமலர் மொய்த்த விணர்வீ முரலளி மறித்து மருளான்
முறியிடை மறத்தி யர்கடாழ் முடிசெருகு கொத்தி னிடையே
செறியுமயி லேக்கி ரியுளாய் சிறுபறை முழக்கி யருளே
சிவமுனிவ கச்சி நகராய் சிறுபறை முழக்கி யருளே. (அ)

பகழிபுரை மைக்க ணளிவீழ் பனிமலர் முடித்த குழல்வார்
படுமுகிழ் முலைத்தி ருவொடே பனிமதி நிறக்கொ டியனுள்
புகழ்வரை தவத்தின வருமோர் புதல்விசெவி யிற்ப ருகுபால்
புரையுமழ லைச்சொன் மணிவாய் புகலவவள் கட்கி னியனாய்
மகிழ்மக வினுக்க மையுமா மணியணி யுறுப்பு றவுலாய்
வருமரு மகத்த னிமைபோ யொழிய்மணி முத்த ருவிதாழ்
திகழுமயி லைக்க ணுறுவாய் சிறுபறை முழக்கி யருளே
சிவமுனிவ கச்சி நகராய் சிறுபறை முழக்கி யருளே. (௯)

உரைசெயு மெவற்று மெனைநேர் வுறநகர் கனத்த திலையா
லெனவுல கமிழ்த்து கடைநா ளொலிகடன் மிதக்கு நகர்வாழ்
அருள்வடிவ வொப்பி லுமையா ளணிமுலை கறக்கு மருளா
ரமுதமுண மிக்க விழைவா லமுதகுழ விக்கு நிகராய்
வருநக ரனைத்தும் வனையா மழையிய முழக்கி யெதிர்வார்
வரவர விருப்ப முறுமூர் தொறுமலி தவத்த ருடனே
திருவடி வருத்தி வருவாய் சிறுபறை முழக்கி யருளே
சிவமுனிவ கச்சி நகராய் சிறுபறை முழக்கி யருளே. (௧௦)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

---

## ௧௦. சிறுதேர்ப் பருவம்

[சிறுதேர் உருட்டி விளையாடுதலைக் கூறும் பருவம். இது நான்காமாண்டில் நிகழ்வதெனச் சிலரும் ஐந்தாம் ஆண்டில் நிகழ்வதெனச் சிலரும் கூறுப.]

அருவடிவ மாகிமன மொழிகடந் துயர்பிரம
மங்கையினு நெஞ்சகத்து
மணுகிவன் சிறைக்கொடியி னிருவிழிக் கொருமணி
யமர்ந்ததென நின்றநிலையைக்

---

இணர் - பூங்கொத்து. முரல் - ஒலிக்கின்ற. முறியிடை - முறிந்து போகும்படியான இடை. ௯. பகழிபுரை-கணையை ஒத்த. மைக்கண்-மை தீட்டப்பெற்ற கண். ௧௦. மிதக்கும் நகர் - சீகாழி அமுத குழவி - திருஞான சம்பந்தர். மழை இயம் - மழையைப்போல் முழங்கும் ஒலிக்கருவி. எதிர்வார்-எதிர்கொள்வார். வருத்தி-வருந்துமாறு.
௧. சிறைக்கொடி - சிறையினையுடைய காக்கை. புன்தலை-இழிந்த

குருவடிவு கொண்டுணர்த் துறுகுணக் குன்றமே
கோடிமா தவர்குறுகியே
குற்றேவல் செய்தரு கிருந்துநின் றிருவுளக்
குறிப்பின்வழி யொழுகிநிற்பக்
கருவடிவ நிலையென்று செய்யாத கொலைகளவு
கட்காம மேபயிலும்வெங்
கயவர்தமை யுறவுகொண் டொழியாத வென்றனைக்
கடிதினரு குறவழைத்துத்
திருவடிகள் புன்றலைக் கணிசெய்த வருளாள
சிறுதே ருருட்டியருளே
சிவசமய குலதிலக சிவஞான மாமுனிவ
சிறுதே ருருட்டியருளே. (க)

தகரமலர் வார்குழற் பவளவாய் மடமாதர்
தடநெடுங் கண்களென்னத்
தாவுமறி கிடைகிடந் திடுபெருங் கொல்லையைத்
தண்டிரை சுருட்டியெறியும்
மகரமனை யுண்டதிர்த் தெழுகமஞ் சூன்மழை
மாரியென வந்துபிளிறும்
வளைமருப் புழல்செவிப் புகர்முகச் சிறுகணல்
வலிவேழ மதநனைப்பப்
பகரலரு மெறுழ்வலிப் பிறைமருப் பொருகரும்
பன்றியது கண்டுசெவ்விப்
பதமென்ன வுழவண்ட முகடுதொடு நெடியமுதிர்
பணைதரள விதைவிதைக்குஞ்
சிகரமணி மயிலைமலை முருகனுட னமருமிறை
சிறுதே ருருட்டியருளே
சிவசமய குலதிலக சிவஞான மாமுனிவ
சிறுதே ருருட்டியருளே. (உ)

யாவர்யா வருமெழுங் கனவிருள் விழுங்குமோ
ரிரவியைத் தத்தமக்கிங்
கெதிரென்று புகல்கின்ற தென்னவிவ் வுலகில்வரும்
யாவருந் தத்தமக்கு
மேவுமா ரருளுடைய னென்னவரு மவிரோதி
விரிசுடர் விளக்கொன்றுதான்
விழையவொரு கம்பத்து மிசையிருந் தகமெலாம்
விரிகதிர் பரப்புமதுபோல்

---

தலை. உ. தகரம் - மயிர்ச் சாந்து. மகரமனை - கடல். கமஞ்சூன் மழை - நிறை கருப்பங் கொண்ட முகில். புகர்முகம் - புள்ளிகளை யுடைய முகம். எறுழ்வலி - மிகுந்த ஆற்றல். ௩. கனவிருள் -

ஒவிலா வண்புகழ்க் கதிரொளியை வெண்டிரைய
வோதையங் கடலுடுத்த
வுலகெலா மொருமயிலே வரையிருந் தொளிர்விக்கு
மொருவமா முதறடிந்த
தேவர்சே னுபதியோ டுற்றிருந் தெனையாளி
சிறுதே ருருட்டியருளே
சிவசமய குலதிலக சிவஞான மாமுனிவ
சிறுதே ருருட்டியருளே. (கூ)

போரொன்று வஞ்சமன வெஞ்சொற் கொடுந்தகுவர்
புரமொன் றிரண்டுமொருதன்
பொருவென்ற வஞ்செழுத் தோதுமவர் வினைநிலைமை
போல்வதற் கேகுமருளால்
வாரொன்று குங்குமக் கொங்கையந் திருமாது
மனையடைத் துந்திறந்தும்
வந்துலா வருமிரண் டாழியும் பொய்யாத
வாய்மைநன் னெறியந்தணர்
நேரொன்று நெஞ்சவஞ் சாலைதனி லகலாது
நிற்குமா வீரிரண்டு
நிரையிதழ்த் தாமரைத் தவிசினுறை யொருபாகு
நிகழ்வுற்று மேவுறுபெருந்
தேரொன்று கொண்டவிறை யுளமகிழ வெம்மைய
சிறுதே ருருட்டியருளே
சிவசமய குலதிலக சிவஞான மாமுனிவ
சிறுதே ருருட்டியருளே. (௬)

குன்றலரு மருளாள னென்றமொழி நிற்குறிக்
கொண்டுசெல் கின்றதெனவுங்
குறித்தொருவர் பாலென்ற வளவிலம் மொழிசென்று
கோவமுதி னேர்தலெனவும்
நன்றினிய பழமென்ற வளவினெட் டிலைவாழை
நற்கனியி னெய்தலெனவு
நாடரும் பிள்ளையென் கின்றமொழி யாண்மகவி
னண்ணுமா றெனவ்மீசன்

பேரிருள். ஓவிலா - ஒழிதலில்லாத. மாமுதல் தடிந்த - மாமர வடிவமாக நின்ற சூரபன்மனைக்கொன்ற. கம்பம் - விளக்குத்தண்டு. அகமெலாம் - வீடு முழுவதும். ௬. போர் ஒன்று - போர் செய்யுந் தன்மை பொருந்திய. கொடுந்தகுவர் - கொடிய அசுரர். ௫. அருளாளன் - திருவருட் பெருக்கையுடையவன். நின்குறிக் கொண்டு செல் கின்றது - நினக்கே பொருந்துவதெனக் குறித்துக் கொண்டு நிற்கின்றது

என்றளவின் விடமெழுந் திடநடு நடுங்கிநிலை
யின்றியிரி தருதேவரை
யெய்தாமன் மணிகண் டனைப்பொருந் துதலெனவு
மிவணகர மென்பதுதனைச்
சென்றடையு மொருபெருங் கச்சிநக ராளிநீ
சிறுதே ருருட்டியருளே
சிவசமய குலதிலக சிவஞான மாமுனிவ
சிறுதே ருருட்டியருளே. (௭)

வேறு

கருத்திற் காண்குறு நாடிகண் மூன்றையுங்
கண்டுநன் னடுநாடி
கலந்தி யங்குறு முயிர்க்கழி விலையெனக்
காட்டிநோ யினர்நெஞ்சத்
திருத்திக் கைப்புவிட் டருமறைப் பாலொடு
தீநிறப் பெருமுக்கட்
டஞ்சு வைக்கனி தன்னையுட் கொள்கெனத்
தெருட்டுபு முனங்கூட்டு
மருத்துப் பையினைச் சோதித்து வொண்பொடி
மருந்தெடுத் துடல்பூசி
மணிய ணிந்தரு ளஞ்செழுத் தாகிய
மந்திரம் பிறழாமல்
உரைத்திட் டோம்புறும் பவப்பிணி மருத்துவ
னுருட்டுக சிறுதேரே
யுலக வாஞ்சிவ ஞானமா முனிவர
னுருட்டுக சிறுதேரே. (௮)

வண்ட மிழ்ப்பெரும் புலவர்தஞ் செய்யுளின்
வழுப்படாச் சொல்லோடும்
வழுவ மைத்தசொற் புணர்த்திடு மாறென
வயங்கிள மதிசூடி
தொண்டு பட்டிடு மயறபு நன்னெறித்
தொழும்பின ரொடுகூடச்
சுளிவு றுதடி யேன்றனைத் தழுவியே
தொல்லிசைப் புலவோர்தம்

---

இரிதரு - அஞ்சியோடுகிற. மணிகண்டன் - நீலமணிபோன்ற கரிய கழுத்தையுடையவன். ௮. நாடிகள் மூன்று - வாதநாடி, பித்த நாடி, சிலேத்தும நாடி. கைப்பு - கசப்பு. தெருட்டுபு - தெளிவித்து. ஒண் பொடி மருந்து - திருநீறு. மணி - சிவகண்மணி. ஓம்புறும் - பாது காக்கும். ௯. மயல்தபு-மயலைப் போக்கிய. தொழும்பினர்-தொண்டர்

தண்ட மிழ்த்தொடை புணர்க்கிலா முழுவழுத்
தாழ்ந்தபுன் சொற்போலச்
சங்க ரன்றிருத் தொண்டில்வேற் றுலகரைச்
சார்வற வரைந்திட்ட
ஒண்ட ரைத்தனி முகமெனுங் கச்சிய
னுருட்டுக சிறுதேரே
யுலக வாஞ்சிவ ஞானமா முனிவர
னுருட்டுக சிறுதேரே. (௭)

வம்பு லாமலர்ப் பொழிலிடை யுடைந்துகு
மாங்கனிச் சாறோடும்
வண்டு முங்கடி மலர்முறுக் கவிழ்ந்துபெய்
மதுப்பெயர்ப் பெருவெள்ளம்
அம்பொன் மாமணிப் பூணிள முகிண்முலை
யரிமதர் மழைக்கட்கே
ழரிச்சி லம்படி மாதரோ டெழின்மத
னுடுறு முதிர்வேனில்
பம்பு வான்றிரை யாணர்த்தண் புனலெனப்
பாய்ந்துபா லியாற்றோடி
பரவை தன்கரு நிறந்தரிந் துப்பறப்
பரந்துறும் விழவானும்
உம்பர் போற்றிசெய் காஞ்சிமா நகரின
னுருட்டுக சிறுதேரே
யுலக வாஞ்சிவ ஞானமா முனிவர
னுருட்டுக சிறுதேரே. (௮)

திலக வாணுதற் பவளவாய் மலைமக
டிரண்முலைத் தடந்தோயுஞ்
செஞ்ச டைப்பெரு மான்விளை யாட்டயர்
செழுமலர்ப் பொழிற்கூடல்
பலகை மீதுமுன் னுயர்த்துள செந்தமிழ்ப்
பழமலர்த் தொடைவீழ்ந்து
படிந்தெ ழாதிருந் துறுபொருட் சுவைநறுப்
பருகுறு பெருங்கல்விப்
புலவர் தூய்மன மெனுமகளி வண்டினம்
புக்கிருந் தொருங்குண்ணப்

---

சுளிவு - முகஞ்சுளித்தல். முழுவழுத் தாழ்ந்த - பெருந்தவறு மிகுந்த. ௮ வம்பு - மணம். உகும் - வழியும். உழும் - கிண்டும். கேழ் அரிச்சிலம்பு - நிறம் பொருந்திய பருக்கைக் கல். பம்புவான் திரை - மிகுந்த நீர்த்திரை. பரவை - கடல். உம்பர் - தேவர். ௯. விளையாட்டயர் - அறுபத்து மூன்று திருவிளையாடல்களைச் செய்தருளிய. பலகை - சங்கப்பலகை. சுவைநறு - சுவை பொருந்திய தேன்.

புனைந்த விக்கொடுந் தமிழ்ப்புகர்ச் செம்மொழிப்
புதுமலர்த் தொடையாரம்
உலகெலாம்புகழ் திண்புயத் தணிபவ
னுருட்டுக சிறுதேரே
யுலக வாஞ்சிவ ஞானமா முனிவர
னுருட்டுக சிறுதேரே. (௯)

வந்து நம்புகழ் பாடுநர் தகைமையெலா
மருவுடம் பிறுதிக்கண்
மாசற் றெங்கணு நிறைசிவ மாக்கியே
வைத்திடுஞ் செயலன்றி
நந்து கின்றவோர் பதத்தினுண் மறுமையி
னணுகுறும் படியுய்த்த
னமக்க டாதென விம்மையே வண்டிமிர்
நனைகவுட் பகையாற்றல்
சிந்தும் வன்மருப் பெறும்வலிப் புகர்முகச்
சிறுவிழிப் பெருவேழச்
செல்வ விந்திர னுக்குத வுடையவண்
செழுமணித் தாளங்கள்
உந்தும் வெள்ளரு வித்திரு மயிலைய
னுருட்டுக சிறுதேரே
யுலக வாஞ்சிவ ஞானமா முனிவர
னுருட்டுக சிறுதேரே. (௧0)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

சிவஞானபாலைய சுவாமிகள் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

புனைந்த - கட்டிய. தொடையாரம் - மாலையாகிய அணிகலம். ௧0. நந்துகின்ற-கெடுகின்ற. நணுகுறும்படி - அடையுமாறு. வண்டு இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற. நனைகவுள்-மதத்தால் நனைந்த கன்னம். பெருவேழம் - ஐராவத யானை.

## உ௨. சிவஞானபாலைய சுவாமிகள் கலம்பகம்

[கலம்பகத்தின் இலக்கணம் முன்பு உரைக்கப்பட்டது. இக்கலம்பகம் சொன்னயம் பொருணயம் முதலிய பலவகையான நயங்களையுந் தன்னகத்தே கொண்டு சிறந்து விளங்குகின்றது.]

### காப்பு

*நேரிசைவெண்பா*

சித்திதருங் கச்சிச் சிவஞான தேசிகன்மேல்
பத்திதரும் பல்வகைய பாட்டுதவும்—அத்தி
அலங்கலா வானை யடுத்தபிடி யீன்ற
விலங்கலா வானை விரைந்து.

*மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா*

நீர்தாங்கு சடாமவுலி நெடுங்கையிலைக் கிரியாகப்
பார்தாங்கு வரையெல்லாம் பனிக்கலைவெண் மதியாகக்
காய்கதிர்மான் றேரிரவி கடலமுதந் தானாகப்
பாய்திரைவார் கடல்யாவும் பண்ணவர்கோன் பகடாக
ஞாலத்த களிறனைத்து நகைமணிப்பாம் பிறையாக
ஆலத்த பணிமுழுது மாக்குபெரும் புகழுடையோய் !

*இது ஆறடித்தரவு*

தன்னிலையு மெதிர்காட்டாத் தமமாகு மாணவநோய்
நின்னையல தெஞ்ஞான்று நீங்குவது தானன்றே
துன்னிருள்வாய் முழங்குதிரைச் சுருட்டுகடன் முகட்டெழுந்த
மன்னுகதி ரவலன்றி மற்றொன்றுன் மாயுமோ.

தத்துவமாந் திரையெழுந்த தனிமாயைப் பெருங்கடலுன்
மெய்த்ததாட் புணையன்றி வேறொன்றாற் கடப்பரிதே
மைத்திரைவார் கடலியன்ற மரக்கலங்கொண் டன்றுபோய்
இத்தரைவாழ் மனிதர்கடந் தேறுவதற் கொன்றுண்டோ.

---

(காப்பு) *அத்தி அலங்கல் - ஆத்திமாலை. விலங்கு அலா ஆனை - விலங்கு அல்லாத ஆனைமுகக் கடவுள்.*

க. *பண்ணவர்கோன்பகடு - இந்திரனுடைய வெள்ளை யானை. ஆலத்த-நஞ்சையுடைய. பணி-பாம்பு. தமம்-கீழ்ப்பட்டது. முகடு - உச்சி. மெய்த்த - மெய்ம்மைத் தன்மை பொருந்திய. புணை - மரக்கலம்.*

பழியிலா வறங்கள்பல பயின்றாலு முன்றிருவாய்
மொழியினா லன்றிவான் முத்திநிலை கிடையாதே
விழியினா லலதுலகின் மேவுருப் பிறிதுபொறி
வழியினா லெதிர்காணு மனிதர்தா முளர்கொலோ.

இவை மூன்றும் நான்கடித்தாழிசை

கொடுமிடி கெடவரு கொடைபடு நடையினை
சடையொடு நதிபணி தவழ்மதி யொருவினை.
மறையமறை முறையற மறமற வருளினை
பொறிநெறி மறுகுறு புலனிலை யலகிலை.
அரிகரி பகையிகு மணிமணி மயிலையை
வரியரி மதர்விழி மலைமக ணகரினை.

இவை மூன்றும் ஈரடியராகம்

முன்னாளி லொருஞான முனையயின்ற வாரமுதம்
எந்நாளு முண்கின்றா யாரேநின் னளவறிவார்.
நவத்தமிழ்வே தம்புகலு நன்மொழியிங் குண்மைபெறத்
தவத்தொடுதா னஞ்செயுமோர் தன்மையுனக் கலதுண்டோ.
மெய்யிலே பொய்தோன்றி மெய்யாக மயக்குறுமப்
பொய்யிலே பொய்தோன்றப் புகலுமுனைப் புகல்வார்யார்.
இருப்பம்பு பட்டுருவ வெய்தாலுந் தளராமல்
கருப்பம்பு படாவண்ணங் காப்பவர்க்குத் துணைநீயே.
கருமேனி யொழிந்தடியேங் கதிகாண நீயருளால்
திருமேனி கொண்டிருந்து செய்ந்நன்றி மறப்பேமோ.
தவப்பிணிக்கு மூலமலந் தான்மூல மாய்க்கிளைக்கும்
பவப்பிணிக்கு மருந்துனது பார்வையே தானன்றோ.

இவையாறும் ஈரடித்தாழிசை

வாத மாற்று நீ, போத மாற்று நீ,
வாய்மை யாக்கு நீ, தீமை போக்கு நீ.

இவை நான்கும் முச்சீரோரடியம்போதரங்கம்

---

பயின்றாலும் - வழக்கமாகச் செய்தாலும். பிறிது பொறி - வேறு வழி. மிடி - வறுமை. நதி, பணி தவழ்மதி ஒருவினை - ஆறு, பாம்பு, திங்கள்கள் ஆகியவைகளை நீக்கிவிட்டாய். பொறிநெறி - புலன் வழி. மறுகுறு - வருத்தத்தையடையும், அரிகரி பகையிகு - சிங்கமும் யானையும் பகை நீங்கியிருக்கும். மதர் விழி - களிப்புப் பொருந்திய கண்கள். ஞானமுனை - திருஞானசம்பந்தர். அயின்ற - உண்ட. ஆரமுதம் - ஞானப்பால். இருப்பு அம்பு - இரும்பினாலாகிய கணை. கருப்ப அம்பு - கருப்பமாகிய வருத்தத்தைச் செய்யும் அம்பு. கருமேனி - கருப்பத்திலேவரும் உடல். வசை - பழிப்பு. மறம் இரித்

வசைகெ டுத்தனை, இசைகொ டுத்தனை,
செயலொ ழித்தனை, மயல ழித்தனை,
யறம்வி ரித்தனை, மறமி ரித்தனை,
விழைவ றுத்தனை. பிழைபொ றுத்தனை.

இவையெட்டும் இருசீரோரடியம்போதரங்கம்

எனவாங்கு

இதுதனிச்சொல்

நாவலர் புகழ்சிவ ஞான தேசிக
எவ்வ மகன்ற சைவ நாயக
நின்னடிக் கமல நெஞ்சுற விருத்தி
நறுமலர் தூவி நாடொறும் பரவுதூஉம்
செல்வச் செருக்கிற் செவிடுபட் டிருக்கும்
காதிற் றீம்பால் கமர்கவிழ்த் தாங்கு
பாப்பல பன்முறை பாடிநின்னைப்
பாடா மாந்தர் பக்கல்
கூடா வடியரிற் கூட்டுக வெனவே. (க)

இது ஒன்பதடி நேரிசையாசிரியச்சுரிதகம்

நேரிசைவெண்பா

வேவ மலரும் விழிகரந்த நின்னைமதன்
தேவ சிவஞான தேசிகா—மேவிலனென்
உள்ள மறிந்த வொருநின் றிருமேனிக்
கள்ள மறிந்தனனென் கண்டு. (உ)

கட்டளைக்கலித்துறை

கண்டே னறிவெனு மொண்சுட ரேற்றிக் கருத்தகன்மெய்த்
தண்டேயு மன்புநெய் பெய்துபொய் வாதந் தடுத்தொளிரக்
கொண்டே மலவிரு ளெல்லாந் துரந்தெங் குடிமுழுதுந்
தொண்டே யெனுமெய்ச் சிவஞான தேவன் றுணையடியே. (௩)

பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அடிமலர் சிவப்ப நடந்துள முனிந்த
வணங்கினைக் கூட்டுதல் வேண்டா
வடியனேன் றமிழ்க்குக் கலந்துட னிருந்த
வரிவையைப் பிரிவுசெய் திடுக

---

தனை - தீமையைப் போக்கினாய். விழைவு - விருப்பம். எவ்வம் - துன்பம். கமர் - நிலத்தின் வெடிப்பு. உ. வேவ மலரும் விழி - நெற்றிக் கண். கரந்த - மறைத்த. ௩. பொய்வாதம் - பொருளற்ற சொற்போர். துரந்து - போக்கி. ௪. வெந்தெரி பசும்பொன் செங்க

மிடிமலி வறிய செங்கல்பொன் ளுக்கி
வியப்புற வுதவுதல் வேண்டா
வெந்தெரி பசும்பொன் செங்கலாக் குகநீ
வேறுனை வேண்டுவ திலையே
பொடிமறை தழல்போ லிருந்துல கினர்கட்
புலப்படா னுயர்சிவ ஞானி
புவியிலென் றிருப்ப வனையன்யா னென்று
பொங்கொளி யிரவிபோற் றோன்றிக்
கடிநக ரெவற்றுஞ் சிறந்தபொற் புரிசைக்
காஞ்சியிற் போந்தகற் பகமே
கதிர்மணி வரன்றி யருவிவந் திழியுங்
கயிலைநேர் மயிலைகா வலனே. (௭)

எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வலந்திரி கதிர்கா னுலகின ரெல்லாம்
வந்துகேட் பனவிலை யெனாத
நலந்தரு மொருநீ தமியனேன் கேட்ப
நானல திலையெனத் திருவாய்
மலர்ந்துரை செய்த தென்கொலோ வறியேன்
மயிலைமால் வரைமணி விளக்கே
புலந்தெறு வீரர் பெருமவென் றிறைஞ்சிப்
புகழ்சிவ ஞானதே சிகனே. (௯)

கலிவிருத்தம்

சிகரியி னெழுதின மணியின் றேர்ப்பரிக்
கிகலிர வுளதுகொ லிருவி னைத்தொடர்
நிகரறு நினையடை நிலையி னோர்க்கிலை
நகரியி னமர்சிவ ஞான தேவனே. (௬)

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தேவரு முனிவர் தாமுஞ் சித்தரு மற்றை யோரும்
மேவரு நிலைய ராக வினையினேற் கருள்பு ரிந்தான்

---

லாக்குக - ஒளியுள்ள பசிய பொன்னைச் செங்கல்போல் நோக்கும் தன்மை எனக்குண்டாகுமாறு உளத்தைப் பண்படுத்துக. பொடிமறை தழல் - நீறுபூத்த நெருப்பு. ௫ வலந்திரி கதிர் - வலமாகச் சுற்றுதலைச் செய்யுங் கதிரவன். நானலது இலை - என்னையல்லாது பிறி தொன்றுமில்லை யென்று மெய்யறிவைப் போதித்தவாறு; இதனால் ஆசிரியர் தாம் மெய்யறிவு பெற்றமையைப் புலப்படுத்தினர். புலந்தெறு - ஐம்புலன்களை வென்ற. ௬ இருவினைத் தொடர் - பிறப் பிறப்பிற்குக் காரணமாகிய நல்வினை தீவினையாகியவைகளின் தொடர்ச்சிகள். நிகர் அறு - மெய்யறிவினால் இணையற்ற. எ. மேவரு நிலைய

மூவரு மிறைஞ்சு ஞான முதல்வனென் மயிலை மேவி
யாவரும் விழையும் வான மிலான்புலம் பொழியு மாறே. (எ)

மேற்படிவேறு

மாறு செயுமைம் புலக்கணமே குணமே மயக்கு மாயையே
வேறு செயுமா ணவமலமே வினையே நுந்தம் விறல்காட்டித்
தேறு செயுநஞ் சிவஞான தேவ னெதிர்நான் செல்வதன்முன்
கூறு செயுநீர் செய்பவெலா மென்பாற் செய்து கொள்ளீரே. (அ)

மேற்படி வேறு

கொள்ளும் வன்பவப் பிணியின ராகிய குவலயத் தவரெல்லாம்
எள்ளும் வெந்துயர்ப் பவப்பிணி மருத்துவ னெனப்படு சிவஞான
வள்ளல் வந்துவன் மயிலைமேல் வாழ்தலை மணிவிளக் கெனக்கண்டு
முள்ள நைந்துசென் றுரைக்கில ரென்கொலோ வுண்டுடுத் துழல்வாரே.

௧௨சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வாரா யரசன் றூதனென வந்த வொருவ யாமகந்தை
மலையை யுடைக்குஞ் சிவஞான வள்ளன் மயிலைக் குறவர்காண்
ஏரா ரெங்கள் குலமகளை யின்று கேட்ப நினைவிடுத்த
விறைவன் றிருக்கா ளத்தியிடை யெங்கண் மிச்சின் மிசைந்தவனுல்
சீரா ரெயிறு தாளமெனச் சிதற வடிபட் டுழல்கின்றோன்
சிறிய குலத்திற் பிறந்தவனோ செந்தாண் மலராற் றேய்ப்புண்டு
பாரா ரறிய வுடல்குன்றிப் பகற்போ தெல்லாம் புறப்பட்டான்
பழைய குடியிற் பிறந்தவனோ பகரா யுள்ளம் வெருவேலே. (௧௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வேலுடையா னொடுமயிலை மலைமேவு சிவஞானி
வினைக டீர்க்குங்
காலுடையான் புகழோடு வெள்ளிமலை நிறைநிற்பக்
கனம்போ தாமல்
பாலுடையான் மிசைவைக்கப் பட்டதன் மேல்வைத்தோன்
பால்வெண் ணீற்றுத்
தோலுடையா னவன்மீது வைத்ததன்றோ விளமதியஞ்
சொல்லுங் காலே (௧௧)

---

ராக - அடையமுடியாத தன்மையை உடையவர்களாக. விழையும் - விரும்பும். அ. குணமே மயக்கு மாயையே - நற்குணங்களை மயங்கச் செய்கிற மாயையே. கூறு செயும்-எல்லாவற்றையுங் குறைந்தழிக்கும். ௯. பவப்பிணியினர் - பிறவி நோயை உடையவர்கள் எள்ளும் - இகழும். உள்ளம் நைந்து - மனம் இளகி. ௧௦. மிச்சில் மிசைந்தவன்- எச்சிலை உண்டவன். எயிறு – பல். தாளம் - முத்து. வெருவேல் - அஞ்சாதே. ௧௧. வேலுடையானொடு - முருகக் கடவுளோடு. கனம் போதாமல் - புகழோடு சரியாக நிற்பதற்குப் பாரம் சரியில்லாமல்.

**கலித்துறை**

காலம் போயிற் றஞ்சன மன்ன கடாமீதில்
ஆலம் போல்வெங் காலனு மந்தோ வணுகுற்றுன்
சீலங் கேண்மி னொய்யென வேதஞ் சிவஞானி
கோலங் காணுங் கொள்கை கருத்திற் குறியீரே. (கஉ)

**கலிவிருத்தம்**

குறியுமிலை வடிவுமிலை குணமுமிலை யுரையாடவோர்
பொறியுமிலை மனமுமிலை புலனுமிலை யரிதாகநீ
செறியும்வகை யருள்செய்பொருள் சிவசமய குலதீபமாய்
மறியுமளி மலர்முரலு மயிலைவரு சிவஞானியே. (கங)

**நேரிசைவெண்பா**

ஞானிபெய ரேதேனு தன்மைதரு மென்னவுஞ்செம்
மேனிபுகல் வேதம் விதித்தபெய—ரான
சிவஞானி நாமஞ் சிவஞானி யென்னுன்
அவஞானி யென்ப வவன். (கச)

**கட்டளைக்கலித்துறை**

அவனோ விவனென் றெனையாளு மண்ண லடியவர்தம்
பவநோ யகற்றுஞ் சிவஞான தேசிகன் பாரில்வருஞ்
சிவனோ விவனென் றுலகமெ லாந்தொழுந் தெய்வமன்றி
எவனோ தமிய னிதயா லயத்தி லிருப்பவனே. (கரு)

**கலிவிருத்தம்**

இருந்து மேனியோ டிம்மை மறுமையில்
பொருந்து போகம் புரிசிவ ஞானிநீ
விரும்பு வார்கட் கெனக்கருண் மெய்விழைந்
தருந்து மாசை யிலாமையி லாசையே. (கசு)

**மடக்கு. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்**

ஆசை தனதாண் மூட்டினு னடித்திட் டமுத மூட்டினுன்
பாச விருளை யகற்றினுன் பதிசே ரறிவை யகற்றினுன்

---

கஉ. காலம் போயிற்று - வாணுள் முடிந்தது. அஞ்சனம் அன்ன கடா - எருமைக் கடா. ஆலம் - நஞ்சு. ஒய்யென - விரைவாக. கோலம் - திருவடிவம். கங. செறியும் வகை - பொருந்துமாறு. மறியும் அளி - சுற்றித் திரியும் வண்டுகள். மலர் முரலும் - மலரில் ஒலிக்கும். கச. சிவஞானி - சிவபிரானது மெய்மைத் தன்மையை உணர்ந்தவன். அவஞானி - எதற்கும் பயன்படாத வீணை அறிவை யுடையவன். கரு. பாரில் வரும் - உலகில் மனித வடிவு கொண்டு வந்த. எவனோ - வேறு யாவனோ ? கசு. பொருந்து போகம் - அமைந்துள்ள பயன்கள். மெய்விழைந்து - உண்மைப் பொருளை விரும்பி. கஎ. அகற்றினுன் - நீங்கச் செய்தான். அகற்றினுன் - விரி

தேசு மலியு மாகத்தன் சிவஞா னிப்பேர் மாகத்தன்
தேச மருவி மறியாரே நிரயத் துயர மறியாரே. (௧௭)

கட்டளைக்கலித்துறை

மறிமறைத் தாலு மழுமறைத் தாலு மணிமிடற்றின்
குறிமறைத் தாலு மதிமறைத் தாலுமென் கொன்றைமலர்
வெறிமறைத் தாலு மறிவே னுனைமதன் மேற்பகைமை
நெறிமறைத் தாயிலை யேசிவ ஞான நெடுந்தகையே. (௧௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நெடுமடைக்கட் குடவளைசென் றடைப்பவிள வரானுழைந்து
நீர்செ லுத்துந்
தடமுடைத்தண் பணைமருதக் கச்சிநகர்ச் சிவஞானத்
தம்பி ரானே
படமுடிப்பார் மிசைநினது புகழ்பாடிப் பன்மலர்தூய்ப்
பணிகின் றேற்குக்
குடமுடைத்தா லெனப்பாசங் கெடுப்பதல்லா லெளக்குதீ
கொடுப்ப தென்னே. (௧௯)

நேரிசைவெண்பா

என்ன தவவுதவி யீதென் றுணர்கிலேன்
மன்னுசிவ ஞானமுனி வந்துற்றான் — தன்னைநிகர்
மாசங் கெடுக்கு மலர்த்தடஞ்சூழ் கச்சியிலெம்
பாசங் கெடுக்கும் படி. (௨௦)

கட்டளைக்கலித்துறை

படிக்குப் பெருஞ்செல்வ மாஞ்சிவ ஞானிமெய்ப் பத்தர்மணி
முடிக்குப் பெருஞ்செல்வ மாம்பதத் தானொடு முன்னியெங்கள்
மிடிக்குப் பெருஞ்செல்வ மென்றில ரேதரை வேந்தரொடெங்
குடிக்குப் பெருஞ்செல்வ மென்றுசென் றேதுறுங் கோளர்களே. ()

---

வடையச் செய்தான். தேசு - ஒளி. ஆகத்தன் - உடலையுடையவன். மாகத்தன் - சிறந்த தலைவன். நிரயத்துயரம் - நரகத்துன்பம். ௧௮. மறி - மான். மிடற்றின்குறி - கண்டத்தில் அமைந்த நஞ்சுக் கறை. வெறி - மணம். பகைமை நெறி - பகையாந்தன்மையை. நெடுந்தகை - மிகுந்த பெருமை யுடையவன். ௧௯. குடவளை - குடம்போன்ற சங்கு. படமுடிப் பார் மிசை - ஆதிசேடப் பாம்பின் முடிமீதுள்ள உலகத்தின்கண். ௨௦. என்ன தவ உதவி - எக் காலத்திலே செய்த தவத்தின் பலன். மாசு அங்கு எடுக்கும் - குற்றத்தை அவ்விடத்திலே நீக்கும். ௨௧. படிக்கு - உலகத்துக்கு. மிடிக்கு - வறுமைக்கு. தரை வேந்தர் - உலக மன்னர்கள். கோளர்கள் - இழிந்தகுண முடையவர்கள்.

### கலிவிருத்தம்

கோள்வலி செய்வதென் கொடிய வாகிய
நாள்வலி செய்வதெ னம்மைக் கூற்றெனும்
ஆள்வலி செய்வதெ னமுது பானிதன்
தாள்வலி யவைகொலுந் தண்டு தொண்டரே. (உஉ)

### அம்மானை. மடக்கு. கலித்தாழிசை

தொண்டர்நெஞ்ச வஞ்சந் தொலைக்குஞ் சிவஞானி
அண்டரஞ்சும் வெள்ளிமலை யண்ணல்கா ணம்மானை
அண்டரஞ்சும் வெள்ளிமலை யண்ணலே யாமாகில்
கண்டநஞ்சங் கண்டிலநங் கண்ணினு லம்மானை
காணு மயிலைவரைக் கண்டக்கா லம்மானை. (உங)

### கலிவிருத்தம்

அம்மா சிவஞா னியடிக் கமலம்
மும்மா யைகடந் துமுயங் குமது
சும்மா தலைமீ துசுமத் தினனுல்
கைம்மா றுளதோ கடையே னிடையே. (உச)

### நேரிசைவெண்பா

இடையினமே போல விரண்டறமு மல்லா
நடையினமே நாமயிலை ஞானி—புடையினமே
சார்வாகா தோடித் தடுமாறு கின்றமையால்
தீர்வாகா மாயைச் செயல். (உரு)

### காலம். எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

செயலெலா மறமாகச் செய்யுங் காலந்
திகழ்வெலாம் பொய்யாகத் திகழுங் காலம்
அயலெலா முறவாகி யமையுங் கால
மறிவெலாந் தனையறிய வணையுங் காலம்
மயலெலா மொழிந்துபர வசமாங் கால
மனமெலாம் பேரன்பு மயமாங் காலம்
இயலெலாம் பிறப்பொழிய வெடுக்குங் கால
மெங்கள்சிவ ஞானியரு ளிசையுங் காலம். (உசா)

---

உஉ. கோள் – ஒன்பான் வகைக் கோள்கள். வலி - துன்பம். தாள் வலி - திருவடியின் ஆற்றல். உங. அண்டர் - தேவர்கள். கண்ட நஞ்சம் - கழுத்திலுள்ள நஞ்சுக் கறை. உச. மும்மாயை - ஆணவம், மாயை, காமியம். சுமத்தினன் - வைத்தருளினான். உரு. இரண்டறம்– இல்லறம், துறவறம். சார்வாகாது - செல்லாமல். தீர்வு - முடிவு. உசா. அயல்எலாம் - பக்கத்தில் உள்ளவர்களெல்லாரும். பரவசம் - பரத்தின் தன்மையைப் பெற்று நிற்குந்தன்மை.

கட்டளைக்கலித்துறை

காலுண்டு வாழு முனிவரு முள்ளங் கலங்குநஞ்சம்
மேலுண்டு நஞ்சைய னும்பழி மாறவெல் வீரவளை
மாலுண் டுமிழு முலகமெ லாஞ்சொன் மயிலைவெற்பில்
பாலுண்டு பாலைய னென்றிருந் தாய்கொலெம் பாலையனே. (௨௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஐய மயிலைச் சிவஞானி யந்தோ நம்மாற் செயப்பட்ட
உய்ய வரிய பாதகங்கட் கொழிக்கு முபாய மிலையென்று
நைபு மனிதர் நினதுதிரு நாமத் தெழுவா யெழுத்திரண்டும்
பைய வொருகா லியம்பியுய்யப் பற்றார் துயரி னுற்றாரே. (௨௮)

கலிவிருத்தம்

உற்பவ நிற்ப தொடுக்க மளிக்கும்
சிற்பரன் மெய்ச்சிவ ஞானி திருக்கை
நற்பிர சாத மலர்ப்பத நம்பால்
சொற்பெறு மூவர் தொழிற்புண ராவே. (௨௯)

கட்டளைக்கலித்துறை

வேதந் தெளிந்தநின் செவ்வாய் மொழிநின் விரைமலர்ப்பூம்
பாதம் படுதுக ளெங்குல தேவதை பார்வையெங்கள்
சாதங் களையு மருந்துநின் னுமந் தனிக்குடிலை
நாதன் மயிலை சிவஞானி நீயமர் நல்லிடமே. (௩௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நல்ல புலவர் பழிச்சுசிவ ஞானி யெனுமோர் நாமமுறும்
மல்லன் மயிலை மலையனைவே றொருவ னுக மதிக்கிலேன்
மெல்ல வொருபூ வீசுதன்முன் வேளை யெரித்த தான்வெகுளி
இல்ல னெனினும் பொறையுளன்போற் றேன்றா னெனினும் யான்றானே.

௨௭. காலுண்டு - காற்றைப் புசித்து. வளைமால் - சங்கினை யுடைய திருமால். சொல் - புகழ்ந்து கூறும். ௨௮. உய்ய் அரிய - பிழைப்பதற்கருமையான. எழுவாய் எழுத்திரண்டு - சிவ என்பது. சிவ என்று ஒருமுறை கூறினும் எத்தகைய தீவினைகளும் ஒழிந்துபோகு மென்பது சிவாகம நூற்றுணிபு. பைய - மெள்ள. பற்றார் - பிடிக்க மாட்டார்கள். ௨௯. உற்பவம் - தோற்றம். ஒடுக்கம் - மறைவு. சொற்பெறு - புகழ்ச் சொல்லைப் பெறுகிற. ௩௦. வேதம் தெளிந்த - மறைப் பொருள்களைத் தெளிவாக உணர்ந்த. துகள் - தூள். சாதங் களையும் - பிறப்புக்களைப் போக்கும். ௩௧. பழிச்சு - போற்றுகிற. மல்லல் - வளப்பம் பொருந்திய. ஒரு பூ வீசுதல் முன் - ஒரு மலர்க் கணையைச் செலுத்துவதற்கு முன்.

நேரிசைவெண்பா

யானென தென்னு மிவைகழன்று வந்துசிவ
ஞான குருவை நணுகிலா—மானுடர்தம்
பொல்லாப் பிறவிநோய் போமோ வரினுநிலத்
தெல்லாக் கடவுளரு மின்று. (௧௨)

வண்டுவிடுதூது. இன்னிசைக்கொச்சகக்கலிப்பா

இன்றுபிழை யொன்று மியற்ரு வெனைமுனிந்து
நின்று சிறிதுமரு ணெஞ்சுரு வின்மதனைக்
கொன்றுவிடி லில்லைக் கொலைப்பாவ மென்றளிகாள்
சென்றுபுக லீர்நஞ் சிவஞான தேசிகர்க்கே. (௧௩)

கலிவிருத்தம்

கேடு தீர்மயி லைக்கிரி ஞானியைத்
தேடு வார்சிலர் செய்யுங் கருமியை
நாடு வார்பலர் நன்மணி யோகடைக்
கோடு வீழ்மணி யோபலர் கொள்வதே. (௧௪)

சித்து. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கொள்ளிபோன் மணித்தலைநா கங்கிடக்கு மயிலைமலைக்
குகையில் வாழுந்
தெள்ளுவா னமுதனைய சிவஞானி பதம்பரவுஞ்
சித்தர் நாங்காண்
அள்ளியோர் பிடிசோறு தரிற்பத்தா நாமுனக்கிங்
கைய மின்றி
வெள்ளிதான் வருவதன்முன் பொன்னுக்கு வோமிதுநம்
வித்தை தானே. (௧௫)

நேரிசைவெண்பா

வித்தை சிவஞானி வித்தையே காண்பவெலாம்
மித்தையென நின்று விளம்பியே—சத்தியமாய்
நாட்டினு னீதானு நானே யெனப்புகன்று
காட்டினுன் றன்னையே காண். (௧௬)

---

௧௨. கழன்று - நீங்கி. நணுகிலா - நண்ணாத. ௧௩. முனிந்து நின்று - சினந்து. அளிகாள் - வண்டுகளே! ௧௪. கேடுதீர் - தீமையில்லாத. ௧௫. தெள்ளுவான் அமுதனைய - தெளிந்த அமுதத்தைப் போன்ற. அள்ளி ஒரு பிடி சோறு தந்தால், அதற்குமாறுகப் பத்து மடங்கு பயன் சேர வெள்ளியைக் காண்பதன் முன் பொன்னுமாறு செய்து தருவோம், என்பது பின்னிரண்டடிகளின் பொருள். வெள்ளி - வெள்ளிக்கிழமை; பொன்-வியாழக்கிழமை. ௧௬. மித்தை-பொய்

ஊசல். எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

காண்டகைய விமிழிசைவெள் ளருவி தூங்குங்
கவின்மயிலைச் சிவஞான தேவன் கூறும்
மாண்டகுநன் மொழிகேளா வாவி பாவ
வல்வினையு நல்வினையு நின்று தள்ள
மீண்டுதுயர் நிரயமொடு துறக்க மேவி
மெலிவதிவ்வா றெனத்திரிந்து காட்டல் போலத்
தூண்டுசுடர் விளக்கனையீ ரிரும ருங்குந்
தோழியர்க ணின்றாட்ட வாடீ ரூசல். (௩௭)

தாழிசை

ஊசலாடுறு நெஞ்சொடும்பிட ருற்றவெற்றிகொள் காலனை
யுணர்ந்திலேன்பய மற்றுவேண்டிய துண்டுடுத்துழன் றேண்மலர்
வாசமார்குழல் மாதரார்செயு மாலின்மூழ்கின னத்துயர்
மாறுமாறுநி னைந்திலேனரி வாய்தலிற்படு மனையின்வாய்
தூசுலாமணை மீதுவாள்விழி துஞ்சவீழ்பவர் போலவே
தொண்டர்தந்துயர் கண்டிராது துடைக்குறுஞ்சிவ ஞானிநீ
ஆசுதீரருண் மிகுதிகாணிய வஞ்சலென்றருள் செய்தியோ
அருண்மறைத்து விடுத்தியோசொ லறிந்திலேன்றிரு வுள்ளமே. ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உள்ளதன் பொருள ளிக்கு முயர்சிவ ஞான தேவன்
தெள்ளும்வண் புகழுங் காமற் றெறுபிர தாப முந்தாம்
வெள்ளைநன் மதியுஞ் செங்கேழ் வெய்யவன் றானு மாகி
என்னவந் தெதிர்வ துண்டோ வென வெழுந் துலாவு மன்றே. (௩௯)

மேற்படி வேறு

அன்றெடுத்து மலைகுழைத்துப் புரமெரித்த புகழல்லா
லளற்றாழ் வேனை
நின்றெடுத்து மனங்குழைத்து வினையிரித்த நின்புகழை
நிகழ்த்தல் செய்யார்

---

௩௭. இமிழ்இசை வெள்ளருவி - இனிய இசைபோல் ஒலிக்கும் வெள்ளிய அருவி. தூங்கும் - இழியும். மாண்தகு - மாட்சிமைப் பட்ட. ஆவி - உயிர். இருமருங்கும் - இரண்டு பக்கங்களினும். ௩௮. ஊசல் ஆடுறும் - ஊஞ்சல்போல ஆடுகின்ற. மாலின் மூழ்கி - காம மயக்கத்தில் ஆழ்ந்து. ஆசுதீர் - குற்றத்தைப் போக்குகிற. ௩௯. தெள்ளும் - தெளிந்த. வண்புகழும் - பெரும் புகழும். தெறு - வெல்லுகிற. பிரதாபமும் - பெரும்புகழும். ௪0. அளற்றாழ்வேனை - துன்பக்கடலில் ஆழுகின்றஎன்னை. வினையிரித்த-வினையைப் போக்கிய

குன்றெடுத்த புகழிருப்பச் சிறுசிலையொன் றெடுத்தபுகழ்
கூறல் போன்மான்
கன்றெடுத்த கரமறைத்துச் சிவஞானிப் பெயர்படைத்த
கருணைக் குன்றே. (௬௦)

தவம். கட்டளைக்கலித்துறை

குன்று மறையுள் விபூதியென் றேசொலுங் கூற்றினுக்குப்
பொன்றுத செல்வ மெனப்பொருள் கூறும்வன் பூசுரரும்
தன்று மரைமலர்க் கைந்நீறு சாற்றத் தவம்புரிவர்
என்று லெவர்சிவ ஞானிதன் மேன்மை யிசைப்பவரே. (௬௧)

புயவகுப்பு

இசைபோகி மாழ்கமத னம்பைக் கடிந்தன
விளநாக வீருரியொ டென்பைத் துரந்தன
வசைபோகு மாரநிகர் கண்டிக் கிசைந்தன
மகமேரு வாதிவரை யஞ்சக் கிளர்ந்தன
நசைபோகு மாதவர்க டுன்பைத் துரந்தன
நயநீறு தேய்வையென விஞ்சத் திமிர்ந்தன
திசைபோகு தூயதமிழ் தங்கப் புனைந்தன
சிவஞான தேசிகர்தம் வென்றிப் புயங்களே. (௬௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

புயன்மறையா மயிலைமலைச் சிவஞானி நீயேயெம்
பொருளிற் கொண்ட
செயன்மறையா விளவேறு கரந்தவன்யா னலனென்னிற்
றெளியச் சொல்வேம்
அயன்மறையா நின்னடிகண் டனமார வாரங்க
ளாகா துன்றன்
இயன்மறையா துரைசெய்தி செய்திலையே லலர்தூற்ற
விளைக்கி லேமே. (௬௩)

மேற்படி வேறு

இளைக்கு மிடியற் குறுபொருளா மிறைவற் கரசாங் கூற்றுவனை
விளிக்கும் பிணிக்கு மருந்தாகும் விடத்திற் கருஞ்சீர்க் கலுழனும்

---

மான்கன்று எடுத்த கரம் - மானை யேந்திய கை. ௬௧. குன்றுமறை - பெருமையுடைய நான்மறை. பொன்றுத - கெடாத. ௬௨. மதனம்பு - காமன்கணை. நாக ஈருரி - யானைத்தோல். துரந்தன - நீக்கி விட்டன. வசைபோகும் - வசைநீங்கிய. கண்டி - சிவமணிக் கண்டிகை. கிளர்ந்தன-மேலாக எழுந்தன. நசைபோகும்-ஆசைவிட்ட. திமிர்ந்தன - பூசின. ௬௩. கரந்தவன்-மறைத்தவன். ஆரவாரம்-பெருமிதநடக்கை. ௬௪. மிடியற்கு - வறுமை யுடையவர்கட்கு. விளிக்கும் - அழைக்கும்.

வளைக்கும் பகைக்குப் படையாகு மலடர்க் கரிய மகவாகுந்
திளைக்குங் கருணைச் சிவஞான தேவன் றிருக்கைத் திருநீறே. (௪௪)

### நேரிசைவெண்பா

நீறுவாய் கோலநினை நெஞ்சமே நெஞ்சமவற்
கூறுநா வேமாற்றங் கூறுநா—பாறுவீழ்
வேல்பிடிக்குஞ் செவ்வேள் வியன்மயிலை ஞானிமலர்க்
கால்பிடிக்குங் கைகளே கை. (௪௫)

### நேரிசையாசிரியப்பா

கைகமழ் நறிய கறியொடு பருஉம்
மென்மைவெள் ளடிசி லின்மை மாந்தி
விலைவரம் பறியா மென்றுகி லின்மை
நாடொறு முடுத்து நகைமணிப் பசும்பொற்
பூண்டன தின்மை காண்டகப் புனைந்து
திண்குற டுரிஞ்சுஞ் செழுஞ்சாந் தின்மை
பூசிப் பொன்மலி புரிசை மாடத்
தின்மையின் மலர்ப்பூம் பள்ளி யின்மையிற்
கருங்கட் செவ்வாய் வெண்ணகைப் பசுந்தொடி
இளமுலை மாத ரின்மையொடு தழீஇ
வாழா நின்றநின் வண்புகழ் பாடும்
நல்லிசைப் புலவர் நற்பொரு ளின்மை
கண்டது பொறுது கவலைகூர்ந் தழிக்கும்
நின்னை யென்னே நிலமிசை மாந்தர்
அழுக்கா றிலனென வழுக்கா தறைகுவர்
தவப்பல விடர்செய் பவப்பிணி மருத்துவ
கலங்குறு தன்மைப் புலந்தெறு வீர
அடியார் கொள்ள மிடியாச் செல்வ
நானிலம் புகழ்சிவ ஞான தேவ
அடியே மருளா தறிதரக் கூறுதி
என்றவன் றனையே யாம்வினு யறிகுதும்
நங்கண் களிப்ப நண்ணு மாயின்
அணியென விறங்குவெள் ளருவி
மணிமலி மயிலை மலைகிழ வோனே. (௪௬)

---

கலுழன் - கருடன். ௪௫. நீறுவாய் - திருநீறு பொருந்திய. பாறு - பருந்து. ௪௬. நறிய - நல்ல. பருஉம் - பொருந்தும். பொற்பூண் - பொன்னாலாகிய அணிகலம். அழுக்காறு - பிறராக்கங்கண்டு பொறாமை. வழுக்காது - தவறாது. தவப்பல - மிகப்பல. மிடியா - குறைவுபடாத.

கட்டளைக்கலித்துறை

கிழவி யெனுமிக் கிரிராச கன்னிகை கெண்டையங்கண்
அழவி மலனைத் தழுழு ரமர்ந்த வமுதமுனி
தொழுவி கலமி லுயர்ஞானங் கூறுஞ் சுடரிலைவேற்
குழவி தனினு முனையே விரும்புங் குடமுனியே. (௪௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

குடக்கெனப் படாக்கு ணக்குங் குணக்கெனப் படாக்கு டக்கும்
வடக்கெனப் படாத தெற்குந் தெற்கெனப் படாவ டக்கும்
நடக்குமெய்ப் புகழ்மா கச்சி நகர்சிவ ஞான தேவே
படைக்குமப் பெரியோன் றன்னைப் பரவுவார் பரவு வாரே. (௪௮)

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பரம யோகி யென்றுடம்பிற் பாதி யொருத்தி கொளக்கொடுத்துப்
பகர்வுற் றறநன் மகனையடும் பாத கத்திற் குடன்படுத்தித்
தருமி தானென் றெருதேறிச் சாந்த னென்று புரமெரித்துத்
தம்பி ரானென் றெருவற்குச் சந்து மகளிர் பானடந்து
பெருமை யாள னென்றுபோய்ப் பேய்க்கூத் தாடிச் சின்மயனும்
பெயர்பெற் றவைவயி னம்பியாற் பித்த னாகிப் புனிதனெனுச்
சிரமு மாலை என்புமரீஇத் திரிந்த முரண்கொள் செயலெல்லாம்
தீர்வான் வந்த சிவஞான தேவற் கிலையொப் பாவாரே. (௪௯)

பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வாரியங் கரையீர் வாளிலைக் கைதை
மலரெனத் தோன்றுவர் சிலர்தாம்
மதுரவீர்ங் கரும்பின் மலரெனச் சிலர்தாம்
வருவர்நீ கற்பக மலர்போல்
காரியங் களத்த னடஞ்செய்தா மரையின்
கழலொளி யாவுமூர் போகி
கண்களாற் கண்டு கேட்டுமூர்ப் பச்சைக்
கந்தமா முனிகரத் துதித்தாய்
வேரியங் கமலத் தாளிழை மருங்குன்
மெல்லியற் பெண்ணொரு கம்பம்
மேவுற விருமா தங்கமுங் கட்டி
விடாதமர் நகர்கணு யகமும்

௪௭. கிரிராச கன்னிகை - மலையரையன் மகளாகிய உமாதேவி அமுதமுனி-சிவஞான பாலையர். சுடரிலை வேற்குழவி-முருகக் கடவுள். குடமுனி - அகத்தியன். ௪௮. குடக்கு - மேற்கு. குணக்கு - கிழக்கு. ௪௯. ஒருத்தி-உமையவள். சந்து-தூது. மகளிர்-பரவை நாச்சியார். நம்பி - சுந்தரர். மரீஇ-பொருந்தி. முரண்கொள் செயல் - மாறுபட்ட செய்கை. ௫0. வாரியங்கரை-கடற்கரை. வாள் இலை-வாளைப் போன்ற

பாரினன் முகமா மிக்கரை முனிந்த
பரன்றிரு வக்கரை நகரும்
பயிலிட மெனக்கொண் மயிலைவா ழமுத
பானமார் ஞானமா தவனே. (௰)

கட்டளைக்கலித்துறை

தடங்கட னீர்முகந் தாங்குப் பொழியினுந் தண்விசும்பு
நெடுங்கட னீர்மை பெறல்போல வேதங்க ணீறுதொட்டு
நடுங்கிடு மாறில் சிவஞான தேசிக னல்கினுமோர்
படங்கிடை ஞால முடையார் பெறுகுவர் பாக்கியமே. (௰௧)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பாக்கியமும் பாலுமுமை புகட்டியமெய்ஞ் ஞானப்
பாலனீ யளவிறந்த சிவபெருமா னடியார்க்
காக்கியிடல் கருதியே யுருத்திரபல் கணத்தார்க்
கட்டிட்டல் காணதே போதியோ வெனத்தன்
தூக்கினிடை யுரைசெய்தா னென்றேயென் றனக்குத்
தோன்றுகின்ற துலகில்வே றொருவரிலா மையினல்
சீர்க்கவிஞர் புகழ்மயிலை மால்வரையின் விளக்கே
சிவஞான தேவனெனச் சிறந்தவருட் கடலே. (௰௨)

நேரிசைவெண்பா

கடலுலக மேத்துங் கருணைமலை மாயை
நடலை தபுமயிலை ஞானி—விடலரிய
நல்வினத்தை நண்ண நணுகுமுட லாமுதலூர்
மெல்வினத்து ளாதிநிலை மெய். (௰௩)

கலி. எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மெய்த்தவறு சமயங்கட் கிறைவ னாகி
விளங்குசிவ ஞானகுரு வாம மென்னுஞ்
சத்திசம யத்தினுக்குக் கள்ளூ மூனுந்
தகுமெனமான் மதுகைவிடா னாகி நின்றான்
புத்தலரி யயன்கரகங் கொண்டு வந்தான்
புராரியுமை யைங்கரன்பே ரெலிகைக் கொண்டான்
நெய்த்தவடி வேன்முருகன் சேவல் கொண்டா
னிலவினனோர் முயன்முழுதும் விழுங்கி னனே. (௰௪)

இலை. கைதை - தாழை. வேரியங்கமலம் - தேன்பொருந்திய தாமரை. ௰௧. தடங்கடல் - பெரிய கடல். ௰௨. மெய்ஞ்ஞானப்பாலன் = திருஞானசம்பந்தர். அட்டிட்டல் - சமைத்து உணவளித்தல். தூக்கு - திருமயிலைத் தேவாரப்பாடல். ௰௩. மாயை நடலை-மாயையின் பொய்ம்மைத் தன்மை. தபு - கெடுக்கும். ௰௪. மெய்த்த - உண்மையாகிய. புராரி - சிவன். உமை - மான். நிலவினன் - திங்கள்.

தழை. கலிநிலைத்துறை

விழுங்குவள் போலது கொண்டற லோதியின் மேல்வைத்தாள்
அழுந்துற வாள்விழி யொத்தின டேமொழி யன்பாநின்
செழுந்தழை பட்டது நஞ்சிவ ஞானி திருத்தாள்கள்
பழம்படு நெஞ்சுடை யார்கரம் வந்து படும்பாடே. (௫௫)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பாடு வாரிசை யறியு மியாவுமூர் பணியு நல்லிய லம்ப லத்துநின்
ருடு வாரறி வார்கொ லோவறி யார்கொ லோவெனப் பாடு வார்கொளத்
தோடு வார்செவி நல்கி னுயர் சூலி நஞ்சிவ ஞானி நீபடை
வீடு வார்செவி யாக நல்கினை விலகி நல்லியற் புலவர் கொள்ளவே. ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கொள்ளு முண்டி பகுத்துண்டு பெருஞ்சீர் கொண்டா னின்குரவன்
கள்ளும் வண்டு மருமலர்ப்பூம் புலியூர்ப் பச்சைக் கந்தமுனி
தெள்ளு மிருஞ்சீர் நீபகுத்திட் டுண்ணு துற்ருய் சிவஞானி
துள்ளு மருந்தா யினுங்கன்று சொல்லா ரோசொ னல்லாரே. (௫௭)

கட்டளைக்கலித்துறை

நல்லா ரவன்சொல்வ தெல்லாம்பொய் யென்பவர் நன்மையிலாப்
பொல்லா ரவனைமெய் யாளனென் பார்மெய்ப் பொருளுணர்ந்த
வல்லார் மயிலைச் சிவஞானி யைச்சொல வாய்திறவார்
கல்லா ரவனியல் சொல்வமென் றேபல கற்றவரே. (௫௮)

கலிநிலைத்துறை

கற்றுவேத முற்றுமாயை கழலுமீச னேபதி
சொற்றசைவர் கட்கெனச்சொல் சொல்லுமாவி யேபரம்
முற்றும்வைதி கர்க்கெனச்சொன் மொழியுமாறு மாறுநாம்
உற்றமைலை ஞானதேவ னெருசொ லுண்மை சொல்லவே. (௫௯)

தாழிசை

சொல்லருங்கயி லைத்தணந்தனை துன்னுநீவிட குணமுமூர்
சுடல்செய்சாபமு மின்றியேசம னேக்கமெய்தினை தோலுடை
பல்லெலும்பணி கோலமோவினை பாதியாளெனன் மாறினை
பணிகள்யாவுமு ருதகன்றனை பாணிசென்னிசு மக்கிலை

௫௫. அறலோதி-கருமணல் போன்ற கூந்தல். வாள்விழி ஒத்தினள்-வாளைப்போன்ற கண்களிலே ஒற்றிக்கொண்டாள். ௫௬. நல்இயல் - நல்ல தன்மையுடைய. சூலி - சூலப்படையை உடையவன். ௫௭. உண்டி - உணவு. கள் - தேன். பகுத்திட்டு - பங்கு செய்து. ௫௮. அவன் இயல் - அவனுடைய இயல்பை. ௫௯. மாயை கழலும் - மாயை நீங்கும். ௬௦. சமன் நோக்கம் - சமமான பார்வை.

வில்லிருந்தத மும்பொழிந்தனை மீளநஞ்சமி ரிந்தனை
விரைந்து சோறிடு மனையைநல்கென வேண்டுமாறு மறந்தனை
கொல்லிரும்பர சினைவிடுத்தனை குறைவிலாமதி மேவினை
கோதறுஞ்சிவ ஞானியேயருள் கூருஞானவி நோதனே. (சுo)

கட்டளைக்கலித்துறை

வினையே னெனினுங் கொடியே னெனினும் விதிவிலக்கு
நினையே னெனினு மியானே யறங்களி னின்றுடையேன்
அனையே யனைய சிவஞான தேவ னருண்மிகுதி
எனையே யடைதலி னுலைய மேது மிதற்கிலையே. (சுக)

நேரிசைவெண்பா

இல்லாமை யில்லாமை யெய்தலா நூன்முழுதுங்
கல்லாமை கல்லாமை கற்கலாம்—வல்லான்
சிவஞான தேவன் றிருவடியைப் போற்றத்
தவஞான முண்டாயிற் றன். (சுஉ)

வஞ்சித்துறை

தானி யேசிவ
ஞானி யேயெனுன்
மேனி யோடபி
மானி யாகுமே. (சுங)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

மேவரு மெய்ச்சிவ ஞானி திருப்புகழ் மேன்மை யிசைத்திடுநாள்
மாவுர கர்க்கிறை தானெனிர் பைத்தலை மாண வசைக்குமதால்
பூவசை வுற்றிடு மாலென மட்டவிழ் பூமிசை யுற்றிடுவான்
பாவின் வியப்புறு மேரு முதற்கிரி பார மியற்றினனே. (சுச)

நேரிசைவெண்பா

பாரார் விசும்புளார் பாதாளத் தார்பரவுஞ்
சீரார் சிவஞான தேசிகா—தீரா
அறவா நினைக்கி னடியேன் பொருட்டுப்
பிறவா நினக்குப் பிறப்பு. (சுரு)

---

ஓவினை - விட்டொழித்தாய். பணிகள் - பாம்பணிகள். பாணி - கங்கை. பரசு - மழு. குறைவிலா மதி - பேரறிவு. கோது அறும் - குற்றம் இல்லாத. சுக. வினையேன் - தீவினையேன். விதி விலக்கு - விதிக்கப்பட்டதும் விலக்கப்பட்டதும். அனை - தாய். சுஉ. இல்லாமை இல்லாமை - வறுமையில்லாமை. சுங. மேனி - உடல். அபிமானி - பற்றுடையவன். சுச. திருப்புகழ் - சீர்த்தி. உரகர்க்கிறை - ஆதி சேடன். பைத்தலை - படத்தையுடைய தலை. மாண - மிகவும். பூ - நிலம். பூமிசையுற்றிடுவான் - நான்முகன். சுரு. பாரார் - உலகத்தவர். விசும்புளார் - விண்ணுலகத்தவர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பிறந்தான் மேலு மிடிதீர்நோய் தீரென் றெமைப்பின் றொடர்வனென
அறிந்தாய் போலுஞ் செம்பவளத் திருவாய் மலர்ந்தென் னகந்திருத்தி
இறந்தார் ஞால மிசைப்பிறவா முதுகுன் றகலா தெனைவைத்தாய்
சிறந்தார் வாய்மைச் சிவஞானிப் பேரோய் தீராச் சீரோயே. (௬௬)

நேரிசையாசிரியப்பா

சீர்வளர் குவவுத் திண்டோண் மாருதி
உயிர்தரு மருந்தொன் றுறுதற் பொருட்டு
முழுமணி கொழிக்கு முகங்கவி ழருவிக்
குன்றமொன் றெடுத்த கொள்கை போலச்
சொற்றிறம் விரித்த சுடர்மணிச் செழுஞ்சூட்
டுரக வேந்த னொருதலை தரிப்பக்
காதல் கூர்ந்து கண்ணகன் ஞாலம்
உச்சிக் கொண்ட கச்சிப் பதியும்
எறும்பியுயிர் நீங்கி லெறும்பி யீருரி
போர்த்துப் போகும் புராதன மலையும்
ஆன்பாற் கன்றி யளவில்பல் கறிக்கும்
இன்சுவை விளையு மென்சே யூருங்
கயிலைபோற் சிறந்த மயிலைமால் வரையும்
இடங்கொண் டிருந்த வெங்க ளையகன்
அரன்றிருத் தொண்டர்க் கன்னை போல்வான்
புகழுநர்க் கடங்காப் புகழுடைப் பெருந்தகை
உலகா யதனுக் கிலகா யுதமாய்
அணுமத மோரணு வாகத் துரந்து
விசேட மதத்தின் விசேட நீக்கிக்
காலவா திக்கோர் கால னாகிக்
குருமத நொய்தெனக் கூறி மாற்றிப்
பஞ்ச ராத்திரிக் கஞ்சு பகலாய்ச்
சைவப் பயிர்க்குத் தண்முகி லானோன்
நாந்தொழ வருள்சிவ ஞான தேவன்
சமய வாதிக டம்மத நிறுவத்
தகர்போல் வாதிற் றாக்குத னோக்கிச்
சிரித்துளங் களிக்குஞ் சிவாநு பூதியின்
மாண்டிட வெம்மை வைத்தனன்
வேண்டிய செய்கவவ் வீணர் தாமே. (௬௭)

---

௬௬. மிடிதீர் - வறுமையைப் போக்கு. முதுகுன்று - பழமலை. ௬௭. குவவு - திரண்ட. மாருதி - அநுமான். எறும்பி - யானை. அரன் - சிவன்.

பிச்சியார். கலித்துறை

தாமே மனிதர் தமதா மயிலைத் தனிஞானி
பூமேன் மனிதக் கோல மடைந்து புறப்பட்டான்
மாமேன் மையரா கியமா தவர்தவம் வௌவற்குக்
கோமே தகமே நீதவ வேடங் கொண்டாயே. (௬அ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கொண்டசிலை மரமுதலா யினதமைத்தாஞ் சிவமெனவே
குறிக்க மாட்டார்
அண்டர்முத லாயினோர் பாவிக்கப் படுமயிலை
யமர்ந்திட் டெம்மைத்
தொண்டுகொளுஞ் சிவஞானி தனைத்தானே சிவோகமெனத்
துணிந்து கொண்டு
பண்டைநரர் பவமுழுதுந் தொலைத்திடுவ னியாரதிகம்
பார்த்தி டீரே. (௬௯)

பாண். நேரிசைவெண்பா

பார்த்திடுவ னீலகண்ட பாணனு ராகநினைத்
தீர்த்தன் சிவஞான தேசிகன்சீர்—ஏத்திவரில்
பாணு நினைச்சாதி பாராட்டு வேன்பிறர்சீர்
நாணு துரைத்துறலா னன். (௭௦)

கட்டளைக்கலித்துறை

நானே சசிவன் னனிற்பெரி யேனவன் ஞானிதனைத்
தானே யடைந்தில னன்றிருக் காஞ்சியிற் றண்மலர்ப்பூந்
தேனே யனைய சிவஞான தேவனைச் சேர்ந்திமைப்பில்
ஊனே யுயிரே யெனுமிவை வேறுபட் டுய்ந்தனனே. (௭௧)

நேரிசைவெண்பா

உன்னைச் சிறையிட் டுளானெஞ் சிவஞானி
தன்னைப் பணிவினவித் தான்செய்வன்—என்னைப்
படைப்பேன் கிடைப்பேனென் றெண்ணாதே பாழி
அடைப்பேன் கமலால யா. (௭௨)

---

௬அ. பூமேல் - உலகத்தில். மாமேன்மை - சிறந்த பெருமை. வௌவல் - பற்றுதல். ௬௯. அண்டர் - தேவர். பாவிக்கப்படும் - போற்றப்படும். பண்டைநரர் - நெடுங்காலமாகப் பிறவியை யடைந்து வருந்தும் மனிதர்கள். பவம் - பிறப்பு. ௭௦. தீர்த்தன் - மேன்மையை உடையவன். ஏத்திவரில் - போற்றிவந்தால். ௭௧. சசிவன்னன் - விருத்தாசல புராணத்திற் கூறப்படும் ஒருவன். இவன் பல தீமைகளைச் செய்து வெண்ணிற நோயை அடைந்தபடியால் சசிவன்னன் என்று பெயர் பெற்றான். இவனை இவன்தந்தை மானந்திபராயணர் என்னும் பெரியவரிடங்கொண்டு போய்த் தீவினையைப் போக்கி மெய்யறிவுபெறச் செய்தான். ௭௨. சிறையிட்டுளான் - படைக்க முடியாதபடி தடைசெய்துள்ளான். கமலாலயா - நான்முகனே!

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஆலய மெனக்கொண் டெம்மனத் தமர்ந்த
வருட்சிவ ஞானதே சிகவெம்
பாலைய மலர்க்கண் ணிரண்டுடை யாய்க்குப்
பார்வைமூன் றுளனெனப் படுவோன்
மேலவ னென்னி லவற்குநா லிருகண்
விண்ணவ னுயர்ந்தவ னவற்குச்
சாலவு மதிக னுவனு யிரங்கட்
டவளமார் கவளவா ரணனே. (௭௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வார ணாசி சிதம்பர மங்கல மாதை வீழிபுகார்
சீர ணாமலை யம்பர் வலஞ்சுழி சேது மாதவனூர்
ஆர ணாடவி நின்பத பங்கய மாகும் வேறறியேம்
நார ணாதி வணங்கு மருள்சிவ ஞான தேசிகனே. (௭௪)

தாழிசை

தேசுலாவுமணி நாகமீரமதி தேய்வகன்றுவளர் மோவெனு
ஆசையோடமரும் வேணிநாதனரு ளாளனெந்தைபுகழ் காழிவாழ்
பாசநாசனெனு ஞானமாமதலை பாடவென்புமக ளாகுநான்
மாசிலாதசிவ ஞானிசீர்பரவ மாதரென்புவடி வாவரே. (௭௫)

மதங்கு. மேற்படி வேறு

ஆகு மேயிவள் வலிபிறர்க் காவிபோமுடல் போலவே
மோக மாதரின் மாறிய முதல்வனஞ்சிவ ஞானிசீர்
பாகு போன்மொழி யான்மிகப் பாடியாடிம தங்கிதான்
சோக மேதுமின் முனிவர்தந் துறவு கொள்ளைகொள் கிற்பளே. (௭௬)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பகலாவெழுத் தைந்தேவடி வாகுஞ்சிவ ஞானி
பாற்போகுவ னென்றேநினை வுற்றேனது பொழுதே
புகலாசையி ரும்பேயினிப் போவேனெனப் போய்த்தாற்
புணர்மூலம லப்பேயவற் கண்டேகுவ னென்றே

---

௭௩. பார்வை மூன்றுளன்-சிவபிரான். நாலிருகண்விண்ணவன் - நான்முகன். தவளம் - வெண்மை. வாரணன் - தேவேந்திரன். ௭௪. வாரணாசி - காசி. மாதை - திருவாமாத்தூர். வீழி - திருவீழிமிழலை. புகார் - காவிரிப்பூம்பட்டினம். அம்பர் - திருவம்பர். ஆரணாடவி - மறைக்காடு. ௭௫. மதிதேய்வு அகன்று - திங்கள் தேய்தல் நீங்கி. காழி - சீகாழி. ஞானமாமதலை - திருஞானசம்பந்தர். மாதர் என்பு வடிவாவர்; என்பது மாதர்களை என்பு போல் வெறுத்தொதுக்கத்தக்க மெய்யறிவு உண்டாகு மென்றபடி. ௭௬. மாறிய - மாறுபட்ட. பாகு - இனிமை பொருந்திய வெல்லப்பாகு. ௭௭. பகலா -

அகலாமைய கன்றேயக லாநின்றது மெல்ல
வாகத்தின்வி ளைப்பேயவற் கண்டுஞ்சில நாணுன்
இகலாமைமி ருந்தேகுவ னெனநின்றது மாயை
யெனும்பேயத னோடேகுவ னெனநைந்தறி ரந்தே. (எஎ)

வஞ்சிவிருத்தம்

இரந்து நிற்றலி லாமையுங்
கரந்து நிற்றல்க லாமையும்
பொருந்து நிற்புகழ் வேனியான்
திருந்து மெய்ச்சிவ ஞானியே. (எஅ)

நேரிசைவெண்பா

ஞானியஞ் ஞானியெனல் ஞானசம் பந்தனெனுந்
தானிமணப் பந்தர்க்குத் தப்பியுழல்—மானுடர்காள்
நில்லாமல் வம்மினோ நின்றசிவ ஞானிபதம்
எல்லாம் வழங்குகின்ற னின்று. (எகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்றுவர்வாய் மகளிர்மய லுருதென்று மெனைத்தடுத்தா
ளிசையக் கொண்டாய்
வென்றிமலி துறவியா தலினீயம் மாதொருபால்
விழைந்து வைத்தோன்
முன்றமர்செய் மணம்விலக்கி வலிந்தாட்கொண் டிருமாதர்
மோக வேலை
யன்றமிழ தம்பியைச்செய் தனன்சிவஞா னிப்பெரும்பே
ரடைந்து ளோயே. (அ0)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அடையாத புல்ல ரினமோ டிணங்க வடியேனை விட்ட வொருநீ
கிடையாத நின்னை யுறுமன்பர் தங்கள் கிளையோ டிணங்க வருள்வாய்
திடையாக நாளி னடியான் முனிந்த சிவஞான தேவ மதியைச்
சடையா லணிந்தவவன்வே றியார்கொ றலைவா வெனக்கு மொழியே. (அக)

---

பகுத்தலில்லாத. ஆசைஇரும்பேய்-ஆசையாகிய பெரிய பேய். மூலமலப் பேய் - அஞ்ஞானம். ஆகம் - உடல். எஅ. கரந்து நிற்றல் - மறைந்திருத்தல். எகூ. மணப் பந்தர்க்குத் தப்பி - திருஞானசம்பந்தருடைய திருமண விழாவில் வீடுபேற்றையடைவதற்குத் தவறி. உழல் - பிறப் பிறப்பில் உழலுகின்ற. வம்மின் - வருவீர்களாக. அ0. துவர்வாய் - பவழம் போன்ற வாய். வென்றிமலி - வெற்றி மிகுந்த. தமர்-உறவினர். மணம் விலக்கி - சுந்தரர் திருமணத்தைத் தடுத்து. இருமாதர் - பரவையார், சங்கிலியார். மோகவேலை-காமக்கடல். அக. கிடையாத-அடைதற்கரிய.

### கட்டளைக்கலித்துறை

எனக்குப் பிறப்பில்லை யென்றே கனன்மழு வேந்துவன்யான்
நினக்குக் கருணையென் மேற்ரு தலினின் னிலைமைகண்டே
எனக்குப் பிறப்புண்டென் பார்சிவ ஞானி யிருநிலத்தில்
நினக்குப் பிறப்புண்டென் பாரல ரோவவர் நிந்தைசெய்தே. (அஉ)

### சம்பிரதம். எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

நிந்தையறும் படிமுழுது மளப்பம் வாங்கி
நெடுவரையொன் றெடுப்பமெழு கடலை யள்ளிச்
சிந்துவமல் லியினலரி யாக்க வல்லோஞ்
செய்குவமென் றயன்போனுற் றிசையும் பாரேந்
தந்தையினு மினியசிவ ஞான தேவன்
றன்கருணை கொண்டெளிதிற் றருக்கர் கூறும்
ஐந்தனுவி லோரணுவு ளண்ட முண்ட
வம்புகொளுஞ் சம்புவைநா மடக்கு வோமே. (அ௩)

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

அடங்க வெலும்புந் தோலுமா யருவ ருத்திட் டுமிழ்கின்ற
உடம்பை நானென் றிருந்தேனை யொழிவில் கருணைச் சிவஞானி
கடந்த பிரம நீயெனவே கழற்கா லென்புன் றலைவைத்தான்
முடங்கு சுருள்வா லுய்க்கொருபொன் முடிசூட் டினனெம் பெருமானே. ( )

### தரவுகொச்சகக் கலிப்பா

பெருமானே சிவஞானிப் பெயருடையோய் நினதருளால்
வருமான்மா பரமுத்தி மருவுதலே யியல்பாகும்
பரமான்மா வுரைசெய்யப் படுகாசி முதலனதாந்
தருமாறே ருபசாரந் தருவதுநிற் கிடைத்திடினே. (அ௫)

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

கிடைப்பரிய நீதுறந்த கங்கைதிருப் பாற்கடலாய்க் கிடந்த தாங்குச்
சடைப்பழகு மனந்தனத னெடுபோகச் சயனமெனச் சார்ந்தான் மாயன்
படப்பணியை நீங்குதலால் வளர்ந்துபோ யிற்றுமதி பாணி மானை
விடுப்பவத னுடல்புகுந்த தரியசிவ ஞானியென விளங்கு வோயே. (அ௬)

---

அஉ. என்மேற்று - என்மேலது. அ௩. படி - உலகம். அளப்பம்- அளவு செய்வோம். அலரி-கதிரவன். அயன் - நான்முகன். தருக்கர் - தருக்கநூலார். அண்டம் உண்ட அம்பு - திருமால். சம்பு - சிவபிரான். அ௪. கடந்த பிரமம் - எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பிரமம். கழற்கால்-வீரக்கழல் அணிந்த திருவடி. முடங்கு சுருள்வால் - வளைந்து சுருண்ட வால். அ௫. பரமுத்தி-மேலான வீடுபேறு. உபசாரம்-வழிபாடு. அ௬. அனந்தன் - ஆதிசேடன். சயனம் - படுக்கை. படப்பணி - படத்தையுடைய பாம்பு. பாணிமானை - கையிலுள்ள மானை.

கட்டளைக் கலித்துறை

விளங்காத வண்ணம் பிறர்தீங் கடக்கி விரித்துநன்மை
உளங்காதல் செய்துரைப் பார்கூ றுதற்கிங் கொருகடுகின்
இளங்கா முளவு நலமில னாகிய வென்னையென்னோ
துளங்கா தருளச் சிவஞான தேவன் றொடங்கினனே. (அஎ)

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

தொடங்கியா யிரநாவால் யோக மெல்லாஞ்
சொல்லினுநீ போகியெனப் படுவாய் மண்ணை
விடும்பரிசு நினக்கில்லை பணம்போ மாயின்
வீந்திடுவை விரைகமழ்மென் மலர்க்கட் பெம்மான்
முடங்குறினு நினைவிடுமோ வளியுள் வாங்கு
முயற்சியால் யோகியெனப் படாய னந்தா
அடைந்தசிவ ஞானியெனும் பரம யோகி
யல்லைகாண் சொற்சொலவே வல்லை நீயே. (அஅ)

நேரிசை வெண்பா

நீயிருப்பப் புன்பொருட்கு நீசர்ப் புகழ்வாருந்
தூய்திருப்ப வூன்விரும்பித் துய்ப்பாரும்—நாயிருத்தல்
போலிருந்து நீணரகிற் போய்விழுவா ரேமயிலை
மேலிருந்து வாழ்முனியா மேல். (அகூ)

கட்டளைக் கலித்துறை

மேலுக்கு நீவரம் பாயினை கூறில் வியனுலகில்
கீழுக்கு நான்வரம் பாயினன் மேலெனக் கீழினுக்கும்
மேலுக்கு நாப்பணின் றூர்கீ ழெனச்சொல மேவுவர்காண்
கீழுக்கு நாடரி தாஞ்சீர் மயிலைக் கிரிமுனியே. (கூ0)

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

முனிப்புலி தொழுசிதம் பரங்கண் ணுற்றவர்
முழைப்புலி முழங்குமவ் வருணை யங்கிரி
நினைப்பவ ரமலவா ரூர்ப்பி றப்பவர்
நிகழ்த்துறு காசியிற் சென்றி றப்பவர்

---

அஎ. விளங்காத வண்ணம்-மேற்படாதவாறு. துளங்காது-நடுங்காமல். அஅ. போகி-போகத்தையுடையவன்; பாம்பு. மண்ணைவிடும் பரிசு - உலகத்தை விட்டு நீங்குந் தன்மை. பணம் - படம். வீந்திடுவாய் - இறந்து போவாய். முடங்குறினும் - முடங்கிக் கிடந்தாலும். வளி - காற்று. அகூ. புன்பொருள் - இழிந்த பொருள். நீசர் - கல்வியல்பில்லாதவர்கள். தூய்து - தூய்மையானவைகள். கூ0. மேலுக்கு - மேன்மைக்கு. கீழுக்கு - கீழாந்தன்மைக்கு. நாப்பண் - நடு. கூக, முனிப்புலி - வியாக்கிரபாதர் என்னும் புலிக்கால் முனிவர். முழைப்புலி - குகையில் இருக்கும் புலி. கண்ணுற்றவர் - தொழுதவர்.

தனிப்பெரு முத்தியை யடைவர் தாங்களே
தலைப்படு குவருயர் பதமுன் கச்சியை
உனைப்பெயர் பகர்பவர் கேட்கின் ருரொடு
முரைப்பரும் புகழ்ச்சிவ ஞான தேவனே. (௯௧)

கைக்கிளை, மருட்பா

தேவென் றறிந்தோஞ் சிவஞான தேசிகனை
ஓவென் றெருமுகுமருட் கண்களால்— மாவென்
றிமைக்கும் விழியா லிவளை
இமைக்கு ளணங்கல ளென்றறிந் தோமே. (௯௨)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

அறிவதை யறிந்தார் மூவ ரறுமுகக் குரவன் றன்பால்
முறைவரு வருண முற்று முக்கணன் குருவென் றன்பு
செறிகிலன் மலய வெற்புச் செஞ்சடை முனிவன் யாக்கை
குறியவன் குறுகி லானெங் கோன்சிவ ஞானி தானே. (௯௩)

சிவஞானபாலைய சுவாமிகள் கலம்பகம் முற்றிற்று.

வாழ்த்து

அருள்பொழி விழிகள் வாழி யறம்பகர் பவளம் வாழி
இருள்புரை தமியே னுள்ளத் தெழுந்துபே ரொளியாய் நின்ற
குருபரன் காஞ்சி வாஞ்சை கொள்சிவ ஞான தேவன்
திருவடி வாழி யன்னான் றிருப்புகழ் வாழி வாழி.

---

அமலவாரூர் - தூய்மை மிக்க திருவாரூர். தலைப்படுகுவர் - அடைவர். ௯௨. அணங்கு அலள் - தெய்வப்பெண் அல்லள். ௯௩. செறிகிலன் - பொருந்தவில்லை. மலய வெற்பு - பொதிய மலை. யாக்கை - உடல். குறியவன் - குறுகப்பெற்றவன்.

(வாழ்த்து) பவளம் - பவளம் போன்ற வாய். இருள்புரை - இருளை நிகர்த்த. வாஞ்சை - விருப்பம்.

## ௨௫. கருணைப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# இட்டலிங்க வகவல்

**நேரிசையாசிரியப்பா**

விரிகட லாடைப் பெருநில மடந்தைக்
கரும்பெற லாரம் புரைந்தினி தொழுகும்
பொருதிரைப் பொன்னித் திருவரங் கத்துப்
புதுவெயி லெறிக்குங் கதிர்மணி சுமந்த
ஆயிரஞ் சுடிகை மாயிரும் பாந்தட்
பள்ளி மீமிசை யொள்ளொளி மின்னொடு
கருமழை கிடந்த காட்சி போலப்
பிறைநுதற் றிருவோ டறிதுயி லமர்ந்த
புரிவளைத் தடக்கைப் பெரியோன் றனும்
மலர்தலை யுலகம் பலவும் பயந்து
தெய்வத் தாமரைத் திருத்தவி சிருக்கும்
அசைவில் காட்சித் திசைமுகத் தொருவனும்
ஈண்டிதன் னடியுஞ் சேண்டொடு முடியுந்
தனித்தனிக் காண்குது மெனத்தமி லிசையா
இலங்குபிறை மருப்பின் விலங்குரு வெடுத்து
நெடுநிலங் கிளையா வுடன்மிகத் தளர்ந்தும்
நிறைமதி நிறத்துப் பறவையுருப் பரித்து
வானகம் பறந்து மேனிதொறந் திளைத்துங்
காண்டல் செல்லா தியாண்டுபல கழிய
மண்டழற் பிழம்பாய்ப் பண்டு நின்றோன்
பூசனை விடுத்த மாசுபுரி நெஞ்சத்து
வீயா வஞ்சத் தீயோ ரிருந்த

---

௨. புரைந்து - ஒத்து. பொருதிரை - கரையை மோதுகிற திரை. பொன்னி - காவிரி. ௫. சுடிகை - உச்சிக் கொண்டை. மாஇரும் - மிகப்பெரும். பாந்தள் - ஆதிசேடன். ௭. கருமழை-கரிய முகில். ௮. திரு - திருமகள். அறிதுயில்-எல்லாவற்றையும் உணரத் தக்க மெய்யறிவுத்தூக்கம். ௯. வளை - சங்கு. பெரியோன்-திருமால். ௧௦. பயந்து-பெற்று. ௧௧. தவிசு-இருக்கை. திசைமுகத்தொருவன்-நான்முகன். ௧௩. சேண் - மிகவுயர்ந்த விண். ௧௫. விலங்குரு - பன்றி வடிவம். ௧௬. கிளையா - தோண்டி. ௧௭. பறவையுரு - அன்ன வடிவம். பரித்து - தாங்கி. ௧௯. காண்டல் செல்லாது-காண முடியாமல். ௨௦. மண்டு - மிகுதியான. ௨௨. வீயா - கெடாத.

கடிகொண் மூவெயிலும் பொடிபட நகைத்தோன்
பொன்னி னியன்றன மென்னறுங் கொன்றையும்
வெள்ளியிற் குயின்றன வெள்ளியொள் ளெருக்கும்
ஒழுகொளி மரகதத் தெழில்பெறச் செய்தன
அறுகும் வில்வச் செறிபசுந் தழையுந்
தும்பையு மத்தமும் வம்பவி ழாத்தியுங்
கொழிக்கு மிருந்திரைக் குளிர்புனற் பெருக்கில்
சிறுவெள் ளோதிமந் திரிதர லென்ன
வெண்ணில வொழுக்குந் தண்மதிக் கொழுந்து
திரிதரச் சிறந்த செக்கரஞ் சடையோன்
மன்றலம் பொதியிற் றென்றலந் திருத்தேர்த்
திங்களங் கவிகை யைங்கணைக் கிழவனைப்
பற்றிய செந்தீ நெற்றிநாட் டத்தோன்
அருடிரண் டெழுந்த வுருவமென் றுணர்த்தி
இருள்குடி யிருந்த திருவமர் மிடற்றோன்
ஏனையோர்க் கிறைமை யின்மை காட்டி
முடங்குளை மடங்கன் முகனடுக் கோத்த
வெண்டலை மாலை கண்டவர் வெருவத்
தண்டாது கிடக்குந் திண்டோட் பொருப்பினன்
அண்டப் பித்திகை விண்டிட வதிர்க்குந்
தீவாய்ப் பிணையும் பூவாய்க் கணிச்சியும்
அன்ன முயர்த்தோன் சென்னிக் கடிகையும்
மணந்தரு தண்டுழாய்ப் பிணைந்தலைச் சுமந்த
முத்தலைச் சூலமும் வைத்தகைத் தலத்தோன்
வான்றோய் செக்கரிற் றோன்றுபிறை யென்னப்
பொன்வரைக் குவடு தன்வயிற் றுரிஞ்ச
மேனிவந் தோங்கிய வெஞ்சினக் கேழலின்
கோடுகிடந் திமைக்கும் பீடுகெழு மார்போன்

உ௩. கடிகொள் - பாதுகாப்பைக் கொண்ட. மூவெயில் - முப்புரமதில். உ௪. இயன்றன-அமைந்தாற்போன்ற. உ௫. குயின்றன-செய்தாற் போன்ற. உ௬. செய்தன-செய்தாற் போன்ற. உ௮. வம்பவிழ் - மணம் வெளிப்படும். ௩0. ஓதிமம்-அன்னம். ௩௨. செக்கர்-செவ்வானம். ௩௪. ஐங்கணைக் கிழவன் - காமன். ௩௫. நாட்டம் - கண். ௩௭. இருள் - கருமை. மிடறு - கண்டம். ௩௮. இறைமை-தலைமைத்தன்மை. ௩௯. மடங்கல் - அரிமா. ௪0. வெருவ - அஞ்ச. ௪௧. தண்டாது - நீங்காமல். தோட் பொருப்பினன் - தோளாகிய மலையை உடையவன். ௪௨. பித்திகை - சுவர். விண்டிட - பிளக்க. அதிர்க்கும் - ஒலிக்கும். ௪௩. கணிச்சி - மழு. ௪௪. சென்னிக் கடிகை-தலையாகிய பாத்திரம். ௪௫. துழாய்-துளசி. ௪௮. பொன் வரைக்குவடு - மேருமலை உச்சி. ௪௯. கேழல்-பன்றி. ௫0. கோடு-கொம்பு. பீடுகெழு - பெருமை பொருந்திய.

பிறையுகிர் நோன்றாட் பொறியுடற் பேழ்வாய்
உறுவலிப் புலியி னுரியுடை யுடீஇத்
துத்திப் பைத்தலைச் சுடர்மணிச் சூட்டுக்
கடுவொடுங் கெயிற்றுநாண் கட்டிய வரையோன்
திருகுவெஞ் சினத்தி னுருகெழு தோற்றத்
தெறுழ்வலித் தடந்தோட் டறுகட் கூற்றம்
ஊழியி லெழுதரு முறுவளி சாய்த்த
நீனிறக் குன்றம் போன்மெனச் சாய
ஒருசிறிது நிமிர்ந்த முருகுவிரி கமலத்
தலர்நலங் கவற்று மறைகழ லடியோன்
வெள்ளி மால்வரை துள்ளிநடந் தன்ன
கடுநடைச் செங்கண் விடைவல னுயர்த்தோன்
இமய மீன்ற வமையுறழ் தடந்தோட்
கொவ்வைச் செவ்வாய்க் கொடியிடைக் குவிமுலைக்
கருங்குழற் பிறைநுதன் முருந்திள முறுவல்
திங்கள் வாண்முகப் பொங்கர வல்குல்
தளிர்புரை மெல்லடி விளரியந் தீஞ்சொல்
கயல்புரை யரிக்கட் கருணையங் கருங்கடல்
இனிதுவீற் றிருக்கு மிடமருங் குடையோன்
இன்னண மிருப்பினுந் தன்னிலை யெவர்க்கும்
இற்றெனக் கிளக்கும் பெற்றிய னல்லோன்
பெறுதலு மிழத்தலும் பிரிதலும் புணர்தலும்
ஊணு முறக்கமு மூக்கமு மடிமையும்
பிணியு மச்சமும் பிறபல குணனுந்
தோற்றமும் பருவமுந் தொலைவு மில்லோன்
சங்கர னமலன் றூணு சதாசிவன்
முழுதொருங் குணர்ந்தோன் முன்னோன் றலைவன்
தன்னருட் பெருமைக் குன்னரும் பிறவிக்
கழிபெருந் துன்பமுற் றுழிதரு வோரை

---

௫௧. உகிர் - நகம். நோன்றாள் - வலிய தாள். பொறி - புள்ளி. ௫௨. உரியுடை - தோலாடை. உடீஇ - உடுத்து. ௫௩. துத்தி - படப்பொறி. ௫௪. கடு-நஞ்சு. நாண்-அரைக்கச்சு. ௫௫. திருகு-மாறுபட்ட. ௫௬. எறுழ்வலி - மிகுந்த வலி. ௫௭. ஊழி - உக முடிவுக்காலம். உறுவளி - பெருங்காற்று. ௫௮. நீல் நிறக்குன்றம்-கரிய நிறமுடைய மலை. ௫௯. முருகுவிரி - மணம் வெளிப்படும். ௬௰. கவற்றும் - கவலச் செய்யும். ௬௨. விடை - விடைக்கொடி. ௬௩. அமைஉறழ் - மூங்கிலையொத்த. ௬௫. முருந்திள முறுவல் - மயிலிறகினடி போன்ற இளம்பற்கள். ௬௭. விளரி-விளரிப்பண்ணைப் போன்ற. ௬௮. அரிக்கண் - ரேகை பொருந்திய கண். கருணையங் கருங்கடல்-உமாதேவி. ௬௯. இடமருங்கு-இடப்பக்கம். ௭௰. இன்னணம் - இவ்வாறு. ௭௧. இற்று - இத்தன்மைத்து. கிளக்கும்-கூறும். பெற்றியன் - பெருமையை உடையவன். ௭௩. மடிமை-சோம்பல்,

ஈர்த்தாட் கோட லியற்கை யாகலின்
உடலெனப் பெயரிய விடலருஞ் சிறைப்பட்
டாரஞர் மூன்று மாறா தருந்தும்
என்னையு மாளத் தன்னுளத் தெண்ணி
மனமொழி மெய்களின் மருவரு மொருதான்
கருங்கட லுடுத்த விருங்கண்ஞா லத்துக்
குரவ னெனவோ ருருவொடு வந்து
பெரிதுட் கிடந்த வருள்வெளிப் படுத்து
நன்னர் நோக்கத் தென்னை நோக்கிய
உலகம் விளக்கும் பலகதிர் பரப்பி
வாளர வென்னுமோர் தாளினிற் பூத்த
அங்கண்மா ஞாலப் பங்கய மலர்க்குப்
பொன்னிறக் கொட்டையாய்ப் பொலிந்துநின் றுயர்ந்த
விண்டொடு குடுமி மேருவலந் திரியும்
ஆழியொன் றுடைய வேழ்பரி நெடுந்தேர்ப்
பரிதி வானவன் பரவையிற் றோன்றப்
பாயிரு டொலைத்துப் பகல்பிறந் தென்ன
உள்ளிரு டுமித்தாங் கொளிசிறந் தன்றே - அவ்வழி
அளியனுந் தற்பெறக் களிமிகுந் தினிதினே
தன்னை யெனக்குத் தானீந் தருள்புரிந்
தென்னிடத் தொழிவின் றிருந்தனன் மன்னோ
தன்னடைந் தவரை யின்னலம் பிறவிப்
பெருந்தளை யகற்றி யரும்பெற லின்பத்
தொருதனி வீட்டுல குய்த்த லானுந்
துஞ்சினோ ரென்பு தோய்த லானும்
ஊன்கெட வுடம்பு நோன்புழந் திமயம்
ஈன்றகொம் பிடத்துத் தோன்றுத லானும்
ஒப்புமை யின்றி யுயர்ந்தமை யானுந்
தன்னை மானும் பன்னருஞ் சிறப்பிற்
கங்கையென் றுரைக்குங் கடவுளா றுடுத்த
பேசரும் பெருமைக் காசியம் பதியும்
கரைமிசை நின்ற விரிதலைத் தாழையின்

---

௮0. ஈர்த்தாட் கோடல்-இழுத்து ஆட்கொள்ளுதல். ௮௨. ஆரஞர்-பொருந்திய துன்பம். ஆறாது - அமையாமல். ௮௪. மருவரும் - பொருந்துதற்கரிய. ௮௬. குரவன் - ஆசான். ௯௪. ஆழி - உருளை. ௯௫. பரவை-கடல். ௯௬. பாயிருள்-பரவிய இருள். ௯௭. துமித்து-கெடுத்து. ௯௮. அளியனும் - எளியேனும். ௧00. ஒழிவின்று-நீங்காமல். ௧0௧. இன்னல் அம்பிறவி - துன்பம் பொருந்திய அழகிய பிறப்பு. ௧0௨. தளை அகற்றி - விலங்கைப் போக்கி. ௧0௪. துஞ்சினோர் - இறந்தோர். ௧0௫. நோன்பு உழந்து - விரதங்களில் வருந்தி. இமயம் - இமயமலை. ௧0௭. ஒப்புமை - சமம். ௧0௮. பன்னரும் - சொல்லுதற்கரிய. ௧௧௧. தாழை - தென்னையின்.

பூங்குலை சிதறித் தாங்கரும் பெருங்காய்
அழனிறத் தாமரை யலரிதழ் சிதர்ந்து
பொன்னிறக் கொட்டை சின்னமுற் றிடவுஞ்
சேயிதழ் மலரினும் பாசடை யிடத்தும்
இனிதிருந் தயர்வுயிர்த் திரைதேர் கமஞ்சூற்
சங்கின மலறுபு சைவலத் தொளிப்பவுங்
குரண்டமுங் கம்புளும் வெருண்ட நோக்கொடு
தலைமீ தெடுத்தெடுத் தலைநீர் மூழ்கவும்
அஞ்சிறை யன்னமு மளியின் றொகுதியும்
வெள்ளியம் புயலுங் கரிய மங்குலும்
பரந்தன வெழுந்து கரந்தன விரியவும்
விரிகதிர் ஞாயிற்றின் வெயில்பெற வேட்டுக்
கோட்டருகு கிடந்த கூன்முது காமை
கைய தெறிந்தென வொய்யென வீழ்ந்து
கீழ்நீர்ப் புகவுங் கிளர்பெருந் திரையெழுந்
தோங்கிருங் கரைமிசைப் பாய்ந்தன புரளவுந்
துடுமென வீழ்தரக் கடுவிசை வாள்புரை
வாளை பாயுந் தாளதா மரைத்தடத்
தாடுநர் வீழ்த்த வவிரொளி மணிப்பூண்
நீர்க்கீழ்ப் படர்ந்த நெடுந்துகிர்க் கொடியென
தனிகிடந் திமைக்கும் பனிபடு நறுமலர்
மல்லலம் பசும்பொழிற் றில்லையம் பலமும்
கவையடி வெடிவாற் குவிமுலை மேதி
மனையுழைக் கன்றை நினைதொறுஞ் சொரிந்த
வெண்பா லருந்திய செங்கா லன்னந்
தாமரைத் தவிசின் மீமிசை யுறங்குங்
கண்ணகன் கழனி விண்ணக டுரிஞ்சு

---

௧௧௩. அழனிறத்தாமரை - செந்தாமரை. சிதர்ந்து - சிதறி. ௧௧௪. கொட்டை - தாமரையிலுள்ள தவிசு. சின்னமுற்றிட - பழுதடைய. ௧௧௫. பாசடை-பசிய இலை. ௧௧௬. கமஞ்சூல் சங்கினம் - நிறைந்த சூலையுடைய சங்குக் கூட்டம். ௧௧௭. அலறுபு - அலறி. சைவலம் - பாசி. ௧௧௮. குரண்டம் - நீர்க்காக்கை. கம்புள்-சம்பங்கோழி. ௧௨௦. அளியின் தொகுதி - வண்டுகளின் கூட்டம். ௧௨௧. வெள்ளியம்புயல் - வெள்ளியமுகில். மங்குல் - முகில். ௧௨௩. வேட்டு - விரும்பி. ௧௨௪. கோட்டருகு - கரையருகு. ௧௨௮. துடுமென - திடீரென. வாள்புரை - வாளைப்போன்ற. ௧௩௦. ஆடுநர்-நீராடுவோர். வீழ்த்த-போகட்டுவிட்ட. ௧௩௧. துகிர்க்கொடி - பவழக்கொடி. ௧௩௨ பனிபடு - குளிர்ச்சி பொருந்திய. ௧௩௩. மல்லல் - வளப்பம். ௧௩௪. கவையடி - பிளவுபட்ட அடி. மேதி - எருமை. ௧௩௫. மனையுழை - வீட்டிடத்துள்ள.

நொச்சிசூழ் கிடந்த கச்சிமா நகரமும்
தண்டளிர்க் கோட்டுப் பிண்டிமுதல் பெயர்த்து
வெறிகமழ் சந்தனச் செறிவுகெட முருக்கி
விண்புகு நெடுஞ்சினைச் சண்பகஞ் சாடிக்
காழுடை யகிற்றிரள் வீழ்தர நூக்கி
மங்குல்கண் படுக்குங் குங்குமஞ் சாய்த்து
மிளிர்மணி யருவிக் குளிர்புனன் முகந்து
தூம்புடை நெடுங்கையிற் றூய்விளை யாடும்
ஈர்ங்கவுட் புகர்முகக் கூர்ங்கோட் டுரற்கால்
வெஞ்சினக் குஞ்சர மஞ்சுவரு நெஞ்சொடு
பசுந்தழை பொதுளிய விசும்புற நிமிர்ந்து
வாரியுண் டெழுதரு மழையொடு முரணும்
புதுவேய்ப் பொதும்பரிற் கதுமென வொளிக்க
அடங்கருஞ் சினத்து முடங்குளை நோன்றாட்
பெருவலி யரிமா னுருமென வதிர்க்கும்
அணிகிள ரடுக்கத் தருணையங் கிரியும்
மணிவரன் றருவிவீழ் மல்லிகார்ச் சுனமும்
சோதி மாமரஞ் சுடுதழற் பிழம்பென்
றிளமட மந்தி யேரு தகலுந்
திருக்கா ளத்தியா முருக்கிளர் பொருப்பும்
மீன்கணத் தகவயின் விளங்குவெண் டிங்களின்
ஒழுகொளி நித்திலக் குழுவினுள் வலம்புரிச்
சங்குகிடந் துறங்கும் பொங்குபுனற் பழனத்துக்
கரும்படு களம ரிரும்பு கைவிடுத்
தடிபெயர்த் தோடிக் குடவளை யிடறி
எழுநீர்ப் பசுந்தாட் கழுநீர்க் குப்பையுள்
வண்டினம் வெரீஇயொலி கொண்டெழ வீழ
நெடுநெறிக் கரும்பி னெருக்கிடைக் கிடந்த

---

௧௩௯. நொச்சி-மதில். ௧௪0. கோடு-கிளை. பிண்டி-அசோகு. ௧௪௧. வெறி - மணம். செறிவு - நெருக்கம். முருக்கி - அழித்து. ௧௪௨. நெடுஞ்சினை - நீண்ட கிளை. ௧௪௩. காழ் - வயிரம். நூக்கி-அழித்து. ௧௪௪. மங்குல் - முகில். கண்படுக்கும் - உறங்கும். ௧௪௬. தூம்பு - துளை. தூய் - தூவி. ௧௪௭. ஈர்ங்கவுள் - மதத்தால் நனைந்த கன்னம். ௧௪௮. குஞ்சரம்-யானை. ௧௪௯. பொதுளிய-நெருங்கிய. ௧௫0. வாரி - கடல். மழை - முகில். முரணும் - மாறுபடும். ௧௫௧. பொதும்பர் - மரச்செறிவு. ௧௫௩. உரும்என - இடியைப்போன்ற. ௧௫௫. வரன்று அருவி - வாரிக்கொண்டு வரும் அருவி. ௧௫௬. தழற்பிழம்பு - தீச்செறிவு. ௧௫௮. உருக்கிளர் - அழகு விளங்குகின்ற. ௧௫௯. அகவயின்-நடுவிடத்தில். ௧௬௩. குடவளை - குடம்போன்ற சங்கு. ௧௬௫. வெரீஇ - அஞ்சி.

கடுவரா லுகளுங் கம்பலை யவியா
ஒருவாச் செல்வத் திருவா ரூரும்
ஆரங் குங்கும மகில்கரி மருப்புப்
பொன்மணி முதலிய பொருதிரைக் கையால்
விரிபொழில் நிமிர்ந்ததன் னிருகரை மருங்கினும்
வாழ்நர்க் குதவு மணிமுத் தாறெனும்
பெருநதி யுடுத்த திருமுது குன்றமும்
வரைபக வெறிந்து மாமுத றடிந்த
மணிநெடு வேலொடு வளர்பூங் குடுமி
முள்ளுடை நெடுந்தாட் புள்ளணி கொடியோன்
வள்ளிபுரை மருங்குல் வள்ளிமா துக்குஞ்
சேயரி நெடுங்கட் டெய்வயா னைக்குங்
காணியென விளங்கும் பூணணி மார்போன்
அருணனி சுரக்கு மறுமுகத் தொருவன்
தன்னிக ரில்லாத் தனிமுதற் கடவுள்
வெட்சிமலர் சூழ்ந்ததன் விரைமலர்த் திருவடி
உள்ளுநர் தமக்குங் கள்ளவிழ் சேயிதழ்
அல்லியந் தாமரைச் செல்வனும் வணங்கும்
பெறலரு மரசு பெறவினி தளிப்போன்
தேங்கமழ் கடம்பின் றெரிய றுயல்வருஉம்
பன்னிரு தடந்தோட் பண்ணவ னிருந்த
பனியிரு விசும்புதோய் பரங்குன் றிழியும்
மணியருவி கொழித்த மணிகிடந் திமைக்குந்
திருமலி மறுகிற் செந்தமிழ்க் கூடலும்
தமிழ்குடி யிருந்த தடவரைத் தோன்றி
இமிழ்திரை ஞாலத் தமிழ்தெனக் கிடந்த
தண்பொருநை யுடுத்த விண்பொரு நெடுமதில்
நெல்லையு முதலிய பல்பெரும் பதிகள்
அனைத்தினுங் கண்டோர்க் ககற்றரும்
வினைத்தொடர் பகல வீற்றிருந் தெனவே.

இட்டலிங்க வகவல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

௧௬௭. கம்பலை அவியா - ஒலி நீங்காத. உகளும் - புரளும். ௧௬௮. ஒருவா - நீங்காத. ௧௭௪. வரைபக - மலை பிளக்க. ௧௭௯. புள்ளணி கொடியோன்-சேவற் கொடியோன். ௧௮௩. உள்ளுநர் - எண்ணுபவர். ௧௮௯. துயல் வருஉம் - அசையும். ௧௯௧. தமிழ்குடியிருந்த தடவரை - பொதிய மலை. ௧௯௨. இமிழ்திரை - ஒலிக்கின்ற அலை.

## உசா. திருவெங்கை மான்மியம்

நடுநாட்டிலே,* துறைமங்கலத்திலே, முந்நூறு வருடங்கட்கு முன்னரே, பண்டகுலத்திலே, வல்லகோலாதிபதியென்னும் பட்டப்பெயர் பெற்றுக் குறுநிலமன்னராய் இலிங்கா ரெட்டியார் என்பவர் ஒருவரிருந்தார்.

அவர் கல்வியறிவொழுக்கங்களினும், குருலிங்கசங்கம பத்தியினும், வீரசைவாநுஷ்டானத்தினும் மிகச் சிறப்புற்றவராய் வாழுநாளில், பிரதோஷகாலத்திலே, சிவதரிசனஞ்செய்தே போசனஞ் செய்யவேண்டுமென்னும் நியமமேற்கொண்டு, தமது நகரத்திற்கும் விருத்தாசலத்திற்கும் ஏறக்குறைய நான்குகாவதமிருக்கவும், அத்தலத்தில் வீற்றிருக்கும் பழமலைநாதரிடத்தும் பெரியநாயகியம்மையாரிடத்தும் அத்தியந்த பத்தியுடையராய்ப் பிரதோஷகட்டளையேற்படுத்தி, தமது அருந்தவத்தாலுதித்த அண்ணமலை ரெட்டியாரென்னும் சற்புத்திரரோடு, அப்புண்ணிய காலந்தோறும் தவருமற்சென்று, தரிசனஞ்செய்து வந்தார்.

அங்ஙனஞ் செய்துவருநாளிலே ஒருநாள், பிரதோஷ தினத்திலே தரிசனத்தின் பொருட்டுத் தமது புத்திரரோடு புறப்பட்டுவருங்கால், பேராறு என்கிற வெள்ளாறு இருகரையும் பெருகி ஓடமுதலியவும் செல்லுதற்கும் இடங்கொடாதிருப்பதை நோக்கி, இலிங்காரெட்டியார் மனம் நைதலோடு, "யாங்கள் சிவபெருமானுக்குத் தொண்டராயின் இந்நதி வழிவிடுக; இன்றேல், இதிலிறப்பதே உறுதி" எனப் பிரதிஞ்ஞை செய்து கொண்டு, துணிவோடு அந்நதியிலிறங்கலும், அது சிவ பெருமான் றிருவருளால் வழிவிடக் கண்டு, "எளியேங்களிடத்தும் எம்பெருமான்றிருவருள் இருந்தவாறு என்னே!" என்று வியந்து, புத்திரரொடுசென்று, பழமலைநாதரையும் பெரிய நாயகியம்மையாரையும் தரிசித்து, மனமுருகிப் பலவாறு துதித்து, தமக்குச் சிவபெருமான்பாலித்த திருவருளைச் சிந்திக்குந்தோறும் பேராநந்தமுடையராய், அத்தலத்திலேயே தங்கினர். அன்றிரவிலே, பழமலைநாதர் அவர்கள் சொப்பனத்திலே, ஒரு சிவனடியார்போலத் தோன்றி, "நீங்கள் ஏன் இவ்வாறு கஷ்டத்தை யடைகின்றீர்கள்; யாம் உங்கள் ஆளுகையிலமைந்த † திருவெங்கை நகரத்திலே இன்ன

---

* இது வாலிகண்டபுரத்திற்குத் தென்பாகத்திலுள்ளது.

† இது வாலிகண்டபுரத்தின் வடமேற்பாகத்திலே திருவெங்கனூரென வழங்குகின்றது.

தானத்திலே திருவுருக்கொண்டு வீற்றிருக்கின்றோம்; ஆலய மமைத்து வழிபடுவீராக; அமைக்குங்கால், வட தேசத்திலிருந்து பஞ்சத்தினால்மெலிந்து சில சிற்பர்கள் வருவார்கள்; அவர்களாலே திருப்பணி பூர்த்தியாகும்'' என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்.

அத்திருவாக்கைச் சிரமேற்கொண்டு திருவெங்கைநகரத்தை யடைந்து, குறித்த ஸ்தானத்திலே பரிசோதிக்க, அங்கே பூமிக்குள் ஒரு சிவலிங்கமும், அம்பிகை முதலிய சில மூர்த்தங்களும் இருக்கக்கண்டு அளவிடப்படாத ஆனந்தசாகரத்தின் மூழ்கி, திருவருளைப் பரவி, அப்பொழுதே சுவாமிக்குப் பழமலைநாதரெனவும், தேவிக்குப் பெரியநாயகியம்மை யெனவும் திருநாமந்தரித்து, சிறிய ஆலயம் அமைத்து, நித்திய பூசை ஏற்படுத்தினர். அந்நாளிலே, சிவவாக்கின்படியே வடதேசத்திலிருந்து சில சிற்பர்கள் வர, அவர்களுடைய நூலுணர்ச்சி முதலிய உத்தம குணங்களனைத்தையும் நோக்கி, அதிசயித்து, வேண்டும் பொருள்களை வெறுக்கக்கொடுத்து, அவர்களை அத்தலத்திற்றானே குடியேற்றி, திருப்பணிகளை இயற்றுவித்து வருங்கால், இலிங்காரெட்டியார் சிவலிங்க ஐக்கியமாய் விட்டமையால் அண்ணாமலைரெட்டியாரே தலைவராகவிருந்து, அவரினும் மிகச்சிறப்பாக நடத்துவித்து வந்தார்.

ஒரு தினத்திலே, அச்சிற்பர்களுக்குத் தலைவனானவன் கருப்பக்கிருகத்தின் கீழே கட்டப்பட்டிருக்கும் சாரத்தின் மேலிருந்து கொண்டு, வேலைக்காரனை வெற்றிலைமடித்துக் கொடுத்தற்பொருட்டு அழைக்க, அவன் அத்தருணம் அங்கில்லாமையால் அண்ணாமலைரெட்டியார் அவ்வேலை முட்டுப்படா வண்ணம் தாம் கீழிருந்து மடித்துக்கொடுத்தனர். அச்சிற்பன் சாரத்தினது மறைப்பால் இன்னாரெனத் தெரியாது, இடது கரத்தால் வாங்கி உட்கொண்டபின் உண்மைதெரிந்து, ஓகோ! என்செய்தோமெனப் பெரிதும் இடரின்மூழ்கி, அபசாரஞ்செய்த அந்தக்கரத்தைத் துணிக்க எத்தனித்தலும், ரெட்டியார் அவனை நோக்கி, ''கரத்தைத் துணிப்பது தகுதியன்று; அக்கரத்தைக் கொண்டு உனக்குத் தெரிந்துள்ள அரிய வேலைகளெல்லாம் அமைய இத்திருப்பணியைப் பூர்த்திசெய்யின் என்றும் நின் பெயர் நிலைபெறுவதன்றியும் நினக்கு எய்துதற்கரிய சிவகதி பெறுதற்கும் இதுவே ஏதுவாகும்'' என்று வற்புறுத்தினர். சிற்பனும் இவ்வுத்தமோத்தம உறுதிவாக்கியத்தைக் கேட்டு, பெருமகிழ் சிறந்து, முன்கட்டிய கருப்பக்கிருகத்தை முற்றும் பிரித்து விட்டு, இத்திருப்பணிபோல யாண்டுமில்லையென

யாவருங் கொண்டாட அதிவிசித்திரமாக அமைத்துமுடித்தனன். கண்டவர் கண்களிகூரப் பெற்றார்கள்.

அதுகண்ட அண்ணாமலைரெட்டியாரும் அகங்களிகூர்ந்து, அர்த்தமண்டப முதலிய திருப்பணிகளை ஒருவாறுமுடித்து, *சாலிவாகன சகாப்தம்—௧௫௪௫ ஆகிய ருத்திரோற்காரி௵ வைகாசிமாதத்தில் பூர்வபக்ஷ துவாதசியும் அஸ்தநக்ஷத்திரமுங் கூடிய குருவார சுபதினத்திலே, ஆபதோத்தாரணசிவாசாரியார் குமாரர் பிழைபொறுத்தசிவாசாரியாரால் விநாயகர் முதலிய சகல மூர்த்தங்களுடன் பழமலைநாதரையும் பெரியநாயகியம்மையாரையும் பிரதிஷ்டை செய்வித்து, கும்பாபிஷேகமும் நடத்துவித்து, பின்னும் வேண்டிய பெரும்பொருள் செலவிட்டு மஹாமண்டபம் நிருத்த மண்டபம் இரண்டு பிரகாரம் கோபுரம் திருமதில் திருக்குள முதலிய திருப்பணிகளைக் குறைவற இயற்றிக்கொண்டிருந்தனர்.

அந்நாளிலே, சிவப்பிரகாசசுவாமிகள் தக்ஷிணயாத்திரையை விரும்பிச் சகோதரர்களோடு காஞ்சியினின்றும் புறப்பட்டு, திருவண்ணாமலை முதலிய திவ்ய தலங்களைத் தரிசித்துக்கொண்டு வரும்போது, துறைமங்கலத்தை யடைந்து, ஒரு நந்தன வனத்திலே சிவபூசை செய்துகொண்டிருந்தார். ரெட்டியார் சுவாமிகளுடைய அற்புத மகிமைகளைக் கேள்வியுற்று அங்கடைந்து, தரிசித்தமாத்திரத்திலே அவர்களிடத்தே அநுக்கிரகம்பெற விரும்பி அடிமைபூண்டு, "சுவாமி! தேவரீர் இவ்விடத்தில் வாசஞ்செய்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்து, உடன்படுத்தி, தங்கள் குருவாகிய சென்னவசவையர் மடத்திற்கு மேற்றிசையில் ஒரு திருமடங் கட்டுவித்து, அதில் சுவாமிகளை எழுந்தருளச்செய்து, அகோராத்திரம் பிரிவின்றி அணுக்கத் தொண்டராயமர்ந்திருக்க, சுவாமிகள் அவருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டு, இரண்டுவருஷம் வரையில் அங்கேயே வீற்றிருந்து, பின்பு தக்ஷிணதேசஞ் சென்று யாத்திரையை முடித்துக்கொண்டு, மீட்டுந் துறைமங்கலத்தை யடைந்து, அண்ணாமலைரெட்டியாரால் திருவெங்கையிலே தம் பொருட்டுக் கட்டுவிக்கப்பட்ட திருமடத்திலே வீற்றிருந்து

* இது மேற்படி அண்ணாமலைரெட்டியார் சந்ததியாராய்த் தற்காலத்திலுள்ள சிவநேசமிக்க விருத்தாசலரெட்டியார் முன்னிலையில் அத்தலத்திலுள்ள சிலாசாசனத்திலிருந்து எடுத்தெழுதப்பட்டது. ஆனால், அண்ணாமலைரெட்டியாரே திருப்பணி முடித்துக் கும்பாபிஷேகம் நடத்துவித்திருக்கவும் அவர்பிதா நடத்துவித்ததாக அச்சாசனத்திலிருப்பது அவர்முதலிலே திருப்பணி தொடங்கியமை நோக்கிக் குறித்திருக்கலாம்.

கொண்டு அத்தலத்தைச்சுட்டித் தாமருளிச்செய்த திருவெங்கைக் கோவை, திருவெங்கைக்கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கையலங்காரம் என்னும் நான்கு பிரபந்தங்களுள்ளே, உலாவில், (௬௪) வது கண்ணிமுதல் (௬௭) வது கண்ணி வரையும் அண்ணாமலை ரெட்டியார் பெருமையையும் திருப்பணியினருமையையும் பாராட்டியருளினமையேயன்றிக் கோவையினும் "வல்லகோலுக்கு வல்ல அண்ணாமலையார் கட்டுகோயில்" எனவும், "கருப்ப இல்லிற்கிணையில்லையென்னும் திருவெங்கை" எனவும் சிறப்பித்து, அப்பிரபந்தங்களைச் சந்நிதியிலரங்கேற்றிச், சின்னாள் வசித்துச், சிதம்பரத்தை யடைந்தருளினார்.

அண்ணாமலைரெட்டியாரும் பிரிவாற்றாமையால் உடன் சென்று சிற்சபாநாயகரையும் சிவகாமியம்மையாரையுந் தரிசித்து, அங்கே சுவாமிகள் எழுந்தருளியிருத்தற்கு ஒரு திருமடங் கட்டுவித்து, சிலநாள் வாசஞ்செய்து, அநுமதி பெற்றுச்சென்று, துறைமங்கலத்தி லிருந்துகொண்டு, சிவப்பிரகாசசுவாமிகள் சிவதரிசனத்தின்பொருட்டு எத்தலத்திற் கெழுந்தருளினும் தாமும் அத்தலங்கடோறுஞ் சென்று, தரிசித்து மீளுவர். அன்றியும், அன்பு மேலீட்டால் தாம் அங்கே ஒரு தூணிலமைத்து வைத்த சிவப்பிரகாசசுவாமிகள் திருவுருவத்திற்கு நித்திய பூசையும், பழமலைநாதருக்கு நித்தியநைமித்திகங்களும் அதி சிறப்பாக நடத்துவித்து, காலந்தோறும் சிவதரிசனஞ் செய்து கொண்டு, திருவருட்பேற்றிற்குப் பாத்திரராய்ச் சிலகாலம் வாழ்ந் திருந்து, சிவலிங்க ஐக்கியமானார்.

திருவெங்கைமான்மியம் முற்றிற்று.

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்கஎண்]